### வேதப் புகழ்

வேதங்கள் அத்ரியைப் புகழ்கின்றன. ஸமுத்திரம் போன்ற ரிக் வேதத்தில் பத்தில் ஒரு பாகமான ஐந்தாவது மண்டலம் முழுவதும் அத்ரி முனிவரால் கண்டெடுக்கப் பெற்றது.

ग्राव्णो ब्रह्मा युयुजानस्सपर्यन्
कीरिणा देवान् नमसोपशिक्षन् ।
अत्रिस्सूर्यस्य दिवि चक्षुराधात्
स्वर्भानोरप माया अघुक्षत् ॥

— ரிக்வேதம், 5.40.8.

'அத்ரி முனிவர் ஸோமத்தை நசுக்கிப் பிழிவதற்கான கற்களை எப்பொழுதும் இணைத்துக்கொண்டேயிருப்பார்; ஆழ்ந்த பக்தியுடன் ஸ்தோத்திரம் செய்வார். ராஹுவினால் மறைக்கப்பட்ட ஸூர்யனை விடுவித்து ஒளியைக் கொடுத்தவர் இவரே' என்பது கருத்து.

यं वै सूर्यं स्वर्भानुस्तमसाविध्यदासुरः ।
अत्रयस्तमन्वविन्दन् न ह्यन्ये अशक्नुवन् ॥

— ரிக்வேதம், 5.40.9.

'அஸுர ப்ரக்ருதியான ஸ்வர்பானு (ராகு) ஸூர்யனை இருட்டால் மறைத்துவிட்டான் அல்லவா? அப்பொழுது அத்ரிதாம் அவனுக்கு மீண்டும் ஒளியைக் கொடுத்துப் பிரகாசிக்கச் செய்தார். மற்றவர்களால் இதைச் செய்ய முடியவில்லை' என்பது கருத்து.

உலகங்களுக்கெல்லாம் ஒளி கொடுக்கும் தனிப் பெருஞ்சோதியான சூரியனையே விழுங்கிவிட்டான் ஓர் அஸுரன். எங்கும் இருள் சூழ்ந்தது. ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. முடிவில்லாத இருளில் சிக்கிக்கொண்டு உலகம் தவித்தது. வானத்தில் நடந்த இந்த நிகழ்ச்சியை அற்ப மனிதன் எவ்வாறு தவிர்க்க முடியும்? எல்லாரும் திகைத்து நின்றனர். அத்ரி முனிவர் ஒருவரால்தான் இந்த அதிசயமான சாதனையைச் செய்ய முடிந்தது. சூரியனுக்கு ஒளி மீண்டும் திரும்பி வந்தது. நல்ல மூச்சு வந்தது பிராணிகளுக்கு. இத்தகைய அதிசய முனிவர் அத்ரி.

சூரிய ஒளி பகல் வேளையில்தானே கிடைக்கும்? இரவு நேரத்தில் வெளிச்சம் வேண்டாமா? அதற்குத்தான் சந்திரன்

இருக்கிறதே? அந்தச் சந்திரனைப் படைத்தவர் யார் தெரியுமா? அத்ரி முனிவர்தாம். இந்த வரலாறு மிகவும் பிரசித்தமானது; சந்திரன் தோன்றுவதற்கும் முன்னால் நிகழ்ந்தது.

பிரம்மாவின் மானஸபுத்திரர்கள் அறுவர் — மரீசி, அங்கிரஸ, அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது. அவர்களுள் அத்ரிக்குப் பல்லாயிரக் கணக்கான பிள்ளைகள் உண்டு. எல்லாரும் வேதங்களை அறிந்தவர்கள், தூய்மையானவர்கள், சாந்தமானவர்கள். அவர்கள் அனைவருமே மகரிஷிகள்தாம். இவ்வாறாகப் பலகோடி நூறாயிரம் பிள்ளைகளைப் பெறுவதற்காக அத்ரி முனிவர் தவம் செய்தார். எத்தனை நாள்? மூவாயிரம் வருஷங்கள். அதுவும் மனுஷ்ய வருஷங்கள் அல்ல; தேவ வருஷக் கணக்கில் மூவாயிரம். ஆழ்ந்த பெருங்கடலின் அடிப்புறத்தில் அமர்ந்து இப்படித் தவம் செய்தார் அத்ரி முனிவர்.

அவர் கண்களிலிருந்து பிரம்மாண்டமான சோதி வெளிக்கிளம்பியது. கடல்நீரைக் கிழித்துக்கொண்டு வெளிக்கிளம்பிய அந்தச் சோதி, பூமியை விட்டு நெடுந் தூரம் வெகு வேகமாகச் சென்றுகெண்டே யிருந்தது. பிரம்மா அதைத் தாங்கி நிறுத்துமாறு பத்துத் திக்குகளையும் ஆஜ்ஞாபித்தார். திசைகளும் அவ்வாறே முயன்று பார்த்தன. ஆனால் அதன் வேகத்தை அவற்றினால் தடுத்து நிறுத்த முடியவில்லை. அந்தச் சோதியே சந்திரன். அது தன் வழியே நெடுந்தூரம் சென்ற பின் மீண்டும் பூமியில் வந்து மோதிக்கொள்ளும் வகையில் விழ ஆரம்பித்தது. பிரம்மா பார்த்தார். தமது ரதத்தில் அதை ஏற்றி வைத்துக்கொண்டு அதன் வேகத்தைத் திசை திருப்பி விட்டார். இந்தப் பூமியைச் சுற்றிச் சுற்றி வட்டமடிக்குமாறு அந்தச் சோதியைத் தமது தேரில் வைத்துக் கொண்டு பல தரம் பூமியை வட்டமிட்டார். மூவேழு இருபத்தொரு தரம் பிரதக்ஷிணமாகப் பூமியை வட்டமிட்டாராம் பிரம்மா. பிறகு அதைத் தனிப்படுத்திவிட்டார்.

ஆனாலும் தனக்கென்று தோற்றுவிக்கப்பட்ட சுழற்பாதையிலேயே அதிவேகத்துடன் இன்றளவும் அந்தச் சோதி சுற்றிக்கொண்டே இருக்கிறது. அது மேலும் மேலும் தன் ஒளியைப் பெருக்கிக்கொண்டு பிரம்மாண்டமாகிவிட்டது. அதனால்தான் பூமியில் சக்தி மிகுந்த ஓஷதிகள் தோன்றி வளர்ந்தன. பூமியின் செழிப்புக்கு அத்யாவச்யகமான — ஜீவாதாரமான — இந்த

ஒஷதிகள் சந்திரனாலேயே தோன்றுகின்றன, சந்திரனாலேயே வளர்கின்றன என்று புராணங்கள் கூறுகின்றன. அதனால் சந்திரனுக்கு 'ஒஷதீசன்' என்ற பெயர் வழங்குகிறது. இவ்வாறு சந்திரனைத் தோற்றுவித்து இரவு வேளையிலும் இருளை அகற்றிய பெருமை அத்ரி மகரிஷியினுடையதே.

## அத்ரி சதுராஹம்

இது ஒரு யாகத்தின் பெயர். அத்ரி முனிவர் முதல் முதலில் இந்த யாகத்தை அநுஷ்டித்தார். அதனால் விரும்பிய பயனையும் பெற்றார். அதே பயன் யாருக்கு வேண்டியிருக்கிறதோ அவர் இந்த 'அத்ரி சதுராஹ' யாகத்தைப் பண்ணிப் பயன் பெறலாம். இதை வேதமே கூறுகிறது —

अत्रिरददादौर्वाय प्रजां पुत्रकामाय स रिरिचानोऽमन्यत निर्वीर्यः शिथिलो यातयामा स एतं चतूरात्रमपश्यत् तमाहरत् तेनायजत ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 7.1.8.1.

என்று தொடங்கும் பகுதியில் இவ் வரலாறு விளக்கப்பெறுகிறது. அத்ரி மகரிஷி அநுஷ்டித்த யாகம் என்று எடுத்துக்காட்டாகக் கூறுவதன் மூலம், இந்த யாகத்தை அநுஷ்டிப்பவர்கள் பயன்பெறுவது நிச்சயம் என்பதை உறுதிப்படுத்துகிறது வேதம். இவருடைய பெயருக்கு அவ்வளவு மகத்துவம். இவருடைய செயல்கள் பயனுறாமற் போனதே இல்லையாம்.

## ஹிரண்யதானம்

லோஹங்களில் சிறந்தது பொன். அது பார்ப்பவருடைய மனதைக்கவரும் இயல்புள்ளதாதலால் "ஹிரண்யம்" என்று பெயர் பெற்றது. வெள்ளியும் இதே இயல்புள்ளமையின் இதே பெயரையும் பெற்றுவிட்டது. வேதங்களில் "रजतं हिरण्यं" என்று வெள்ளியும், "सुवर्णं हिरण्यं" என்று பொன்னும் வழங்கப்படுகின்றன. ஆனால்? அடைமொழி இல்லாமல் "हिरण्यं" என்னும் சொல்மட்டும் தனியாக வருமானால் அது பொன்னையே குறிக்கும். "हिरण्यमात्रेयाय ददाति" என்னும் வாக்கியம், ஆத்ரேயகோத்ரத்தில் தோன்றிய அந்தணனுக்குப் பொன்னைக் கொடுக்கவேண்டுமென்று

பணிக்கிறது. அந்தணர்களுள் சிறந்தவன் "ஆத்ரேய" ப்ராம்மணன். லோஹங்களில் சிறந்த பொன்னை அவனுக்கே கொடுக்க வேணும் என்பது கருத்து. இவ்வாறாக அத்ரி முனிவரின் வம்சத்திலுதித்த அந்தணரை மற்றவர்களெல்லாரையும்விட மேற்பட்டவராக வேதமே அறுதியிடுகின்றது.

ஸோமயாகம் என்பது பிரஸித்தமானது. அதில் ரித்விக்குகளுக்கு தக்ஷிணை கொடுக்கும் ஸந்தர்பத்தில்;

"ब्राह्मणमद्य राध्यासमृषिमार्षेयं पितृमन्तं
पैतृमत्यँ सुधातुदक्षिणम् ।।"

— தைத்திரீய ஸம்ஹிதை, 1.4.43.2.

என்னும் மந்திரம் இடம் பெற்றுள்ளது. இதன் விவரணமான (ப்ராம்மணம்) வாக்யம்:

"ब्राह्मणमद्य राध्यासमृषिमार्षेयमित्याहैष
वै ब्राह्मण ऋषिरार्षेयो यः शुश्रुवान् तस्मादेवमाह ।।"

— தைத்திரீய ஸம்ஹிதை, 6.6.1.

என்பது. இதன் கருத்து:-

"இந்த ஸமயத்தில், அத்ரிகோத்ரத்திலுதித்த ப்ராம்மணனை ஹிரண்யத்தினால் சந்தோஷமடையச் செய்கிறேன். அவன் வேதார்த்தங்களை நன்கறிந்தவன். வேதார்த்தங்களை நன்கறிந்தவருடைய புத்ரன். தன் தந்தையால் நன்கு சிக்ஷிக்கப்பட்டவன். நன்கு சிக்ஷிக்கப்பெற்றவளான பதிவ்ரதையான உத்தமியைத் தாயாகப் பெற்றவன். லோஹங்களில் உத்தமமான "ஹிரண்ய"த்தை தக்ஷிணையாகப் பெறுவதற்குத் தகுந்தவன். பெரியோர்களிடம் அடி பணிந்து நிறையக் கேட்டு அறிவுக் கடலாகத் திகழ்பவன்" என்பதாம்.

யாகத்தில் ஓடியோடி ஸகலகார்யங்களையும் திறமையாகச் செய்து முடித்த ரித்விக்குகள் பதினாறுபேர்கள் ஸதஸ்ஸில் அமர்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு வேதத்தில் கூறியபடி தக்ஷிணை கொடுக்கபடவேணும். இந்த நிலையில் முந்துற முன்னம் ஓர் ஆத்ரேய ப்ராம்மணனைத் தேடியழைத்து வந்து முதன் முதலில் அவனுக்கு "ஹிரண்ய"த்தைக் கொடுத்துவிட்டு, பிறகுதான் ரித்விக்குகளுக்கு

தக்ஷிணை கொடுக்க வேணும் என்று வேதம் கட்டளையிடுகின்றது. அத்ரி மகரிஷியின் வம்சத்தில் தோன்றியதொன்றே அந்த அந்தணனுடைய தனிச்சிறப்பு. ஆபஸ்தம்பர், போதாயனர், காத்யாயனர் போன்ற கல்பஸூத்ரகாரர்களும் இதே கருத்தை விவரித்திருக்கின்றனர்.

"ब्राह्मणमद्य राध्यासमित्यात्रेयाय प्रथमाय हिरण्यं ददाति, द्वितीयाय तृतीयाय वा ।"

— ஆபஸ்தம்பச்ரௌதஸூத்ரம், 13.6.12.

ப்ரவரத்தில் ஆத்ரேயர்கள் மூன்று வகையாகக் கூறப்பட்டுள்ளனர். அதனால் இங்கும் அவ்வாறே விதிக்கப்படுகிறது. "முதலாமவன் கிடைக்காவிடில் இரண்டாமவனுக்கு. அதுவுமில்லையேல் மூன்றுமவனுக்கு" என்றவாறு. ஏனைய ஸூத்ரங்களும் இதையே விவரிக்கின்றன.

"अत्रिणा त्वा क्रिमे हन्मि" என்பது ஒரு வேத மந்திரம். பூச்சிகளைக் கொல்லும்போது இது சொல்லப் படும். அத்ரி முனிவர் இத் துறையில் சிறந்தவராக இருந்தமையின் அவருடைய பெயர் இதில் கூறப் படுகிறது.

"यदि घर्मदुघं वा महावीरं वा क्रिमय उपाधिगच्छेयुः तानद्भिः प्रक्षालयेत् 'अत्रिणा त्वा क्रिमे हन्मि' इति [मन्त्रेण]।"

— போதாயனச்ரௌதஸூத்ரம், 9.18.

**கலைவாணர்**

தமது நீண்ட ஆயுள் காலத்தை ஒப்புயர்வற்ற தர்மானுஷ்டானத்தினால் சிறந்ததாக்கிக்கொண்ட அத்ரி மகரிஷி ஆயுர்வேதம், சோதிடம் முதலிய கலைகளிலும் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தவராம். அந்த அந்தத் துறைகளில் இவர் இயற்றிய பல நூல்கள் இன்றளவும் அழியாப் புகழ் பெற்று அணையா விளக்காக உலக மக்களுக்கு உபயோகமாக விளங்குகின்றன.

**ஸ்ரீவைஷ்ணவோத்தமர்**

ஆதிகாலத்திலேயே பிரம்மாவின் நகங்களிலிருந்து தோன்றியவர் விகநஸ மகரிஷி. ஸ்ரீமந்நாராயணனுடைய ஆராதனத்தைப் பல முறைகளாலும் செய்து உலகுக்கு வழி காட்டியாக விளங்கியவர் இவர். இவருடைய முக்கியமான சிஷ்யர்கள் நால்வருள் அத்ரி மகரிஷி ஒருவர். அத்ரியின் பெயரால் ஒரு ஸம்ஹிதா க்ரந்தமும் ஆதார நூலாக இன்றளவும் வழங்கி வருகிறது.

இவ்வாறு உலகம் தோன்றியபோதே தோன்றி, பிரபஞ்சம் சீராக இயங்குவதற்காக, மனத்தினால் சிந்தித்துப் பார்ப்பதற்கும் அரிய செயல்கள் பலவற்றைச் செய்து, பல கோடி நூறாயிரம் புத்திர பௌத்திர பாரம்பர்யமான நன்மக்களைப் பெற்று, 'ஆத்ரேய கோத்திரம்' என்று பெருமையாகப் பேசப்பெறும் கோத்திரத்துக்கு மூலபுருஷராகவும் அமைந்த அத்ரி முனிவருடைய மகிமை நம் வேதங்களிலும் இதிகாச புராணங்களிலும் ஏனைய இலக்கியங் களிலும் பரவலாகப் பேசப்பெறுகிறது. இவை விவரித்தால் வளரும். இதை இவ்வளவில் நிறுத்திக்கொண்டு, தொண்டு கிழவர்களான அத்ரி அனஸூயா தம்பதிகளை வணங்குவோம்.

# ப்ருகு

ப்ருகு மகரிஷியின் சரிதத்தைச் சுருக்கமாகக் கூறுகிறேன். பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே ப்ருகு மகரிஷி தோன்றினார். பிரம்மாவின் உடம்பில் தோலிலிருந்து தோன்றியவர் ப்ருகு. இவருடைய புத்திர பௌத்திர பரம்பரை மிகவும் நீண்டதாக ஓங்கி வளர்ந்து நாடெங்கும் வியாபித்துள்ளது. 'ஸ்ரீவத்ஸ கோத்திரம்' நம் நாட்டினருக்கு மிக மிகப் பழக்கமானது. பல்லாயிரக் கணக்கான மக்கள் இந்த கோத்திரத்தைச் சார்ந்தவர்கள். இந்த கோத்திரத்துக்கு மூலபுருஷர் ப்ருகு மகரிஷி. மற்றும் நான்கு முனிவர்கள் இந்த கோத்திரத்துக்குப் பிரவர்த்தகர்களாக அமைந்துள்ளனர். அவர்களும் இவருடைய வழித் தோன்றல்களே. பொதுவாக, கோத்திரப் பிரவர்த்தகர்களான ரிஷிகளின் திருநாமங்களைக் கூறும்போது தத்தித ப்ரத்யயம் வைத்தே சொல்வது வழக்கம். அதே ஸம்ப்ரதாயம் இங்கும் தழுவப்பட்டுள்ளது. ப்ருகு, ச்யவனர், அப்நவானர், ஔர்வர், ஜமதக்னி என்னும் ஐந்து மகரிஷிகள் ஸ்ரீவத்ஸ கோத்திரத்துக்குப் பிரவர்த்தகர்கள். இந்தப் பெயர்களைத் தத்தித ப்ரத்யயாந்தமாக மாற்றி, பார்கவ, ச்யாவந, ஆப்நவாந, ஔர்வ, ஜாமதக்ந்ய என்று வழங்குவர். தொன்றுதொட்டு வரும் வழக்கத்தினால் இந்தப் பெயர்களில் சில உச்சாரண பேதங்கள் தோன்றியிருப்பது இயல்பே. மேலே கொடுத்திருப்பதுதான் சரியான உச்சாரணம்.

இந்த மகரிஷிகள் அனைவரும் தனித்தனியே புனிதமான வரலாறும் மகிமையும் உள்ளவர்கள். அவர்களுள் முதன்மையான ப்ருகு மகரிஷியோ, இந்த ஐவர்க்கு மட்டுமின்றி ஏனைய மகரிஷிகள் அனைவருக்குமே முதன்மை பெற்றுப் பிராகாசிப்பவர். இந்த உண்மையையே பகவத்கீதையில் கிருஷ்ணன் 'மஹர்ஷீணாம் ப்ருகுரஹம்' என்று அருளிச்செய்தார்.

இதில் இன்னும் ஒரு காரணமும் உண்டு: ப்ருகு மகரிஷிக்குக் கர்தமப் பிரஜாபதியின் பெண்ணான க்யாதி என்னும் மனைவியிடம் பிறந்தவள் மகாலக்ஷ்மி. அவளையே ஸ்ரீமந்நாராயணன் மணந்துகொண்டு லக்ஷ்மீகாந்தன், திருமகள் கேள்வன், ச்ரிய: பதி என்றெல்லாம் பெயர் பெற்றுவிட்டார். மகாலக்ஷ்மிக்கும் தன்

தந்தையின் பெயராலேயே பார்கவீ என்னும் பெயர் தோன்றியது. இதனால் ஸ்ரீமந்நாராயணனுக்கு மாமனார் ஆனார் ப்ருகு மகரிஷி. அழகு தெய்வமான திருமகளைப் பெற்று வளர்த்துத் தமக்குக் கொடுத்து, மற்றத் தேவர்களைத் 'திருவில்லாத் தேவர்'களாக்கிய ப்ருகு மகரிஷியை மாப்பிள்ளை வாயாரப் புகழ்வது பொருத்தமான செய்கையே. 'அகலகில்லேன் இறையும்' என்று திருமார்பில் உறையும் அலர்மேல்மங்கையின் கடாக்ஷத்துக்கு நிரந்தரமான இலக்காகி அதன் ரஸமறிந்த எம்பெருமான், "என்ன புண்ணியம் செய்தாரோ இவளைப் பெற்ற மகரிஷி!" என்று உள்ளம் பூரித்துப் பேசுகிறார்.

உலகம் தோன்றியபோதே அவதரித்து நீண்ட ஆயுளைப் பெற்று நல்வாழ்வு வாழ்ந்த ப்ருகு மகரிஷியின் அருமை பெருமைகள், வேதங்களிலும் இதிகாஸ புராணங்களிலும் பரவலாக இடம் பெற்றுள்ளன. பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் ஜீவாதாரமான தத்துவங்கள் பலவற்றுக்கும் இவர் காரணபூதராக இருந்திருக்கிறார். பற்பல மகரிஷிகளுக்கு சிஷ்யராகவும், பல மகரிஷிகளுக்கு ஆசாரியனாகவும் இருந்து இவர் செய்த புனிதமான செயல்கள் எண்ணற்றவை.

தைத்திரீயோபநிஷத்தில் 'ப்ருகுவல்லீ' என்று பிரஸித்தமான பகுதி வேதாந்த விசாரத்துக்கு இன்றியமையாதது. மகாபாரதத்தில், 'ப்ருகு பரத்வாஜ ஸம்வாதம்' என்னும் பகுதி தத்துவத்தை விளக்குவதில் ஈடு இணையற்றது. பரத்வாஜ முனிவர் கேட்கிறார்; ப்ருகு மகரிஷி சொல்லுகிறார். இதுவே 'ப்ருகு பரத்வாஜ ஸம்வாதம்' என்பது. புனிதமான நம் பாரததேசம் புண்ணிய க்ஷேத்திரங்களும் புண்ணிய தீர்த்தங்களும் புண்ணியமான மலைகளும் நிறைந்தது. இவற்றிலெல்லாம் ப்ருகு மகரிஷியின் திருநாமம் இணைந்து பொருந்தித் திகழ்கிறது. ப்ருகு தீர்த்தம், ப்ருகு புஷ்கரிணி, ப்ருகு ப்ரஸ்ரவணம், ப்ருகு துங்கம், ப்ருகு தேசம் என்ற பெயர்கள் இன்றளவும் வழங்குகின்றன. ஸ்ரீவத்ஸ கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் இவரைக் குல முதல்வராகப் பெற்றுள்ளமைக்காகப் பெரிதும் பாராட்டப் பெற வேண்டியவர்களே.

## வேதப் பிரஸித்தி

வேதங்களில் ப்ருகு மகரிஷிக்கு மிக மிக முக்கியத்துவம் உண்டு. 'அங்கிரஸ்ஸுக்கள்' என்பது ரிஷிகளின் ஓர் இனம். ப்ருகு

என்னும் சொல்லும் பரம்பரையை உணர்த்துவதற்காகப் பன்மையில் வரும். "ப்ருகுக்கள், அங்கிரஸ்ஸுக்கள் ஆகிய இரண்டு இனங்களும் தபஸ்ஸில் பெயர் பெற்றவை. அவ் வகையிலேயே நீங்களும் தாபம் பெறுங்கள்" என்னும் கருத்தில், "भृगूणामङ्गिरसां तपसा तप्यध्वम्" என்னும் வேதமந்த்ரம் தோன்றியது.

ப்ருகு மகரிஷிக்கும் அக்கினிக்கும் நெருங்கின தொடர்பு உண்டு. அக்கினியுடனே இவர் பிறந்ததாகப் பல வேத வாக்கியங்கள் கூறுகின்றன. அக்கினியை வளர்ப்பதற்காக ஸமித்து முதலியவற்றைக் கொண்டுவந்து ஹோமங்கள் செய்வது, அக்கினியுடன் உரையாடுவது முதலிய பல செயல்களில் ஈடுபட்டவராக இவரை வேத வாக்கியங்கள் வர்ணிக்கின்றன.

முதல்முதலில் அக்கினியைக் கண்டுபிடித்து உலகுக்கு அளித்த பெருமை இவரையே சார்ந்தது. ரிக்வேதத்தில் அக்கினியின் உற்பத்தி ஸ்தானங்கள் பலவாறுகக் கூறப்பெறுகின்றன. ஆகாயம், செடி கொடிகள், அடர்ந்த புதர்கள், ஜலம், கற்கள், காடுகள், ஓஷதிகள் இவற்றிலிருந்து மனிதர்களுக்கு அத்யாவச்யகமான அக்கினி தோன்றினன் என்கிறது ஒரு மந்த்ரம். விஞ்ஞான ரீதியிலும் சரித்திர அமைப்பிலும் உள்ள பல தத்துவங்களை இவை உணர்த்த வல்லன. இவற்றுள், ஜலத்திலிருந்து நெருப்பைக் கொண்டு வந்து உலகுக்கு அளித்தது அரியதோர் சாதனை. இதைச் செய்தவர் ப்ருகு மகரிஷியே. நீருக்கும் நெருப்புக்கும் நிரந்தரமான பகை உண்டு என்பது யாவரும் நன்கறிந்த விஷயம். ஆனால் இது வெளித் தோற்றத்தில்தான். விஞ்ஞான ரீதியில் ஆராய்கிறவர்களுக்கு நீருள் நெருப்பு அழுந்திக் கிடப்பது புலனாகும். இதற்கு ஆராய்ச்சித் திறமை வேண்டும். அவசியமான சில பரிசோதனைகள் செய்து பார்க்க வேண்டும். இதற்கெல்லாம் ஆதாரமாக, 'நீருள் நெருப்பு இடம் பெற்றுள்ளது' என்பதை முன்கூட்டியே உணருதல் அவசியம். இக்காலத்திய விஞ்ஞானிகள் அற்புதமாக இதையெல்லாம் செய்து காட்டி, நீரிலிருந்து நெருப்பை வெளிக்கொணர்ந்து உலகின் உபயோகத்துக்குப் பலவாறுகப் பயன்படுத்த உதவுகின்றனர். சரித்திர காலத்துக்கு முன்னமே ப்ருகு வம்சத்தினர் இதைச் செய்து உலகுக்கு வழிகாட்டியுள்ளனர். இதோ இந்த ரிக் மந்த்ரம் இவ் விஷயத்தைக் கூறுகிறது —

इमं विधन्तो अपां सधस्थे पशुं न नष्टं पदैरनु ग्मन् ।
गुहा चतन्तमुशिजो नमोभिरिच्छन्तो धीरा भृगवोऽविन्दन् ।।

— ரிக்வேதம், 10.46.2.

इमं विधन्तो अपां सधस्थे द्वितादधुर्भृगवः..... ।

— ரிக்வேதம், 2.4.2.

"ப்ருகு வம்சத்து ரிஷிகள் அரிய மேதை படைத்தவர்கள். தளராத ஊக்கமும் ஆராய்ச்சித் திறமையும் உள்ளவர்கள். அக்கினியினிடம் அளவு கடந்த ஆசை இவர்களுக்கு.

அவனை வணங்கி வழிபடுவதில் அபாரமான ஆவல். எளிதில் கண்டுபிடிக்க முடியாத ரகசியமான இடத்தில் இந்த அக்கினி மறைந்து கிடந்தான். அது எந்த இடம் தெரியுமா? ஜலம்தான். ஜலத்தினுள் புகுந்து இரண்டறக் கலந்து மறைந்துவிட்டான் அக்கினி. மற்றவர்களால் இதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. என்ன காரணம்? அக்கினியிடம் அவர்களுக்கு அவ்வளவு அதிகமான ஆசை இல்லை. ப்ருகு வம்சத்தினருக்கு மேதையுடன் ஆஸ்தையும் இருந்தது. அவர்கள் நீரினுள் பொதிந்து கிடந்த அக்கினியைக் கண்டெடுத்துவிட்டனர். அவர்கள் பலவிதமான பரிசோதனைகளைச் செய்து பார்த்தனர். வெற்றி கண்டனர். பசு மாடு காணமற் போய்விட்டால் அதற்கு உடையவன் என்ன செய்கிறன்? போனல் போகட்டும் என்று சோம்பேறியாக உட்கார்ந்திருப்பானா? அது போகக்கூடிய இடங்களை ஊகித்தறிந்து அவ்விடங்களில் தேடித் திரிவான். அதன் காலடி வைப்பு மண்ணில் பதிந்திருப்பதை உற்று நோக்குவான். அவ்வழியே சென்று அதைக் கண்டுபிடித்து மீட்டுக் கொண்டு வந்தே தீருவான். அப்படித்தான் ப்ருகு வம்சத்தினரும், நீரினுள் மறைந்து கிடந்த அக்கினியை விடாமுயற்சியுடன் அரும்பாடுபட்டு வெளிக் கொணர்ந்தனர்" என்பது கருத்து.

और्वभृगुवच्छुचिमप्नवानवदा हुवे ।
अग्निं समुद्रवाससम् ।।

— ரிக்வேதம், 8.102.4.

अयमिह प्रथमो धायि धातृभिर्होता यजिष्ठो अध्वरेष्वीड्यः ।
यमप्नवानो भृगवो विरुरुचुर्वनेषु चित्रं विभ्वं विशेविशे ।।

— ரிக்வேதம், 4.7.1.

"ஔர்வர், ப்ருகு, அப்நவானர் இவர்கள் போல் அக்கினியை அழைக்கிறேன். இந்த அக்கினி முதன்மையாக இருக்கிறான். யாகம் செய்யும் ரித்விக்குகள் இவனை முதன்மையாக்கித் துதிக்கின்றனர். அப்நவானர் முதலிய ப்ருகு வம்சத்தினர் இந்த அக்கினியை வளர்த்தனர். மக்களுக்காகப் பல வடிவங்களில் தோன்றுபவன் இவன்" என்பது கருத்து.

மற்றும் பல மந்த்ரங்கள் இவ்வாறு ப்ருகு வம்சத்தினருக்கு அக்கினியுடன் நெருங்கிய தொடர்புள்ளமையைப் பரக்கப் பேசுகின்றன. ரிக் வேதத்திலுள்ள பல ஸூக்தங்களைக் கண்டு உபதேசித்த மகரிஷிகள் ப்ருகு வம்சத்தவர்கள் உண்டு.

## புராண வரலாறு

இதிஹாஸ புராணங்கள் அனைத்தையும் ஸூத பௌராணிகரிடம் பணிவுடன் கேட்டு உலகுக்கு உதவிய சௌனகர் ப்ருகுவம்சத்தவர்தாம். என்றும் குன்றாத யௌவனத்துடன் பதினாறு வயது வாலிபராகவே சிரஞ்ஜீவியாக விளங்கும் மார்க்கண்டேய மகரிஷி யமனை வென்றவர். அவரும் ப்ருகு வம்சத்தவரே. எம்பெருமானுடைய தசாவதாரங்களில் ஆறாவது அவதாரமான பரசுராமர் ப்ருகு வம்சத்தைச் சார்ந்தவரே. தசாவதாரங்களையும் வரிசையாகத் திருநாமமிட்டுச் சொல்லும் போது, ராமன் என்னும் பெயர் மூன்று அவதாரங்களுக்குத் தொடர்ந்தாற் போல் வருகிறது அல்லவா? அப்போது பரஸ்பரம் வேற்றுமை தோற்றக் கூறுவதற்காக, 'பார்க்கவராமன்' என்று பரசுராமரைக் குறிப்பிடுவதுண்டு. இது குலக் கிரமமாக வந்த பெயர் இவருக்கு. வ்ருத்ராஸுரனைக் கொல்ல முடியாமல் தேவேந்திரன் திகைத்து நின்றபோது, தமது முதுகெலும்பைத் தந்து, அதை வஜ்ராயுதத்துடன் இணைத்து வ்ருத்ரனைக் கொல்லுமாறு கூறித் தம்மையே உலக க்ஷேமத்துக்காக மாய்த்துக்கொண்ட உத்தமரான ததீசி முனிவர் ப்ருகு வம்சத்தைச் சார்ந்தவரே. ஜனமேஜயருடைய

ஸர்ப்பயாகத்துக்குக் காரணபூதராக இருந்த - உலகமே பிரமித்துப் போய் நிற்கும்படி அதை நடத்தி வைத்த உதங்கரும் இவ்வம்சத்தவரே. இப்படி எண்ணற்ற தேஜஸ்விகளான மகரிஷிகள் ப்ருகு வம்சத்தில் தோன்றியுள்ளனர்.

## அக்கினி சாபம்

ப்ருகு மகரிஷிக்கும் அக்கினிக்கும் பரஸ்பரம் ஸ்நேஹமும் உறவும் ஆசையும் அபிமானமும் இருந்தன. ஒரு சமயத்தில் இதன் விளைவு விபரீதமாகிவிட்டது. அக்கினியை ப்ருகு மகரிஷி சபித்துவிட்டார். பயங்கரமான சாபம் அக்கினியின் மேல் விழுந்தது. உலகமே பிரமித்துப் போய்விட்டது. தேவர்கள் அதிர்ச்சியுற்றனர். பிரம்மாவுக்குப் பைத்தியம் பிடித்தாற்போல் ஆகிவிட்டது. யாகங்கள் அனைத்தும் நின்றுவிட்டன. உலக நடவடிக்கையே ஸ்தம்பித்துவிட்டது. எவருக்கும் ஒன்றும் புரியவில்லை. "அக்கினியே! நீ ஸர்வபக்ஷகனுவாய்" என்பதுதான் ப்ருகு மகரிஷி அக்கினிக்குக் கொடுத்த சாபம். இதில் அர்த்தம் தெரிந்துகொள்ள முடியாதது ஒன்றுமில்லை. "நீ எதையும் தின்ன வேண்டும்; அதாவது உனக்குத் தின்ன வேண்டியது இது, தின்னக் கூடாதது இது என்னும் வ்யவஸ்தை இன்று முதல் இல்லாமற்போகக் கடவது" என்பதுதான் சாபத்தின் ஸாரம்.

அக்கினி எதையாவது தின்பது அல்லது தின்னுதது என்பதன் பொருள் எரிப்பது எரிக்காதது என்பதுதான். இப்போது எதையும் 'தின்னும்' நிலைமையையே நாம் அக்கினியில் காண்கிறோம். நெருப்பில் எதைப் போட்டாலும் எரிந்து சாம்பலாகிவிடுகிறது. ஏதாவதொன்று எரியாமல் அப்படியே நெருப்பில் தங்கியிருப்பதை நாம் இப்பொழுது காண முடிவதில்லை. ப்ருகு சாபத்துக்குப் பிந்திய நிலை இது. இதைத் தான் நாம் அறிவோம்.

அதற்கு முன் இப்படி இல்லை. தேவர்களுக்காக மந்த்ர பூர்வமாக யாகங்களில் ஹோமம் பண்ணப்பெறும் ஹவிஸ்ஸுக்களை மட்டுமே அக்கினி எரிக்கும் - அதாவது - தின்னும். மற்றப் பொருள்களை அக்கினியில் போடவே மாட்டார்கள். போட்டாலும் அது ஏற்காது. தேவர்களின் முகம் அல்லவா அக்கினி? முகத்தில் அசுத்தமான பொருளைப் போடவும் முடியாது. அப்படிப்

போட்டாலும் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். உண்பதற்கு ஏற்ற பொருள்களையே வாயில் போட்டுக்கொண்டு, உண்பதற்கு வேண்டாதவற்றை மிகுந்த எச்சரிக்கையுடன் முன்னுடியே விலக்கிவிடுவது நாள்தோறும் நம் அநுபவமாம். அப்படியே தேவர்களும் முகமாகிய அக்கினியை அசுத்தமான பொருள்களை ஏற்று எரிக்கவொட்டாமல் பாதுகாத்து வந்தனர். இயற்கையிலேயே அக்கினி ஹவிஸ்ஸுக்களை மட்டுமே ஏற்றுக்கொள்ளும்; அதைத் தேவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்கும். அக்காலத்திய அக்கினியின் நிலைமை அது. அந்த நிலையை இக்காலத்தவர்களாகிய நாம் புரிந்துகொள்ள முடியாது. இந்த இயற்கையைத் தமது கடுமையான சாபத்தினுல் ப்ருகு மாற்றிவிட்டார்.

## அக்கினியின் தவறு

இப்படி க்ரூரமான சாபம் தோன்றுமாறு அக்கினியின் தவறுதலான செயல்தான் ப்ருகு மகரிஷியைத் தூண்டிவிட்டது. இது ஒரு சிறுகதையாகவே அமைந்துள்ளது.

ப்ருகு மகரிஷிக்கு மனைவியர் பலர் உண்டு. புலோமா என்பவளும் அவர்களுள் ஒருத்தி. இவள் சிறந்த கட்டழகி. ப்ருகு மகரிஷி இவளை மணந்தார். இவ்விருவருக்கும் விவாகம் நடப்பதற்கு முன் காலத்தில் — புலோமா சிறு குழந்தையாக இருந்த காலத்தில் — நடந்த ஒரு நிகழ்ச்சியே இந்த அக்கினி சாபத்துக்குக் காரணமாயிற்று.

சின்னஞ்சிறு குழந்தை புலோமா மிகுந்த பிடிவாதக்காரி. அடிக்கடி தாய்தந்தையரைத் தன் பிடிவாதத்தினுல் சிரமப்படுத்துவாள். தமது செல்லப் பெண் புலோமா வீண் பிடிவாதம் பிடித்துச் செய்ய வேண்டியதைச் செய்ய மறுக்கும் போதும், செய்யக் கூடாதவற்றைச் செய்யத் துணியும் போதும் அவளை வழிக்குக் கொண்டு வருவது தாய்தந்தையருக்குப் பெரும் பிரச்னையாகிவிட்டது இதற்கு அவர்கள் ஓர் உபாயத்தைக் கையாளுவது வழக்கம். குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு வாசலில் வருவார்கள். "அதோ பார், அந்த மரத்தில் இருக்கிறுனே ஒரு பிரம்மராக்ஷஸன்! அவனுக்கு உன்னைக் கொடுத்துவிடப் போகிறேன்" என்று ஒரு மரத்தைக் காட்டுவார்கள். குழந்தை பயந்துபோய் வாயைப் பொத்திக்கொண்டு சொன்னபடி கேட்கும்.

ஆனால் சிறிது நேரத்துக்கெல்லாம் மீண்டும் பிடிவாதம் பிடிக்கும். அவர்கள் அந்த மரத்தைக் காட்டுவார்கள்; அடங்கிவிடும். இப்படியே பல ஆண்டுகள் — குழந்தை பெரியவளாகி ஸஹஜமாக மாறுகிறவரையில் நடந்தது. கல்யாண வயது வந்தது. ப்ருகு முனிவருக்குக் கொடுத்து விவாகம் செய்வித்தனர். பெண் கணவனுடன் புக்ககம் போய்ச் சேர்ந்தாள்.

### ராக்ஷஸன் தொடர்பு

அந்த மரத்தில் உண்மையாகவே ஒரு ராக்ஷஸன் மறைந்து வஸித்து வந்திருக்கிறான். புலோமாவுக்கோ அவளது தாய் தந்தையருக்கோ இது தெரியாது. ஆனால் அவனுக்கு இவர்களை நன்றாகத் தெரியும். இந்த அழகிய பெண்ணைத் தனக்குக் கொடுப்பதாக அவர்களே வலிவில் சொல்லுவதை அவன் நன்கு உணர்ந்து கொண்டான். அவ்வப்போது குழந்தையை நல்வழிப்படுவதற்குத் தன் துணை இன்றியமையாததாகிவிட்டதை அவனும் பார்த்துக் கொண்டேதான் இருக்கிறான். அதனால் அந்தப் பெண்ணை மணந்து கொள்வதற்கு உரிமையும் தனக்கு இருப்பதாக அவன் பார்த்து வந்தான். பருவகாலம் வரட்டும், மணந்துகொள்ளலாம் என்று காத்திருந்தான். பாவம்! முடிவு வேறு விதமாகிவிட்டது.

ப்ருகு மகரிஷி அவளை மணந்துகொண்டு தம்முடன் அழைத்துக்கொண்டு போய்விட்டார். தனக்கென்று நிச்சயம் செய்திருந்த அழகியை அக்கிரமமாக ப்ருகு மணந்து கொண்டதாக எண்ணி மனம் புழுங்கினான் ராக்ஷஸன்; கடுஞ்சினம் கொண்டான். ஆனால், ப்ருகு மகரிஷியிடம் நெருங்க முடியவில்லை அவனுக்கு. அவருடைய தேஜஸ் அப்படிப்பட்டது. ஆனாலும் விடாமல் தம்பதிகளைத் தொடர்ந்து வந்தான். எப்போதாவது சந்தர்ப்பம் வாய்க்கும்போது புலோமாவை கட்டிப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போய்விட வேண்டும் என்பது அவன் எண்ணம். ப்ருகு மகரிஷியின் ஆசிரமத்தருகிலேயே ஓர் இடத்தில் மறைந்து வஸித்தான்.

### தபோபலம்

ஸர்வஜ்ஞரான ப்ருகு முனிவருக்கு இவ் விஷயம் நன்றாகத் தெரிந்துவிட்டது. அவர் இதை யாரிடமும் கூறவில்லை. தமது

தவமகிமையினுல் அந்த ராக்ஷஸனை ஆசிரமத்தில் அணுகவொட்டாமல் செய்துவிட்டார். தம்பதிகள் சிறிதும் கவலையின்றி இன்ப வாழ்க்கை நடத்தி வந்தனர். ப்ருகு மகரிஷி ஆசிரமத்தில் இருக்கும்போது அந்த ராக்ஷஸனுல் ஒன்றும் செய்ய முடியாது. அவர் அவசியமாக வெளியில் செல்ல வேண்டியிருந்தால் தமது அக்கினியிடம் புலோமாவை ஒப்படைத்துச் செல்வார். அவர் திரும்பி வருமளவும் அக்கினியே ஆசிரமத்தினுள் யாரும் நுழையவொட்டாமல் பார்த்துக்கொள்ளும். இப்படி மாறி மாறி ப்ருகுவும் அக்கினியும் புலோமாவைக் காத்து வந்தனர். ராக்ஷஸனும் சமயம் வாய்க்குமென்று விடாப்பிடியாகக் காத்துக் காத்து அலுத்துப் போனுன். ஆனுலும் ஆசிரமத்தருகிலேயே இருந்தான்.

### ஸாஹஸச் செயல்

ஒரு நாள் ப்ருகு மகரிஷி ஸ்நானம் பண்ணுவதற்காக வெளியில் சென்ருர். வழக்கம்போல் அக்கினியிடம் தம் தர்மபத்தினியை ஒப்படைத்து எச்சரிக்கையுடன் இருக்கச் சொல்லிப் போனுர் அவர். அந்த சமயத்தில் ராக்ஷஸன் ஆசிரமத்தில் புகுந்து பலாத்காரமாகப் புலோமாவைத் தூக்கிக்கொண்டு போக முயன்ருன். அக்கினியின் பாதுகாப்பில் புலோமா நிர்ப்பயமாக இருந்தாள். ராக்ஷஸன் தன்னைத் துன்புறுத்துவதைக் கண்டு அலறினுள். அக்கினி அவனைத் தடுத்தது. ராக்ஷஸனுக்கும் அக்கினிக்கும் வாக்குவாதம் நடந்தது. "இவள் எனக்குத்தான் உரியவள். இவளுடைய தாய்தந்தையர், சரியான பிரதிபலனைப் பெற்று அதற்கு ஈடாக இவளை எனக்கே கொடுத்தனர். தக்க பருவம் வரட்டுமென்று நான் காத்திருந்தேன். ப்ருகு மகரிஷி இடையில் வந்து இவளை மணந்துகொண்டதுதான் தவருன காரியம், அக்கினிதேவனே! நீ அன்றும் இன்றும் என்றும் எல்லாப் பிராணிகளின் உடலுக்குள்ளும் வெளியிலும் நிரந்தரமாக வாஸம் பண்ணுகிருய். அதனுல் இதெல்லாம் உனக்கு நன்ருத் தெரியும். இதிலுள்ள நியாயத்தை நீயே சொல். இவள் என்னுடையவளா? அல்லது ப்ருகு மகரிஷியுடையவளா?" என்று ராக்ஷஸன் கேட்டான்.

## தர்ம சங்கடம்

அக்கினிக்குப் பெரிய தர்மசங்கடம் உண்டாகிவிட்டது. "விளையாட்டே வினையானது" என்று சொல்வார்களே. அது இவ் விஷயத்தில் பிரத்தியக்ஷமாக நிரூபணமாகிவிட்டது. குழந்தையை வழிக்குக் கொண்டு வருவதற்காகத் தாய் தந்தையர் எவ்வளவோ செய்கின்றனர். குழந்தைக்கு விருப்பமில்லாத பல விஷயங்களைச் செய்து விடுவதாகக் கூறுவர். அது வழிக்கு வந்துவிடும். அத்துடன் அந்த வார்த்தைகளும் மறைந்துவிடும். இது உலகில் ஸர்வஸஹஜமாக நடப்பது தானே. இந்த ஆதாரத்தை வைத்துக்கொண்டு இந்த ராக்ஷஸன் இவளிடம் உரிமை கொண்டாடுவது பொருந்தாது. உண்மையிலேயே அந்த மரத்தில் ராக்ஷஸன் ஒருவன் மறைந்திருப்பதை அவர்கள் உணர்ந்திருந்தால் இவ்வாறு செய்திருப்பார்களா? அந்தப் பக்கமே போகமாட்டார்கள்; குழந்தையை எடுத்துக்கொண்டு வேறு எங்கேயாவது ஓடிப் போயிருப்பார்கள்.

மேலும், ஸர்வஜ்ஞரான ப்ருகு மகரிஷி இவளை மந்த்ரபூர்வகமாக முறைப்படி விவாகம்செய்துகொண்டிருக்கிறார். பிறருடைய உரிமையிலுள்ள கன்னிகையை அவர் மணந்து கொள்வாரா? சாஸ்திரீயமான சடங்குகள் மூலம் இந்த ராக்ஷஸனுக்கும் புலோமாவுக்கும் திருமணம் நடந்துள்ளதா? தாய் தந்தையர் அந்த முறையில் இவளை இவனுக்குக் கொடுத்தார்களா? ஆதலால் ராக்ஷஸனுடைய வாதம் இவ்விஷயத்தில் சரியானதல்ல. தற்செயலாகக் கூறிய வார்த்தையை உண்மையாக நினைத்துக்கொண்டு, அல்லது அதை ஆதாரமாகக் காட்டி இவளிடம் இந்த ராக்ஷஸன் உரிமை கொண்டாடுவது வீண் வம்பு. தன் தேகபலம் மிகுந்திருப்பதையும், சம்பந்தப்பட்ட மற்றவர் துர்ப்பலமாக இருப்பதையும் நினைத்து துர்மார்க்கத்தில் இறங்குகிறான் இவன். இது அநியாயம்" என்று இப்படிப் பலவாறாக ஆற அமர விஷயங்களை அலசிப் பார்த்து முடிவு கூறியது அக்கினி – "இவள் ப்ருகு மகரிஷிக்குத்தான் உரியவள்" என்று.

## கைமேல் பலன்

இவ்வளவு ஸாவகாசமாக முடிவு கூறும் வரையில் ராக்ஷஸன் காத்திருக்கவில்லை; இந்த முடிவை ஏற்றுக்கொள்ளவுமில்லை.

'வலிவை உபயோகித்துத் தூக்கிக்கொண்டு ஓடி மணந்துகொள்வதுதான் ராக்ஷஸ விவாகம்' என்பது தர்மசாஸ்திரகாரர்களுடைய வசனம். இங்கும் அதுவே நடந்தது. புலோமாவை ஓங்கி ஓர் அறை அறைந்து வாரியெடுத்துக் கொண்டு ஓடிவிட்டான் ராக்ஷஸன். பாவம்! பத்து மாஸ கர்ப்பிணி. இந்த மாபெரும் அதிர்ச்சியை எப்படி ஸஹிப்பாள்? சில அடிகள்தாம் இவளைத் தூக்கிக் கொண்டு ராக்ஷஸன் ஓடியிருப்பான்; அதற்குள் அவள் பிரஸவித்துவிட்டாள். மகாதேஜஸ்வியான குழந்தை கீழே விழுந்தது. பயங்கரமான அலறல் ஒன்று தோன்றியது. அவ்வளவுதான், புலோமா ஒரு புறம் விழுந்தாள். ராக்ஷஸன் ஒரு பக்கம் விழுந்தான். குழந்தையின் தேஜஸ்ஸினால் அவன் விழுந்த இடத்திலேயே எரிந்து சாம்பலாகிவிட்டான். தாயும் குழந்தையும் விழுந்த இடத்திலேயே கிடந்தனர். மின்னல் வேகத்தில் அனைத்தும் நடந்து முடிந்தது.

ப்ருகு மகரிஷி தம் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஆசிரமத்துக்குத் திரும்பினார்; மனைவியைக் காணமல் கலங்கினார். நடந்த விஷயங்களை ஞான திருஷ்டியின் மகிமையினால் உடனே அறிந்துகொண்டார். அவசர அவசரமாகத் தம் மனைவியும் குழந்தையும் விழுந்து கிடந்த இடத்துக்கு ஓடினார். அதற்கும் மேல் அவசரமாக அக்கினியை மேலே கூறியவாறு கடுமையாகச் சபித்துவிட்டே போனார். அவ்வளவு கோபம் அக்கினியின்மேல் அவருக்கு.

ராக்ஷஸன் வந்து அதிக்கிரமமான செயலில் இழிந்த போது அக்கினி என்ன செய்திருக்க வேண்டும் என்பது அவருக்கு நன்கு தெரிந்தது. அவனை அந்த இடத்திலேயே பொசுக்கி விட்டிருக்க வேண்டும். இதை அக்கினி செய்யவில்லை; அவனுடைய வாதப் பிரதிவாதங்களுக்கு இடம் கொடுத்தான். இது பெரும் தவறு; விபரீதமான விளைவுக்குக் காரணமாக அமைந்தது. அக்கினி தக்க சமயத்தில் சரியாக நடந்துகொண்டிருந்தால் இந்த விபரீத ஸம்பவம் நிகழ்ந்திருக்காது. தம் மனைவியை — பூர்ண கர்ப்பிணியை — இப்படிக் காட்டிக் கொடுத்ததற்காகவே அவர் பயங்கரமாக அக்கினியை சபித்தார். பிரஸவித்தவளையும் சிசுவையும் பக்குவமாக ஆசிரமத்துக்குக் கொண்டுவந்து சேர்த்து, தக்க

முறையில் உபசரித்துத் தேற்றினர். க்ஷேமமாகத் தாயும் சேயும் குணமடைந்தனர். இந்தக் குழந்தைக்குத்தான் 'ச்யவனர்' என்று பெயர். ஸ்ரீவத்ஸ கோத்ர ப்ரவர்த்தகர்களான ஐந்து ரிஷிகளுள் ப்ருகுவுக்கு அடுத்தபடியாக இரண்டாவது இடம் இவருடையதே.

## சாபத்தின் விளைவு

"ஸர்வபக்ஷகனுவாய்" என்பது சாபம்; மிகவும் இழிவான சாபம். இதைவிடக் கேவலமானது வேறு எதுவும் இருக்க முடியாது. 'ஸர்வ' என்றால் 'எல்லாம்' என்று அர்த்தம். அர்த்தம் இப்படி இருந்தாலும் முதல்முதலில் தோன்றுவது மிக மிக இழிவான வஸ்துதான். 'இப்படியா நேர்ந்துவிட்டது!' என்று அனைவரும் திகைத்துப் போனார்கள். இந்த அக்கினியை முகமாகக் கொண்டு தமது ஹவிர்பாகங்களை ஏற்றுக்கொள்வதில் தேவர்களுக்கு அருவருப்பு உண்டாகி விட்டது. யாக ஹோமாதி வைதிக காரியங்களெல்லாம் ஸ்தம்பித்துவிட்டன.

## நான்முகன் வருகை

ஸாக்ஷாத் பிரம்மாவே நேராக ஸ்தலத்துக்கு வந்து தோன்றினார். சாபத்தை அவரால் மாற்ற முடியவில்லை. யாராலும் இதைச் செய்ய முடியாது. எனவே அவர் அனைவரையும் சமாதானப்படுத்திவிட்டுப் போனார். "நடந்தது நடந்ததுதான். இதனால் அக்கினிக்குச் சிறிதும் அசுத்தி இல்லை. நான் சொல்லுகிறேன், கேளுங்கள். இழிவான பதார்த்தங்களை அக்கினி எரித்துவிட்டால் என்ன குடி முழுகிப் போய்விட்டது? அந்தப் பொருள் அப்படியே இருந்தால் அனைவருக்கும் மிகவும் அஸௌகரியமாக இருக்கும். அதை எரிப்பதன் மூலம் அக்கினி அந்த இடத்தைச் சுத்தப்படுத்துகிறான். இது அனைவருக்கும் நன்மைதானே? இதில் அவமானம் என்ன? சூரியனை எடுத்துக்கொள்வோம். தன் கிரணங்களைப் பரப்பி மூலை முடுக்குகளிலுள்ள அசுத்தத்தை நீக்கி அவன் உபகரிக்கிறான். சூரிய ஒளி இல்லாவிட்டால் உலகெங்கும் அசுத்தம் மூடிக்கொண்டுவிடும். வஸிக்கவே முடியாமற் போகும். அதற்காக நாம் ஸூரியனை அசுத்தமாகிவிட்டதாக எண்ணுகிறோமா? அப்படியே இந்த அக்கினி

விஷயத்திலும் வைத்துக் கொள்ள வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

பிரம்மா அக்கினிக்குச் சொன்ன ஆறுதல் --

न त्वं सर्वशरीरेण सर्वभक्षत्वमेष्यसि ।
उपादानेऽर्चिषो यास्ते सर्वं धक्ष्यन्ति ताः शिखाः ।।
यथा सूर्यांशुभिः स्पृष्टं सर्वं शुचि विभाव्यते ।
तथा त्वदर्चिर्निर्दग्धं सर्वं शुद्धं भविष्यति ।।

ந த்வம் ஸர்வசரீரேண ஸர்வபக்ஷத்வமேஷ்யஸி ।
உபாதானேர்சிஷோ யாஸ்தே ஸர்வம் தக்ஷ்யந்தி தா: சிகா: ।।
யதா ஸூர்யாம்சுபி: ஸ்ப்ருஷ்டம் ஸர்வம் சுசி விபாவ்யதே ।
ததா த்வதர்சிர் நிர்தக்தம் ஸர்வம் சுத்தம் பவிஷ்யதி ।।

— மகாபாரதம், 1.7.22.23.

என்பதுதான். அக்கினிக்கு ஜ்வாலைகள் பல உண்டு. அவற்றுள் சில ஜ்வாலைகள்தாம் 'எல்லாவற்றையும்' எரிக்கும். மற்ற சில ஜ்வாலைகள் பழையபடி சுத்தமாகவே இருக்கும் என்று சூரியனை உபமானமாகக் காட்டிச் சரிப்படுத்திவிட்டுப் போனார். ப்ருகு மகரிஷியின் தேஜஸ்ஸுக்குப் பிரம்மாவே அடங்கி நடக்க வேண்டியதாயிற்று.

## பெயரின் பெருமை

ப்ருகு என்னும் பெயரில்தான் எத்தனை மகிமை பொதிந்து கிடக்கிறது, பாருங்கள்! பிரம்மாண்டமான தீ பற்றி எரியும்போது உண்டாகும் சப்தத்தின் பெயர் இது. 'ஒளி வீசிப் பிரகாசித்தல்' என்னும் பொருளும் இதற்கு உண்டு. சூரியனுடைய கிரணங்களுக்கே இந்தப் பெயர் உண்டு. மந்த்ரங்களுள் சிறந்ததான காயத்ரீ மந்த்ரத்தில் முக்கியமான 'भर्गः' (பர்க:) என்னும் சொல்லுக்கும் இந்தப் பெயருக்கும் ஒற்றுமை இருப்பது கண்கூடு. 'சூரியனுடைய தேஜஸ்' தான் அதில் 'பர்க:' எனப்பெறுகிறது. கடுமையான தபஸ் சக்தியினால் பாவங்களைப் பொசுக்குபவர் — பிரம்ம தேஜஸ்ஸினால் ஜ்வலிப்பவர் — அக்கினியுடன் பிறந்து வாழ்ந்து வருபவர் என்று இப் புடைகளில் இப் பெயருக்குப் பொருள் கூறுவர்.

செங்குத்தான உயர்ந்த மலையுச்சிக்கும் ப்ருகு என்னும் பெயர் உண்டு. அதிலிருந்து விழுந்து தன்னை மாய்த்துக் கொள்ளுவதன் மூலம் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடலாம். 'ப்ருகுபதநம்' என்று இதற்குப் பெயர். இப்படிப் பாவங்களை ஒழித்து மனிதனைத் தூய்மைப்படுத்தும் செய்கைகளுக்கெல்லாம் இந்தத் திருநாமத்தின் ஸம்பந்தம் அநாதியாகவே அமைந்துள்ளது. இவ்விதம் புனிதமான திருநாமத்தை அநுஸந்திக்கும்போதெல்லாம் அணு அணுவாக நம் பாபராசியும் தேய்ந்து கொண்டே வரும் என்பதில் ஐயமில்லை.

பிரம்மாவின் ஹ்ருதயத்தைப் பிளந்துகொண்டு ப்ருகுமகரிஷி வெளிவந்ததாகச் சில ஆதாரங்கள் காட்டுகின்றன. ஆதி மனுவினால் படைத்த 'ப்ரஜாபதிகள்' பதின்மருள் ப்ருகுவும் ஒருவர் என்கிறது மநு ஸ்மிருதி. வருணன் இவரை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டதனால் இவர் வருணனுடைய பிள்ளை என்கிறது உபநிஷத்து. 'भृगुर्वै वारुणिः । वरुणं पितरमुपससार ।' என்பதைக் காண்க. இதற்கெல்லாம் பௌராணிக ரீதியில் சரியான நிர்வாகங்கள் உள்ளன.

சோதிடம், ஆயுர்வேதம் முதலிய சாஸ்திரங்களில் இவர் பெயரால் அரிய நூல்கள் பல காண்கின்றன. பரதத்துவ நிர்ணயம் செய்வதில் இவர் தனிப் பெயர் பெற்றவர். பிரபஞ்ச ஸ்ருஷ்டியில் 'ப்ருகு ஸர்கம்' என்றே ஒரு பாகம் விஸ்தாரமாக இடம் பெற்றிருந்திருக்கிறது. இந்த மகானுடைய திவ்ய சரிதம அனந்தமானது. இவ்வளவில் இதை முடித்துக்கொள்வோம்.

# ச்யவநர்

ஸ்ரீவத்ஸ கோத்திரப் பிரவர்த்தகர்களான ரிஷிகள் ஐவருள் இரண்டாமவர் ச்யவந மகரிஷி. ப்ருகு மகரிஷியின் குமாரராகப் பிறந்தவர். இவர் தந்தையாகிய ப்ருகு மகரிஷியின் சரித்திரத்திலேயே இவருடைய திருவவதார வரலாறும் இடம் பெற்றுவிட்டது. பெரியாழ்வாருடைய சரித்திரத்தில் ஆண்டாளுடைய வைபவமும் இணைந்துள்ளவாறு போலவும், பராசர முனிவருடைய சரித்திரத்தில் வ்யாஸருடைய திருவவதாரமும் அடங்கியுள்ளவாறு போலவும் இதுவும் அமைந்துள்ளது. ஆண்டாளின் தனிப் பெருமைகள் ஒரு புறம் இருக்க, 'பட்டர்பிரான் கோதை' என்று தன்னைப் பெருமையுடன் அவள் கூறிக்கொள்கிறாள். அவ்வாறே வேதவ்யாஸருடைய பெருமைகள் அளவிட முடியாதவை. ஆயினும், 'வ்யாஸ: பாராசர்ய: ' என்று வேதம், பராசரருடைய குடல்துவக்கையிட்டு வியாஸரைச் சிறப்பித்துக் கூறுகிறது. எம்பெருமானுடைய அவதாரமாகிய ஸ்ரீராமனுக்குச் 'சக்கரவர்த்தி திருமகன்' என்று திருநாமமிட்டு அழைப்பதில்தான் எவ்வளவு ஆனந்தம்! அதுபோலவே, ச்யவநருக்கும் விசேஷமான மகிமைகளுக்குக் குறைவில்லை. ஆனாலும், 'ப்ருகுவின் பிள்ளையான ச்யவநர்' (ச்யவநோ பார்கவ:) என்று அழைப்பதில் இவருக்கு மிகமிகப் பிரியமாம். அதனால்தான் போலும் இதிஹாஸ புராணங்களில் பலகாலும் இவர் இவ்வண்ணமே குறிப்பிடப்பெறுகிறார்.

ஸ்ரீவத்ஸ கோத்திரத்தில் தோன்றுகிறவர்கள் எல்லாரும் ச்யவநருடைய வழித்தோன்றல்களே ஆவர்; அதாவது இவருடைய திருமேனி ஸம்பந்தமுள்ளவர்கள். அது தோற்றும்படியாகவே 'ச்யாவந' என்னும் சொல்லை அவர்கள் தம் ரிஷிகளின் வரிசையில் இரண்டாவதாகச் சேர்த்துக் கூறிக்கொள்கின்றனர், தத்தித ப்ரத்யயம் வைத்துக் கூறும்போது. ப்ருகு பார்கவ என்று மாறுவது போலவே, ச்யவந என்பது 'ச்யாவந' என்று மாறும். அநேகமாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் மறவாமல் இப்படித் தம் குல முதல்வர்களாகிய மகரிஷிகளின் தொடர்பைப் பெருமையுடன் கூறிக்கொள்ளும் நம் பாரத நாட்டுப் புனிதமான ஸம்பிரதாயத்தில்

ஒரு விசேஷம் உண்டு. ஒரு ரிஷியைக் கூறியபின் அவருக்கு அடுத்தவரையே (அவருடைய குமாரரையே) இரண்டாவதாகக் கூறிக்கொள்வதில்லை. பலரை விட்டு, ஒருவரைக் கூறுவதும், அதுபோலவே மீண்டும் பரவலாக மூன்று ஐந்து ரிஷிகளைக் கூறுவதும் தான் வழக்கம். ஆனால் இங்கு, ப்ருகு ச்யவநர் இருவரும் அடுத்தாற் போலவே கூறப்படுகின்றனர். இருவருடைய தேஜஸ்ஸும் அளவிட முடியாததாக இருந்தமையின், குலமுதல்வர்களின் வரிசையில் இவர்களைக் குறிப்பிடாமல் விட முடியவில்லை போலும்.

பெரியோர்களை வணங்கும்போதும், ஸந்தியாவந்தனம் முதலிய சடங்குகளைச் செய்யும்போதும் ஒவ்வொரு நாளிலும் பல தரம் 'அபிவாதயே' என்று தொடங்கும் சொற்கள் சொல்லப்படும். 'இப்படிப்பட்ட மகா தேஜஸ்விகளான முனிச்ரேஷ்டர்களின் பரம்பரையில் பிறந்தவன் நான்' என்று அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொள்வது எவ்வளவு இனிய வாய்ப்பு! எவ்வளவு பெருமைப்படக்கூடிய விஷயம்! தீய செயல்களை அறவே விலக்குவதற்கும், சிறந்த நற்காரியங்களை மேலும் மேலும் தொடர்ந்து செய்வதற்கும் அற்புதமான தூண்டுகோலாக இந்த அநுஸந்தாநம் அமைந்துள்ளமை அதிசயம்; ஆனால் உண்மை.

## விளையும் பயிர்

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பார்கள். அப்படியே ச்யவந முனிவருடைய விஷயம் இருந்தது. தம் தந்தையாராகிய ப்ருகு முனிவருக்கு எவ்விதத்திலும் தாம் குறைந்தவரல்ல என்பதைப் பிறந்த நிமிஷத்திலேயே ச்யவநர் நிரூபித்துக் காட்டிவிட்டார். இவர் கர்ப்பவாஸ காலத்தில் தான் ராக்ஷஸனால் இவரது தாயாராகிய புலோமாவுக்குப் பெரிய அபாயம் தோன்றியது. "நம் கர்ப்பத்திலுள்ள சிசுவோடு நாமும் மடிந்து போய்விட வேண்டியதுதான்" என்ற நிலையில் புலோமா நடுநடுங்கிக் கொண்டிருந்தாள். அதிசயத்திலும் அதிசயமான நிகழ்ச்சி நடந்தது. யமனுக்கும் யமனாகி விட்டது பிறந்த குழந்தை. அதனுடைய தேஜஸ்ஸின் வேகத்தைத் தாள மாட்டாமல் அவ்வரக்கன் பொசுங்கிப் போனான். தாயும் சேயும் க்ஷேமமாகத் தேறினர்.

இதில் மற்ருேர் அதிசயம்: அரக்கனை மட்டும்தான் சிசுவின் தேஜஸ் எரித்தது. தாயை ஒன்றும் செய்யவில்லை. இது ஒரு விசித்திரமான தேஜஸ். குற்றமுள்ள இடத்தில் மட்டும் தனது வேகத்தைக் காண்பித்தது. குற்றமற்ற இடத்தில் ஸஹஜமாக - யாதொரு துன்பத்தையும் தோற்றுவிக்காமலே இருந்துவிட்டது. நெருப்பு சுடும் என்ருல் அதில் தாரதம்யம் உண்டோ? எல்லாருக்கும் ஒரே விதமாகத்தானே அது சுடும்? இங்கு அப்படி இல்லை.

நரஸிம்ஹாவதாரத்தில்தான் இப்படிப்பட்ட அற்புதம் நிகழ்ந்தது. அழகியசிங்கர் அவதரித்த காலத்தில் இடிமுழக்கம் போன்ற அட்டகாசமும் சிங்கநாதமும் தோன்றின. மூவுலகமும் பெருநடுக்கமுற்றது. அனைவரும் திகைத்துப்போயினர். ஆனால் பெருமாளுடைய திருவடிகளின் கீழேயே நிர்ப்பயமாகச் சிறுவன் ப்ரஹ்லாதன் அமர்ந்திருந்தான். இந்தச் சீற்றமெல்லாம் அவனை ஒன்றும் செய்யவில்லை. இதற்கு மாருக அவனுக்குக் காப்பாகவே அமைந்தது. இதை நன்கு உணர்ந்த பிரஹ்லாதாழ்வானுக்கு அச்சம் எப்படி வரும்? "தனக்காகப் பிறந்த சீற்றமிறே" என்பது வியாக்யாதாக்களின் ஈடுபாடு. ச்யவநர் திருமேனியிலிருந்து தோன்றிய தேஜஸ்ஸும் இவ்வாறே விசித்திரமாகச் செயல்பட்டது.

## பெயரின் பொருத்தம்

ச்யவநர் என்னும் பெயர் இவருக்கு மிகமிகப் பொருத்தமாகவே வைக்கப்பட்டது. ராக்ஷஸன் இவரது தாயைப் பூர்ணகர்ப்பிணியாக இருந்தபோது பலாத்காரமாகத் தூக்கிச் சென்ற அதிர்ச்சியில் எதிர்பாராதபடி கர்ப்பகோசத்திலிருந்து நழுவி விழுந்தார் இவர். இந்த நிகழ்ச்சியையே உணர்த்த வல்ல பெயர் இவருக்கு இடப்பட்டது. நழுவச் செய்பவர், குலுக்குகிறவர் என்பது போன்ற பொருள்கள் இந்தப் பெயருக்கு உண்டு. இவை யாவும் இவர் பிறந்த போது ஏற்பட்ட நிகழ்ச்சிகளேயாம். உலக இயற்கைக்கு மாறுபட்டிருந்ததனுல் 'மாறன்' என்றே ஆழ்வாருக்குப் பெயரிடப்பட்டவாறு போலவே இதுவும் அமைந்தது.

### ஸுகன்யா

இந்த ச்யவநருடைய தர்மபத்தினிதான் 'ஸுகன்யா' என்று பிரஸித்தி பெற்றவள். 'நல்ல பெண்' என்பதுதான் 'ஸுகன்யா'

என்னும் பெயருக்குப் பொருள். மிகவும் பொருத்தமாகவே இவளுக்கும் பெயரிடப்பட்டது. உத்தமமான பதிவ்ரதா சிரோமணிகளின் வரிசையில் இவளுக்கு இடமுண்டு. இவள் ச்யவந முனிவருக்கு ஸஹதர்மசாரிணியாக வாய்த்தது விசித்திரமான வரலாறு.

## கடும் தவம்

நர்மதை நதிக்கரையில் வைடூர்ய பர்வதம் என்ற ஒரு மலை. அதன் அருகில் பயோஷ்ணி என்ற பிரம்மாண்டமான ஏரி. அதன் கரையில் ஓர் இடத்தில் ச்யவந முனிவர் அமர்ந்து நீண்டநாள் கடுமையான தவத்தில் ஆழ்ந்திருந்தார். அசைவற்று நெடுநாள் ஒரே இடத்தில் வீற்றிருந்தமையினால் இவர்மேல் இலைச் சருகுகள் முதலியன ஏராளமாக விழுந்து குவிந்துவிட்டன. அதில் கறையான் புகுந்து புற்று கட்டிவிட்டது. காலக் கிரமத்தில் மிகப் பெரிய புற்றுதான் அங்கே காணப்பட்டது. ச்யவந முனிவர் அதனுள் மறைந்து கிடந்தார்.

## ஜலக்ரீடை

சர்யாதி என்பவன் அந்த நாட்டு மன்னன். அவனுக்கு மனைவிமார் எத்தனை பேர் தெரியுமா? நாலாயிரம்! ஒரே ஒரு மகள்தான் அவ்வரசனுக்கு. அவள்தான் ஸுகந்யா. தன் பட்டமகிஷிகள், பரிவாரங்கள், செல்வக்குமரி இவர்களுடன் அவன் பயோஷ்ணி ஏரியில் ஜலக்கிரீடை பண்ணுவதற்காக வந்து சேர்ந்தான். நாலு விதமான படைகளும் சூழ்ந்து வந்தன.

## சிறுபிள்ளைத்தனம்

அரசன் மனைவிமாருடன் ஜலக்கிரீடையில் ஆழ்ந்திருந்தான். ஸுகன்யா தன் தோழிமாருடன் காட்டின் இயற்கையழகை ரஸித்துக் கொண்டிருந்தாள். புற்றுக்குள் மறைந்திருந்த ச்யவந மகரிஷிக்கு இதெல்லாம் நன்கு புலனாகியது. ஸுகன்யாவின் அழகிய வடிவத்தைக் கண்டு அவள் மேல் மையல் கொண்டார் முனிவர். இனிய காதல் மொழிகள் பலவற்றையும் அவளைப் பார்த்துப் பேசினார். ஆனால் அவளுக்கு இது ஒன்றும் காதில் விழவே இல்லை. மெய்ம்மறந்து தோழிகளுடன் விளையாடிக்கொண்டே இருந்தாள்.

ஒரு புற்றுக்குள் பளிச்சென்று பிரகாசமாக (ச்யவந முனிவருடைய கண்கள்) ஏதோ தெரிந்தது அவளுக்கு. அது என்னவாக இருக்கும் என்று அறிய விரும்பினாள். ஒரு முள்ளால் 'சருக்'கென்று அதைக் குத்திவிட்டாள்!

விளையாட்டு வினையாயிற்று. குத்தின இடத்திலிருந்து இரத்தம் தாரை தாரையாகப் பெருக ஆரம்பித்தது. ஸுகன்யா பயந்து போய்விட்டாள். ஆனால் யாரிடமும் இதைச் சொல்லவில்லை. சொன்னால் என்ன ஆகுமோ என்னும் அச்சம். சிறுமிதானே அவள்? அறியாத வயது.

## பதில் நடவடிக்கை

இதன் விளைவு மிக்க பயங்கரமானதாயிற்று. அரசனுடைய சேனைகள் யாவும், மலமூத்திரம் உடலிலிருந்து வெளியேற்ற முடியாமல் வயிறு பருத்துத் தவித்தன. மனிதர்களும் யானைகளும் குதிரைகளும் எல்லாம் இந்தக் கடும் சோதனைக்கு ஆளாயின. செய்தி அரசனுக்குப் பறந்தது. வைத்தியர்கள் எவ்வளவோ முயன்று பார்த்தனர்; பயன் இல்லை. அனைவரும் திகைத்துப் போயினர். சர்யாதி மன்னன் மிகுந்த புத்திக்கூர்மை படைத்தவன். ஏதோ தெய்விகமான தவறுதான் இதற்குக் காரணமாக இருக்க வேண்டும் என்பதை வெகு சீக்கிரமே உணர்ந்துகொண்டான். இன்றேல் ஒரே ஸமயத்தில் சேனை முழுவதும் ஒரே வகையான துன்பமடையக் காரணம் என்ன? தன் ஜனங்களில் ஒவ்வொருவரையும் அழைத்து விசாரித்தான், 'ஏதாவது தவறு செய்ததுண்டா?' என்று. நடந்ததை நடந்தபடியே ஸுகன்யா தெரிவித்தாள். அரசனுக்கு விஷயம் விளங்கிவிட்டது. உடனே அந்தப் புற்றின் அருகில் ஓடிப் போய்ப் பார்த்தான். தேஜோராசியான முனிவர் ஒருவர் கண்ணில் இரத்தம் பெருகியவாறு உள்ளே மறைந்து கிடந்ததைக் கண்டான்.

## திருமணம்

தன் பரிவாரங்களுடன், ஸுகன்யாவுடன், பல தரம் முனிவரை வணங்கி மன்னன் வேண்டினான், தன் சேனைக்கு வந்த உபத்திரவம் உடனே நீங்கும்படி அருள் புரிய வேண்டும் என்று. அதற்காக எதையும் செய்யத் தான் ஸித்தமாக இருப்பதாகவும் தெரிவித்தான்.

"உன் பெண் ஸுகன்யாவை எனக்கு மணம் செய்து கொடுத்தால் இது தீரும்" என்னும் பதில் புற்றினுள்ளிருந்து வந்தது. யோசனைக்கு இடம் ஏது? அப்படியே செய்வதாக மன்னன் வாக்களித்தான். உடனே சேனைகளின் துன்பம் நீங்கியது. புற்றைக் கலைத்தனர். என்ன கோரமான காட்சி! வெறும் எலும்புக்கூடுதான் உயிருடன் உள்ளே இருந்தது. ஆகாரம் உட்கொண்டு எத்தனை வருஷங்கள் ஆயினவோ? அழகிய ராஜகுமாரி ஸுகன்யாவுக்கு – சர்யாதி மன்னனுடைய ஒரே செல்வக் குமாரத்திக்கு – இப்படியா பயங்கரமான தோற்றமுள்ள கணவன் வாய்ப்பது!

விதியின் சோதனையை யாரால் தவிர்க்க முடியும்? காதல் விவகாரத்துக்குச் சிறிதும் ஒவ்வாத மகா கோரமான வடிவமுள்ள ச்யவந முனிவருக்கும் பூவிலும் மென்மையான, அழகே வடிவெடுத்தவளான அரசகுமாரி ஸுகன்யாவுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. என்ன வேளையில் அரண்மனையை விட்டுப் புறப்பட்டாளோ, பாவம்! திரும்பி அரண்மனைப் பக்கம் நினைக்கவும் இல்லை, பார்க்கவும் இல்லை. அந்தக் காடே அவளுக்கு வீடாயிற்று. அவள் ரிஷிபத்தினியாகி விட்டாள்.

## பதிதேவதை

வெளித்தோற்றம் மட்டும்தான் இப்படிக் கவர்ச்சிகரமாக இல்லை என்று எண்ண வேண்டாம். ச்யவநர் மகா கோபக்காரர்; பெரிய சிடுமூஞ்சி. இவரோடு படுவது மகா கஷ்டம். ஒரே நிமிஷத்தில் எவ்வளவு பெரிய அநர்த்தத்தை விளைவித்து நிர்ப்பந்தமாகக் கல்யாணத்தை முடித்துக் கொண்டுவிட்டார், பாருங்களேன்! இப்படிப் பயமுறுத்தியா கல்யாணம் பண்ணிக்கொள்வது? எவ்வளவு முரட்டுத்தனம்!

இப்படி நாம் மனம் போனபடி சொல்வதை உத்தமி ஸுகன்யா அநுமதிக்கவே மாட்டாள். இவ்வாறாக நினைப்பதும் சொல்வதும் ஸுகன்யாவின் மனத்தைப் பெரிதும் புண்படுத்திவிடும். தொட்டுத் தாலி கட்டிய கணவன் தெய்வத்திலும் சிறந்தவன் என்ற உறுதியான கொள்கையுள்ளவள் ஸுகன்யா. அந்தக் காலமே அப்படிப்பட்டது. சிறந்த கட்டழகனாக இல்லாவிட்டால் என்ன? கடுகடுவென்னும் சிடுமூஞ்சியாக இருந்தால்தான் என்ன? கணவன்

என்றால் தெய்வம்தானே! பதிசுச்ரூஷைக்காகத்தானே பத்தினி இருப்பது? யார் என்ன சொல்லிக்கொண்டால் என்ன? சிறுவயதினளான அரசகுமாரி ஸுகன்யா இந்தச் சோதனையில் பரிபூர்ண வெற்றி பெற்றுவிட்டாள். மகாபாரதத்தில் வ்யாஸரே ஆச்சரியத்துடன் இதைக் கூறுகிறார். இதோ மகாபாரத ச்லோகம் —

सुकन्या च्यवनं प्राप्य पतिं परमकोपनम् ।
प्रीणयामास चित्तज्ञा अप्रमत्तानुवृत्तिभिः ॥

ஸுகந்யா ச்யவநம் ப்ராப்ய பதிம் பரமகோபநம் ।
ப்ரீணயாமாஸ சித்தஜ்ஞா அப்ரமத்தாநுவ்ருத்திபி: ॥

'மகாகோபிஷ்டரான ச்யவநரைக் கணவராகப் பெற்ற ஸுகன்யா, குறிப்பறிந்து பணிவிடைகள் செய்வதில் தவறாமல் இருந்து அவரை ஸந்தோஷமடையச் செய்தாள்' என்பது கருத்து.

### சோதனையும் சாதனையும்

'ஸுகந்யா ச்யவநம் யதா' என்று ராமாயண கதையில் ஸீதை கூறுகிறாள். ராமனிடம் தனக்கு உள்ள பக்தி விசுவாஸத்தையும், தனது கற்பின் பெருமையையும் எடுத்துக் காட்டுவதற்காகக் கூறிய வார்த்தையே இது. எவ்வளவு கடுமையான சோதனைகள் தோன்றினாலும் பதிவிரதைகளின் உறுதி தளராது. முடிவில் வெற்றியும் அவர்களுக்கே. ஸுகன்யாவினுடைய வரலாறு இதற்கு ஓர் உதாரணமாக அமைந்தது. இதையே ஸீதை கருத்தில் கொண்டு. மேற்கண்டவாறு கூறினாள்.

ச்யவந மகரிஷியும் அவருடைய தர்மபத்தினி ஸுகன்யாவும் தம்பதிகளாக இல்வாழ்க்கை நடத்தி வந்தபோது ஸுகன்யாவுக்கு மிகக் கடுமையான சோதனையொன்று ஏற்பட்டது. பிரமிக்கத்தக்க வகையில் அவள் இதில் தேறினாள். அரியதோர் சாதனையே இது. அச்வினி தேவர்கள் என்று இரண்டு பேர் உண்டு. இவர்கள் தேவ வைத்தியர்கள். அழகிற் சிறந்தவர்கள். ச்யவந மகரிஷி வெளியில் சென்றிருந்த ஸமயம். ஆசிரமத்தில் ஸுகன்யா தனிமையாக இருந்த ஸமயம் இவ்விருவரும் பிரவேசித்தனர். தங்களுடைய

ரூபலாவண்யங்களைக் காட்டி அவளது உறுதியைக் குலைக்க முயன்றனர் அவ்விருவரும். 'மகா குரூபியான ச்யவநரைக் கட்டிக் கொண்டு அழகி ஸுகன்யா எல்லையற்ற துன்பங்களை அநுபவித்து வருகிறாள். இதற்கு ஒரு முடிவு காண முடியாமல் திணறிக்கொண்டிருக்கும் அவள், நமது தெய்விகமான ஈடு இணையற்ற அழகைக் கண்டு மயங்கிவிடுவது திண்ணம். எண்ண முடியாத வயதுள்ள இந்தக் கிழக் கணவரை உதறித் தள்ளிவிட்டு வாலிபப் பருவம் குன்றாத நம்மை இவள் வரிப்பது நிச்சயம்' என்று அவர்கள் நம்பியிருந்தனர்.

இனிய முறையில் ஸுகன்யாவை அணுகி அவர்கள் தமது சாதுரியம் முழுவதையும் உபயோகித்து அவளை வசீகரித்தனர். தங்கள் இருவருக்குள் யாராவது ஒருவரைக் கணவனாக ஏற்றுக் கொள்ளும்படி ஸுகன்யாவை நிர்பந்தித்தனர். அவளுடைய கிழக் கணவராகிய ச்யவநரைப் பலவாறு நிந்தித்துக் கூறவும் அவர்கள் தயங்கவில்லை. பயங்கரமான இந்த ரிஷிபத்தினி நிலையை உதறித் தள்ளிவிட்டு இன்பமயமான தேவபத்தினியாகும் வாய்ப்பைப் பெறுமாறு வேண்டிக்கொண்டனர்.

## கற்பின் மகிமை

சாதாரணமான – சபல சித்தம் படைத்த – பெண்களிடம் இதெல்லாம் ஓரளவு பலித்தாலும் பலிக்கலாம்; ஆனால் ஸுகன்யா அசாதாரணமானவள், கற்பிற்கரசி. தன் கணவரையே தெய்வமாக அல்லது தெய்வத்திலும் உயர்ந்தவராக எண்ணுகிறவள். தன் கணவருடைய தவ மகிமையையும், பிரம்ம தேஜஸ்ஸையும், நினைத்தபடியெல்லாம் செய்யவல்ல அபார சக்தியையும் அவள் கண்கூடாகக் கண்டவள். அவரிடம் குன்றாத பக்தி இயற்கையாகவே அவளுக்கு ஏற்பட்டிருந்தது. அச்வினி தேவர்களுடைய பசப்பு வார்த்தைகள் அவளுக்குக் கர்ணகடோரமாக இருந்தன. அவளால் அவற்றைச் சகிக்க முடியவில்லை. அச்வினி தேவர்களுடைய மனப்போக்கு அவளைப் பெரிதும் புண்படுத்திவிட்டது. ஆனாலும் தேவர்கள் என்னும் மரியாதை ஒன்று இருக்கிறதே! அதனால் அவர்களைத் தாழ்த்திப் பேசாமல், கோபிக்காமல், கண்ணியமான முறையிலேயே தக்க பதிலளித்து, அவர்களது தீய முயற்சி

பயனளிக்காது என்று உணர்த்தித் திருப்பி அனுப்பிவிட்டாள். அவர்கள் ஸுகன்யாவின் தளராத உறுதியைக் கண்டு வியந்து, தமது விருப்பம் ஈடேறாமலே சென்றனர்.

## தபோபலம்

மற்றும் ஒரு முறை இதே நிகழ்ச்சி நடந்தது. ஆனால் ச்யவநரும் இப்போது கூடவே இருந்தார். அவருடைய அநுமதியுடனேதான் இது நடந்தது. ஆனால் பாவம்! ஸுகன்யாவுக்கு இதெல்லாம் தெரியாது. முன்போலவே அச்வினி தேவர் இருவரும் ச்யவநருடைய ஆச்ரமத்துக்கு வந்தனர். ச்யவநமுனிவரின் இருபுறங்களிலும் நின்றனர். நடுவில் சய்வநரும் நின்றுகொண்டிருக்கிறார். மூவரும் ஸுகன்யாவை அழைத்தனர். "நாங்கள் மூவரும் இப்போது இந்த ஏரியில் முழுகிவிடுவோம். சிறிது நேரத்தில் மேலே எழுந்து வந்துவிடுவோம். உடனே நீ எங்களுக்குள் ஒருவரை ஸ்வயம்வரமாக வரிக்க வேண்டும்" என்று கூறினர். "அவ்வாறு வரிக்கப்படுகிறவர்தாம் இனி உன் கணவராவார்" என்றும் கூறினர்.

ஸுகன்யாவுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அவளுக்குத்தான் திருமணம் ஆகிவிட்டதே! மூவருக்குள் நடுவில் நிற்பவர் – ச்யவந முனிவர் – அவளுடைய பர்த்தாதாமே! அவரும் மற்றவருடன் சேர்ந்துகொண்டு புதுமுறையில் சுயம்வரம் நடத்துமாறு அவளுக்குக் கட்டளையிடுவதன் கருத்து யாதாக இருக்கக் கூடும்? அப்படியே நீரில் மூழ்கி எழுந்தாலும் ஸுகன்யா தன் கணவராகிய ச்யவநரையே மீண்டும் மாலையிட்டு வரிக்க வேண்டும். இதில் என்ன விசேஷம். அப்படி வரிக்காவிட்டால் ச்யவந முனிவர் அவளுக்குக் கணவரல்ல என்று ஏற்பட்டுவிடுமா? அல்லது அவள் அவருடைய தர்மபத்தினியல்ல என்றுதான் தேறிவிடுமா? ஏற்கனவே அக்கினி ஸாக்ஷிகமாக நடந்த விவாகம் பொய்யா? இது என்ன விசித்திரமான சோதனை? ஸுகன்யாவின் மனத்தில் பெரும் குழப்பம். இதையெல்லாம் சிந்தித்துப் பார்ப்பதற்கு அவளுக்கு அவகாசம் ஏது?

மின்னல் வேகத்தில் மூவரும் நீரில் மூழ்கி எழுந்தனர். அதிசயத்திலும் அதிசயம்! ஸுகன்யாவின் கணவர் – தொண்டு கிழவர் ச்யவநர் – இப்போது கிழத்தனம் நீங்கி இளம்

வயதினராகிவிட்டார். அச்வினி தேவர்கள் இருவர் போலவே இவரும் சிறந்த கட்டழகராகிவிட்டார். மூவரும் ஒரே அச்சில் வார்த்தெடுத்தவர்கள் போல் கண்ணைக் கவரும் கம்பீரமான வனப்புமிக்க தோற்றமளிக்கின்றனர். ஸுகன்யா என்ன செய்வாள்? பாவம்! முன் ஏற்பாட்டின்படி மூவருள் ஒருவருக்கு அவள் மாலையிட்டுக் கணவனாக ஏற்றுக்கொண்டாக வேண்டுமே! தன் கணவராகிய ச்யவந முனிவர் யார் என்பது தெரியவில்லையே! தவறிப்போய் வேறொருவரை வரித்துவிட்டால்? மனத்தினால் நினைப்பதற்கே முடியாத பயங்கரமான அபாயம் காத்துக் கொண்டிருக்கிறதே. இனி யோசனைக்கு இடமில்லை. "இவ்வளவு காலமாக நான் என் பிராணநாதருக்கு த்ரிகரண சுத்தியாகப் பணிவிடை செய்து வந்தது உண்மையானால், ஒரே வடிவமுள்ள இந்த மூவருள் என் கணவராகிய ச்யவந முனிவர் இன்னார் என்பது எனக்கு நன்றாகத் தெரிய வேண்டும்" என்று தன் பாதிவிரத்தியத்தின் மேல் ஆணையிட்டாள் ஸுகன்யா. உடனே அவளுக்குத் தெளிவாகத் தன் கணவரை அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது. பதிவிரதையின் தபோபலத்துக்கு எதிரில் தெய்வங்களின் சூழ்ச்சியும் பயனற்றதாகிவிட்டது. ஸுகன்யா முழுவெற்றி பெற்று விளங்கினாள். தன் கணவருக்கே மாலையிட்டு அவரருகில் கம்பீரமாகச் சென்று சேர்ந்தாள்.

## ஆசீர்வாதம்

அச்வினி தேவர்கள் இருவரும் ஸுகன்யாவின் பாதிவிரத்தியத்தின் மகிமையைக் கண்கூடாகக் கண்டு வியப்பெய்தினர். இத்தகைய உத்தமியை ஸஹதர்மசாரிணியாகப் பெற்றதற்காக ச்யவந முனிவரைப் பெரிதும் வாழ்த்தினர். அவருக்குக் கிழத்தனம் நீங்கி வாலிபப் பருவம் தோன்றியுள்ளது அல்லவா? இதை நிரந்தரமாக நிலைத்துவிடும்படியாக ஆசீர்வாதம் செய்தனர். ஸுகன்யாவையும் வெகுவாகப் பாராட்டி ஆசீர்வதித்தனர். தமது தோல்வியை உயர்ந்த மரியாதையாகவே பாவித்து ஏற்றுக் கொண்டனர். சரித்திரத்திலேயே முன்பின் காண முடியாத அரிய சோதனையில் தேறின ஸுகன்யா அழியாப் புகழ்

பெற்று மிகவும் விளங்கினள். தினந்தோறும் அநுஸந்தானம் பண்ண வேண்டிய பத்தினிக் கடவுளரின் வரிசையில் ஸுகன்யாவின் புனிதமான திருநாமமும் கோக்கப்பட்டது.

## ச்யவநரும் நஹுஷனும்

கங்கை யமுனை ஸரஸ்வதி என்னும் மூன்று புண்ணிய் நதிகள் கூடும் இடமாகிய பிரயாகம் என்னும் இடத்தில் ச்யவநர் பன்னிரண்டு வருஷங்கள் தபஸ் பண்ணினர். அப்போது அந்த நாட்டரசனாகிய நஹுஷன் என்பவனோடு இவருக்கு நேர்ந்த உரையாடலையே 'ச்யவந நஹுஷ ஸம்வாதம்' என்று பிரஸித்தமாக மகாபாரதம் கூறுகிறது. வெளியுலகில் தபஸ் பண்ணினால் மனம் அசைவற்று நிற்பதில்லை என்பதனால் நீரினுள் மூழ்கி அடித்தலத்திலேயே அசையாமல் நிலைத்துக் கிடந்த வண்ணமே ச்யவநர் பன்னிரண்டு வருஷகாலம் கடுந்தவம் புரிந்தார். இயற்கைக்கு மாறாக இவ்வாறு செய்யும் ஆற்றல் ச்யவநருக்கு இருந்தது. இந்தப் பன்னிரண்டு வருஷமும் அவரது உடம்பில் வெயிலும் காற்றும் படவே இல்லை. ஆகாரமும் ஒன்றும் இல்லை. அதனடியாக வரக்கூடிய யாதோர் உபத்திரவமும் இவருக்கு இல்லை.

நீரினுள் பாய்ந்தோடி விளையாடும் பல வகையான மீன்களும் மற்றப் பிராணிகளும் இவரைத் துன்புறுத்தவில்லை. மிகுந்த நட்பு பாராட்டின. இவரும் அவற்றுடன் பேரன்பு கொண்டவராகவே ஸஹவாஸம் செய்தார்.

ஒரு நாள், வலைவீசி மீன் பிடிக்கும் மீனவர்கள் இவர் இருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தனர். வலையை வீசினர். சிறியவையும் பெரியவையுமாகப் பல மீன்கள் வலையில் சிக்கிக் கொண்டன. அவற்றுடன் ச்யவந முனிவரும் அகப்பட்டுக் கொண்டார். மிகவும் சிரமத்துடன் நிதானமாக வலையை வெளியில் இழுத்தார்கள் செம்படவர்கள். கையால் உணரப்படும் பாரத்தை எண்ணி, மிக மிகப் பெரிய மீன் வலையில் மாட்டிக்கொண்டதாக ஊகித்து அவர்கள் பேரானந்தமடைந்தனர். வெளியில் இழுத்து வலையைப் பிரித்துப் பார்த்தனர். அந்தோ! யோகநிஷ்டையில் ஆழ்ந்திருக்கும்

மாமுனிவர்! மீனவர்கள் நடுநடுங்கிப் போய்விட்டனர். மெதுவாக அவரை வலையிலிருந்து எடுத்துக் கரையில் கிடத்தினர். முனிவருடைய ஸமாதிநிலை கலைந்தது. 'என்ன நடக்குமோ?' என்ற பீதியுடன் மீனவர்கள் முனிவரை வணங்கினர்; தங்களை மன்னிக்குமாறு வேண்டினர்; அவருக்கு என்ன வேண்டுமானாலும் செய்வதாக விண்ணப்பம் செய்தனர்.

## ஸஹவாஸ தோஷம்

ச்யவநர் அவர்கள்மேல் கோபிக்கவில்லை. தினந்தோறும் அவர்கள் செய்யும் தொழிலைத்தானே இன்றும் செய்திருக்கின்றனர்? இது எப்படிக் குற்றமாகும்? எதிர்பாராத விதமாகத் தண்ணீரினுள் கிடந்தது இவருடைய குற்றமே அல்லவா? ச்யவநர் இதை நன்கு உணர்ந்து அவர்களை மன்னித்துவிட்டார். நீண்ட நாள் அன்புடன் ஸஹவாஸம் செய்துவிட்டதனால் அன்று வலையில் சிக்கிக்கொண்ட மீன்களிடம் சகோதர வாஞ்சை இவருக்கு உண்டாகியிருந்தது. அதனால் அவற்றை விட்டுப் பிரிய மனம் வரவில்லை இவருக்கு. "இவற்றுக்கு என்ன கதி நேருமோ அதுவே எனக்கும்" என்று கூறி, அவற்றின் நடுவிலேயே அசைவற்றுக் கிடந்தார் ச்யவந முனிவர். "இவற்றை விலைக்கு விற்றுவிடுவோம். இவை செத்துப் போய்விட்டன" என்றனர் மீனவர்கள். "நீங்கள் என்னையும் இந்த மீன்களையும் வலைவீசிப் பிடித்தீர்கள். அதனால் இவற்றைப் போலவே நானும் உங்களது உடைமையே. என்னையும் விற்றுவிடுங்கள். அதனால் கிடைக்கும் பொருளை நீங்களே அடையுங்கள்" என்றார் முனிவர்.

மீனவர்கள் திகைத்துப் போயினர். செத்த மீன்களை உணவுக்காக மக்கள் விலை கொடுத்து வாங்குவர். உயிருடன் யோகநிஷ்டையில் ஊன்றி நிற்கும் இவரை யாரே விலைக்கு வாங்குவர்? இது பெரும் பிரச்னையாகிவிட்டது அவர்களுக்கு. ச்யவநர் செத்த மீன்களின் நடுவிலேயே அசைவற்றுக் கிடந்தார். மீனவர்கள் இந்த அதிசயத்தை அந் நாட்டு அரசனை நஹுஷனிடம் ஓடோடியும் சென்று எடுத்துரைத்தனர். இதற்கு ஏதாவது ஒரு பரிஹாரம் காணும்படி வேண்டிக் கொண்டனர்.

**ஸம்வாதம்**

அரசன் நஹுஷன் பரம தார்மிகன். தன் நாட்டில் தவம் செய்யும் முனிவர் பூர்ண திருப்தியுடன் இருக்க வேண்டும் என்ற சிரத்தை அவனுக்கு. ஏதாவது அபசாரம் நேர்ந்துவிட்டால், பயங்கரமான சாபம் தொடர்ந்து வந்துவிடாதா? தன் பரிவாரங்களுடன் ஆற்றங்கரைக்கு ஓடி வந்து ச்யவநமகரிஷியை வணங்கினான். அவருக்கு என்ன வேண்டுமானாலும் செய்வதாக உறுதி கூறினான். தன்னை அருள்கூர்ந்து நோக்குமாறு வேண்டிக்கொண்டான். ச்யவநர் மீனவர்களிடம் சொன்னதையே மீண்டும் கூறினார். மீன்களோடு வலை வீசிப் பிடித்த மீனவர்களது உடைமையாகவே தம்மையும் பாவிக்க வேண்டும் என்றும், அவர்களுக்கு ஏதாவது விலைகொடுத்துத் தம்மை மீட்டுவிட்டால், தம் இஷ்டப்படி தவம் செய்யப் போய்விடுவதாகவும், வேறொன்றும் தமக்கு வேண்டியதில்லை என்றும் கூறினார். இதில் உள்ளடங்கியுள்ள பெரும் பிரச்னையை அரசன் நன்கு உணர்ந்துகொண்டான். முனிவரை உள்ளபடி மதிப்பீடு செய்து அதை மீனவர்களுக்குக் கொடுக்க வேண்டுமே? இதை எவ்வாறு செய்வது?

"முனிச்ரேஷ்டரே! தங்கள் சொற்படி நடக்கிறேன். தங்களுக்குச் சரியான மதிப்பு எவ்வளவு என்பதை மட்டும் தயை செய்து தாங்களே கூறிவிட வேண்டும். நான் அதை மீனவர்களுக்கு உடனே கொடுத்துவிடுகிறேன்" என்று வணங்கிக் கேட்டான். அக்காலத்தில் சிறியவையும் பெரியவையுமாகப் பொன் நாணயங்கள் வழக்கில் இருந்தன. தினந்தோறும் மீனவர்கள் இதற்காகத்தானே மீன்களை விற்கின்றனர்? இப்போது முனிவருடைய கிரயமாக ஏராளமான பொன் நாணயங்களை அவர்களுக்குக் கொடுத்துவிட்டால் பிரச்னை தீர்ந்துவிடும் என்பது அரசனது எண்ணம். ச்யவநருக்கு ஏற்ற மதிப்பு மிகப் பெரிய அளவில் இருக்கும் என்பது அவனுக்குத் தெரியாதா என்ன? "ஆயிரம் பொன் மீனவர்களுக்குத் தந்துவிடுகிறேன். சரிதானா?" என்று பணிவுடன் கேட்டான்.

"உனது சுய புத்தியை உபயோகித்து முடிவு செய்" என்று ச்யவநர் சடக்கென்று பதிலளித்தார். அரசன் சொன்னதை ஏற்கவோ மறுக்கவோ இல்லை.

அரசனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தன் மதிப்பீடு குறைவாக இருக்குமோ என்னும் பயம் அவனுக்கு. "நூறாயிரம் பொன். சரிதானா?" என்று பயபக்தியுடன் கேட்டான்.

ச்யவநர் இதையும் ஏற்கவில்லை; மறுக்கவும் இல்லை. "உன் மந்திரிகளுடன் கலந்து ஆலோசனை செய்து முடிவு செய்" என்று சுருக்கமாகவே பதில் தந்தார்.

அரசன் அமைச்சர்களுடன் கலந்து ஆலோசித்தான். ஒருவாறாக முடிவு செய்தான். "கோடி பொன்கள். சரிதானா? " என்று விநயத்துடன் கேட்டான்.

ச்யவநர் இதையும் ஏற்கவும் இல்லை; மறுக்கவும் இல்லை; "அந்தணர்களுடன் கலந்து ஆலோசித்து முடிவு செய்" என்று பதிலளித்தார்.

அரசன் என்ன செய்வான் பாவம்! இந்த அதிசயத்தைக் காண்பதற்காக மாபெரும் கூட்டம் கூடிவிட்டது அங்கு. ஜ்ஞாந அநுஷ்டானங்களில் சிறந்து விளங்கிய அந்தணர்கள் பலரையும் ஒன்றுகூட்டி அடிபணிந்து வினவினான் அரசன். ஒருவாறாக முடிவு செய்யப்பட்டது. "என் ராஜ்யத்தில் சரிபாதியை உங்களுக்குக் கிரயமாக மீனவர்களுக்குத் தந்துவிடுகிறேன். அல்லது முழுவதையுமே வேண்டுமானாலும் தியாகம் செய்துவிடுகிறேன். தங்கள் மனம் திருப்தியானால் போதும்" என்றான்.

ச்யவநர் இந்த முறையும் விஷயத்தை முடிக்கவில்லை. "ரிஷிகளுடன் கலந்து ஆலோசித்து முடிவு செய்" என்றார்.

அரசன் திகைத்துப் போனான். காட்டில்தான் ரிஷிகளைக் காண முடியும். நாட்டில் சாதாரணமான மக்கள்தாம் இருப்பர். இப்பொழுது முனிவர்கள் யாரும் அரசனுடன் இல்லையே. என்ன செய்வது? தற்செயலாக ஒரே ஒரு முனிவர் அங்கு வந்தார். அவரை அணுகி வணங்கி விஷயத்தைச் சொன்னான். எப்படியாவது இந்தச் சிக்கலைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

அந்த ரிஷிக்கு ஊரும் இல்லை; பேரும் இல்லை. அவருடைய தந்தை யாரென்பதும் தெரியவில்லை. ஒரு பசுமாடுதான் அவரை ஈன்றதாம். அதனால் அவரைப் 'பசுவின் பிள்ளை' என்றே வழங்குவர். அவர்தாம் இதில் சரியான முடிவு கூறிச் சிக்கலைத் தீர்த்து வைத்தார்.

गौर्मूल्यं परिकल्प्यताम् ।

— மகாபாரதம், 13.51.22.

'கௌர்மூல்யம் பரிகல்ப்யதாம்' என்பதுதான் அவர் கூறின தீர்ப்பு. "ச்யவந முனிவருக்கு ஏற்ற விலை ஒரு பசுமாடுதான். இதைக் கொடுத்து இவரை மீட்டு விடுங்கள்" என்று கூறினார். பசுமாட்டின் புதல்வர் அல்லவா அவர்? தம் தாயைவிட உலகில் சிறந்தது மற்றொன்றில்லை என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை. அதையே அவர் கூறி விஷயத்தை முடித்தார். இந்த ஸமயத்தில் பசுமாடுகளின் தனிச் சிறப்பை ஒரு ச்லோகத்தினால் தெளிவாக விளக்கிக் கூறிவிட்டார் அவர்.

कीर्तनं श्रवणं चैव दर्शनं चापि पार्थिव ।
गवां प्रशस्यते वीर, सर्वपापहरं शिवम् ।
गावो लक्ष्म्याः सदा मूलं देवानां परमं हविः ।

கீர்த்தநம் ச்ரவணம் சைவ தர்சநம் சாபி பார்த்திவ ।
கவாம் ப்ரசஸ்யதே வீர, ஸர்வபாபஹரம் சிவம் ।
காவோ லக்ஷ்ம்யா: ஸதா மூலம் தேவாநாம் பரமம் ஹவி: ॥

— மகாபாரதம், 13.51.27,28.

என்பதுதான் அவர் சொன்ன ச்லோகம். "அரசனே! பசுமாடுகள் பிரபஞ்ச ஸ்ருஷ்டியிலேயே மிக மிகச் சிறந்தவை. அவற்றைக் காண்பதும் கேட்பதும் சொல்லுவதும் ஸகல விதமான பாவங்களையும் போக்க வல்லவை. மகாலக்ஷ்மியின் நிரந்தரமான ஸாந்நித்யத்துக்குப் பசுமாடுகள்தாம் ஆதாரமானவை. தேவர்களுக்கு ஸமர்ப்பிக்க வேண்டிய நெய் தயிர் பால் முதலிய ஹவிஸ்ஸுக்கள் யாவும் பசுமாடுகளிடமிருந்தே கிடைக்கின்றன" என்பது கருத்து.

அவர் மேலும் தொடர்ந்து சொன்னார்- "அரசே! நீ சிறந்த மேதாவி, முன் யோசனைக்காரன். இவ்வளவு பாடுபட்டு ச்யவந முனிவரைத் திருப்திப்படுத்தினது மிக மிக அவசியமான செயல். இவ்வாறு செய்யாமல் நீ அலக்ஷ்யமாக இருந்திருப்பாயானால்

ச்யவநருக்குப் பெருங் கோபம் வந்திருக்கும். நீயும் உனது ராஜ்யமும் மட்டுமின்றி மூவுலகுமே அந்தக் கோபத்திறைல் அழிந்து போகும்படி நேர்ந்திருக்கும். உன் புத்திசாலித்தனத்திறைல் இது தவிர்க்கப்பட்டது" என்று கூறிறைர்.

ச்யவநருடைய மனம் திருப்தியடைந்தது. உவகையுடன் இந்த முடிவை அவர் ஏற்றுக்கொண்டார். பிரச்னை ஒருவாறுகத் தீர்ந்தது. அரசனை ஆசீர்வதித்துத் தம் வழியே சென்றார்.

## ச்யவநரும் குசிகரும்

'ச்யவந குசிக ஸம்வாதம்' என்னும் பெயருடன் மகாபாரதத்தில் சுவைமிக்க வரலாறு ஒன்று இடம் பெற்றுள்ளது. பிரசித்தி பெற்ற ப்ரஹ்மரிஷியாகிய விச்வாமித்ரருக்குக் கௌசிகர் என்று ஒரு பெயர் உண்டு. குசிகருடைய வம்சத்தில் பிறந்ததனுலேயே இந்தப் பெயர் அவருக்கு. குசிகருடைய பிள்ளை காதி என்பவர். அவருடைய பிள்ளைதாம் விச்வாமித்ரர். பாட்டனுர் பெயரால் கௌசிகர் என்பது போல், தந்தையாரின் பெயரால் 'காதிஸுத:' என்றும் இவரை வழங்குவதுண்டு. இந்தக் குசிகருக்கும் ச்யவந முனிவருக்கும் நடந்த ஸம்வாதம் ருசிகரமானது. இதைச் சிறிது விளக்கிக் கூறுவோம்.

## யார் உயர்ந்தவன் ?

'க்ஷத்திரியன் உயர்ந்தவனு? அல்லது ப்ராஹ்மணனு?' என்ற கேள்வியும் இதற்குப் பதிலும் விச்வாமித்ரருடைய வரலாற்றைப் படித்தவர்களுக்கு நன்றுகத் தெரியும். க்ஷத்திரிய குலத்தில் பிறந்த விச்வாமித்ரர், 'க்ஷத்திரியனே உயர்ந்தவன்' என்னும் கொள்கையில் ஊன்றி நின்றவர். வஸிஷ்டருடன் தமக்கு ஏற்பட்ட மோதலின் பயனுகத் தம் கொள்கையை மாற்றிக்கொண்டார் இவர். இந்த ப்ராஹ்மணத்வேஷம் இவருக்குக் குலபரம்பரையாகவே வந்ததாம். அதுபோலவே ப்ருகு வம்சத்தினருக்கும் க்ஷத்திரியத்வேஷம் குலதனமாகவே வந்தது. அதைத்தான்பரசுராமனிடம் கண்டோம். இந்தப் பரசுராமனும் விச்வாமித்ரரும் பிறப்பதற்கு முன்னமே நடந்தது ச்யவந குசிக ஸம்வாதம்.

## முக்காலமும் உணர்ந்தவர்

சிறந்த தபோபலமுள்ளவராகிய ச்யவந மகரிஷி முக்காலமும் உணர்ந்த மெய்ஞ்ஞானி. வருங்காலத்தில் க்ஷத்திரியர்களால் அந்தணர்களுக்கு மிகப்பெரிய அளவு சேதம் ஏற்படப்போகிறது என்பதை அவர் உணர்ந்தார். அதற்காக க்ஷத்திரியர்களை ஒழித்துக்கட்டுவது நல்லது என்று திடஸங்கல்பம் செய்து கொண்டார். இவருக்கு என்ன, ஆயுதம் தேட வேண்டுமா? சாபத்திஞல் எதையும் அழிக்கும் சக்தி இவருக்கு இருக்கிறது. ஆஞல் ஒருவரை சபிப்பதற்கும் சிறிது காரணம் வேண்டும். அகாரணமாக இந்தச் சக்தியை உபயோகிப்பது சரியல்ல. அதஞல் ஏதாவது ஒரு காரணம் கண்டுபிடித்து, அதன் பேரில் க்ஷத்திரியர்களைத் தமது சாபத்திஞல் நாசம் செய்துவிடவேண்டும் என்று எண்ணிஞர். அதற்காகவே, க்ஷத்திரியஞகிய குசிக மகாராஜனிடம் போஞர். ஆஞல் இதெல்லாம் ச்யவநருடைய மனத்திலேயே அழுந்திக் கிடந்த விஷயம்; வேறெருவருக்கும் தெரியாது. சாதாரணமான ரீதியிலேயே குசிக மகாராஜனிடம் ச்யவந முனிவர் சேர்ந்தார்.

## ஸஹவாஸம்

அரசன் முனிவரை அடிபணிந்து வரவேற்றான். அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்களை முறைப்படி ஸமர்ப்பித்தான். பயபக்தி விச்வாஸத்துடன் ச்யவநருடைய ஆஜ்ஞையை அறிந்துகொள்ள விருப்பம் தெரிவித்தான். "உன்னுடன் உன் அரண்மனையில் சில காலம் ஸஹவாஸம் பண்ணுவதற்காக வந்திருக்கிறேன்" என்றுர் ச்யவந முனிவர். அரசனும் அரசியும் பெருமகிழ்ச்சியடைந்தனர். காட்டிலேயே வாழ விரும்பும் முனிசிரேஷ்டர், நாட்டுப்புறத்தையும் நகரங்களையும் அறவே வெறுப்பவர். ஏதாவது கர்ரியமாக நாடு நகரங்களில் நுழையும்படி நேரிட்டாலும் காரியம் ஆனவுடன் வெகு விரைவாகக் காட்டுக்கே திரும்பிப் போய்விடுவார். நாடு நகரங்களில் நிலவும் பழக்க வழக்கங்கள் தவமுனிவர்களுக்குச் சரிப்படுவதில்லை. இந்த வழக்கத்துக்கு மாருக, ச்யவந முனிவர் தன் அரண்மனையிலேயே தங்கியிருக்க விரும்பியது அரசனுக்குப் பெருமகிழ்ச்சியையே

தந்தது. ஆனாலும் உள்ளத்தினுள்ளே பெரும் பீதியும் அவனுக்கு இருந்தது. ச்யவந முனிவர் மகா கோபிஷ்டர் என்பது பிரஸித்தம். எந்த ஸமயத்தில் என்ன நடக்குமோ? நல்லபடியாக இவரது இஷ்டத்தைப் பூர்த்தி செய்துகொண்டு திரும்பிப்போகும் வரையில் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும். எவ்வளவுதான் பொறுமைக்குச் சோதனை ஏற்பட்டாலும் தாங்கிக்கொள்ள வேண்டும். அரசனும் அரசியும் இவ்வாறு தங்களை ஆயத்தம் செய்துகொண்டனர்.

## அற்புதச் செயல்கள்

அரண்மனைக்குள் வந்தவுடனே ச்யவந முனிவர் முதல் முதலில் கேட்டது இதுதான். "மிகவும் ஆயாஸமாக இருக்கிறது. படுத்துக்கொள்ளும்படியான இடம் வேண்டும்" என்றார் அவர். பிரம்மாண்டமான அரண்மனையில் இதற்கு என்ன குறைச்சல்? நிம்மதியாகப் படுத்துறங்கும் வாய்ப்புள்ள இடம் ஏற்பாடு பண்ணப்பட்டது. சிறிதுகூடச் சத்தம் போடாதவாறு ஏகாந்த நிலை உண்டாக்கப்பட்டது. ச்யவநர் ஸௌக்கியமாகப் படுத்துக் கொண்டார். நன்றாக உறங்கினார். அரசனும் அரசியும் பக்திவிச்வாஸத்துடன் அருகில் அமர்ந்து மெதுவாக விசிறி கொண்டு விசிறியபடியே இருந்தனர். ஒரு நிமிஷமும் அவரை விட்டு அகலவில்லை.

ச்யவந முனிவர் படுத்தவர் எழுந்திருக்கவே இல்லை. இருபத்தொரு நாட்கள் ஓடி மறைந்தன. ஒரே ரீதியில் படுத்துக்கொண்டிருந்தார் அவர். உதயமும் அஸ்தமனமும் மாறி மாறி வந்து போய்க்கொண்டே இருந்தன. ஸ்நானம், ஸந்தியாவந்தனம், உணவு, ஜலமலம் கழித்தல் ஒன்றுமே இல்லை. ஒரு பக்கம் கீழேயும் மற்றொரு பக்கம் மேலேயும் வைத்துப் படுத்தவர் இந்த இருபத்தொரு நாட்களும் அதே ரீதியில் கிடந்தார். சற்றுக்கூட உடம்பை அசைக்கவில்லை. அப்படி இப்படிப் புரட்டவுமில்லை. அரசனும் அரசியும் கூர்ந்து கவனித்துக்கொண்டே இருக்கிறார்கள். இருபத்திரண்டாம் நாள் வாய் பேசாமல் எழுந்து போய்விட்டார் முனிவர். அரசனுக்கு ஒன்றும் புரியவில்லை. திடீரென்று

தோன்றுவதும் உடனே மறைந்துவிடுவதுமாக இருந்தார் முனிவர். மற்றொரு நாள் வந்து, "படுத்துக்கொண்டிருக்க வேண்டும்" என்று விருப்பம் தெரிவித்தார். அவ்வாறே ஏற்பாடுகள் செய்யப்பட்டன. படுத்த படுக்கையாகவே மீண்டும் இருபத்தொரு நாட்கள் கழிந்தன. இம்முறை சயனத்தில் ஒரு விசேஷம்: முன்பு படுத்திருந்த கீழ்ப் பக்கம் மேலும், மேற்புறம் கீழுமாக மாறியிருந்தன; அவ்வளவுதான். "எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும்" என்றார். எண்ணெய் தரப்பட்டது. எண்ணெய்த் தலையுடனே ஸ்நானம் பண்ணாமலே, "பசிக்கிறது, சாப்பிட வேண்டும்" என்றார். சிறந்த உணவு வகைகள் தருவிக்கப்பட்டன. உடம்பெல்லாம் எண்ணெய் வழிந்தோட, நன்றாகச் சாப்பிட்டுவிட்டு, அப்படியே வெளியே சென்றுவிட்டார். மற்றொரு நாள், "நல்ல பசி, சாப்பிட வேண்டும்" என்றார். உயர்ந்த கனிவகைகளும் பக்ஷணங்களும் காய்கறிகளும் பாயஸமுமாக உத்தமோத்தமமான உணவு ஸமர்ப்பிக்கப்பெற்றது. என்ன ஆச்சரியம்! எல்லாம் அப்படியே தீப்பற்றி எரிந்து நாசமாகப் போய்விட்டது. ச்யவநர் ஒன்றையும் உண்ணவே இல்லை.

## தேர்த் திருவிழா

ஒரு நாள் திடீரென்று ச்யவநர் அரசனிடம் வந்தார். "தேரில் ஊர்வலம் வர வேண்டும்" என்றார். அரசன், "சிறியவையும் பெரியவையுமாகப் பல தேர்கள் என்னிடம் உள்ளன, அலங்காரத் தேர்கள் சிறியவை. யுத்த காலத்தில் உபயோகிக்கப்படும் தேர்கள் பெரியவை. தங்களுக்கு எதில் திருவுள்ளம்? அதைக் கொண்டு வரச் செய்கிறேன்" என்றான். "பெரிய தேர்தான் வேண்டும்" என்று பதில் வந்தது.

யுத்தகாலங்களில் உபயோகிக்கும் பெரிய ரதம் நன்கு அலங்கரிக்கப்பெற்று வாசலில் நின்றது. ச்யவநர் அதில் ஏறி அமர்ந்தார். "குதிரைகளைப் பூட்டக் கூடாது. அரசனும் அரசியுமே தேரைக் கைகளால் இழுத்துச் செல்ல வேண்டும்" என்று முனிவர் பணித்தார். முக்கியமான ராஜ வீதிகளில் தேர் பவனி வந்தது. அரசனும் அரசியும் இழுத்துக் கொண்டு போயினர். அரசனைத் தெய்வமாகக் கொண்டாடிய காலம் அது. அவனை இவ்வாறு

இழிவுபடுத்தியதை மக்கள் சகிக்கமாட்டாமல் தவித்தனர். பெரும் திரளாகக் கூடினர். ஆனால்? யாராவது ஒரு வார்த்தை சொல்ல முடியுமா? எங்கும் மௌனம்.

முனிவர் அரண்மனையில் வந்தது முதல் அரச தம்பதிகளுக்கு வேளையில் உணவு உறக்கம் முதலியன ஒன்றுமில்லை. அவர்கள் மிகவும் மெலிந்து கிடந்தனர். அந்த நிலையில்தான் இந்தக் கடும் சோதனை அவர்களுக்கு ஏற்பட்டது. அளவு கடந்த பொறுமையினாலும் மனோ பலத்தினாலும் அடியடியாக எண்ணி வைத்துக்கொண்டே தேரை இழுத்துச் சென்றுகொண்டிருந்தனர், அவர்கள் இருவரும். நகரெங்கும் தேர்விழா நடந்து முடிந்தது. வெளிப்புறத்திலுள்ள பூங்காவை அடைந்தது ரதம். "இது இங்கேயே இருக்கட்டும். நீங்கள் அரண்மனைக்குப் போங்கள். நான் இங்கேயே தங்குகிறேன். நாளைக் காலையில் இங்கு வந்து என்னைப் பாருங்கள்" என்ற கட்டளை பிறந்தது.

## சோதனையின் ரகசியம்

அப்படியே அரச தம்பதிகள் அரண்மனைக்குச் சென்றனர். மறுநாள் காலையில் ச்யவநரைக் காண வந்தனர். என்ன ஆச்சரியம்! பிரம்மாண்டமான மாளிகை அல்லவா அங்கே காண்கிறது! சாதாரணமாக இருந்த இடம் ஒரே இரவில் எப்படி மாயமாக இவ்வாறு மாறிவிட்டது? மாளிகையினுள் சென்று ச்யவநரை வணங்கினர் அரச தம்பதிகள். அருளே வடிவங் கொண்டாற்போல இனிய தோற்றத்துடன் முனிவர் அவர்களை வரவேற்று ஆசி கூறினார். கவலை நீங்கிய அவர்களது முகம் மேகத்திலிருந்து வெளிவந்த சந்திரன் போலப் பொலிவுபெற்றது. தமது நெடுநாளைய சந்தேகத்தை அவர்கள் முனிவரிடம் கேட்டுவிட்டனர். "என் அரண்மனையில் வந்து தங்கியிருந்ததும், அசாதாரணமான செயல்களைச் செய்ததும் எதற்காக? விளங்கவில்லையே?" என்று அரசன் கேட்டான்.

ச்யவந முனிவர் மனம்விட்டு உள்ளதை உள்ளபடியே சொல்லிவிட்டார். "உன் வம்சத்தாரும் என் வம்சத்தாரும் வருங்காலத்தில் கலப்பு மணம் செய்துகொள்ளப் போகின்றனர்.

அதன் பயனுகப் பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் பெருமளவில் அழிவு ஏற்படப்போகிறது. இதைத் தவிர்த்து விடலாமென்று எண்ணினேன். ஏதாவது ஒரு குற்றம் கண்டுபிடித்து அதுவே காரணமாக உன் வம்சம் நிர்மூலமாகிவிடும்படி சாபமிட எண்ணினேன். அதனுல்தான் இப்படிச் செய்தேன். நீ ஏமாறவே இல்லை. உன் பொறுமை எல்லை கடந்தது. உன் தர்மபத்தினியின் நற்குணங்களும் பணிவும் விநயமும் சொல்லுக்கு அடங்காதவை. இதனுல் நீங்கள் இருவரும் வெற்றியடைந்துவிட்டீர்கள். நான் தோல்வியே அடைந்தேன். நீங்கள் இருவரும் நீண்ட ஆயுளும் நன்மக்களும் பெற்று வாழ்வீர்கள். நான் எதிர்பார்த்தபடி பிராம்மண க்ஷத்திரியத்வேஷமும் அதன் பயனுகப் பெருஞ்சேதமும் ஏற்படத்தான் போகின்றன. அவற்றைத் தவிர்க்க முடியாது" என்று விளக்கமாகக் கூறி விடைபெற்றுச் சென்றுர் ச்யவநர்.

குசிக மன்னனும் அவனுடைய தர்மபத்தினியும் இந்த அதிசயத்தைக் கேட்டு வியப்பெய்தினர். முனிவருடைய தேஜஸ்ஸைப் பலவாறுகப் புகழ்ந்தனர். எப்படியோ மாபெரும் கண்டத்திலிருந்து தப்பியவர்கள் போல் ஒருவாறுக மனநிம்மதியுடன் வாழ்க்கை நடத்தி வந்தனர். ச்யவந - குசிக ஸம்வாதம் என்னும் இதனுல், ச்யவந முனிவருடைய நேர்மையும் தவவலிமையும் தீர்க்க தரிசனமும் மகா பாரதத்தில் நிரூபிக்கப்பெற்றுள்ளன.

## ஸோமபாநம்

அச்வினி தேவர்கள் ஸோமயாகத்தில் தேவதைகளாக இருந்துஸோமபாநம் பண்ணும் வாய்ப்பு ச்யவந முனிவரால்தான் ஏற்பட்டது. இதற்கு முன் அவர்களுக்கு ஸோமபாநம் கிடையாது. புதிதாக இதை ஏற்படுத்தியபோது பெரிய சண்டை மூண்டது. ச்யவந முனிவர் அஞ்சா நெஞ்சத்துடன் அதைச் சமாளித்து, எடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடித்து வைத்தார். இதுவும் ஒரு குட்டிக் கதையாகவே அமைந்துவிட்டது.

சர்யாதி மன்னன் ஸுகன்யாவின் தந்தை; ச்யவநருக்கு மாமனுர். அவன் ஸோமயாகம் பண்ணினுன். ச்யவநரும் மனைவியுடன் யாகத்துக்குச் சென்றிருந்தார். மாப்பிள்ளை அல்லவா?

யாகத்தைச் சிறப்பாக நடத்தும் பொறுப்பு இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இத்தகைய மகாதேஜஸ்வியான மாப்பிள்ளை இருக்கும்பொழுது வேறு யாரிடம் செல்ல வேண்டும் சர்யாதி மன்னனுக்கு? பக்தி சிரத்தையுடன் யாக காரியங்களை அவன் செய்தான். இந்திரனுள்ளிட்ட தேவர்கள் அவரவர்களுக்கு ஏற்ற மந்திரங்களால் அழைக்கப்பெற்றுக் குழுமியிருந்தனர். ச்யவந முனிவர் அச்வினி தேவர்கள் இருவரையும் அழைத்தார். அவர்களும் அழைப்புக்கு இணங்கி வந்து சேர்ந்தனர். முறைப்படி ஸோமலதையிலிருந்து சாறுபிழியப்பட்டது. மந்திரங்களைக் கோஷித்துக்கொண்டு ரித்விக்குகள் அதைத் தேவர்களுக்கு ஹோமம் செய்ய ஆரம்பித்தனர்.

இந்திரன் பார்த்தான். புதிதாக இருவர் தேவதைகளின் வரிசையில் அமர்ந்திருப்பது அவனுக்குச் சகிக்கவில்லை. கடுஞ்சினம் கொண்டான். பெரிய தடையைக் கிளப்பி, யாகத்தைத் தொடர்ந்து நடக்கவொட்டாமல் நிறுத்திவிட்டான். மூவுலகுக்கும் அதிபதி அல்லவா அவன்? மேலும், ஸோமயாகத்தில் முக்கியமான தேவதையாக இருப்பவன். ஸோமரஸத்தைப் பருகுவதில் அபாரமான ஆசை அவனுக்கு. ஒரு துளிகூட முறைபிசகாகக் கொடுக்கப்படுவதை அவன் அநுமதிக்க மாட்டான்.

### தர்மசங்கடம்

அச்வினி தேவர்களுக்கு இதெல்லாம் நன்கு தெரியும். அதனால்தான் இதுவரை நடந்த ஸோமயாகம் எதிலும் அவர்கள் பிரஸன்னமாக இருந்ததில்லை. இப்போது சர்யாதி மகாராஜனுடைய யாகத்தில்தான் முதல்முதலாக அவர்கள் ஸோமரஸத்தை விரும்பி வந்திருக்கின்றனர். காரணம் தெளிவானதே. முனிச்ரேஷ்டராகிய ச்யவநர் அவர்களை அழைத்திருக்கிறார். இதன் பொறுப்பு முழுவதும் அவரைச் சார்ந்தது. ஆனாலும் இந்திரன் எழுப்பின ஆக்ஷேபம் அவர்களைப் பெரிய தர்மசங்கடத்தில் ஆழ்த்தியது. இந்திரன் என்ன, அவர்களுக்குப் புதியவனா? நெடுநாளைய நண்பன் அல்லவா? அந்த நட்புறவெல்லாம் அறவே மறந்து போகும்படி, பலர் முன்னிலையில் இப்படித் தாழ்த்திப் பேசிவிட்டான் அவன். இதற்காகக்

கோபித்துக்கொண்டு உடனே வெளியே நடந்துவிடுவதுதான் அவர்களுக்கு உசிதமாகத் தோன்றியது. ஆனால் அவர்கள் அப்படிச் செய்யவில்லை. ஸோமரஸத்தைப் பானம் பண்ணும் வாய்ப்பு அவர்களையும் ஆகர்ஷித்தது.

இந்தத் தருணத்தில் எப்படியாவது இதைச் சாதித்துக் கொண்டுவிட வேண்டும் என்று அவர்களும் திட்டமிட்டனர். 'இந்திரன் மட்டும் கொடுத்து வைத்தவனா என்ன? யஜமானனின் அழைப்புக்கு இணங்கி வந்தவன்தானே? அவன் என்ன நம்மை விலக்குவது? மேலும், ச்யவந மகரிஷிதாமே நம்மை அழைத்தவர்? இதன் விளைவுகளை அவர் பொறுப்பிலேயே விட்டுவிடுவோம்' என்று இருந்தனர்.

ச்யவநர் இதையெல்லாம் தெரிந்துகொண்டுதான் அச்வினி தேவர்களை ஸோமபானத்துக்கு அழைத்திருக்கிறார். தமது செயலின் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டு அவர் இந்திரனைக் கேட்டார், "ஏன் அச்வினி தேவர்களுக்கு ஸோமரஸத்தில் பாகம் கொடுக்கக் கூடாது?" என்று.

இந்திரன் சொன்னான், "இவர்களிடம் தெய்வத்தன்மையே இல்லை. தெய்வங்களுக்குத்தானே ஸோமயாகத்தில் ஸோமரஸம் கொடுக்கப்பெறும்? இவர்கள் மனிதத்தன்மை நிரம்பியவர்கள், அசுத்தமானவர்கள்" என்று.

"தேவயோனியிற் பிறந்த இவர்கள் எதனால் மனிதத் தன்மையை அடைந்து அசுத்தமாயினர்?" என்று ச்யவநர் கேட்டார்.

"இது நாடும் நகரமும் நன்கறிந்த விஷயம். இவர்கள் வைத்தியர்கள். வியாதியுள்ள இடத்தில்தான் வைத்தியனுக்கு வேலை. தேவர்களுக்கு எந்த விதமான வியாதியும் வராது. மனிதர்களுக்குத்தான் பல்லாயிரக் கணக்கான வியாதிகள் வந்து குவிந்து கிடக்கும். அதனால் வைத்தியத் தொழில் புரியும் இவர்களும் மனுஷ்ய வர்கத்தினிடையே எக்காலமும் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். மேலும், வைத்தியத் தொழிலே அசுத்தமானது. விதம் விதமான வியாதிகளைக் குணப் படுத்துவதிலேயே நோக்கம் கொண்டவன் வைத்தியன். அவனால் சுத்தமாக இருக்க முடியவே முடியாது. பல வகையான மூலிகைகளை வேருடன் பறித்து ஹிம்ஸிக்கிறான். வியாதிக் கிருமிகளை

மருந்துமூலம் அழித்து ஹிம்ஸிக்கிறான். ஆதலால் வைத்தியர்களான இவர்கள் அசுத்தமானவர்கள்; ஸோமபானத்துக்குத் தகுதியற்றவர்கள்" என்று இந்திரன் சொன்னான்.

"அப்படியானால் உலகில் தன்வந்தரி பகவான் தோற்றுவித்த, புனிதமான, உயிரைக் கொடுக்கும் சக்தியுள்ள வைத்தியத் தொழிலே கூடாதா? முன்பு தக்ஷ யஜ்ஞத்தில் என்ன நடந்தது? யஜ்ஞபுருஷனுடைய தலை அறுக்கப்பட்டது அல்லவா? உடனே, முன்பு இருந்தது போலவே அவசர அவசரமாக அதை இணைத்து யஜ்ஞபுருஷனை உயிர்ப்பித்தவர்கள் அச்வினி தேவர்கள்தாமே? அவர்கள் அன்று அதைச் செய்திராவிட்டால் இன்று யஜ்ஞம் என்பது உலகிலேயே எங்கும் இல்லாததாகிவிட்டிருக்குமே! தேவர்களில் வேறு எவராலும் அன்று இதைச் செய்ய முடியவில்லை. அவசியத்தையும் அவசரத்தையும் அநுஸரித்து, தேவர்கள் அனைவரும் ஒன்றுகூடி அச்வினி தேவர்களை வேண்டிக் கொண்டனர். அதற்கிணங்க இவர்களும் அவ்வரிய சாதனையைச் செய்து காட்டினர். அப்போது வைத்தியத் தொழில் மிக மிகப் புனிதமாக உங்களுக்கு இருந்தது. இப்பொழுது காரியம் பூர்த்தியான பிறகு வைத்தியருக்கு ஸம்மானம் அளித்து கௌரவிக்க வேண்டிய ஸமயத்தில் அது இழிவானதாகிவிட்டது. காரியம் ஆவதற்கு முன்பு ஒருவிதமாகவும், காரியம் ஆனபிறகு மற்றொரு விதமாகவும் நடந்துகொள்ளும் நீங்கள்தாம் இழிவானவர்கள்" என்றார் ச்யவநர்.

இந்திரன், "இந்த வீண் விசாரமெல்லாம் வேண்டாம். இவர்களுக்கு ஸோமரஸத்தில் பாகம் தரக் கூடாது" என்றான்.

"அதற்காகவே அவர்கள் என்னால் அழைக்கப்பெற்று இங்கு எழுந்தருளியிருக்கிறார்கள். நிச்சயமாக இதை அவர்களுக்குக் கொடுத்தே யாகத்தை முடிப்பேன். யாகத்தை நடத்துபவன் நான்!" என்று ச்யவநர் சொன்னார்.

"என்னை விரோதித்துக்கொண்டு இதைச் செய்ய உம்மால் முடியுமா?" என்று கேட்டான் இந்திரன்.

"தாராளமாக பலாபல பரீக்ஷை நடத்தலாம்" என்று கூறி, ச்யவநர் ஸோமரஸத்தில் அச்வினி தேவர்களுக்கு பாகம் கொடுத்தார். இந்திரன் பார்த்தான். பொருளுக்கு உடையவன் தனக்கு இஷ்டமானவர்களுக்கு அதைக் கொடுப்பதை மற்றவர்கள்

எவ்வாறு தடை செய்ய முடியும்? ஆயினும் அவன் ஒரு குறுக்கு வழியைக் கண்டுபிடித்தான். "இந்த ஸோமரஸத்தை அவர்களால் உபயோகிக்க முடியாமற் செய்து விடுகிறேன்" என்றான். 'மதம்' என்ற பெரிய அஸுரனைப் படைத்தான்.

मदो नाम महावीर्यो बृहत्कायो महासुरः ।

மதோ நாம மஹாவீர்யோ ப்ருஹத்காயோ மஹாஸுர: ।

— மகாபாரதம், 3.124.19.

அந்த அஸுரனை, ஸோமரஸத்தைப் பருகும்போது அவர்களைப் பீடிக்கும்படி ஏவினான். ச்யவநர் சிறிதும் அஞ்சவில்லை. பிரம்மாண்டமான அந்த அஸுரனை, 'ஹூம்' என்னும் ஒரு குரலைக் கிளப்பி விரட்டியடித்துவிட்டார். இவருடைய தபோபலத்துக்கு எதிரில் அவனால் நிற்க முடியுமா? அஸுரனை அவர் விலக்கினாரேயன்றி மாய்த்துவிடவில்லை. இந்திரனுடைய படைப்பு அல்லவா? அதையும் ஓர் இடத்தில் வாழவிடுவோம் என்று எண்ணினார். கள் குடிப்பது, தகாத காதல் விவகாரங்கள் ஆகிய விஷயங்களில் நித்தியவாஸம் பண்ணும்படி அவனைப் பணித்தார். அச்வினி தேவர்களது ஸோமபாநம் நிர்விக்னமாக நடந்தது.

**சுயநலம்**

இவ்வளவு ஆர்வத்துடன் அச்வினி தேவர்களுக்கு ஸோமபாநத்தில் பங்கு உண்டாக்குவதில் ச்யவநருக்கு சுயநலமும் இல்லாமற் போகவில்லை. என்றும் குன்றாத யௌவனப் பருவம் இவருக்கு அவர்களால்தானே கிடைத்தது? அதற்காக ஒரு லேஹ்யத்தை இவருக்கு அச்வினி தேவர்கள் தயாரித்துக் கொடுத்தனர். இவர் அதைச் சாப்பிட்டு வந்தார். நல்ல திடகாத்திரமும், நோயற்ற வாழ்வும, நவ யௌவனமும் இவருக்கு வந்து சேர்ந்தன. இல்லையேல் எலும்பும் தோலுமாகத்தானே இவர் இருந்திருக்க வேண்டும்? ஸுகன்யா இவரை மணந்தபோது அந்த நிலையில்தானே இவர் இருந்தார்? பிரமிக்கத்தக்க வகையில் அடியோடு மாறிவிட்டார் இவர். இவருக்கு அச்வினி தேவர் கொடுத்த லேஹ்யம்தான் 'ச்யவநப்ராசாவலேஹம்' என்ற பெயருடன் இன்றளவும்வழங்குகிறது. ச்யவநர் சாப்பிட்ட 'லேஹ்யம்'

என்பது இதன் பொருள். இதைப் பலரும் சாப்பிட்டுப் பயனடைந்திருந்தாலும் ச்யவநருடைய பெயரே இதன் பெயராக நிலைத்துவிட்டது.

அற்புதமான வகையில் இவரது உடலை அச்வினிதேவர்கள் இதன் உபயோகத்தைக் கொண்டு மாற்றிவிட்டனர். அதற்குப் பிரத்யுபகாரமாக ஏதாவது செய்ய வேண்டாமா? ச்யவநருடைய திருவுள்ளத்தில் இது நிரந்தரமாகக் குடிகொண்டிருந்தது. மாமனாருடைய ஸோமயாகம் இவருக்கு ஒரு நல்ல வாய்ப்பாயிற்று. இவரிடமே யாகத்தின் முழுப்பொறுப்பும் இருந்தமையால், திறமையாகத் தம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்டார். இவர் அச்வினி தேவர்களுக்கு ஸோமபாநம் செய்து வைத்த வரலாறு வேதங்களில் இடம் பெற்றுவிட்டது.

## வேதப் பிரஸித்தி

ரிக்வேதத்தில் பல ஸூக்தங்களுக்கு ச்யவநர் ரிஷியாக இருக்கிறார். அதர்வ வேதத்திலும், மற்ற வேதங்களிலும், வைத்திய நூல்களிலும் இவரது திருநாமம் இடம் பெற்றுள்ளது. ஜ்யோதிஷத்திலும், வைத்தியத்திலும், தர்ம சாஸ்திரத்திலும் இவர் பல நூல்கள் இயற்றியிருக்கிறார். இவருடைய திருக்குமாரர்தாம் ரிசீகர் என்பவர். அவருடைய பிள்ளை ஜமதக்னி. அவருடைய திருக்குமாரரே தசாவதாரங்களில் ஆறுமவரான பரசுராமர். இவர்களில் ஒவ்வொருவரும் உலகப் பிரஸித்தமானவர்.

அடுத்தாற்போல் அவர்களுடைய வைபவங்களையும் சிறிது அநுபவிக்கலாம். ச்யவநருடைய புனிதமான சரித்திரத்தை இவ்வளவில் நிறுத்திக்கொள்வோம். இந்த மஹா தேஜஸ்வியான மகரிஷிக்கு என்றும் அஞ்சலியை ஸமர்ப்பிப்போம்.

# அப்நவாநர் - ஔர்வர்

ப்ருகு மகரிஷியின் சரிதத்திலேயே சில வேதவாக்கியங்கள் அப்நவாநரைப் பற்றியும் காண்பிக்கப் பெற்றுள்ளன.

'यमप्नवानो भृगवो विरुरुचुः ।'
'और्वभृगुवच्छुचिमप्नवानवदाहुवे ।'

இவற்றில், அக்கினியை வளர்த்து வரும் இயல்பு இயற்கையாகப் பெற்றுள்ளவராக இந்த அப்நவாநர் வேதப் புகழ் பெற்றிருக்கிறார். ப்ருகுவம்சத்துக்கே பிறவிக்குணம் அல்லவா இது? இவரும் மகாதேஜஸ்வியாக இருந்திருக்கிறார். அதனால் தான் இவரையும் கோத்ரப்ரவர்த்கர்களான மகரிஷிகளின் வரிசையில் மூன்றாவதாக வைத்திருக்கிறார்கள். இவருடைய சரிதம் விசேஷமாக நூல்களில் காணப்படவில்லை. மிகவும் அடக்கமாக, படாடோபமில்லாமல், ஏகாந்தசீலராக இவர் இருந்திருக்க வேண்டும். எவ்வளவு சக்தி விசேஷம் பெற்றிருந்தாலும், அதை ஆதாரமாகக் கொண்டு கண்ட இடத்திலும் வம்புச் சண்டைக்குப் போவதில்லை இவர். சக்தியுள்ள இடத்தில் பொறுமையும் சேர்ந்தால் பொன்மலர் மணப்பது போல ஆகும் அல்லவா? இவர் அந்த வகையைச் சேர்ந்தவர். அதனால்தான் போலும் இவருடைய வரலாறு விஸ்தாரமாகக் குறிப்பிடப்படவில்லை.

இவருடைய திருநாமத்திலும் 'அவரைச் சேர்ந்தவர்கள்' என்னும் கருத்தை உணர்த்தும் தத்தித ப்ரத்யயம் வைத்து ஆப்நவாந என்று சொல்லிக்கொள்வர். அப்நவாநருடைய திருமேனி ஸம்பந்தம் பெற்றவர்கள் என்பதுதான் இதன் பொருள். ச்யவநருக்குப் பிறகு இவருடைய திருநாமம் அநுஸந்திக்கப் பெறுவதனால் இவர், ஐவருள் நடுநாயகமாக விளங்குகிறார். இவரும் ச்யவநருடைய குமாரராகவே இருந்திருக்க வேண்டும். இவருடைய குமாரர் ஔர்வர். இந்த ஔர்வரே ரிசீகர். அவருடைய குமாரர் ஜமதக்னி என்று ஐவரும் அடுத்தடுத்த பிதாபுத்ரர்களாகவே ஸ்ரீவத்ஸகோத்ர

ப்ரவர்த்தகர்களான ரிஷிகள் ஐந்து பேரும் அமைந்திருத்தல் கூடும். ஆனால் ரிசீகர் ச்யவநருடைய குமாரர் என்றே புராண வரலாறு கூறுகிறது. அப்படியானால் அப்நவாநரும், ச்யவநருடைய மற்றொரு குமாரர் என்று கொள்ள வேண்டும். ரிசீகரே ஔர்வர் என்று கொள்ளும் பக்ஷத்தில் அப்நவாநரும் ஔர்வரும் ப்ராதா ஆகின்றனர். இருவரையும் கோத்ர ப்ரவர்த்தகர்களாக அநுஸந்தானம் செய்து கொள்வதில் குற்றம் ஏதுமில்லை. ப்ருகு வம்சத்தார் க்ஷத்திரியர்களால் பூண்டோடு அழிக்கப்பட்டு மிகவும் கஷ்டப்பட்ட காலம் அது. அதனால் இதன் தத்துவத்தைக் கண்டு பிடிப்பதிலும் சிரமம் உள்ளது.

ஔர்வரும் இந்தக் கஷ்டகாலத்தில் அவதரித்தவரே. பராசரருக்கு வஸிஷ்டர் சொல்வதாக இவருடைய வரலாறு கூறப்பட்டது. பாவம்! மகா துரதிர்ஷ்டக்காரர் இந்த ஔர்வர். விலங்குகளும், பறவைகளும், மற்ற அற்பப் பிராணிகளுங்கூடக் கர்ப்பவாஸத்தில் இயற்கையாகக் குறிப்பிட்ட காலம் வரையில் இருந்து பக்குவமாகப் பிறக்கின்றன. அது கூட இவருக்கு விபரீதமாகி விட்டது. இவர் தாயின் கர்ப்பத்தில் வாஸம் செய்த காலத்தில்தான் பயங்கரமான க்ஷத்திரிய, ப்ராஹ்மண த்வேஷம் தோன்றியது. ப்ருகு வம்சத்தில் தோன்றிய அத்தனை பிராம்மணர்களும் அழிக்கப்பட்டனர். அவர்களுடைய ஸ்திரீ யாராவது கர்ப்பவதியாக இருந்தால் அவளும் உடனே கொல்லப்பட்டுவிடுவாள். இப்படி கர்ப்பிணிகளைத் தேடித் தேடிக் கொன்றனர் க்ஷத்திரியர்கள். ஔர்வருடைய தாய் வெகு ஸாமர்த்தியமாக இந்த ஆபத்தில் தப்பிப் பிழைத்துவிட்டாள். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவதரித்த போது எவ்வளவு அற்புதங்கள் நடந்தன! அவ்வளவும் நடந்திராவிட்டால் கிருஷ்ணன் உருப்படியாகப் பிறந்து வாழ முடிந்திருக்குமா? அதுபோல் மகாதேஜஸ்வியாக வயிற்றில் இருந்த சிசுவின் அபார சக்தியால் கொலைகாரர்களுக்கே புத்தி மாறிவிட்டது. 'தேவகியையே கொன்றுவிட்டால் கவலையற்றிருக்கலாமே!' என்று எண்ணினான் கம்ஸன். அப்படிச் செய்வதில் அவனுக்கு ஒரு கஷ்டமும் இல்லை. ஆனால் செய்யவில்லை. ஏன்? அவனையே கேட்போம். என்ன சொல்லுகிறான் தெரியுமா? இதோ அவன் பதில் —

स्त्रियाः स्वसुर्गुरुमत्या वधोऽयं यशः श्रियं हन्त्यनुकूलमायुः ।
ஸ்த்ரியா: ஸ்வஸுர் குருமத்யா வதோயம்
யச: ச்ரியம் ஹன்த்யனுகூலமாயு: ।

'பெண், உடன்பிறந்தவள், கர்பிணி, இவளைக் கொன்றால், புகழ், செல்வம், ஆயுள் எல்லாம் தொலைந்து போய்விடும்' என்பது கருத்து. கம்ஸனா இப்படிச் சொல்கிறான் என்று ஆச்சரியப்படுகிறோம் அல்லவா? ஆம், கம்ஸனேதான் இப்படி சாஸ்த்ரஜன்ய விவேகத்தைத் தக்க ஸமயத்தில் உபயோகித்து பயங்கரமான பாதகச் செயலிலிருந்து விலகினான். அது அவனுடைய சுய நிலைமை அல்லவே! தேவகியின் கர்பத்தில் இருந்த பரமாத்மா அல்லவா அவன் புத்தியைத் திருப்பிவிட்டான் அவனுக்கே தெரியாமல்! இந்த ஔர்வருடைய விஷயமும் அப்படியேதான். வெகுவாக முயன்றும் பகைவர்களால் ஔர்வருடைய தாயைச் கொல்ல முடியவில்லை. வயிற்றில் இருந்த கர்பத்தை எப்படியோ தொடையில் கொண்டு வந்துவிட்டாள் அந்த உத்தமி. அனாதியான சரித்திரக் கதைகளில் ஔர்வருடைய தாய் ஒருத்திதான் மகா ஸமர்த்தையாக இவ்வாறு செய்து காட்டினாள். நூறு வருஷம் அப்படியே காப்பாற்றி வந்தாள் சிசுவை. பாவம்! என்ன கஷ்டப்பட்டாளோ! பேரன் பேத்தியெல்லாம் எடுத்திருக்க வேண்டிய வயதில்–நூறாவது வயதில்–ஔர்வரைக் குழந்தையாக க்ஷேமமாகப் பிரஸவித்தாள்.

இவள் கர்பிணியாக இருந்ததையும், ஆனால் வயிற்றில் கர்பிணிகளின் அடையாளங்கள் காணப்படாமையையும், இன்னும் பிரஸவமாகாமையையும் நன்கறிந்த கொலை பாதகர்கள் இவளைத் துணிந்து கொல்ல வந்தபோதுதான் ப்ரஹ்லாதனை அழகியசிங்கர் அவதரித்துக் காத்து ஹிரண்யனையும் அழித்தது போன்ற நிகழ்ச்சி நடந்தது. ஔர்வர் அவதரித்தார். அவருடைய திவ்ய தேஜஸ்ஸின் சக்தியால் கொலை பாதகர்கள் அத்தனை பேரும் கண்பார்வையை இழந்தனர். ஆனால், அதே தேஜஸ்ஸு ஔர்வரின் தாயைச் சிறிதும் துன்புறுத்தவில்லை. என்ன அதிசயம்! மகான்களுடைய தேஜஸ்ஸும் அவர்களுடைய திருவுள்ளப் போக்கை அறிந்தே செயல்படும் போலும்.

கிருஷ்ணபரமாத்மாவுக்குப் போல் கர்பவாஸத்திலிருந்தே கஷ்டம் ஆரம்பித்துவிட்டது ஔர்வருக்கு. அவர் போலவே தம் மகிமையினால் அதையும் வென்றுவிட்டார் ஔர்வர். ப்ருகு வம்சத்தினர் படாதபாடு பட்டுக்கொண்டிருந்த ஸமயம்தான் ஔர்வர் பிறந்த ஸமயம்.

குழந்தை ஒரு குறைவுமின்றி ஓங்கி வளர்ந்தது. 'தொடையிலிருந்து பிறந்தது' என்னும் கருத்தை உணர்த்தும் வகையில் அந்தக் குழந்தைக்கு 'ஔர்வர்' என்றே பெயர் இட்டனர். அந்தக் குழந்தை தாயின் தொடையில் கர்பவாஸம் செய்தது எத்தனை வருஷங்கள் தெரியுமா? நூறு வருஷங்கள். பிறக்கும்போதே ஸகல வேதங்களையும் கற்றுணர்ந்தவராகவும், மகாதேஜஸ்வியாகவும் இருந்தார் அவர். பராசரர் கதையை ஊன்றிக் கேட்கிறார்.

வஸிஷ்டர் தொடர்ந்து சொன்னார் - ஔர்வருக்கு உண்மை விளங்கியது. தம் தந்தையும், வம்சத்தவர்களும், அநியாயமாகக் கொன்று குவிக்கப்பட்டதையும், தம் தாய்மார்கள் தலை விரிகோலமாகத் திக்கற்ற நிலையில் அலறியதையும், இவ்வுலகில் யாரும் இந்த அநியாயத்தைத் தடுத்து அடக்காததையும் எண்ணிப் பார்த்தார். கோபம் பொங்கியெழுந்தது. வஞ்சம் தீர்த்துக்கொள்ள அவருக்குச் சக்தி இல்லையா என்ன? தமது தவ வலிமையை உபயோகித்து இவ்வுலகத்தையே அழிக்க முனைந்தார் ஔர்வர். அவரை யாராலும் அடக்க முடியவில்லை. பிரபஞ்சமே நாசமாகிவிடும்போல் ஸ்திரமற்ற தன்மை தோன்றியது. அவருடைய பித்ருக்கள் அனைவரும் பித்ருலோகத்திலிருந்து அவரது இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தனர். அவர்கள்தாம் அவரைத் தடுத்து நிறுத்தினர்.

அவர்கள், "குழந்தாய், ஔர்வனே, எங்களை க்ஷத்திரியர்கள் அடித்துக் கொன்றதற்காக வஞ்சம் தீர்த்துக் கொள்வது தானே உன் உத்தேசம்? அப்படியானால் இதை நீ கைவிட வேண்டியதுதான். இந்த நிகழ்ச்சி ஏற்பட்டதற்குக் காரணம் நாங்களே. நாங்களே இதற்குப் பொறுப்பாளிகள்; க்ஷத்திரியர்கள் அல்லர்" என்றனர். பித்ருக்கள் தொடர்ந்து- "எல்லையற்ற ஆயுள் காலத்தை ஒருவாறாக முடித்து புண்யலோகங்களில் சென்று வஸிக்க விரும்பினோம். மானிட உடல் அதற்குத் தடையாக இருந்தது. இதைத் தற்கொலை

செய்து கொண்டு அழித்துக்கொள்வது மிகக் கொடிய பாவமாகும் என்பதையும் யாம் உணர்வோம். அதனால்தான் உலகப் போக்குக்கு ஏற்றதாக ஒரு சந்தர்ப்பத்தைத் தோற்றுவித்தோம். அதன் பயனாகவே நாங்கள் இவ்வாறு கொல்லப்பட்டோம். இது முன்கூட்டியே திட்டமிட்ட நிகழ்ச்சி. இதற்காக நிரபராதியான உலகத்தை நீ அழிக்க முற்படுவது தகாது" என்று உண்மையை விவரித்துக் கூறினர்.

ஔர்வருடைய மனத்தில் இது பதிந்தது. உடனே அவர் தம் செயலை நிறுத்திவிட்டார். உலகம் ஒருவாறாகத் தப்பித்துக் கொண்டது. ஆனால் அவருடைய கோபத்தீயின் உக்கிரம் தணியவில்லை. அதற்கு ஒரு போக்குவீடு வேண்டியிருந்தது அவருக்கு. ஸமுத்திர ஜலத்தில் அதை விடுமாறு பித்ருக்கள் பணித்தார்கள். அவர் அவ்வாறே செய்து தெளிந்த மனத்தைப் பெற்றார். ஏற்கனவே அவரது தேஜஸ்ஸின் வேகத்தினால் கண்பார்வையிழந்த க்ஷத்திரியர்கள் அவரை வணங்கி, அவரது அருளினால் மீண்டும் தமது கண்பார்வையைப் பெற்றனர்.

ரிசீகர், ஔர்வர் இருவரும் வெவ்வேறல்லர்; ஒருவரேதான் என்று ஊகிக்க இடமிருக்கிறது. இந்த ரிசீகருடைய குமாரர்தாம் ஜமதக்னி முனிவர். ஸ்ரீவத்ஸகோத்ரப்ரவர்த்தகர்களான ரிஷிகள் ஐவரும் அப்பாவும், பிள்ளையும், பேரனும், கொள்ளுப் பேரனும் எள்ளுப் பேரனுமாக வரிசையாகவே வருகின்றனர்.

# ஜமதக்னி

ஸ்ரீவத்ஸ கோத்ர ப்ரவர்த்தகர்களான ஐந்து மகரிஷிகளுள் கடையானவர் ஜமதக்னி முனிவர். இவருடைய ஸம்பந்த முள்ளவர்கள், இந்தப் புனிதமான திருநாமத்தையே 'ஜாமதக்ந்ய' என்று தத்திதப்ரத்யயாந்தமாக்கிக் கூறிக்கொள்வதன் மூலம் தினந்தோறும் பலகாலும் அதை அநுஸந்தானம் செய்துகொள்வர். இவருடைய தந்தைதாம் ரிசீகர் (ऋचीकः). ஸத்தியவதீ என்பது இவருடைய தாயின் திருநாமம். தசாவதாரங்கள் எனப்பெறும் எம்பெருமானுடைய பத்து அவதாரங்களில் ஆறுவதான பரசுராமர் இவருடைய மகன்தாம். 'பிதரம் ரோசயாமாஸ' என்கிறபடி ஸ்ரீமந்நாராயணன் தனக்கு ஏற்ற பிதாவாகத் தேர்ந்தெடுக்கும் பாக்கியம் மகாதேஜஸ்வியான இவருக்குக் கிடைத்ததில் என்ன அதிசயம்? இவருடைய தர்மபத்னிதான் ரேணுகாதேவி என்பவள். இவருக்குப் பிள்ளைகள் ஐவர்-1. ருமண்வான், 2. வஸு, 3. ஸுஷேணன், 4. விச்வாவஸு, 5. பரசுராமன். இவருடைய குமாரர்களுள் ஐந்தாமவர் - கடைக்குட்டியானவரே - பரசுராமர்.

## பெயரின் பொருள்

जमत् + अग्निः = जमदग्निः ।

என்று வேதம் இரண்டு சொற்கள் ஒன்றுகூடி அன்மொழித் தொகையால் உருவாகிய பெயராக இதை வழங்குகிறது.

'जमन्तः अग्नयः यस्य सः जमदग्निः ।'

என்று இந்தச் சொல்லை உருவாக்கும் ஸமாஸம். இதில் 'அக்னி என்பது அனைவருக்கும் நன்கு தெரிந்ததே. 'ஜமத்' என்பது 'சாப்பிடுதல்' என்னும் பொருளுள்ளது. இவரிடம் உள்ள அக்கினிகள் மூன்றும் (த்ரேதாக்நிகள்) எப்பொழுதும் நல்ல ஹவிஸ்ஸுக்களைச் சாப்பிடுமாம். அதாவது இவர் ஹோமம் பண்ணும் ஹவிஸ்ஸுக்களை எரித்துக்கொண்டு, சுடர் விட்டெரிந்துகொண்டே இருக்குமாம். அக்கினிகளுக்கு நித்யததீயாராதனம்தான் இவருடைய ஆச்ரமத்தில். அதனால்

அதைக் காட்டும் சொல்லே ஜமதக்னி என்று இவருக்குப் பெயராகிவிட்டது. இது ஒரு காரணப்பெயர் போலவே காண்கிறது. ஆனாலும் இவர் ஒருவர் தவிர மற்ற ரிஷிகள் எவரும் இந்தப் பெயர் பெறவில்லை. அதனால் அக்கினிகளை முறைப்படி ஆராதிப்பதில் அனைவரும் சரிசமமாக இருந்தாலும் அதில் இவருக்குத் தனிச் சிறப்பு இருந்தது என்பது புலனாகிறது.

'ஜமத்' என்னும் சொல்லில், 'ஜம் + அத்' என்னும் இரண்டு பாகங்கள் உள்ளன. 'ஜம்' என்னும் முதற் பாகம்தான் தாது. அதன் பேரில் 'அத்' என்பது நிகழ்காலத்தைக் காட்டுவதற்காக வரும் விகுதி. 'ஜம்' என்னும் பகுதிக்குத்தான் 'சாப்பிடுதல்' என்று பொருள். உலக வழக்கில் சற்று மாறுபட்ட பொருளுடன் இந்தச் சொல் வெகு ஸ்வாரஸ்யமாக வழங்கி வருகிறது. 'ஜாம் ஜாம்' என்று பாடுகிறான் என்கிறார்கள். 'ஜம்' என்று போகலாம் என்பார்கள். அதிக ஸந்தோஷமான நிலையைக் குறிப்பிடும்பொழுது 'ஜமாய்க்கிறான்' என்கிறார்கள். ஹிந்தியில் மாப்பிள்ளைக்கு 'ஜமாஈ' என்றே பெயர். ஏன்? ஸம்ஸ்கிருதத்திலும் 'ஜாமாதா' என்பதுதான் மாப்பிள்ளையின் பெயர். மாப்பிள்ளை வந்தால் நல்ல பக்ஷணம் பலகாரங்கள் வடை போளி அல்வா நெய் தயிர் பால் இத்யாதிகள் தாராளமாக உபயோகிக்கப்படுவது சாதாரண குடும்பங்களில்கூட ஸகஜமானது. இவற்றை ரஸித்துச் சாப்பிடும் மாப்பிள்ளையை 'ஜமாய்க்கிறார்' என்றும், ஜாமாதா, ஜமாஈ என்றும் சொல்வதில்தான் எவ்வளவு பொருத்தம்! இப்படி மாப்பிள்ளை உபசாரமேதான் அக்கினிகளுக்கு இவரால் பண்ணப்பட்டது. விதவிதமான ஹோமத்திரவியங்களை ஓயாமல் மந்த்ரபூர்வமாக அக்கினிகளில் இவர் ஹோமம் பண்ணிக்கொண்டேயிருப்பார். அதற்கேற்ப பெயரையும் பெற்றார்.

இதில் இன்னொரு விசேஷம்: இவர் பிறந்ததும் பிதாவினால் நாமகரண காலத்தில் வைக்கப்பெற்ற பெயர்தான் இது. 'பிற்காலத்தில் விசேஷமாக அக்கினி பூஜை செய்யக்கூடியவர் இவர்' என்பதைக் குழந்தையாக இருந்தபோதே த்ரிகால ஜ்ஞாநிகளான மாதாபிதாக்கள் நன்கு அறிந்திருக்க வேண்டும். அப்படியே பெயரிட்டனர். மகா தபஸ்விகளான அவர்கள் வைத்த பெயர் பொய்க்காமல் ஸத்தியமாகவே அமைந்து விட்டது. ஜமதக்னி என்னும் இவருடைய பெயர் எல்லா வேதங்களிலும் பலகாலும்

ஓதப்பெறுகிறது. ஆனால் யஜுர் வேதத்தில் 'ஜமத்-அக்னி' என்று பிரித்து ஓதும் வழக்கம் காணவில்லை. ரிக்வேதத்திலும் அதர்வத்திலும் மேற்கண்டவாறு பிரித்து ஓதும் ஸம்பிரதாயம் இன்றளவும் இருக்கிறது. 'பரத்வாஜ:' என்ற பெயரும் இப்படியேதான்.

## அவதார விசேஷம்

இவர் ரிசீகருக்கும் ஸத்தியவதிக்கும் பிள்ளையாகப் பிறந்தவர். இவருடைய அவதாரக் கதையே விசித்திரமான வரலாறு. திட்டமிட்டு முன்கூட்டியே செய்த ஏற்பாட்டின்படி இவர் அவதரித்தார். ச்யவந மகரிஷியின் குமாரர் ரிசீகர். குசிக மகாராஜனுடைய குமாரரான காதி (गाधिः) யின் பெண் ஸத்தியவதீ. இவள் க்ஷத்திரிய குலத்தில் உதித்த பெண். இவளுக்கும் ரிசீகருக்கும் திருமணம் நடந்தது. இந்த தம்பதிகளின் குழந்தையே ஜமதக்னி முனிவர்; அதாவது பிராம்மணனுக்கும் க்ஷத்திரிய ஸ்திரீக்கும் பிறந்தவர். முற்காலத்தில் இதுபோன்ற கலப்புத் திருமணங்கள் அநுமதிக்கப் பெற்றிருந்தன. ரிசீகருடைய கலப்புத் திருமணம் பிற்காலத்தில் விபரீதமான விளைவுகளுக்கெல்லாம் ஆதாரமாகிவிட்டது.

ब्रह्मक्षत्रविरोधेन भविता कुलसङ्करः ।

ப்ரஹ்மக்ஷத்ரவிரோதேந பவிதா குலஸங்கர: ।

— மகாபாரதம், 13.55.11.

என்பது ச்யவந முனிவருடைய வாக்கியம். பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் பகைமை தலைவிரித்தாடிய காலம் அது. 'அதன் பயனாகக் குலங்களின் தூய்மை மறைந்து கலப்படமாகிவிடப் போகிறது' என்பது கருத்து. த்ரிகாலஜ்ஞாநியான ச்யவநர் இதை முன்கூட்டியே உணர்ந்து கொண்டார். இதைத் தவிர்க்க முயன்று பார்த்தார். ஆனால் ஸாத்தியமாகவில்லை. இதையும் அவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். அவர் கூறியபடியே - அவருடைய பிள்ளையே ஒரு க்ஷத்திரிய குமாரியை மணந்துகொண்டார்.

## சுயம்வரம்

கான்யகுப்ஜ நாட்டரசரான காதி என்பவர், தம் மனைவியுடன் காட்டில் வாஸம் செய்து வந்தார். அப்பொழுது அவருக்கு ஒரு

பெண்குழந்தை பிறந்தது. 'ஸத்தியவதீ' என்று அதற்குப் பெயரிட்டார் காதி மகாராஜா. அந்தப் பெண்குழந்தை வளர்ந்து திருமண வயதடைந்தது. ஒப்புயர்வற்ற அந்தப் பெண்ணின் அழகு ரிசீக முனிவரைக் கவர்ந்தது. அவர் காதியை அணுகித் தமக்கு ஸத்தியவதியைத் திருமணம் செய்து தரும்படி கேட்டார். காதி மகாராஜர் சொன்னார், "எங்கள் குலத்தில் ஒரு முன்னேற்பாடு நடந்திருக்கிறது. உடம்பெல்லாம் வெள்ளை நிறமும், ஒரு காது மட்டும் கறுப்பு நிறமுமான மிக்க பலமுள்ள குதிரைகள் ஆயிரம் கொண்டு வந்து கொடுப்பவருக்குத்தான் இந்தப் பெண் மனைவியாவாள். க்ஷத்திரிய குமாரியாகிய இவளது ஸ்வயம்வரம் இவ்வாறாக ஏற்பாடாகியுள்ளது. முனிசிரேஷ்டரே! உம்மால் முடியுமானால் முயன்று பாரும்" என்று. ரிசீகர் வருணனை அணுகி, அவனருளால் அதே அமைப்புள்ள ஆயிரம் குதிரைகளைப் பெற்று, காதியினிடம் கொடுத்தார். அந்தக் குதிரைகள் நீரிலிருந்து கரையேறி வந்த இடம் 'அச்வ தீர்த்தம்' என்று பெயர் பெற்றது. ஸத்தியவதிக்கும் ரிசீகருக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது.

## பிள்ளைவரம்

கல்யாணத்துக்கு ஸாக்ஷாத் ப்ருகு மகரிஷியே வந்திருந்து தம்பதிகளை ஆசீர்வாதம் பண்ணினார். மணப்பெண் ஸத்தியவதீ ப்ருகு மகரிஷியை வணங்கினாள். "உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்; தருகிறேன்" என்று மனமுவந்து சொன்னார் ப்ருகு மகரிஷி. "எனக்கும் என் தாயாருக்கும் நல்ல ஆண்குழந்தை பிறக்குமாறு அருள வேண்டும்" என்று வரம் கேட்டாள் புது மருமகள். தனக்கு உடன்பிறந்தவன் ஒருவன் இல்லையே என்னும் குறை இருந்தது அவளுக்கு. தனக்கு இருப்பது போல் தன் தாய்க்கும் ஆண்குழந்தை வேண்டும் என்னும் ஆசை இருப்பது இயல்பே என்பதை ஸத்தியவதீ முன்னமே உணர்ந்துகொண்டாள். மகாதேஜஸ்வியான தன் மாமனார் ப்ருகு மகரிஷி தாமாகவே வரமருள முன்வந்த ஸந்தர்பம் அரியதோர் வாய்ப்பு. தன் அன்னைக்காகவும் தானே வரம் கேட்டால் என்ன தவறு? அவர்தாம் கொடுக்கச் சித்தமாக இருக்கிறாரே! விசால ஹ்ருதயம் படைத்த ஸத்தியவதீ இப்படி வரம் கேட்டு வைத்தாள். ப்ருகு மகரிஷிக்கு என்ன, சக்தியில் குறைவா? "நல்ல

வரத்தைக் கேட்டாய். அவ்வாறே ஆகுக" என்று பரம ஸந்தோஷத்துடன் வரமருளினார்.

## நிபந்தனை

"பாலில் சமைக்கப்பெற்ற சோறு (சரு – चरुः) உனக்கு ஒன்றும் உன் தாயாருக்கு ஒன்றும் தருகிறேன். என் தபஸ் சக்தியை உபயோகித்து மிகுந்த சிரமத்துடன் இவற்றைப் பண்ணி வைத்திருக்கிறேன். உனக்கென்று வகுத்த சோற்றை நீயும், உன் அன்னைக்கான அன்னத்தை அவளும் ருதுஸ்நானம் பண்ணினவுடன் வ்ரதநியமங்களோடு இருந்து உண்ணவேண்டும். பிறகு நீ ஓர் அத்திமரத்தை அணைத்துக்கொள்ள வேண்டும். உன் அன்னை ஓர் அரசமரத்தை அணைத்துக் கொள்ள வேண்டும். இருவருக்கும் நல்ல ஆண்குழந்தை பிறக்கும்" என்று கூறிவிட்டு, ப்ருகு மகரிஷி வந்த வழியே சென்று மறைந்தார். ஸத்தியவதிக்குக் கட்டுக்கடங்காத ஆனந்தம். தான் பிறந்த குடியும் புகுந்த குடியும் ஒருங்கே விளங்கப்போகிறது. இப்படிப்பட்ட உயர்ந்த ஏற்பாடு தன்னாலேயே செய்யப்பட்டது. தன் சோற்றையும் தன் தாயிடமே கொடுத்து வைத்தாள். ருதுஸ்நானம் பண்ணினவுடன்தானே அதைச் சாப்பிட வேண்டும்? இரண்டு சருக்களும் தாயினிடமே இருந்தன.

## தாயின் துரோகம்

தன் பெண்ணுக்கே துரோகமிழைத்தாள் ஸத்தியவதியின் தாய். தனக்காகக் கொடுக்கப்பெற்றிருந்த சோற்றைத் தன் மகளுக்குக் கொடுத்தாள். அவளுக்காகக் கொடுக்கப் பெற்றதைத் தான் சாப்பிட்டு விட்டாள். இது இவ்வளவில் முடிந்து போகிற விஷயம் இல்லையே! ஒவ்வொருவரும் ஒவ்வொரு மரத்தை அணைத்துக் கொள்ள வேண்டும் என்பதும் தொடர்ந்து செய்ய வேண்டியதாயிற்றே! அதிலும் மகளைத் தாய் வஞ்சித்தாள். "என்னடி குடி முழுகிவிட்டது? நீதான் அரசமரத்தை அணைத்துக்கொள். நான் அத்திமரத்தை அணைத்துக்கொள்கிறேன்" என்றாள். அவ்வாறே நடந்தது. சோற்றிலும் மரத்தை அணைத்துக்கொள்வதிலும் பரஸ்பரம் பிணைப்பு இருக்கக்கூடும். அதனால்தானே ப்ருகு முனிவர் அழுத்தந் திருத்தமாக நிபந்தனை விதித்திருக்கிறார்? சோற்றை மாற்றித்

தின்றுவிட்டு மரத்தை மாற்றுமலிருந்தால் எல்லாம் வீணுகிவிடுமே! இந்த அச்சம் தாய்க்கு அந்தரங்கத்தில் இருந்தது. அதனுல் கள்ளங்கபடமற்ற சிறு வயதினளான தன் மகள் ஸத்தியவதியை நன்முக ஏமாற்றி விட்டாள் அவள்.

என்ன காரணம்? வேறொன்றுமில்லை. ப்ருகு மகரிஷி மகாதேஜஸ்வி. தம் மருமகளுக்கு உத்தமோத்தமமான பிள்ளை பிறக்குமாறு தமது மந்திர சக்தியையெல்லாம் உபயோகித்துச் சோற்றைத் தந்திருப்பார். தனக்கு அவர் கொடுத்த சோறு அவ்வளவு வீரியமுள்ளதாக இருக்காது. என்ன இருந்தாலும் அவருக்குத் தான் சம்பந்தியம்மாள் தானே? ஸத்தியவதியே கேட்டுவிட்டாளே என்பதனுல் 'இல்லை' என்னுமல் ஏதோ தாக்ஷிண்யத்துக்காகக் கொடுத்ததுதானே இந்தச் சோறு? இதில் மந்த்ரசக்தி குறைவாகவே இருக்கும். இரண்டும் தன் கையிலேயே இருக்கையில் உயர்ந்ததையே தான் உபயோகிக்க வேண்டியதுதானே? இதில் என்ன ஆக்ஷேபம்? அப்படித்தான் ஆக்ஷேபம் வந்தாலும் தன் மகள் தானே ஆக்ஷேபிக்க வேண்டியவள்? அவளுக்கு இதெல்லாம் அவ்வளவாகத் தெரியாது. தெரிந்தால்தான் என்ன? தான் பெற்று வளர்த்த பெண், தாய்க்காக இந்தத் தியாகம் செய்யக் கூடாதா?

ஸத்தியவதியின் தாய் இவ்வாறெல்லாம் சிந்தித்துப் பார்த்துத் துணிந்து, தன் மகளுக்குத் துரோகம் செய்து விட்டாள். இதன் விளைவு மிகவும் பயங்கரமாகவே இருந்துவிட்டது. ஆனுல், பாவம்! அவள் அப்போது இதை உணரவில்லை. உணர்ந்திருந்தால் செய்திருக்கவே மாட்டாள். 'விஷயம் ரகசியமாகத்தானே நடந்தது? யாருக்குத் தெரியப் போகிறது?' என்று இருந்துவிட்டாள் பேதை. ஆனுல் ப்ருகு முனிவருக்கு ஜ்ஞாநத்ருஷ்டியினுல் இதெல்லாம் நன்முகத் தெரிந்துவிட்டது. அவரை ஏமாற்ற முடியுமா?

## முனிவரின் தீர்ப்பு

ஸத்தியவதீ தன் தாயுடன் இருந்த இடத்துக்கு அவர் வந்தார். தாயும் மகளும் வணங்கினர். ஸத்தியவதியிடம் அவர் நடந்துள்ள விஷயத்தைத் தெளிவாக எடுத்துரைத்தார். 'இருவருக்கும் ஆண்

குழந்தை பிறப்பது நிச்சயம். ஆனால் ஸத்தியவதிக்குப் பரிபூர்ணமான க்ஷத்திரியகுணம் படைத்த பிள்ளையும், அவளுடைய அன்னைக்குப் பரிபூர்ணமான பிராம்மணத்தன்மை வாய்ந்த குழந்தையும் பிறக்கும். இனி இதில் எவ்விதமான மாறுதலும் செய்ய முடியாது. ஸத்தியவதியின் தாய் இந்தத் துரோகத்தைத் திட்டமிட்டே செய்திருக்கிறாள்' என்பதை வெட்ட வெளிச்சமாக்கி விட்டார். ஸத்தியவதிக்குப் பெரும் ஏமாற்றம் ஏற்பட்டு விட்டது. இனி தன் தாயைக் கோபிப்பதில் பயனில்லை. நடந்தது நடந்துவிட்டது. ப்ருகு முனிவரைப் பலவாறாக வேண்டிக்கொண்டாள் ஸத்தியவதீ. "உத்தமமான பிராம்மண குலத்தில் வாழ்க்கைப்பட்ட எனக்கு க்ஷாத்திரம் நிறைந்த பிள்ளை வேண்டவே வேண்டாம். இதை எப்படியாவது மாற்றியருள வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். "அது சாத்தியமல்ல" என்று கூறிவிட்டார் ப்ருகு முனிவர். மந்த்ரசக்தியுள்ள சோற்றில்தானே இதற்கான ஆதாரம் பொதிந்திருந்தது? அது மாறிப் போனபிறகு என்ன செய்ய முடியும்? "உன் பிள்ளைக்கு ஏற்படவேண்டிய க்ஷாத்திர குணம் ஒரு தலைமுறை பின்தங்கி உன் பேரனுக்கு உண்டாகும்படி வேண்டுமானால் செய்கிறேன்" என்று சொல்லி மறைந்து விட்டார் ப்ருகு முனிவர்.

## பிள்ளைப்பேறு

தாயும் மகளும் உரிய காலத்தில் ஒவ்வோர் ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தனர். ஸத்தியவதியின் பிள்ளை தான் ஜமதக்னி. அவளுடைய தாயின் பிள்ளை விச்வாமித்ரர். இருவரும் உலகப் பிரசித்தி பெற்றவர். மகரிஷியின் வாக்கு பொய்க்குமா? விச்வாமித்ரர் க்ஷத்திரிய குமாரராகப் பிறந்தும், படாத பாடுபட்டுப் பிராம்மணராகி விட்டார். அது மட்டுமா? இன்று உலகெங்குமுள்ள பிராம்மணர்கள் அனைவரும் தமது பிராம்மண்யத்துக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள காயத்ரீ மந்திரத்துக்கு அவரே ரிஷி. ஜமதக்னி முனிவர் குழந்தையாக இருந்தபோதே க்ஷத்திரியர்களுக்குச் சொந்தமான தநுர்வேதம் முழுவதும் தானாகவே அவருக்குப் புலனாகிவிட்டதாம். வேதாத்தியயனத்தில் நிகரற்றவரானார். ஸூர்யன் போல் ஜ்வலித்தாராம். ப்ருகு வம்சம் அல்லவா?

स वर्धमानस्तेजस्वी वेदस्याध्ययनेन च ।
बहून् ऋषीन् महातेजाः पाण्डवेयात्यमन्यत ॥
तं तु कृत्स्नो धनुर्वेदः प्रत्यभाद् भरतर्षभ ।
चतुर्विधानि चास्त्राणि भास्करोपमवर्चसम् ॥

*ஸ வர்தமானஸ் தேஜஸ்வீ வேதஸ்யாத்யயநேன ச ।*
*பஹூன் ரிஷீன் மஹாதேஜா: பாண்டவேயாத்யமன்யத ॥*
*தம் து க்ருத்ஸ்நோ தனுர்வேத: ப்ரத்யபாத் பரதர்ஷப ।*
*சதுர்விதானி சாஸ்த்ராணி பாஸ்கரோபமவர்சஸம் ॥*

— *மகாபாரதம், 3.115.29,30.*

*என்கிறார் வேதவ்யாஸர்.*

अर्धो वा एष आत्मनो यत् पत्नी

— *தைத்திரீய ஸம்ஹிதை, 6.1.8.5.*

*என்கிறது வேதம். 'பத்தினி கணவனுடைய பாதி பாகம்' என்று கருத்து. 'ஒவ்வொருவனும் பூர்ணமானவனுவதில்லை; பாதி மனிதனுகவே வாழ்கிறுன். மற்றொரு பாதிதான் மனைவி' என்று தாம்பத்யத்தின் உள் மர்மத்தை வேதம் வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறது. இல்வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவம் புனிதமான, ஆதியந்தமில்லாத வேதங்களில் அழகாகக் கூறப்பெற்றுள்ளது. அர்த்தநாரீச்வரர் என்பது பரமசிவனுடைய வடிவங்களில் ஒன்று. கணவன் செய்யும் காரியங்கள் யாவும் மனைவியும் இசைந்தால்தான் செல்லுபடியாகும். மனைவிக்கும் இதே நியதிதான். அதுபோல் கணவனுக்கு ஏற்படும் புகழ் மனைவிக்கும் பொதுவானதே. அவளுடைய ஆதரவு இல்லாமல் இவனால் ஒன்றும் செய்ய முடியாது அல்லவா? 'ஸஹதர்மசாரீ' என்றும், 'ஸஹதர்மசாரிணீ' என்றும் மனைவிக்கு நம் நாட்டில் பெயர் வழங்குவது யாவரும் அறிந்ததே. தவத்தின் மகிமையால் அரிய சாதனைகள் பலவற்றையும் சாதித்துள்ள முனிச்ரேஷ்டர்கள் பெரும்பாலும் க்ருஹஸ்தர்களாகவே இருந்துள்ளனர். அவர்களது அருமை பெருமைகளெல்லாம் அவர்களுடைய தர்ம பத்தினிகளுக்கும் சமமாகவே அமைந்துள்ளன. ஜமதக்னி முனிவருடைய மகிமை அளவு கடந்தது. ஆனால் அதில் சரிபாதிதான்*

அவருக்கு; மற்றொரு பாதி அவருடைய தர்மபத்தினியாகிய ரேணுகாதேவிக்கு. ஆதலால் கோத்ரப்ரவர்த்தகர்களான மகரிஷிகளை நாம் பெருமையுடன் சொல்லிக்கொள்ளும்போது அவர்களுடைய தர்மபத்தினிகளையும் சொல்லாமற் சொல்லிவிடுகிறோம். அதாவது, ரிஷிபத்தினிகளும் கோத்ரப்ரவர்த்திகைகளே என்றவாறு. இது அனைவருக்கும் பொதுவான விதி. தமது தவ மகிமையினால், அசாதாரணமான – தம் கணவன்மாரிடமும் காண முடியாத – தனிச்சிறப்புடன் திகழும் ஸ்த்ரீ ரத்தினங்கள் பலர் உண்டு. ரேணுகாதேவியும் அவ் வகையைச் சார்ந்தவள்.

## திருமணம்

ப்ரஸேநஜித் என்ற க்ஷத்திரியன் அரசனாக இருந்தான். அவனுடைய தவப் புதல்வியே ரேணுகாதேவி. அவளுடைய ஒப்புயர்வற்ற அழகால் கவரப்பெற்று ஜமதக்னி மகரிஷி அவளை மணந்தார். அரசனை அணுகித் தமக்கு அவனது செல்வக்குமரி ரேணுகாவைத் திருமணம் செய்துகொடுக்குமாறு வேண்டிக் கொண்டார். அப்படியே செய்து கொடுத்தான் அரசன். ஸ்வயம்வரத்தில் தனக்கு இஷ்டமான ராஜகுமாரனைக் கணவனாகத் தானே தேர்ந்தெடுத்து மணந்துகொள்ளும் இயல்பும் உரிமையுமுள்ள அழகி ராஜகுமாரி ரேணுகா ரிஷிபத்தினியானாள். அக்காலத்தில் இவ்வாறாக க்ஷத்திரியகுமாரிகள் பிராம்மணர்களுக்கு ஸஹதர்மசாரிணிகளாக வாய்ப்பது ஸர்வஸஹஜமாக இருந்திருக்கிறது. ச்யவந மகரிஷியின் பத்தினி ஸுகந்யா சர்யாதி மன்னனுடைய மகள். ரிசீக மகரிஷியின் மனைவியான ஸத்யவதீ, காதி மகாராஜனுடைய அருமைப் புதல்வி. அவ் வழியிலேயே ஜமதக்னி மகரிஷி ப்ரஸேநஜித் மன்னனுடைய திருமகளான ரேணுகாதேவியைத் தம் இல்லாளாக ஏற்றுக்கொண்டார். இதனால் தொடர்ந்து மூன்று தலைமுறைகளில் ஸ்ரீவத்ஸகோத்ர ப்ரவர்த்திகைகளான தாய்மார்கள் க்ஷத்திரிய குமாரிகளாகவே அமைந்துள்ளமை தெரிகிறது. அக்காலத்தில் பிராம்மணர்களுக்குத் தமது இனத்திலேயே கன்யகைகள் கிடைப்பதில் ஏதோ ஒரு

விதமான சிரமம் இருந்திருக்கிறது. அதனால்தான் ப்ருகுவம்சத்தில் தொடர்ந்து மூன்று முனிவர்கள் க்ஷத்திரிய குமாரிகளையே மணந்துகொண்டிருக்கின்றனர். பிராம்மணன் மற்ற மூன்று வர்ணங்களிலிருந்தும் பெண்களை விவாகம் செய்து கொள்வதற்கு தர்மசாஸ்திரங்களும் அநுமதியளிக்கின்றன. அதனால் ஜமதக்னி முனிவரும் ரேணுகாதேவியும் ரிஷிதம்பதிகளாகிவிட்டனர்.

## மக்கட்பேறு

ஜமதக்னி முனிவரை மணந்துகொண்ட ரேணுகாதேவி அடர்ந்த காட்டில் ஆசிரமத்தில் தனது இல்வாழ்க்கையை நடத்தி வந்தாள். இந்த ரிஷி தம்பதிகளுக்கு ஐந்து ஆண் குழந்தைகள் பிறந்தன. முறையே 1. ருமண்வான், 2. ஸுஷேணன், 3. வஸு, 4. விச்வாவஸு, 5. (பரசு) ராமன் என்று அவர்களுக்குப் பெயர். இவர்களுள் கடைக்குட்டியான பரசுராமர்தாம் ஸ்ரீமந்நாராயணனுடைய பத்து அவதாரங்களில் ஆறுவதான பரசுராமாவதாரம். ராமனைப் பெற்ற கௌஸல்யை போலவும் கிருஷ்ணனைப் பெற்ற தேவகி போலவும் பரசுராமனைப் பெற்ற ரேணுகாதேவி அசாதாரணமான மேன்மையை அடைந்துவிட்டாள். இவளுடைய வாழ்க்கையில் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்துவிட்டது. அது இவளை தெய்வமாகச் செய்துவிட்டது. நம் நாட்டில் பற்பல ஆலயங்கள் இந்த ரேணுகாதேவிக்கு இன்றும் உள்ளன. 'ரேணுகா ஸஹஸ்ரநாமம்' பிரஸித்தமானது. இவளைக் குலதெய்வமாகக் கொண்டு வழிபடும் குடும்பங்கள் ஏராளம். வட ஆர்க்காடு மாவட்டத்தில் ஆரணிக்கு அருகில் 'படை வீட்டம்மன் கோவில்' என்று புகழ்பெற்ற ஒரு யாத்திரை ஸ்தலம் இருக்கிறது. அங்கு இருப்பது ரேணுகாதேவியின் கோவில்தான்.

## மணற்குடம்

தினந்தோறும் ஆசிரமத்திலிருந்து அதிகாலையில் எழுந்திருந்து வீட்டு வேலைகளை முடித்துக்கொண்டு ஆற்றுநீரில் தீர்த்தமாடிவிட்டுக் குடம் நிறையத் தண்ணீர் கொண்டு வருவது

ரேணுகாதேவியின் வழக்கம். ஆசிரமத்திலிருந்து ஆற்றுக்குப் போகும்போது வெறுங்கையுடன்தான் போவாள். ஸ்நானம் முடிந்ததும் ஆற்றுமணலால் ஒரு குடம் பண்ணுவாள். விளையாட்டுச் சிறுவர் சிறுமியர் ஈர மணலால் பலவகையான வடிவங்களைக் கட்டுகிறார்கள் அல்லவா? அதேபோல்தான் இங்கு நடந்து வந்தது. ஆனால் இதில் வியக்கத்தக்க அதிசயம் ஒன்று உண்டு. அந்த மணற்குடத்திலேயே வீட்டுக்குத் தேவையான ஜலத்தைக் கொண்டு வருவாள் ரேணுகாதேவி. மணற்குடம் கரைந்து போய்விடாமல் வெண்கலம் பித்தளை முதலிய உலோகத்தாலான குடங்கள் போல் உறுதியாக நிற்கும். வீட்டில் ஜலத்தின் உபயோகம் முடிந்தவுடன் அந்த மணற்குடத்தை வெளியில் தூக்கி எறிந்துவிடுவாள். அதுவும் சிதறிப் போய்விடும். மறுநாளைக்குக் குடம் வேண்டுமே என்னும் கவலைதான் ரேணுகாவுக்கு இல்லையே! மறுநாள் காலையில் ஆற்றுமணல் இல்லாமற் போய்விடுமா? மணற்குடம் அமைப்பதுதான் அவளுக்கு அசாத்தியமா?

### சோதனை நாள்

இக்காலத்தில் அரும்பாடு பட்டு மணலைக் குவித்துவைத்து அதில் மண்பாண்டத்தில் நீரை வைத்தும் மற்றும் பல முறைகளினாலும் மணல் ஸம்பந்தத்தை உண்டாக்கி நீரை உபயோகிக்கிறார்களே! ஜமதக்னி மகரிஷியின் ஆசிரமத்தில் இம் முறை ஸர்வஸகஜமாக நடந்து வந்தது. அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் இவ்வதிசயத்தைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்தனர். ரேணுகாதேவியின் தபஸ்ஸின் மகிமையைப் பலவாறாகப் புகழ்ந்தனர். "அவளுடைய விலக்ஷணமான பாதிவ்ரத்யத்தின் பயனே இது. அவள் நினைத்தபடி எல்லாம் செய்ய வல்லவள். இல்லையேல் உதிரியாகவே இருக்கும் இயல்புடைய சிறுமணல் ஒரு குடம்போல் நிற்பதல்லாமல் தண்ணீரையும் முகர்ந்து கொண்டுபோக இடம் தருமா?" என்று ரேணுகாவின் தனிச் சிறப்பை மக்கள் கொண்டாடினர். ஒரு நாள் இவ்வதிசயத்துக்குச் சோதனை தோன்றிவிட்டது. ஆற்றங்கரையிலிருந்து வெறுங்கையுடன் – மணற்

குடமும் தண்ணீரும் இல்லாமலே – ஆச்ரமத்துக்குத் திரும்பி வந்தாள் ரேணுகாதேவி. தாங்க முடியாத மனவேதனை, வெட்கம், துக்கம்! அன்று மணலினால் குடம் அமைக்க முடியாமற் போய்விட்டது அவளுக்கு.

## சித்திரரதன்

அன்று ரேணுகாதேவி ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த போது மற்றோர் இடத்தில் சித்திரரதன் என்னும் அரசன் தன் மனைவியுடன் ஜலக்ரீடை பண்ணிக்கொண்டிருந்தான். அவனுடைய அற்புதமான தோற்றம் ரேணுகாவின் மனத்தைக் கவர்ந்தது. உறுதி குலைந்தது. ஒரு நிமிஷத்தில் நூற்றில் ஒரு பாகம்! 'இந்த அழகனைக் கணவனாகப் பெறும் பாக்கியம் பெறுமற் போனேனே!' என்னும் எண்ணம் மின்னல் வேகத்தில் தோன்றி மறைந்தது. 'சீசீ! என்ன இது? நானா இப்படி நினைக்கிறேன்? எத்தனை ஜன்மங்களில் செய்த புண்ணியமெல்லாம் ஒன்றுதிரண்டு ஜமதக்னி மகரிஷியின் தர்மபத்தினியாக இருக்கும் வாய்ப்பை எனக்கு அளித்திருக்கிறது! இதைவிடச் சிறந்த பாக்கியத்தை இவ்வுலகினில் காண்பது அரிது' என்று எண்ணித் தன் கணவருடைய பாதாரவிந்தங்களை மனத்தில் நினைத்து வணங்கிப் பிராயச்சித்தம் செய்துகொண்டாள் ரேணுகாதேவி. அனஸூயா, அருந்ததி, ஸுகன்யா முதலிய பதிவ்ரதா சிரோமணிகளை ஒரு முறை எண்ணிப் பார்த்தாள். மாறாகக் குழப்பம் நீங்கியது. மனம் தெளிவுற்றது. ஆனால்? தீர்த்தம் கொண்டு போவதற்காக வழக்கப்படி மணலில் குடம் கட்டினாள். அது உறுதியாக அமுந்தி நிற்கவில்லை. சிதறிப் போய்விட்டது.

## கொடிய தண்டனை

ஐந்து பிள்ளைகளும் ஆறாவதாகக் கணவனும் வெறுங்கையுடன் ரேணுகாதேவி வீடு திரும்புவதைப் பார்த்தனர். பெரும் அதிர்ச்சி அவர்கள் மனத்தில். இப்படி ஒரு நாளும் இவள் வந்ததே இல்லையே! இன்று என்னவோ அனர்த்தம் நடந்திருக்கிறது. 'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்பார்களே! அப்படியேதான் அவளுடைய முகமே விஷயத்தை நன்றாக எடுத்துக்காட்டுகிறது. என்ன நடந்திருக்கும்? அனைவருடைய மனத்திலும் இதே கேள்வி. ஜமதக்னி

முனிவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. மகாதபஸ்வி அல்லவா அவர்? அவருடைய ஞானக் கண்ணுக்கு எதிரில் எதையும் மூடி மறைக்க முடியாது. கடுஞ்சினம் கொண்டார். 'இவளது தலையை வெட்டித் துண்டாக்குவதே இதற்கேற்ற தண்டனை' என்று ஒரு விநாடிக்குள் முடிவு செய்துவிட்டார். பாவம்! என்ன செய்வாள், பேதை! இதைவிட எத்தனையோ மடங்கு இழிவான முறையில் ஒழுக்கம் கெட்டவர்களெல்லாம் சிறந்த உத்தமிகள் போல் நடித்துக்கொண்டு இவ்வுலகில் கம்பீரமாக ஸஞ்சரித்து வரவில்லையா? இவளென்ன அப்படியெல்லாம் ஏதாவது செய்துவிட்டாளா? ஒன்றுமில்லையே! இந்தச் சிந்தனைக்கெல்லாம் இங்கே இடமில்லை. "இவளுடைய தலையை வெட்டித் துண்டித்துவிடுங்கள்" என்று பிள்ளைகளுக்கு உத்தரவிட்டார் தந்தை ஜமதக்னி மகரிஷி.

**தர்ம சங்கடம்**

வரிசையாக ஐந்து பிள்ளைகளைப் பெற்று வைத்திருக்கிறாள் ரேணுகாதேவி. தந்தையின் ஆஜ்ஞையைக் கேட்டு அனைவரும் திகைத்துப் போயினர். தந்தை என்பதனால் ஸர்வ ஸாதாரணமான மரியாதையும் அவருக்கு உண்டு. ஏனையோர்போல அல்லாமல் அளவிட முடியாத தபஸ் சக்தியும் அவருக்கு இருக்கிறது. அவருடைய ஜ்ஞாந அநுஷ்டானங்களுக்கும் தபஸ்ஸுக்கும் ஸகல விதத்திலும் சமமானவர்களேதாம் ஐந்து பிள்ளைகளும். அவர் பார்த்துக் 'கிணற்றில் விழு' என்று சொன்னால், உடனே தயக்கமின்றி அவ்வாறே செய்துவிடுவர். அவ்வளவு பக்தி விச்வாஸம் அவர்களுக்குத் தந்தையிடம். இதுவரையில் தந்தையாரின் சொல்லை மீறி நடந்ததேயில்லை அவர்கள். ஆனால், விசித்திரமான அதிர்ச்சிகரமான கொடிய பாவத்தை அல்லவா செய்யச் சொல்கிறார் இப்போது? தாயைக் கொல்லச் சொல்கிறாரே! ஸகல தெய்வங்களிலும் சிறந்தவள் அன்னை. அவளைக் கொல்லுவதா? இவருக்குத்தான் தபஸ்சக்தி அபரிமிதமாக உள்ளதே! அதை உபயோகித்து இவளைக் கொல்லலாமே? ஏன் நம் தலையில் இந்தக் கொடிய பாவத்தைச் சுமத்துகிறார்? சரித்திரத்தில் எங்கும் கண்டும் கேட்டும் அறியாத இந்த இழிவான செயலை 'இவர் சொல்கிறார்' என்னும் காரணத்தினால் எப்படிச் செய்வது? பிள்ளைகள் இதைச்

செய்யத் துணியவில்லை. உத்தரவுப்படி நடக்காவிட்டால் பயங்கரமான சாபம் தொடர்ந்து வரும் என்பது அவர்களுக்குத் தெரியாமலில்லை. தாய்ப் பாசம் என்பது எல்லாப் பிராணிகளுக்கும் பொதுவானது அல்லவா? அது வென்றுவிட்டது. பிள்ளைகள் இதைச் செய்ய மறுத்து விட்டனர்.

## கோபக் கனல்

ஜமதக்னி முனிவருக்குக் கோபம் பொங்கி எழுந்தது. கோபம் தலைக்கு ஏறிவிட்டால், 'இது செய்யக் கூடியது. இது செய்யத் தகாதது' என்னும் விவேகம் பறந்தோடிப் போய் விடும். அவரால் இந்த அடங்காப் பிடாரிகளை ஸஹிக்க முடியவில்லை. கடுஞ்சினத்துடன் மீண்டும் இதே உத்தரவையிட்டார் பிள்ளைகளுக்கு. வரிசையாகப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுச் சொன்னார். மூத்த குமாரன் ருமண்வான். "ருமண்வான்! உன் அன்னையின் தலையை வெட்டு" என்றார். அவன் கீழ்ப்படியவில்லை. "மனிதத்தன்மையை இழந்து விலங்குகளின் இயல்பை நீ அடைய வேண்டும்" என்னும் சாபம் அவன் தலையில் விழுந்தது. அடுத்தவன் ஸுஷேணன். அவனும் இதே கதியை அடைந்தான். தாயைக் கொல்லத் துணியவில்லை. அடுத்தவன் வஸு, நாலாமவன் விச்வாவஸு, இவர்களும் தந்தையாரின் சொல்லை மதிக்கவில்லை. அதே சாபம் அவர்களையும் தொடர்ந்து விழுந்தது. மின்னல் வேகத்தில் இதெல்லாம் நடந்து முடிந்தது.

## செல்லப்பிள்ளை

ஐந்தாவது பிள்ளை பரசுராமர், மிகவும் செல்லமாய் வளர்ந்தவர். பிரமித்துப் போய், நடப்பதையெல்லாம் கண்கூடாகக் கண்டவாறு நின்றுகொண்டிருக்கிறார். தொடர்ந்து தந்தையாரின் ஆஜ்ஞை பிறந்தது. "ராமா! இந்தா உன் தாயின் தலையை வெட்டு" என்றார் ஜமதக்னி மகரிஷி. உடனே ரேணுகாதேவியின் தலை துண்டிக்கப்பட்டு விழுந்தது. ஜமதக்னி முனிவருக்கு திருப்தி உண்டாயிற்று. "ராமா! நீ என்ன வேண்டுமானாலும் கேள், தருகிறேன்" என்றார் அவர். "எனக்கு அம்மாதான் வேண்டும். அவள்

உயிர் பெற்றெழ வேண்டும். தன் தலை வெட்டப்பட்டதும் மீண்டும் ஒட்ட வைக்கப்பட்டதும் அவளுக்கு ஞாபகத்தில் இருக்கக்கூடாது. இதை அறவே மறந்து முன்போலவே ஸஹஜமாய் அவள் இருக்க வேண்டும். மிகக் கொடிய பாதகத்தை அவள் கண்முன் நான் செய்தேன். இனி என்னைப் பார்க்கும்போதெல்லாம் 'நம் தலையை வெட்டின பிள்ளை இவன்' என்று அவள் மனத்தில் தோன்றிக்கொண்டே இருக்குமல்லவா? இது கூடவே கூடாது. இந்த விஷயம் நடந்ததாகவே அவள் மனம் உணராமல் அறவே மறந்துவிட வேண்டும். என் மூத்த ஸஹோதரர்கள் நால்வரும் சாபம் நீங்கிப் பழைய நிலையை எய்த வேண்டும்" என்று வெகு வேகமாக வரம் வேண்டினார் பரசுராமர். அவ்வாறே வரம் அருளப்பெற்றது. வென்றவர் யார்? தந்தையா? மகனா? இவ்வளவு சமயோசித புத்தி இவருக்குத்தான் இருந்தது. இவருடைய அண்ணன்மார்கள் நால்வருக்கும் இல்லை. ஸ்ரீமகாவிஷ்ணுவின் அவதாரம் அல்லவா? மிகவும் சிக்கலான பிரச்னையை எளிதாகத் தீர்த்துவிட்டார்.

அடுத்த (தசாவதாரங்களில் ஏழாவது) அவதாரத்தில் தசரத சக்ரவர்த்திக்குத் திருமகனாக அவதரித்தபோதும் இப்படியேதான் பல தர்மசங்கடங்களை அலக்ஷ்யமாகத் தீர்த்துவிட்டார். பித்ருவாக்கிய பரிபாலனமே பிறவியின் குறிக்கோளாக அமைந்தது அந்த அவதாரத்திலும். கௌஸல்யை குறுக்கிட்டு, "தசரதரின் (தந்தையின்) சொல்லைக் கேளாதே. காட்டுக்குப் போகக்கூடாது. தந்தையிலும் தாய் உயர்ந்தவள் அல்லவா?" என்று சொன்னாள். இராமன் பதில் இதற்கு - "மகனுக்குத் தாய் முதல் தெய்வம். அவ்வாறேதான் பதிவிரதைகளுக்குக் கணவன் முதல் தெய்வம். உன் கணவருடைய ஆஜ்ஞைக்கு மாறாக உத்தரவிடும் உரிமை உனக்குக் கிடையாது. அதனால் இவ் விஷயத்தில் உன் சொல்லை நான் கேட்க மாட்டேன்" என்பதாகும். ராவண ஸம்ஹாரம் ஆனதும நான்முகன் முதலாக ஸகல தேவர்களும் இலங்கைக்கு வந்தபோது தசரதரும் வந்து, வேண்டிய வரமருள்வதாகக் கூறியபோது, "கைகேயியும் பரதனும் உங்களுடைய கொடிய சாபத்திலிருந்து விடுபட வேண்டும்" என்பதே ராமனுடைய வரமாக அமைந்தது. இதெல்லாம் முந்திய அவதாரமான பரசுராமனிடமும்

இருந்தமையின் அடுத்த அவதாரத்திலும் தொடர்ந்து வந்திருப்பது பொருத்தமே.

## தோல்வியே வெற்றி

'ஸர்வத்ர ஜயம் அந்விச்சேத், புத்ராதிச்சேத் பராஜயம்' என்பது பழமொழி. 'வெற்றியையே எங்கும் தேடிப் பெற வேண்டும். ஆனால் பிள்ளையிடம் தோல்வியையே விரும்பிப் பெற வேண்டும்' என்பது கருத்து. ஜமதக்னி மகரிஷி கோபாவேசத்தினால் இவ்வாறான பயங்கர நிகழ்ச்சிகளை நடத்திவிட்டார். அதனால் அவரது சேமிப்பான தபோபலம் பெரிதும் குன்றிப்போய்விட்டது. அதுதான் கைகண்ட பயன். ரேணுகா தேவிக்கோ அவளுடைய புதல்வர்களுக்கோ யாதொரு தீங்கும் நேரவில்லை. தமது புத்திசாதுரியத்தினால் பரசுராமர் சிறுவயதிலேயே இவ்வாறான முடிவைத் திட்டமிட்டு நடத்திவைத்துவிட்டார். இதன் எதிரொலியும் சாதாரணமாக இல்லை. ஜமதக்னி முனிவரின் உள்ளம் மிகவும் நொந்துபோய் விட்டது. கோபத்துக்கு அடிமைப்பட்டுத்தானே இப்படியெல்லாம் செய்துவிட்டார் அவர்? "இனி என்னை விட்டுக் கோபம் அறவே விலகிவிட வேண்டும்" என்று ஸங்கல்பம் செய்து கொண்டார் அவர். இதே காரணத்தால் கார்த்தவீர்யார்ஜுனனுடைய பிள்ளைகளால் எளிதாகக் கொல்லப்பட்டு மடிந்துபோனார்! ரிக்வேதம், யஜுர்வேதம், அதர்வவேதம் முதலியவை இவருடைய அருமை பெருமைகளைப் பலவாறாகப் பேசுகின்றன. தம் தாய் மாமனாகிய விச்வாமித்ரருடன் தோளோடு தோளாக நின்று பற்பல அரிய சாதனைகளைப் புரிந்திருக்கிறார் இவர். இவையெல்லாம் வேதங்களில் பரவலாக இடம்பெற்றுள்ளன. "க்ஷாத்திர குணமுள்ள பிராம்மணப் பிள்ளையே உனக்குப் பிறக்கும்" என்னும் ப்ருகு மகரிஷியின் வாக்கை ஸத்தியவதீ (ஜமதக்னி முனிவரின் தாய்) மாற்றிவிட்டாள். "என் பிள்ளை க்ஷாத்திர குணமுடையவனாக இருக்கக்கூடாது. என் பேரன் அவ்வாறாக இருக்கட்டும்" என்று வேண்டிக்கொண்டாள் அவள். ப்ருகு முனிவரும் இதற்கு இசைந்தார். அதன் பயனாக ஜமதக்னி முனிவருக்கு அமைய வேண்டிய க்ஷாத்திர குணம் அவரைத் தாண்டி அவருடைய பிள்ளையாகிய பரசுராமருக்கு வந்தது. இதன் பயனாக

ஏற்பட்ட நிகழ்ச்சிகள் உலகப் பிரசித்தமானவை. ஸ்ரீவத்ஸகோத்ர ப்ரவர்த்தகர்களான மகரிஷிகளுள் ஐந்தாமவரான இந்த ஜமதக்னி முனிவருடைய வரலாறு மிகவும் விரிவானது. இவருடைய வேதப் பிரஸித்தியையும், கோபத்தைத் தியாகம் செய்ததன் பயனாக இவருக்கு ஏற்பட்ட விபரீதமான முடிவையும் பார்ப்போம்.

## வேதப் பிரஸித்தி

வேதங்களில் ஜமதக்னி முனிவருடைய வரலாறு விசேஷமாகப் பேசப்படுகிறது. விச்வாமித்ரரும் ஜமதக்னி முனிவரும் மாமாவும் மருமகனுமாவர். ஜமதக்னியின் ஐந்து ஆசார்யர்களில் மாமாவும் ஒருவர். அதனால் விச்வாமித்ரரிடம் ஜமதக்னி முனிவர் ஆசார்ய விச்வாஸத்துடன் இருந்தார். இருவருமே ஒரே சமயத்தில் பிருகு மகரிஷியின் அநுக்கிரகத்தினால் பிறந்தவர்கள். அதனால் மகாதேஜஸ்விகளாக இருந்ததில் என்ன அதிசயம்? இருவரும் ஒரே ஸமயத்தில் பிறந்தவர்கள். ஜமதக்னி முனிவரின் தாயாகிய ஸத்தியவதியும் அவளுடைய தாயும் மந்திரசக்தியுள்ள சருவை உண்டு கர்பம் தரித்தனர். இது திட்டமிட்டுச் செய்த செயல் ; தற்செயலாக ஏற்பட்ட கர்பமல்ல. ஆதலால் இருவரும் சில நாள் கணக்கில் முன்பின்னாகப் பிறந்தவரே. மாமாவுக்கும் மருமகனுக்கும் வயது, ஞானம், அநுஷ்டானம், தபஸ் சக்தி, ப்ரஹ்மவர்ச்சஸம், அஞ்சாநெஞ்சம், பிடிவாத குணம், பரஸ்பர ஆதரவு, அபிமானம் முதலியவை சமானமாகவே இருந்தன.

ஸுதா: (ஸுதாஸன்) என்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்குப் புரோகிதராக வஸிஷ்டர் இருந்தார். அவருடைய பிள்ளையான சக்தியும் அவ்வரசனுக்குப் புரோகிதராக இருந்தார். விச்வாமித்திரரும் அவனுக்கே புரோகிதராக இருக்க முயன்றார். இவ் விஷயமாக வஸிஷ்டருக்கும் விச்வாமித்ரருக்கும் பரஸ்பரம் பலத்த போட்டி ஏற்பட்டுவிட்டது. ஒருவரை மற்றவர் வெல்ல முயன்றார். மாமாவாகிய விச்வாமித்ர முனிவருடைய பக்ஷத்தில் ஜமதக்னி முனிவரும் சேர்ந்துகொண்டார். வஸிஷ்டருடைய குமாரர் சக்தியின் தேஜஸ்ஸினால் விச்வாமித்ரருடைய பலம் குன்றிப் போகுமாறு செய்யப்பட்டது. வாக்கு ஸ்தம்பித்துப் போய்விட்டது.

விச்வாமித்ரர் திகைத்துப் போய்விட்டார். வஸிஷ்டரும் இந்த நிலைக்குக் காரணமாக இருந்தார். தலை கவிழ்ந்து நின்றார் விச்வாமித்ரர்.

ஜமதக்னி முனிவர் பார்த்தார். மாமாவுக்கு நேர்ந்துவிட்ட அவமானத்தை அவரால் சகிக்க முடியவில்லை. விச்வாமித்ரருடைய வாயில், மறைந்து போன வாக்கைத் திரும்பவும் கொண்டு வர அவர் விரும்பினார். வேதமூர்த்தியாகிய ஸூர்யனிடமிருந்து அபூர்வமான வாக்கைக் கொண்டுவந்து விச்வாமித்ரருடைய வாயில் புகுர விட்டார். திடீரென்று விச்வாமித்ரருக்கு வாய் திறந்தது. விறுவிறுப்பான பேச்சு அவருடைய முகத்திலிருந்து கிளம்பியது. அவருடைய திகைப்பு எங்கேயோ பறந்தோடிவிட்டது. அவமானம் நீங்கியது. ஜமதக்னியை வாயாரப் புகழ்ந்து பாடினார் விச்வாமித்ரர். ரிக்வேதத்தில், மூன்றாவது மண்டலத்தில், 53–ஆம் ஸூக்தத்தில், 15–16 ஆம் மந்திரங்கள் இதை விளக்குகின்றன.

ससर्परीरमतिं बाधमाना बृहन्मिमाय जमदग्निदत्ता ।
आ सूर्यस्य दुहिता ततान श्रवो देवेष्वमृतमजुर्यम् ॥

— ரிக்வேதம், 3.53.15.

ससर्परीरभरत्तूयमेभ्योऽधिश्रवः पाञ्चजन्यासु कृष्टिषु ।
सा पक्ष्या नव्यमायुर्दधाना यां मे पलस्तिजमदग्नयो ददुः ॥

— ரிக்வேதம், 3.53.16.

இந்த மந்திரங்கள் விச்வாமித்ரரால் சொல்லப்பட்டவை. 'ஜமதக்னிகள்' என்று பன்மையில் குறிப்பிடுவது பஹுமானத்தினால் இருக்கலாம். அல்லது அவருடைய வம்சத்தார் அனைவரும் நல்ல வாக்மிகளாக இருந்து பற்பல சந்தர்ப்பங்களில் பலருக்கு இப்படிப்பட்ட உதவி செய்திருந்த வரலாற்றை நினைவில் கொண்டும் இவ்வாறு அநுஸந்தானம் செய்திருக்கலாம்.

### நரைமயிர்

ஜமதக்னியும் அவருடைய வம்சத்தவர்களும் தீர்க்காயுஷ்மான்கள். தலைமயிர் தாடி எல்லாம் வெண்மையாகவே

இருக்கும். ஒன்றுகூடக் கறுப்பு மயிர் தென்படாது. பெயருக்கேற்ப த்ரேதாக்நிகளை ஓயாமல் பூஜித்து வரும் ஜாமதக்ந்யர்களுக்கு நீண்ட ஆயுள் குறைவின்றி இருந்திருக்கிறது. ஆனால் நரைமயிர் கறுக்கும் தைலம் அவர்களுக்கு அந்தக் காலத்தில் கிடைக்கவில்லை போலும்! பாவம்! அதுவே அடையாளமாக அமைந்துவிட்டது அவர்களுக்கு. விச்வாமித்ரர் தாமே பெருமையுடன் இதைச் சொல்கிறார். 'நரைத்து வெளுத்த மயிருள்ள ஜாமதக்ந்யர்கள்' (பலஸ்தி - ஜமதக்நய: ) என்கிறார். நற்காரியங்களிலேயே ஊன்றி நிற்பவருக்கு ஆயுளில் நீண்ட காலம் கழிந்து மயிர்களெல்லாம் நரைத்துப் போனால் அதைப் பெருமையாகவே சொல்லிக்கொள்வது வழக்கம்தானே!

इदं शरीरं कृत्स्नस्य लोकस्य चरता हितम् ।
पाण्डरस्यातपत्रस्य च्छायायां जरितं मया ॥

இதம் சரீரம் க்ருத்ஸ்நஸ்ய லோகஸ்ய சரதா ஹிதம் ।
பாண்டரஸ்யாதபத்ரஸ்ய சாயாயாம் ஜரிதம் மயா ॥

— ராமாயணம், 2.2.7.

என்கிறார் தசரதர். 'நாட்டு மக்களுக்கு நன்மை செய்வதிலேயே ஊன்றிய என்னுடைய இந்த உடம்பு வெண்கொற்றக்குடையின் நிழலிலேயே அறுபதாயிரமாண்டு நிலைத்து நின்றுவிட்டது. அதனால்தான் போலும் என் மயிர் முழுதும் வெண்மையாகிவிட்டது' என்பது கருத்து. அதுபோலவே ஜமதக்னி மகரிஷியும் இருந்திருக்கிறார். தம் மருமகனாகிய ஜமதக்னியை மாமாவாகிய விச்வாமித்ரர் இவ்வாறு புகழ்ந்துரைக்கிறார். இருவரும் சம வயதினராகவே இருக்கையில், ஜமதக்னி மகரிஷிக்கு மட்டுந்தான் இந்த அடையாளப் பெயர் வழங்கியது. விச்வாமித்ரருக்கு அப்படி நரைக்கவில்லை போலும். இருந்தால் சொல்லிக்கொண்டிருக்க மாட்டாரா?

### போஷணைக் குறைவு

நல்ல புஷ்டியான ஆகாரம் உட்கொண்டால் இவ்வாறு உடல் தளர்ந்து மயிர் நரைக்காது. இந்த ஜமதக்னிக்கும் புஷ்டிக் குறைவு. இந்தக் காலத்தில் என்ன என்னவோ 'விடமின்'கள் என்றெல்லாம் சொல்கிறார்களே! அவை மிகவும் குறைவு இவருக்கு. அதனால்தான்

மயிரெல்லாம் நரைத்து விட்டது. உடலெல்லாம் தளர்ந்து போய்விட்டது. இதனால் எல்லாரும் 'நரைமயிர் ஜமதக்னி' (பலஸ்தி -ஜமதக்னி:) என்கிறார்கள். இதைத் தவிர்க்க ஒரு காரியம் செய்தார் ஜமதக்னி முனிவர். 'சதூராத்ரம்' என்னும் யாகமொன்றை அநுஷ்டித்தார். நல்ல புஷ்டியைப் பெற்றார். அதற்குப் பிறகு நரைத்த மயிர் இவருக்கு இல்லை. எல்லாம் அழகான கருநிறமாக மாறிவிட்டது. அக்காலத்தில் 'இழந்த வாலிபப் பருவத்தை மீண்டும் பெறச்செய்யும்' அற்புதச் சக்தி வாய்ந்த மருந்துகள் உபயோகிப்பதில்லை போலும். எதற்கெடுத்தாலும் யாகம்தான். 'ஜமதக்நி சதூராத்ரம்' என்பதே இந்த யாகத்துக்குப் பெயராகிவிட்டது. இப்படி, சிஷ்டாசாரத்தைக் காட்டி மற்றவர்களையும் - புஷ்டி வேண்டுமானால் - இந்த ஜமதக்நிசதூராத்ரத்தை அநுஷ்டித்துப் புஷ்டியைப் பெறலாம் என்று வேதம் அழைக்கிறது. இவருடைய பாட்டனார் ச்யவநர் அருந்திய 'ச்யவநப்ராசாவலேஹ'த்தைவிட சதூராத்ரயாகம் விரைவில் புஷ்டியைத் தந்திருக்க வேண்டும் இவருக்கு. அதனால்தான் இவர் அவ்வழியில் செல்லவில்லை. புஷ்டியைத் தரும் லேஹ்யத்தில் ச்யவநருடைய பெயர் ஒட்டிக்கொண்டாற்போல், புஷ்டியைத் தரவல்லதான சதூராத்ர யாகத்தில் ஜமதக்னியின் பெயர் ஒட்டிக்கொண்டது. 'சதூராத்ரம்' என்பதற்கு 'நான்கு நாட்களில் பண்ணவேண்டிய யாகம்' என்று பொருள்.

जमदग्निः पुष्टिकामश्चतूरात्रेणायजत स एतान्पोषाँ अपुष्यत्तस्मात् पलितौ जामदग्नियौ न संजानाते एतानेव पोषान्पुष्यति य एवं विद्वाँ-श्चतूरात्रेण यजते ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 7.1.9.

இதில் ஒரு விசேஷம்: 'ஜமதக்னி வம்சஸ்தர்கள் இருவர் ஒரே காலத்தில் நரைத்த மயிர் உள்ளவர்களாகக் காணப்பட மாட்டார்கள்' என்கிறது இந்த வேத வாக்கியம். வேத பாஷ்யகாரர் இதற்கு விளக்கம் தருகிறார் - "ஒருவர் தந்தை. மற்றொருவர் பிள்ளை. இவ்விருவரும் மயிர் நரைத்தவர்களாக ஒரே ஸமயத்தில் காணப்பட மாட்டார்கள்" என்கிறார் அவர். புஷ்டி ஸம்பிரதாயத்தைத் தோற்றுவித்தவர் ஜமதக்னிதாம். புஷ்டிக் குறைவினால்தான்

நரைக்கிறதாம். இவர் வம்சஸ்தர்கள் அனைவரும் தரித்திரராக இருக்கவே மாட்டார்கள். அதனால் மயிர் நரைக்கவே நரைக்காது. அப்படி எப்பொழுதாவது தப்பித் தவறி ஒருவன் தரித்திரனாகக் காணப்பட்டால் - நரைமயிர்க்காரனாகக் காணப்பட்டால் - அந்த நிலைமை நீடிக்காதாம். அந்த ஒருவனோடு முடிந்துவிடுமாம். அடுத்த தலைமுறையிலேயே செல்வம் குவிந்துவிடுமாம். இதற்குக் காரணம் கோத்ர ப்ரவர்த்தகரான ஜமதக்னி முனிவருடைய தேஜஸ்தான். அதனால்தான் தொடர்ந்து இருவர் (அப்பாவும் பிள்ளையும்) நரைமயிர்க்காரராக (தரித்திரராக)க் காணப்பட மாட்டார்கள் இவ்வம்சத்தில் என்கிறது வேதம். இதனால் ஜமதக்னி முனிவர் தமக்காக மட்டும் புஷ்டியை விரும்பி இந்த யாகத்தைப் பண்ணவில்லை. தமது வம்சஸ்தர்கள் அனைவருக்குமாகவே பண்ணியிருக்கிறார். அதன் பயன் இன்றளவும் தொடர்ந்து வருகிறது என்று வேதம் பிரத்தியக்ஷமாகப் பேசுகிறது. என்றைக்கோ ஒரு நாள் யாரோ ஒருவர் ஒரு காரியத்தைப் பண்ணிவிட்டால் அதன் பயன் அந்த வம்சத்தில் தொடர்ந்து வருவது ஸாத்தியமா? ஸாத்தியமே.

भुङ्क्ते भोगानविदितनृपः सेवकस्यार्भकादिः ।

புங்க்தே போகாநவிதிதந்ருப: ஸேவகஸ்யார்பகாதி: ।

என்று ஸ்ரீமத்வேதாந்ததேசிகன் அழகாக இதை நிர்வகிக்கிறார்.

மாமாவும் மருமகனும் (விச்வாமித்ரரும் ஜமதக்னியும்) ஒரே வயதினர்; இணைபிரியா நண்பர்கள். உறவுமுறை வேறு நெருக்கமானது. வஸிஷ்டருடன் இவ்விருவருக்கும் அடிக்கடி போட்டி ஏற்பட்டுவிடும். வஸிஷ்டருக்குத் தோல்வியேதான். வெற்றி இவர்களுடையதேதான். அதிலும் ஜமதக்னியின் சக்திதான் வெற்றிக்கு முக்கியமான காரணமாக அமையும். வேதங்களில் அடிக்கடி இந்த விஷயம் பேசப்படுகிறது.

विश्वामित्रजमदग्नी वसिष्ठेनास्पर्धेतां स एतज्जमदग्निर्विहव्यमपश्यत्तेन वै स वसिष्ठस्येन्द्रियं वीर्यमवृङ्क्त ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 3.1.7.3.

"விச்வாமித்ரரும் ஜமதக்னியும் வஸிஷ்டரோடு சண்டை (போட்டி) யிட்டனர். ஜமதக்னி முனிவர் 'விஹவ்யம்' என்னும்

மந்திரத்தைக் கண்டுபிடித்து உபயோகித்தார். (வஸிஷ்டருக்கு இது தெரியாது.) அதனால் வஸிஷ்டருடைய பலத்தையும் வீரியத்தையும் ஜமதக்னி அழித்துவிட்டார். வஸிஷ்டர் வீர்யமற்றவரானார்."

## அச்வினி தேவர்கள்

தேவ வைத்தியர்களான அச்வினி தேவர்களிடம் ஜமதக்னி முனிவருக்கு அஸாதாரணமான ஈடுபாடு. இவருடைய பாட்டனார் ச்யவநர்தாம் அவர்களுக்கு ஸோமயாகத்தில் பாகம் கிடைக்குமாறு செய்தார். அவர்களும் ச்யவநருடைய கிழத்தனம் நீங்குமாறு செய்தனர். அவரை நித்யயுவாவாகச் செய்துவிட்டனர். இந்த உறவு ஸ்ரீவத்ஸ கோத்திரத்தார் அனைவரிடமும் தொடர்ந்து வந்துள்ளது. ஜமதக்னி முனிவருக்குத்தான் அச்வினி தேவர்களைத் துதிப்பதில் எவ்வளவு ஆர்வம்! அவர்களுக்கும் ஜமதக்னியின் ஸ்தோத்திரத்தில் நிகரற்ற ஆனந்தம். இப்படியே நெடுநாள் தொடர்ந்து நடந்து வந்ததனால் இது மிக மிகப் பிரசித்தமாகிவிட்டது. அச்வினி தேவர்களைத் துதிக்க விரும்புகிறவர்கள் எல்லாரும் இதை வழக்கமாகச் சொல்ல ஆரம்பித்துவிட்டனர். "அச்வினி தேவர்களே! இந்த ஸோமயாகத்தில் நீங்களும் வந்து ஸோமரஸத்தைப் பருகுங்கள். ஜமதக்னி முனிவர் உங்களை ஸ்தோத்திரம் செய்வார்" என்கிறது ஒரு மந்த்ரம்.

गृणाना जमदग्निना योनावृतस्य सीदतम् ।
पातं सोममृतावृधा ॥

— ரிக்வேதம், 3.62.18.

தெய்வங்களை யாகத்தில் அழைக்கும்போது, 'உங்களுக்கு இஷ்டமான விஷயம் இங்கே கிடைக்கும்' என்று சொல்வது இயல்பு. அச்வினி தேவர்கள் விஷயத்தில் ஜமதக்னி முனிவருடைய ஸ்தோத்திரம் அவ்வாறு எடுத்துக் காட்டப்படுகிறது. 'க்ருணாநா ஜமதக்நிவத்' என்னும் வார்த்தைகள் அச்வினி தேவர்களுடைய ஸூக்தங்களில் பலகாலும் வருகின்றன. அவற்றுக்கு ஜமதக்னி முனிவரே ரிஷி. ஸோமதைவத்யமான ஸூக்தங்களிலும், ஸரஸ்வதியைப் பற்றின ஸூக்தங்களிலுங்கூட இந்தச் சொற்றொடர் அடிக்கடி வருகிறது.

'ப்ரஜ்வலிதாக்நிநா மஹர்ஷிணு' என்று, 'ஜமதக்நிநா' என்னும் சொல்லுக்கு வேதபாஷ்யகாரர் உரையிடுகிறுர். "அக்கினிகள் எப்பொழுதும் ஜ்வலித்துக்கொண்டே இருக்குமாறு உள்ள மகரிஷியிஞல்" என்று பொருள்.

भद्रमिद्भद्रा कृणवत्सरस्वत्यकवारी चेतति वाजिनीवती ।
गृणाना जमदग्निवत् स्तुवाना च वसिष्ठवत् ॥

— ரிக்வேதம், 7.96.3.

இது ஸரஸ்வதி ஸ்தோத்திரம். இதிலும் இந்தச் சொற்கள் உள்ளன.

उत नो गोमतीरिषो विश्वा अर्ष परिष्टुभः ।
गृणानो जमदग्ना ॥

— ரிக்வேதம், 9.62.24.

पचते हर्यतो हरिर्गृणानो जमदग्निना ।
हिन्वानो गोरधि त्वचि ॥

— ரிக்வேதம், 9.65.25.

अभी नो अर्ष दिव्या वसून्यभि विश्वा पार्थिवा पूयमानः ।
अभि येन द्रविणमश्नवामाभ्यार्षेयं जमदग्निवन्नः ॥

— ரிக்வேதம், 9.97.51.

இம்மூன்றும் ஸோமனைப் பற்றிய மந்திரங்கள். இவற்றிலும் ஜமதக்னியின் பெயர் பெருமையுடன் ஓதப்படுவதைக் காணீர்.

ரிக்வேதம், பத்தாவது மண்டலம், 110 ஆம் ஸூக்தம் ஜமதக்னி முனிவருடையது. அக்கினியை அழைப்பதற்காக ஏற்பட்டது இந்த ஸூக்தம். வெகு அழகாக அக்கினி இதில் புகழப்படுகிறுன். 'ஸமித்தோ அத்ய' என்று தொடங்கும் இந்த ஸூக்தம் பதினெரு மந்திரங்கள் கொண்டது.

## ஜலமந்த்ரம்

உதகசாந்தி முதலியவற்றைச் செய்யும்போது வேத மந்திரங்களை அந்தணர் பலர் ஒன்றுகூடி உரக்க ஓதுவர். ஜபம் முடிந்தவுடன் கும்பதீர்த்தத்தைச் சிறிதளவு வேறு பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொண்டு, மீதியால் யஜமானனுக்கு அபிஷேகம்

செய்து வைப்பார்கள். பிறகு வேறு வேஷ்டி, சேலை உடுத்துக்கொண்டு வந்ததும், ஏற்கனவே எடுத்து வைத்திருந்த ஜலத்தைச் சாப்பிட வேண்டும். ஒரு மந்திரம் சொல்லி இதைத் தருவது வழக்கம். அந்த மந்திரம் ஜமதக்னி முனிவரால் கண்டுபிடிக்கப்பட்டு வழங்கப்பட்டதாம். இன்று உலகம் முழுவதும் அனைவருக்கும் மிக மிக முக்கியமான மந்திரமாகிவிட்டது இது. விச்வாமித்ரர் கண்டுபிடித்த (காயத்ரீ) ஸாவித்ரீ அன்றும் இன்றும் என்றும் அந்தணர்களுக்கு இன்றியமையாததாகி விடவில்லையா? அப்படியேதான் அவருடைய மருமகனை ஜமதக்னியின் கண்டுபிடிப்பான மந்திரமும் ஆகிவிட்டது. ரிக்வேதம், பத்தாவது மண்டலம், 137 ஆம் ஸூக்தத்தில் ஆறாவது மந்திரம் இது. 'உத தேவா:' என்று தொடங்கும் இந்த ஸூக்தத்தில் ஏழு மந்திரங்களே உள்ளன. இது ஒரு விசித்திரமான ஸூக்தம். இதிலுள்ள ஏழு மந்திரங்களும் ஒருவராலேயே கண்டுபிடிக்கப்பட்டவை அல்ல. ஏழு ரிஷிகளால் காணப்பட்டவை இவை. அதாவது இந்த ஸூக்தத்துக்கு ரிஷிகள் எழுவர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு மந்திரத்தைக் கண்டனர். எல்லாவற்றையும் ஒன்றுகூட்டி ஒரு ஸூக்தமாகப் பண்ணினர். அந்த ஏழு பேர்களுள் ஜமதக்னியும் ஒருவர். 1. பரத்வாஜர், 2.கச்யபர், 3.கோதமர், 4.அத்ரி, 5.விச்வாமித்ரர், 6.ஜமதக்னி, 7.வஸிஷ்டர் என்னும் வரிசையில் ஆறாவது ஜமதக்னி. ஆறாவது மந்திரம் இவர் கண்டுபிடித்தது.

आप इद्वा उ भेषजीः, आपो अमीवचातनीः ।
आपस्सर्वस्य भेषजीः, तास्ते कृण्वन्तु भेषजम् ॥

— ரிக்வேதம், 10.137.6.

"ஜலமே மருந்து; வியாதிகளைப் போக்க வல்லது. எல்லாவற்றுக்கும் மருந்து ஜலமேதான். அப்படிப்பட்ட ஜலம் உனக்கு மருந்தாக இருந்து ஸகல ஸௌக்கியங்களையும் கொடுக்கட்டும்" என்பது கருத்து.

இதில் ஒவ்வொரு மந்திரம் ஒவ்வொருவரால் காணப்பட்டது. வேறோர் இடத்தில் ஒரே மந்த்ரம் இரண்டு ரிஷிகளால் காணப்பட்டது

प्रसूतो भक्षमकरं चरावपि स्तोमं चेमं प्रथमस्सूरिरुन्मृजे ।
सुते सातेन यद्यागमं वां प्रति विश्वामित्रजमदग्नी दमे ॥

— ரிக்வேதம், 10.167.4.

விச்வாமித்ரரும் ஜமதக்னியும் இதற்கு ரிஷிகளாம். ஜமதக்னியையும் விச்வாமித்ரரையும் பார்த்து இந்திரன் சொல்லும் வார்த்தையாக இந்த மந்திரம் அமைந்துள்ளது.

### ப்ரஹ்மஜ்ஞாநீ

தைத்திரீயாரண்யகத்தில் (1.9) இரண்டு மந்த்ரங்கள் ஜமதக்னியின் ப்ரஹ்மஜ்ஞாநத்தின் பெருமையைப் பேசுகின்றன.

यदक्षरं भूतकृतम् । विश्वेदेवा उपासते ।
महर्षिमस्य गोप्तारम् । जमदग्निमकुर्वत ॥

"பஞ்சபூத வடிவமானதும் அழிவற்றதுமான பரப்ரஹ்மத்தைத் தியானம் செய்யும் தேவர்கள் அனைவரும், அந்த ப்ரஹ்மத்தின் காப்பாளராக (நன்கறிந்து மானிடர்களுக்கு உபதேசிப்பதற்காக) ஜமதக்னி முனிவரைத் தெரிந்தெடுத்தனர்" என்பது கருத்து.

जमदग्निराप्यायते । छन्दोभिश्चतुरुत्तरैः ।
राज्ञस्सोमस्य तृप्तासः । ब्रह्मणा वीर्यावता ॥

"ஜமதக்னி முனிவர் சிறந்த மந்திரங்களை உபதேசித்து மக்களை வாழ்விக்கிறார். அவர்களும் வீரியமுள்ள மந்திரங்களால் ஸோமயாகம் முதலிய யாகங்களைப் பண்ணி நற்கதியடைகின்றனர்" என்பது கருத்து.

### வட நாட்டவர்

அக்நிசயநத்தில் இஷ்டகைகளை (மண்கட்டிகளை)க் கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு திசைகளில் கிரமமாக வைக்க வேண்டும். ஒவ்வொரு திசையிலும் ஒவ்வொரு ரிஷியும் கூறப்படுகிறார். வடதிசைக்கு ஜமதக்னிதாம் ரிஷி.

इदमुत्तरात्सुवस्तस्य श्रोत्रँ सौवँ शरच्छ्रौत्र्यनुष्टुप्छारद्यनुष्टुभस्स्वारँ स्वारान्मंथी मंथिन एकविँश एकविँशाद्वैराजं वैराजाज्जमदग्निर् ऋषिः ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.3.2.2.

या उदीचीस्ताभिर्जमदग्निः ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.2.10.5.

இந்த வேத வாக்கியங்கள் வடதிசைக்காரர் ஜமதக்னி முனிவர் என்பதை உணர்த்துகின்றன. அதனால்தான் போலும் தாங்க முடியாத குளிரைத் தவிர்ப்பதற்காகவும் இவர் இடையருமல் அக்கினிகளை எரிய விட்டுக்கொண்டே இருந்திருக்கிறார்!

## பூச்சிக் கொல்லி

பூச்சிகளை அழிக்கும் திறமை சில முனிவர்களுக்கு இருந்திருக்கிறது. அத்ரி, கண்வர், ஜமதக்னி, அகஸ்தியர் இவர்கள் இதில் பெயர் பெற்றவர்கள். பூச்சிகளைப் பார்த்து ஒரு மந்திரம் இவ்வாறு சொல்லுகிறது - "ஏ பூச்சிகளே! உங்களை அத்ரி முனிவர் காட்டிய வழியில் கொன்று விடுவேன். மற்றும் கண்வர், ஜமதக்னி இவர்கள் காட்டிய முறையிலும் கொன்றுவிடுவேன். அகஸ்தியர் உபதேசித்த மந்திரத்தின் சக்தியினுலும் பூச்சிகளை நசுக்கி விடுவேன்."

अत्रिवद्वः क्रिमयो हन्मि कण्ववज्जमदग्निवत् ।
अगस्त्यस्य ब्रह्मणा संपिनष्म्यहं क्रिमीन् ॥

— அதர்வ வேதம், 2.32.3; 5.23.10.

अत्रिणा त्वा क्रिमे हन्मि कण्वेन जमदग्निना ॥

— தைத்திரீய ஆரண்யகம், 4.36.1.

பூச்சிகளை ஒழித்து ஆரோக்கியத்தைக் காக்கும் பணியில் ஜமதக்னி முனிவரும் இவருடைய ஸகாக்களும் சிறப்பான வழியைக் கண்டுபிடித்திருக்க வேண்டும். அது அக்காலத்திய மக்களால் தாராளமாக உபயோகிக்கப்பட்டிருக்க வேண்டும். அதனுல்தான் மிகமிகப் பிரஸித்தமாக வேதங்களில் கூறப்பட்டுள்ளது.

त्र्यायुषं जमदग्नेः कश्यपस्य त्र्यायुषम् ।

— அதர்வ வேதம், 5.28.7.

என்னும் மந்திரம், நீண்ட ஆயுளைப் பெறுவதற்காக ஜமதக்னியின் அருள் வேண்டும் என்கிறது. உபநயன காலத்தில் அனைவராலும் இந்த மந்திரம் ஓதப்படுகிறது.

**கேசவர்த்தநீ**

இப்பொழுதெல்லாம் பிரமாதமாக விளம்பரங்கள் காணப்படுகின்றன இந்தப் பெயருடன். அந்நாட்களில் ஜமதக்னி முனிவர்தாம் இதைத் தோற்றுவித்தவர். தாம் உபயோகித்து நரைமயிர் கறுப்பாகும்படி செய்துகொண்டது மட்டுமல்லாமல் வீதஹவ்யர் என்னும் ரிஷிக்கும் இந்த முறையை உபயோகித்து நிறையக் கூந்தல் வளரும்படி செய்தாராம் ஜமதக்னி முனிவர். ஓர் ஓஷதியைத் தோண்டி எடுத்து இதை எல்லாம் அதன் சாரத்தினால் செய்தாராம் அவர். அதர்வ வேதத்தில் ஒரு மந்திரம் இதைச் சொல்லுகிறது. முதலில் தம் பெண்ணுக்குத்தான் இதை உபயோகித்தாராம்.

यां जमदग्निरखनद् दुहित्रे केशवर्धनीम् ।
तां वीतहव्य आभरद् असितस्य गृहेभ्यः ॥

— அதர்வ வேதம், 6.137.1.

அந்த ஓஷதியின் பெயர், வடிவம் முதலியன வேதத்தில் தெளிவாகக் கூறப்படவில்லை. காலக்கிரமத்தில் இது மறந்தே போய்விட்டது. ஆனால் வேதம் மட்டும் என்றோ நடந்ததை மறவாமல் ஓதிக்கொண்டேயிருக்கிறது. பிரசித்தமான முனிவர்கள் பலரையும் வணங்கி வேண்டிக்கொள்ளும் மந்திரங்கள் இரண்டு அதர்வ வேதத்தில் உள்ளன. அவற்றில் ஜமதக்னியும் இடம் பெற்றுள்ளார்.

कण्वः कक्षीवान् पुरुमीढो अगस्त्यः श्यावाश्वः सोभर्यर्चनानाः ।
विश्वामित्रोऽयं जमदग्निरत्रिरवन्तु नः कश्यपो वामदेवः ॥

— அதர்வ வேதம், 18.3.15.

विश्वामित्र जमदग्ने वसिष्ठ भरद्वाज गोतम वामदेव ।
शर्दिर्नो अत्रिरग्रभीन्नमोभिः सुसंशासः पितरो मृडता नः ॥

— அதர்வ வேதம், 18.3.16.

இவருடைய வேதப் புகழ் எல்லையற்றது. இவ்வளவில் இப்போது இதை நிறுத்திக்கொள்வோம்.

## கீரிப்பிள்ளை

ஜமதக்னி முனிவர் தம் பித்ருக்களுக்கு ச்ராத்தம் செய்ய ஆரம்பித்தார். ஹோமத்துக்காகப் பால் முதலியன வேண்டுமே. அதற்காகவே ஏற்பட்ட பசு வந்து நின்றது. குடம் நிறையப் பாலைக் கறந்து வைத்தார் ஜமதக்னி முனிவர். க்ரோதம் (சினம்) என்னும் தீய குணம் (ஒரு மானிட வடிவம் கொண்டு) அந்தப் பாற்குடத்தை உருட்டிவிட்டது. ஏன்? ஜமதக்னி முனிவரின் பொறுமையைச் சோதிப்பதற்காகத்தான். அவர் கோபம் கொள்ளவே இல்லை. "பித்ருக்களுக்காகவே இந்தப் பால் கறந்து வைக்கப்பட்டது. அதை நீ உருட்டியதனால் அவர்களிடத்தில்தான் நீ அபசாரப்பட்டாய். எனக்கு ஒன்றும் உன்மேல் கோபமில்லை. அவர்களிடமே போய் மன்னிப்புக் கேள்" என்றார் அவர்.

"நீ கீரிப்பிள்ளையாகப் போக வேண்டும்" என்று பித்ருக்கள் சாபமிட்டனர். "சாபத்துக்கு ஒரு முடிவு வைக்க வேண்டும்" என்று க்ரோதம் வேண்டிக்கொண்டது. "தர்மபுத்திரர் பண்ணும் ராஜஸூய யாகத்தில் சென்றால் சாபம் தீரும்" என்றனர் பித்ருக்கள். அதற்காக நெடுங்காலம் கீரிப்பிள்ளையாகவே தொடர்ந்து இருந்து, தர்மபுத்திரர் அவதரித்து ராஜஸூய யாகம் பண்ணும்போது வந்து தனது சாபத்தைத் தீர்த்துக்கொண்டு பழைய வடிவம் பெற்றது க்ரோதம். என்ன நடந்தாலும் கோபிக்காமல் எல்லைகடந்து பொறுமையுடனே இருக்க வேண்டும் என்னும் உறுதியான கொள்கையை ஜமதக்னி முனிவர் கடைப்பிடித்ததை இந்தக் கதை எடுத்துக்காட்டுகிறது.

## பொன்மேனி

தனது நீண்ட ஆயுளில் அந்தக் கீரிப்பிள்ளை ஒரு நாள் குருக்ஷேத்திரத்தில் ஓர் இடத்தில் ஓர் ஏழையின் இருப்பிடத்தில் வந்து எச்சிலில் விழுந்து புரண்டதாம். உடனே அதன் உடம்பில்

பாதி பொன்மயமாகிவிட்டதாம். மற்ெறாரு பாதி உடம்பும் பொன்மயமாகிவிட்டால், எவ்வளவு அழகாக இருக்கும்! இந்த ஆசையினால், நாடெங்கும் பெரிய பெரிய ஸமாராதனைகள் நடக்கும் இடங்களுக்கு ஓடோடியும் வந்து எச்சிலிலைகளைப் போடும் இடங்களில் அது விழுந்து புரளுவது வழக்கமாம். ஆனால் அதன் ஆசை ஈடேறவில்லை. தர்மபுத்திரருடைய யாகத்திலும் இதே நிகழ்ச்சி நடந்தது. கீரிப்பிள்ளையின் ஆசை நிறைவேறவில்லை. அதுவே சொல்லிற்று தன் வரலாற்றை. குருக்ஷேத்திரத்தில் நடந்த வரலாற்றையும் அதுதான் சொல்லிற்று.

பரம ஏழையாகிய ஓர் அந்தணன் தன் குடும்பத்துடன் பல நாள் பட்டினியாகக் கிடந்தான். பெருமுயற்சியால் ஒரு படி தானியத்தைச் சேகரித்து அதை மாவாக அரைத்து நாலுபேர் உள்ள குடும்பத்தினருக்குச் சமபாகமாகப் பண்ணி உண்ண ஆரம்பித்தபோது ஒரு விருந்தினர் வந்தார். பசி என்பது பிராணிகளில் யாவருக்கும் ஒரே விதம்தானே! ஆனாலும் 'அதிதி' என்று ஒரு மரியாதை இருக்கிறதே. பிரத்தியக்ஷ தெய்வமே அல்லவா அதிதி? அந்தணன் தன் பாகம் முழுவதையும் விருந்தினருக்குத் தந்துவிட்டான். ஆனால் அதிதியின் பசி தீரவில்லை. குடும்பத்தினர் ஒவ்வொருவரும் முறையே தத்தம் பாகத்தை அளித்தனர். அதிதியின் பசி தீர்ந்தது. அந்த நால்வரும் அந்த க்ஷணத்திலேயே ஸ்வர்க்க லோகம் சென்றனர். அந்த இடத்தில்தான் கீரிப்பிள்ளை சென்றது. கீழே சிதறிக் கிடந்த மாவுத் துளிகளை நக்கித் தின்றது. அதில் விழுந்து புரண்டது. உடனே பாதி உடம்பு பொன்னாக மாறியது அதற்கு.

"தர்மபுத்திரரே! உமது ராஜஸூய யாகம் மிக மிக உயர்ந்ததுதான். ஆனால் குருக்ஷேத்திரத்தில் ஓர் அந்தணன் கொடுத்த ஒரு படி அரிசி மாவுக்கு ஈடாகாது இந்த யாகம்" என்று தன் பிரத்தியக்ஷ அநுபவத்திலிருந்து தீர்ப்புக் கூறியதுடன் தன் சாபத்தையும் தீர்த்துக்கொண்டது கீரி. அது சொன்ன ச்லோகம் –

सक्तुप्रस्थेन वो नायं यज्ञस्तुल्यो नराधिपाः ।
उञ्छवृत्तेर्वदान्यस्य कुरुक्षेत्रनिवासिनः ॥

ஸக்துப்ரஸ்தேந வோ நாயம் யஜ்ஞஸ் துல்யோ நராதிபா: ।
உஞ்சவ்ருத்தேர் வதாந்யஸ்ய குருக்ஷேத்ரநிவாஸிந: ॥

— மகாபாரதம், 14.92.7.

## குடையும் செருப்பும்

விசேஷமான புண்ணிய காலங்களில் பல வகையான தானங்கள் செய்பவர்கள் குடையும் செருப்பும் கொடுப்பது வழக்கம். கல்யாண மாப்பிள்ளையின் பரதேச ஊர்வலத்தில்கூட இதைக் காணலாம். பண்டை நாட்களில் ஜமதக்னி முனிவர்தாம் இந்த ஸம்பிரதாயத்தைத் தோற்றுவித்தவர். வில்லில் நாணேற்றி அம்புகளை விடுவதில் இவருக்கு ஆசை அதிகம். ஒரு நாள் நெடுநேரம் இதையே செய்துகொண்டிருந்தார். இவர் விடும் அம்புகளை இவருடைய தர்ம பத்தினி ரேணுகாதேவி எடுத்துக் கொண்டு வந்து கொடுப்பாள். மீண்டும் மீண்டும் இவர் அம்புகளை எய்தவாறே இருந்தார். மத்தியான்ன வேளை. கடும் வெயில். தரையில் காலை வைக்க முடியவில்லை. ஆனாலும் பதிவ்ரதாசிரோமணியான ரேணுகாதேவி பக்தி சிரத்தையுடன் தன் பணியைச் செய்தாள். ஒரு சமயம் சற்று தாமதமாகிவிட்டது. ஜமதக்னி முனிவர், "என்ன காரணம்?" என்று கேட்டார். "வெயிலின் கொடுமை தாங்கவில்லை. மரநிழலில் சற்றே நின்று, பிறகு வந்தேன். அதனால்தான் தாமதம்" என்றாள் ரேணுகா.

## ஸம்வாதம்

ஜமதக்னி முனிவர் சூரியன் மேல் கடுஞ்சினம் கொண்டார்; தம் அம்புகளை விட்டார். உடனே சூரியன் ஓர் அந்தண வடிவத்துடன் முனிவருக்கு எதிரில் தோன்றினான். தன்னை அம்புகளால் அடிக்காமல் இருக்கும்படி வேண்டினான். அதற்காக ஜமதக்னி முனிவரிடம் சரணாகதி பண்ணினான். சரணாகதி உடனே பலித்தது. முனிவர் அம்புகளை விடுவதை நிறுத்தினார். சற்று முன்பு இவருக்கு அவனிடம் ஏற்பட்டிருந்த கோபம் சரணாகதியினால் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. சரணாகதியின் மகிமைதான் என்னே! ஜமதக்னி முனிவரே இந்த ஸந்தர்ப்பத்தில் இதை விளக்குகிறார்; "அந்தணர்களிடம் இயற்கையாகவே நேர்மை இடம் பெற்றிருக்கும். அவ்வாறே பூமியில் ஸ்திரத்தன்மை, சந்திரனில் அழகு, கடலில் ஆழம், நெருப்பில் எரிதல், மேருமலையில் ஒளி, சூரியனில் சுடுதல் இவை இயல்பாகவே பொருந்தியுள்ளன. இவற்றை மாற்றவே

முடியாது. அப்படியே அடைக்கலம் புகுந்தவனைக் காப்பாற்றாமல் கொல்லுவதும் சாத்தியமில்லாத காரியம்" என்கிறார். மணியான இரண்டு ச்லோகங்கள் —

ब्राह्मणेष्वार्जवं यच्च स्थैर्यं च धरणीतले ।
सौम्यतां चैव सोमस्य गांभीर्यं वरुणस्य च ॥
दीप्तिमग्नेः प्रभां मेरोः प्रतापं तपनस्य च ।
एतान्यतिक्रमेद् यो वै स हन्याच्छरणागतम् ॥

*ப்ராஹ்மணேஷ்வார்ஜவம் யச்ச ஸ்தைர்யம் ச தரணீதலே ।*
*ஸௌம்யதாம் சைவ ஸோமஸ்ய காம்பீர்யம் வருணஸ்ய ச ॥*
*தீப்திமக்நே: ப்ரபாம் மேரோ: ப்ரதாபம் தபநஸ்ய ச ।*
*ஏதாந்யதிக்ரமேத் யோ வை ஸ ஹந்யாத் சரணாகதம் ॥*

— மகாபாரதம், 13.98.9,10.

சூரியனுக்கு சந்தோஷம் உண்டாயிற்று. இரண்டு செருப்புகளையும் ஒரு குடையையும் அவன் முனிவருக்குக் கொடுத்தான். "இனி அம்புகளை எடுத்து வரச் செல்லும் போது ரேணுகா இவற்றை உபயோகித்துக் கொள்ளட்டும். வெயிலின் கடுமை தெரியாது" என்று சூரியன் சொன்னான். சூரியன் தன் கையாலேயே குடையும் செருப்பும் கொடுத்ததுடன், 'வருங்காலத்தில் இப்படிக் கொடுப்பவர்கள் பெரும் அளவில் புண்ணியம் அடைவார்கள்' என்றும் சொன்னான்.

अद्यप्रभृति चैवैतल्लोके संप्रचरिष्यति ।
पुण्यदानेषु सर्वेषु परमक्षय्यमेव च ॥

*அத்யப்ரப்ருதி சைவைதல் லோகே ஸம்ப்ரசரிஷ்யதி ।*
*புண்யதாநேஷு ஸர்வேஷு பரமக்ஷய்யமேவ ச ॥*

— மகாபாரதம், 13.98.15.

## சபதம்

சபதம் செய்யும் வழக்கம் தொன்றுதொட்டு நமது பாரத புண்ணியபூமியில் இருந்து வருகிறது. ராமாயணத்தில், "ராமன் காட்டுக்குப் போவது உனக்கு இஷ்டம்தானே?" என்று கௌஸல்யை

பரதனைக் கேட்டதற்கு, பரதன் பலவாறாக ஆணையிட்டுக் கூறியவை மிகவும் உருக்கமான நன்மொழிகள். சம்பந்தப்பட்டவருடைய உள்ளத் துடிப்பைக் காட்டுவது மட்டுமின்றிக்கே, உபயோகமான – அவசியமான – தர்மஸூக்ஷ்மங்கள் பலவும் இதில் பொதிந்துள்ளன. ஜமதக்னியும் மற்ற முனிவர்களும் ஒன்றுகூடி ஒரு சமயத்தில் சபதம் செய்தனர். அகஸ்தியருடைய திருப்திக்காகச் செய்தது இந்தச் சபதம். அதில் ஒரு தாமரைத் தண்டு விஷயமாக விவாதம் தோன்றியது. ஜமதக்னி முனிவர் அதைத் தாம் அபகரிக்கவில்லை என்று கூறினார். அதை அபகரித்திருந்தால் சில பாவங்கள் தம்மைச் சேரட்டும் என்று சபதம் செய்தார். இதோ அவர் சொன்ன ச்லோகம் —

अनध्यायेष्वधीयीत मित्रं श्राद्धे च भोजयेत् ।
श्राद्धे शूद्रस्य चाश्नीयात् यस्ते हरति पुष्करम् ॥

அநத்யாயேஷ்வதீயத மித்ரம் ச்ராத்தே ச போஜயேத் ।
ச்ராத்தே சூத்ரஸ்ய சாச்நீயாத் யஸ் தே ஹரதி புஷ்கரம் ॥

— மகாபாரதம், 13.96.25.

"வேதம் ஓதுவதற்குத் தகாத காலங்கள் சில. அவை பொதுவாக 'அநத்யாயம்' எனப்படும். இந்த அநத்யாய காலங்களில் வேதம் ஓதிய பாவத்தில் போவேன். சிராத்தத்தில் தன் நண்பனையே நிமந்த்ரணம் சொல்லிச் சாப்பிடச் செய்பவனுடைய பாவத்தில் போவேன். சூத்திரனுடைய ச்ராத்தத்தில் சாப்பிடுகிறவனுடைய பாவத்தில் போவேன்– (அகஸ்தியரே!) உமது தாமரைத்தண்டை நான் அபகரித்திருப்பேனாகில்" என்று கருத்து. இப்படி ஒவ்வொரு ரிஷியும் இந்த இடத்தில் சபதம் செய்கிறார். எல்லாம் மிக மிக உபயோகமாகவே இருக்கும்.

### முடிவு

இத்தகைய மகிமையுள்ள ஜமதக்னி முனிவருக்கு மிகவும் பரிதாபகரமான வகையில் முடிவு ஏற்பட்டது. கார்த்த வீர்யார்ஜுனன் என்பவனுடன் இவருக்கு ஏற்பட்ட சச்சரவு காரணமாக அவனுடைய பிள்ளைகளால் இவர் அநியாயமாகக் கொல்லப்பட்டு மாண்டு போனார்.

கார்த்தவீர்யார்ஜுனனை அறியாதார் இல்லை. தத்தாத்திரேயருடைய அநுக்கிரகத்தினால் யோகசக்தியைப் பெற்ற இவன் அசாதாரணமான சிறப்புக்கள் வாய்ந்தவன். தன் நாட்டு மக்கள் எவரும் தவறுதல் சிறிதும் செய்யக் கூடாது என்பது இவன் எண்ணம். யாராவது கெட்ட காரியம் செய்ய வேண்டுமென்று எண்ணினால் அதை உடனே தன் யோகசக்தியினால் இவன் உணர்ந்துகொள்வான். வில்லும் கையுமாக அவர்களெதிரில் தோன்றி எச்சரித்துவிட்டு வருவான். இவனுக்குக் கைகள் ஆயிரம் இருந்தன. மகாவீரன். தற்செயலாக ஜமதக்னி முனிவருடைய ஆச்ரமத்துக்கு இவன் வந்தான். நாட்டு மன்னன் அல்லவா? இவனுக்கு ஏற்ற வகையில் மரியாதைகள் எல்லாம் செவ்வனே நடந்தன. ரேணுகா இதில் மிகவும் சிரத்தையுடன் ஈடுபட்டாள். ஆனால் முடிவு விபரீதமாக இருந்தது. ஜமதக்னி முனிவருடைய ஹோமதேனு தனக்கு வேண்டுமென்று இவன் கேட்டான். முனிவர் மறுத்தார். நிர்ப்பந்தமாகக் கேட்டான். ஆனாலும் கிடைக்கவில்லை.

அரசன் என்னும் அகம்பாவம் மேலிட்டது. பலாத்காரமாக அதை அபகரித்துக்கொண்டு போய்விட்டான் இவன். அப்போது ஆசிரமத்தில் பரசுராமர் இல்லை; வெளியில் சென்றிருந்தார். திரும்பி வந்தவுடன் அவரிடம் இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டது. அவர் சினந்தெழுந்தார். நேராக அரசனுடைய இருப்பிடம் சென்றார். கடும்போர் மூண்டது அவருக்கும் அரசனுக்கும். இவனுடைய ஆயிரம் கைகளையும் துண்டித்து முடிவில் கொன்றுவிட்டார் அவர். பரசுராமரின் பராக்கிரமத்துக்கு எதிரில் இந்த அரசன் எம்மாத்திரம்?

கார்த்தவீர்யார்ஜுனன் இப்படிக் கொல்லப்பட்ட செய்தி நாடெங்கும் காட்டுத் தீப்போல் பரவியது. கண்ணெதிரில் இவ்வரசனுடைய பிள்ளைகள் இதைப் பார்த்துக்கொண்டே இருந்தனர். பரசுராமருக்கு எதிரில் அவர்களால் நிற்க முடியவில்லை. அவர் இல்லாத ஸமயம் பார்த்து ஆசிரமத்தில் புகுந்தனர். பலாத்காரமாக ஜமதக்னி முனிவரைக் கொன்று வஞ்சம் தீர்த்துக்கொண்டனர். ஜமதக்னி முனிவர், பாவம்! ஒன்றும் செய்யவில்லை. அவர்களைப் பலவாறாகச் சபிக்கலாம். அவர்களது எண்ணம் ஈடேறாமற்போகும்படி செய்திருக்கலாம். அவருக்கென்ன

தபஸ் சக்தியில் குறைவா? ஆனால் அவர் அப்படியொன்றும் செய்யவே இல்லை. "ராமா! ராமா!" என்று பரசுராமரை அழைத்த வண்ணம் இருந்தார். பரசுராமர்தாம் அங்கு இல்லையே! அதனால்தான் அரசகுமாரர்கள் துணிந்து ஜமதக்னி முனிவரைக் கொன்று சென்றனர்.

பரசுராமர் ஆசிரமத்துக்குத் திரும்பியவுடன் செய்தியை அறிந்தார். விபரீதமாகவே இருந்தது இதன் விளைவு. இருபத்தொரு தலைமுறை க்ஷத்திரியப் பூண்டே இல்லாமல் கொன்று குவித்தார் அவர். அவர்களுடைய குருதியைக் குளமாகத் தேக்கி அதில் பித்ருதர்ப்பணம் பண்ணினார். இது பிரஸித்தமான விஷயம். 'க்ஷத்திரியத் தன்மை வாய்ந்த பிள்ளை பிறக்கும்' என்றபோது, 'பேரன் அவ்வாறாக இருக்கட்டும்' என்று ஸத்தியவதீ (பரசுராமருடைய பாட்டி) வேண்டிக்கொண்டாள் அல்லவா? அது தவறாமல் பலித்தது.

பரசுராமர் பிராம்மண குலத்தில் பிறந்தவரே தவிர, முழுவதும் க்ஷத்திரியத் தன்மையே அவரிடம் நிரம்பியிருந்தது. பிராம்மண குலத்தில் பிறந்தமையால், பிராம்மணர்களை அநியாயமாக க்ஷத்திரியர்கள் அவமதிப்பதை அவரால் சகிக்க முடியவில்லை. ஒருவன் செய்யும் பாவம் உலகத்தையே பாதிக்கும் என்பது கார்த்தவீர்யார்ஜுனன் விஷயத்தில் யதார்த்தமாயிற்று. ஏழு தீவுகள் படைத்த இந்தப் பூமி முழுவதும் அவனது ஆட்சியில் இருந்தது. ராவணன் முதலிய மகாவீரர்களை அவன் அலட்சியமாக வென்றவன்; அசாதாரணமான யோகஸித்தி படைத்தவன்; தத்தாத்திரேயரின் சிஷ்யன்; தர்மராஜ்யம் நடத்துவதில் பெயர் பெற்றவன். இருந்தும் பரசுராமருக்கு எதிரில் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பரசுராமர் அவனையும் கொன்றார்; அவனுடைய பிள்ளைகளையும் கொன்றார். அவன் பிறந்த க்ஷத்திரிய குலத்தையே அழித்தார். அநியாயமான காரியம் செய்தான் அல்லவா? அதனால்தான் பூண்டற்றுப் போனான்.

ஜமதக்னி முனிவருடைய கடைசிக் காலம் இவ்வாறாக இருந்தது. அவரும் இந்த முடிவை விருப்பத்துடனேயே ஏற்றுக்கொண்டார் என்று தோன்றுகிறது; இல்லையென்றால் அவர் தமது தவ மகிமையினால் இதைத் தடுத்திருக்க முடியுமே?

ஜமதக்னி முனிவருடைய தந்தை ரிசீகர். இவருக்கு அஜீகர்த்தர் என்றும் பெயர் இருந்திருக்கிறது. வேதங்களில் இந்தப் பெயர்தான் வழங்கி வருகிறது. அஜீகர்த்தருடைய பிள்ளைகள் மூவருள் நடுப்பிள்ளைக்கு சுநச்சேபன் என்று பெயர். இவனைத்தான் அம்பரீஷ மகாராஜனுக்கு யாகபசுவாக அஜீகர்த்தர் விற்றுவிட்டார். அவனுடைய மாமா விச்வாமித்ரர் அவனுக்கு இரண்டு மந்திரங்களை உபதேசித்து அவனைக் காத்த வரலாறு உலகமறிந்ததே. சுநச்சேபன் ஜமதக்னி முனிவருடைய சகோதரனே.

தர்மசாஸ்திரகாரர்கள் ஜமதக்னி முனிவருக்கு ஒரு சிறப்பான இடத்தை அளித்திருக்கிறார்கள். வேறு யாருக்கும் இவ்விதமான கௌரவம் தரப்படவில்லை. யாருக்காவது தன் கோத்திர ப்ரவரம் தெரியாவிட்டால் திகைத்து நிற்க வேண்டாம். கூசாமல் ஜமதக்னி முனிவரின் கோத்திரத்தைக் கூறிக்கொள்ள வேண்டும். இதுதான் தர்மசாஸ்திரங்களில் ஜமதக்னி முனிவருக்கு அளிக்கப்பட்டுள்ள கௌரவம். ஜ்ஞாந மார்க்கத்திலோ, ஸாக்ஷாத் சரீர ஸம்பந்தத்தில் தாய் அல்லது தந்தை வழியிலோ, வேதாத்தியயன ஸம்பிரதாயத்திலோ ஜமதக்னி முனிவருடைய ஸம்பந்தம் இல்லாதவர்கள் இவ்வுலகில் இல்லவே இல்லை. அதனால்தான் இவருடைய பெயரை யாவரும் சொல்லிக் கொள்ளலாம் என்று விதிக்கின்றனர்.

स्वगोत्रप्रवराज्ञाने जमदग्निमुपाश्रयेत् ।

ஸ்வகோத்ரப்ரவராஜ்ஞாநே ஜமதக்நிமுபாச்ரயேத் ।
என்பது தர்மசாஸ்திர வாக்கியம்.

ஜமதக்னி முனிவரின் புனிதமான சரித்திரம் நீளமானது. இவ்வளவில் இதை முடித்துக்கொள்வோம். ஸ்ரீவத்ஸகோத்திரத்து ரிஷிகள் ஐவரின் வரலாறு இத்துடன் முடிவடைகிறது.

# அங்கிரஸ்

இதுவரை ஸ்ரீவத்ஸ கோத்ர ப்ரவர்த்தகர்களான மகரிஷிகளின் பெருமையை உணர்ந்தோம். அவர்களுள் முதலாமவரான ப்ருகுமகரிஷியின் பெருமைவாசாமகோசரம். அவர் ஸ்ரீவத்ஸ கோத்திரத்துக்கு மட்டும் முதல்வரல்ல; மற்றும் பல கோத்திரங்களுக்கும் ஆதிபுருஷராக விளங்குகிறார். அந்த வம்சங்கள் அனைத்தையும் தர்ம சாஸ்திரகாரர்கள் கணக்கிட்டு வைத்திருக்கின்றனர். ப்ருகு வம்சத்தினர் ஏழு பிரிவினர் என்பர். இவர்கள் அனைவரையும் ஒரே சொல்லால் 'பார்க்கவ கணம்' என்று வழங்குவர். वत्साः, बिदाः, आर्ष्टिषेणाः, यस्काः, मित्रयुवः, वैन्याः, शुनकाः என்பன அந்த ஏழு பிரிவுகளின் பெயர்கள். இந்த வம்சத்தினர் அனைவரும், மகாதேஜஸ்வியான ப்ருகு மகரிஷியின் திருமேனி ஸம்பந்தம் பெற்றவர்கள். தங்களது ப்ரவரத்தில் ப்ருகு மகரிஷியின் திருநாமத்தை முதல்முதலாகப் பெருமையுடன் கூறிக்கொண்ட, குலமுதல்வராகிய அவரது மகிமையில் தங்களுக்கேற்ற பாகத்தை உவந்து ஏற்றுக்கொள்ளும் உரிமை இந்த ஏழு பிரிவினருக்கும் சமமாக உண்டு. ஸ்ரீவத்ஸகோத்ர ப்ரவர்த்தகர்களான மகரிஷிகள் போலவே, மேற்கூறிய மற்ற ப்ருகுவம்சத்தைச் சார்ந்த மகரிஷிகளும் மகாதேஜஸ்விகள். ப்ருகு வம்சம் அல்லவா? முதல்வராகிய ப்ருகு மகரிஷியின் பெருமைகளைக் கொண்டே அவர்களுடைய மகிமையையும் ஊகித்து அறியலாம். தனித் தனியாக அந்த அந்த கோத்ரப்ரவர்த்தகர்களான மகரிஷிகளின் சரித்திரங்கள் அநுபவிக்கக் கூடியவையே. ஆனாலும் இப்பொழுது இவ்வளவில் இதை நிறுத்திக்கொண்டு அங்கிரஸ் மகரிஷியின் சரித்திரத்தில் இழிகிறோம். மீண்டும் சந்தர்ப்பம் ஏற்படும் போது இதை மேற்கொள்வோம்.

ப்ருகு வம்சத்துக்கும் அங்கிரஸ் வம்சத்துக்கும் ஆதிகாலம் முதல் நெருங்கிய தொடர்பு உண்டு. வேதங்களிலும் இதிகாச புராணங்களிலும் இவ் விஷயம் பரக்கப் பேசப்பட்டுள்ளது. நம் நாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வரும் பலவேறு கோத்திரங்களுக்கும் மூலபுருஷர்களாக ஏழு மகரிஷிகள் அமைந்துள்ளனர்.

1. ப்ருகு — இவருடைய பிரிவில் ஏழு கோத்திரங்கள். இவை 'பார்க்கவ கணம்' எனப்பெறும்.

2. அங்கிரஸ் — இவரது பிரிவில் மூன்று கோத்திரங்கள். மேலும் அந்த மூன்றும் இருபது வகையாக விரியும். இவற்றை ஒன்றுகூட்டி 'ஆங்கிரஸ கணம்' என்பர்.

3. அத்ரி — இவரது திருநாமத்துடன் நான்கு பிரிவுகள் உண்டு. இவற்றை 'ஆத்ரேய கணம்' என்பர்.

4. விச்வாமித்ரர் — இவரது வம்சஸ்தர்கள் பத்து வகை. இவர்களைப் பொதுவாக 'வைச்வாமித்ர கணம்' என்பர்.

5. கச்யபர் — இவரது வம்சத்தவர் ஐந்து வகை. இவர்கள் 'காச்யப கணம்' என்ற குழுவைச் சார்ந்தவர்கள்.

6. வஸிஷ்டர் — இவருடைய வழித் தோன்றல்களும் ஐந்து வகையே. இவர்கள் 'வாஸிஷ்ட கணம்' என்ற கூட்டத்தினர்.

7. அகஸ்தியர் — இவரது ஸந்ததியைச் சேர்ந்தவர்கள் நால்வகைப்பட்டவர். இவர்களைப் பொதுவாக 'ஆகஸ்த்ய கணம்' என்பர்.

கணம் என்னும் சொல் பெருங் கூட்டம் என்று பொருள்படும். முதன்மையான இந்த ஏழு மகரிஷிகளுடைய திருமேனி ஸம்பந்தம் பெற்ற ஏனைய மகரிஷிகள் ஆயிரக்கணக்காக ஓங்கி வளர்ந்து நாடெங்கும் தத்தம் வம்சங்களை வாழையடி வாழையாகப் பரப்பியுள்ளனர். நம் நாட்டுக்குத் தனிப்பெருமை தரும் வேத சாகைகள் பலவற்றையும், அவற்றில் பரக்கப் பேசப்பெறும் யாகங்களின் அநுஷ்டான முறைகளையும் அநாதி காலமாகக் காப்பாற்றி வரும் வம்சங்கள் இவை. இவ்விஷயத்தில் சிறிதும் தாரதம்யம் இவற்றுள் இல்லை.

ப்ருகு வம்சத்துக்கும் அங்கிரஸ் வம்சத்துக்கும் அநாதி காலமாகவே பரஸ்பரம் நெருங்கின தொடர்பு இருந்து வந்திருக்கிறது. வேதங்களிலும் மற்ற நூல்களிலும் இவ் விஷயம் ஸர்வ ஸஹஜமாகப் பேசப்படுகிறது. அதனால் ப்ருகு வம்சத்தைப் பற்றிய ஆராய்ச்சிக்குப் பின் அங்கிரஸ் வம்சம் தானாகவே நினைவில் இடம் பெறுகிறது. ஆதலால் அங்கிரஸ் மகரிஷியின் சரிதத்தை ஈண்டு அநுபவிக்கப் புகுகிறோம்.

அங்கிரஸ் முனிவர் 'அங்கிரா:' என்று ஸமஸ்கிருதத்தில் கூறப்பெறுவர். இவருடைய வம்சஸ்தர்கள் அனைவரும், இவருடைய திருமேனி ஸம்பந்தம் தங்களுக்கு இருப்பதைப் பெருமையுடன் பிரதி

தினமும் பலகாலும் கூறிக்கொள்வர். அப்போது இந்தச் சொல் சிறிது மாறுபடும். 'ஆங்கிரஸ' என்று கூறிக்கொள்வர். 'அங்கிரஸ் மகரிஷியின் குடல்துவக்கு உள்ளவர்கள்' என்பதுதான் இந்தச் சொல்லின் பொருள். அன்றிக்கே மற்ருெரு முறையும் உண்டு; 'அங்கிரஸ:' என்று இதைப் பன்மையாக உபயோகிப்பர். அங்கிரஸ்ஸுக்கள் என்று இந்தச் சொல் பொருள்படும். மூலபுருஷராகிய அங்கிரஸ் ஒருவரேயாதலின், பன்மையிலுள்ள இந்தச் சொல் அவரது வம்சஸ்தர்களையே உணர்த்தும். ப்ருகு, அத்ரி முதலிய முனிவர்களின் திருநாமங்களிலும் இந்த முறை வேதங்களில் ஸஹஜமாகக் கையாளப்படுகிறது. ப்ருகவ:, அத்ரய:, அங்கிரஸ:, ஜமதக்நய:, வஸிஷ்டா: என்று குலமுதல்வருடைய பெயரில் பன்மையைச் சேர்த்து அந்தக் குலத்துதித்தவர்கள் வழங்கப்பெறுவது ஸர்வ ஸாதாரணம்.

## தோற்றம்

பிரபஞ்ச ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய நான்முகனுடைய (பிரம்மதேவனுடைய) மானஸ புத்திரர் அங்கிரஸ் என்பர். அவருடைய முகத்திலிருந்து தோன்றியவர் என்றும் கூறுவர். இரண்டிலும் பரஸ்பர விரோதமில்லை. இவரைத் தோற்றுவிக்க வேண்டும் என்று பிரம்மதேவன் மனத்தில் எண்ணியவுடனே அவரது முகத்திலிருந்து இவர் தோன்றியிருக்கக்கூடும். அதனுல்தான் மானஸபுத்திரர், முகத்தில் உதித்தவர் என்கிருர்கள் போலும். பிரம்மதேவனுடைய முகத்திலிருந்துதான் அக்கினி உற்பத்தியாயிற்று. அந்த ரீதியில் பார்த்தால் அக்கினிக்கு அங்கிரஸ் சகோதரராகிருர்.

வேதங்களில் அங்கிரஸ் என்னும் பெயர் அக்கினிக்கே நேராகவும் வழங்குகிறது.

नेदीयो यज्ञमङ्गिरः ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 2.6.11.

இந்த 'அங்கிரஸ்' என்ற சொல்லின்மேல் 'தம' என்பதைச் சேர்த்தும் அக்கினி அழைக்கப்பெறுகிருன்.

तुम्यन्ता अङ्गिरस्तम ......... अग्ने ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 1.3.14.

அங்கிரஸ் என்னும் இந்தச் சொல், (பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து) 'வெளியில் வருபவர்' என்னும் பொருளை உணர்த்தும். இந்தத் தன்மை அங்கிரஸ் மகரிஷிக்கும் அக்கினி தேவனுக்கும் பொதுவாக அமைந்துவிட்டபடியால், இருவருமே ஒரே சொல்லால் வழங்கப்பெறுவது பொருத்தமே. அது மட்டுமல்ல; அக்கினிக்கும் இவருக்கும் தேஜஸ்ஸில் சிறிதும் வாசி இல்லை. அங்கிரஸ் மகரிஷியை அக்கினி என்னும் சொல்லாலும், அக்கினியை அங்கிரஸ் என்னும் சொல்லாலும் இஷ்டம் போல் மாறி மாறி ஸர்வஸாதாரணமாக அழைக்கலாம். அக்நி என்னும் சொல்லிலும் 'அக்' என்னும் முற்பகுதியில் அங்கிரஸ் என்னும் சொல்லின் முற்பகுதியின் எழுத்துக்கள் பதிந்திருப்பதைக் காணலாம். இவ்வாறு பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே அக்கினியுடன் பிறந்தவர் மகாதேஜஸ்வியான அங்கிரஸ் மகரிஷி.

அங்கிரஸ் என்னும் பெயருக்கு, வியாகரணத்தின் வழியில் கிடைக்கும் பொருள் மேலே காட்டப்பட்டது. வேதத்திலேயே இந்தச் சொல்லின் பொருள் ஒருவாறுக விளக்கப்படுகிறது. ரிக்வேதத்தைச் சார்ந்த ஐதரேய ப்ராஹ்மணம் சொல்லுகிறது —

ये अङ्गारा आसन् तेऽङ्गिरसोऽभवन् ।

— ஐதரேய ப்ராஹ்மணம், 3.34.

"நெருப்புத் தணல்கள் 'அங்காரம்' எனப்படும். அவையே 'அங்கிரஸ்ஸுக்கள்' ஆகிவிட்டன" என்பது கருத்து. 'அங்காரம்' என்னும் சொல்லுக்கும் 'அங்கிரஸ்' என்னும் சொல்லுக்கும் அதிக வ்யத்யாஸம் இல்லாதவாறு போலவேதான் பொருளிலும் வாசி இல்லை என்ற கருத்தை இந்த வேதவாக்கியம் எடுத்துக் காட்டுகிறது. நல்ல அநுஷ்டான சீலர்களாக இருப்பவர்களை, "முகத்தில் ப்ரஹ்மவர்ச்சஸம் ஜ்வலிக்கிறது பார்" என்று கூறுவது வழக்கமல்லவா? அதே இங்கும் கூறப்படுகிறது. களங்கமற்ற, ஒளி வீசும் முகம். ப்ரஹ்மதேஜஸ் வெள்ளமிட்டோடுகிறது. பார்த்தால் கண் கூசுகிறது. 'நெருப்புத் தணலேதான் அங்கிரஸ் மகரிஷியாகக் காட்சியளிக்கிறது' என்று கூறுவதில்தான் எவ்வளவு பொருத்தம்!

அடுத்தாற்போல் ஸாமவேதத்தைச் சார்ந்த சாந்தோக்ய உபநிஷத் என்ன சொல்லுகிறது, பார்ப்போம் —

तँ हाङ्गिरा उद्गीथमुपासाञ्चक्रे, एतमु एवाङ्गिरसं मन्यन्ते । अङ्गानाँ यद्रसः ॥

— சாந்தோக்யோபநிஷத், 1.2.10.

உத்கீதம் என்னும் ஸாமகானத்தில் முதற்பகுதியான ஓங்காரத்தைப் பற்றின விஷயம் இங்கே பேசப்படுகிறது. அதை முக்கிய ப்ராணனாக உபாஸனம் பண்ணினார் (தியானம் செய்தார்) அங்கிரஸ் முனிவர். இதைத்தான் இந்த வாக்கியம் சொல்லுகிறது. "இந்த முக்ய ப்ராணனையே அங்கிரஸ் என்பர்" என்று இந்த உபநிஷத், சிலருடைய கருத்தைக் கூறுகிறது. இதற்குக் காரணமும் கூறப்படுகிறது இங்கு.

ஓர் உடம்பில் பற்பல உறுப்புகள் உள்ளன. அவற்றுக்கெல்லாம் செயற்படும்படியான ஆற்றல் எதனால் ஏற்படுகிறது? உடலினுள் உயிர் (முக்ய ப்ராணன்) இருக்கிறது அல்லவா? அதுதான் கண் காது முதலிய உறுப்புக்களுக்கு இயங்கும் சக்தியை அளிக்கிறது. இறந்துபோனவனுடைய உடலிலும் கை கால் முதலிய உறுப்புக்கள் இருக்கின்றன. ஆனால் அவை செயற்படுவதில்லை. என்ன காரணம்? உள்ளே முக்ய ப்ராணன் இல்லை. அதுதான் காரணம். முக்ய ப்ராணன் (மூச்சுக்காற்று) உடலில் இருந்தால் மற்ற உறுப்புக்கள் இயங்குகின்றன. அது இல்லாவிட்டால் எல்லாம் ஓய்ந்துவிடுகின்றன. இதனால் உடலுறுப்புக்களின் ரஸம் (ஸாரமான — ஆதாரமான பொருள்) முக்ய ப்ராணனே என்று தேறுகிறது.

'அங்கிரஸ்' என்னும் சொல் இந்தக் கருத்தையே உணர்த்துகிறது. 'அங்கரஸம்' என்று இருக்க வேண்டிய சொல் இது. அங்கம் என்றால் உறுப்பு என்று பொருள். ரஸம் என்பது பிரஸித்தமே. உறுப்புக்களின் ஸாரம் என்பதை உணர்த்தும் 'அங்கரஸம்' என்னும் சொல்லே சிறிது மாறுபாடடைந்து, 'அங்கிரஸ்' என்று ஆகிவிட்டதாம். இந்த வழியில் முக்ய ப்ராணனையே (மூச்சுக் காற்றையே) 'அங்கிரஸ்' என்று ஸாதிக்கிறது இந்த ஸாமவேத ப்ராஹ்மணம்.

உயிர் வகைகள் வாழ்வதற்கு இன்றியமையாத மூச்சுக் காற்றாகவும் அக்கினியாகவும் இந்த அங்கிரஸ் மகரிஷியின் பெயருக்கு வேதங்களே பொருள் கூறுகின்றன. பிரபஞ்ச

ஸ்ருஷ்டியின் நடவடிக்கைகளுக்கு ஜீவாதாரமானவர் இவர் என்பது இதிலிருந்து தெளிவாக ஏற்படுகிறது. அதனால்தான் போலும், படைக்கும் கடவுளாகிய பிரம்மதேவன் முந்துற முன்னம் தன் முகத்திலிருந்தே இவரைப் படைத்துவிட்டான்.

பிரபஞ்சமே தம்முடைய சக்தியினால் இயங்கும் வகையில் அங்கிரஸ் மகரிஷி எத்தனையோ அரிய ஸாதனைகளைப் புரிந்திருக்கிறார். அவற்றைப் பிறகு விவரிப்போம். ஒன்று மட்டும் இப்போது கூறுவோம்: இவரைப்பற்றிய விஷயங்கள் யாவும் வேதங்களிலிருந்தே புலனாகின்றன ஆதலால், அந்த வழியிலேயே நாமும் செல்வோம்.

பிரபஞ்சத்தைப் படைத்த பிரம்மதேவன் யஜ்ஞங்களையும் கூடவே தோற்றுவித்தான். என்ன காரணம்? அவனே சொல்கிறான்; "பிரஜைகளே! உங்களுக்கு என்ன என்னவோ விதவிதமான அபிலாஷைகள் இருக்கும். அவற்றை எல்லாம் நீங்கள் உடனுக்குடன் பெற்று மகிழ வேண்டுமே. அதற்காகவே இந்த யாகங்களை உங்களுடன் சேர்ந்தாற்போலவே படைத்தேன். இந்த யாகங்களை நீங்கள் செவ்வனே அநுஷ்டித்து, விரும்பியதை எல்லாம் பெற்று இன்புறுங்கள்" என்பதுதான் பிரம்மதேவனுடைய பதில். இந்தக் கருத்தையே —

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥

ஸஹ யஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அநேன ப்ரஸவிஷ்யத்வமேஷ வோஸ்த்விஷ்டகாமதுக் ॥

— பகவத்கீதை, 3.10.

என்னும் ச்லோகம் கூறுகிறது. இந்த யஜ்ஞாநுஷ்டானத்தைத் திறமையாக நடத்திக் காட்டி உலகத்தை உய்வித்தவர் அங்கிரஸ் மகரிஷி. நாலுவேதங்களிலும் இந்த விஷயம் பரவலாகக் காண்கிறது. ஒன்று காண்மின் —

यो वा इष्टकानां प्रतिष्ठां वेद प्रत्येव तिष्ठति, तया देवतयाऽङ्गिरस्वद् ध्रुवा सीदेत्याहैषा वा इष्टकानां प्रतिष्ठा य एवं वेद प्रत्येव तिष्ठति ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.5.6.

இதில் அங்கிரஸ் மகரிஷியின் பெருமை தனிப்பட்ட முறையில் பேசப்படுகிறது. இதன் கருத்தை உணர்ந்துகொள்வதற்குச் சிறு முன்னுரை ஒன்று வேண்டியிருக்கிறது. அதைக்கூறி, இதன் கருத்தை விளக்குவோம்.

பழங்காலத்து மக்கள் அக்கினி பூஜையில் மிக்க ஆர்வமுள்ளவர்கள். தமது ஆயுட்காலம் முழுவதும் நிரந்தரமாக இடையறாமல் அக்கினியைக் காப்பாற்றி வருவது அவர்களது குலதர்மமாக இருந்தது. அதற்கு ஏற்றவாறு பற்பல விதமான ஹோமகுண்டங்களை நிர்மிப்பதில் அவர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர். அவ்விதமான ஹோமகுண்டங்களில் அக்கினியை வைத்தால் அது அநேக வருஷங்கள் வரையில் அணைந்து போகாமல் நிலைத்து நிற்கும். வேண்டும்போதெல்லாம் பல விதமான யாகங்களைச் செய்வதற்கு இந்த அக்கினி அவர்களுக்கு உபயோகமாக இருக்கும். இந்த ஹோமகுண்டம் செய்வதை 'அக்நிசயநம்' என்று வழங்குவர்.

சிறியவையும் பெரியவையுமான மண்கட்டிகளை முறைப்படி ஒன்றோடொன்று பொருந்தும்படியாக வைத்து இந்த ஹோமகுண்டங்களைச் செய்வர். இதற்கு உபயோகிக்கும் மண்கட்டிகளே 'இஷ்டகைகள்' என்று வழங்கப்பெறுகின்றன. இந்த 'இஷ்டகைகள்' சரியாக – ஒன்றோடு ஒன்று பொருந்துமாறு ஆடாமல் அசையாமல் நிலைத்து நிற்க வேண்டும். அவ்வாறு அவற்றைப் பொருந்த வைப்பதை, அக்நிசயநம் செய்பவன் நன்கு அறிந்திருக்க வேண்டும். 'இஷ்டகைகளின் ப்ரதிஷ்டை' என்று கூறப்படுவது, ஹோமகுண்டத்தில் உபயோகிக்கப்படும் மண்கட்டிகள் பரஸ்பரம் இணைந்து பொருந்தி நிற்கும் நிலையே. 'இதை எவன் அறிவானோ அவன் தானும் நிலைபெற்று வாழ்வான்' என்கிறது வேதம்.

'இஷ்டகைகளின் பிரதிஷ்டை'யைத் தெரிந்துகொள்வதன் தத்துவத்தையே முன்சொன்ன வேதவாக்கியம் எடுத்துக் காட்டுகிறது. இஷ்டகைகளைப் பொருந்துமாறு ஒன்றோடொன்று இணைத்து வைப்பது மட்டும் போதாது; மற்றொரு விஷயமும் இதில் முக்கியமானது. இஷ்டகையைப் பார்த்து, "இஷ்டகையே! நீ நிலைத்து இருப்பாயாக" என்று வேண்டிக் கொள்ள வேண்டும். இதுவும்

போதாது. "அங்கிரஸ் மகரிஷியின் அக்நிசயநத்தில் நீ எவ்வாறு அசையாமல் நிலைபெற்றிருந்தாயோ அப்படியே இப்போது எனது அக்நிசயநத்திலும் நிலைத்து நிற்பாயாக" என்று வேண்டிக்கொள்ள வேண்டும். இதுதான் இஷ்டகைகளின் 'ப்ரதிஷ்டை'. இதை அறிந்து கொண்டு அக்நிசயநம் பண்ணுகிறவன், தானும் ப்ரதிஷ்டையை அடைவான் என்று அறுதியிடுகிறது இந்த வேத வாக்கியம்.

இதிலிருந்து நமக்கு ஒரு விஷயம் தெரிகிறது. ஆதிகாலத்தில் அங்கிரஸ் மகரிஷி அக்நிசயநம் பண்ணினார்: அப்போது அவர் வைத்த இஷ்டகைகள், சிறிதும் ஏற்றத் தாழ்வின்றி, வெகு அழகாகப் பொருந்தி, அசையாமல் சரியாமல் நின்றன. அதை உதாரணமாகச் சொல்லி, 'அவ்வாறே இப்போதும் நிற்க வேண்டும்' என்று யஜமானன் இஷ்டகையைப் பார்த்து வேண்டிக்கொள்கிறான்.

அக்நிசயநத்தில் இஷ்டகைகள் பல உண்டு. அவற்றுக்குப் பெயர்களும் விதம்விதமாக இருக்கும். அவற்றின் அளவும் வெவ்வேறாக இருக்கும். அவ்வவற்றுக்கு தேவதைகளும் பல வகையானவை. அவற்றை வைக்க வேண்டிய இடங்களும் தனித்தனியே வேறுபட்டிருக்கும். ஆனால் ஸகல இஷ்டகைகளிலும் ஒரே விதமாகத் தொடர்ந்து வரும் சொற்றொடர் ஒன்று உண்டு. 'அங்கிரஸ்வத் த்ருவா ஸீத' என்பதுதான் அந்தச் சொற்றொடர். ஒவ்வோர் இஷ்டகையையும் வைக்கும்போது இதைச் சொல்லியே தீர வேண்டும். இதைச் சொல்லாமல் ஓர் இஷ்டகையையும் வைக்க முடியாது. அதனால், இஷ்டகைகளை வைக்கும் வகையைக் கூறும் வேதபாகத்தில், 'தயா தேவதயாங்கிரஸ்வத் த்ருவா ஸீத' என்னும் சொற்றொடர் அடிக்கடி வந்துகொண்டே இருக்கும். அலுக்காமல் சலிக்காமல் மறவாமல் சிரத்தையுடன் வேதம் இந்த விஷயத்தைப் பன்னியுரைக்கிறது. வேதாத்தியயனம் பண்ணினவர் இந்த ரஸத்தை அழகாக அநுபவிப்பர்.

பிரபஞ்சம் தோன்றியது முதல் இன்றளவும் எத்தனையோ மகரிஷிகள், மகாராஜாக்கள், சாதாரணமானவர்கள், படித்தவர்கள், பணக்காரர்கள், ஏழைகள் முதலியவர்கள் இந்த அக்நிசயநத்தைப் பண்ணி வந்திருக்கிறார்கள். அவர்களில் எவரையும் உதாரணமாக வேதம் குறிப்பிடவில்லை. அங்கிரஸ் மகரிஷியை மட்டும் உதாரணமாகக் காட்டுகிறது. அவர்கள்

அனைவரும் இந்த அங்கிரஸ் மகரிஷியின் உதாரணத்தைக் காட்டும் வாக்கியத்தைச் சொல்லியேதான் அக்நிசயநம் பண்ணியிருக்கிறார்கள். இப்போதும், இனி வருங்காலத்திலும் இந்த அங்கிரஸ் மகரிஷியின் உதாரணம் தொடர்ந்து நிலைத்து அநுஸந்தாநம் பண்ணப்படும். வேறு வழி இல்லை.

அங்கிரஸ் மகரிஷியின் கோத்திரத்தில் தோன்றியவராக இருந்தாலும், அப்படி இல்லாதவராக இருந்தாலும், 'தயா தேவதயாங்கிரஸ்வத் த்ருவா ஸீத' என்னும் வாக்கியத்தைச் சொல்லியே இஷ்டகைகளை வைத்து அக்நிசயநம் செய்து யாகங்களை இயற்ற வேண்டும். இவ்வாறாகப் பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கு மூலாதாரமான யஜ்ஞங்களை அநுஷ்டிக்கும் முறையில் அங்கிரஸ் மகரிஷி இடம் பெற்றுவிட்டார். ஆகையால் யாகம் செய்பவர்கள் அனைவருக்கும் இவருடைய ஸம்பந்தம் தவிர்க்க முடியாததாகி விட்டது. இவரை 'மூச்சுக்காற்று' என்று ஏன் சொல்லக் கூடாது? 'அக்கினி' என்றுதான் அழைப்பதில் என்ன தவறு?

### உபநயன மந்த்ரம்

मेधां मह्यमङ्गिरसः, मेधाँ सप्तर्षयो ददुः ।
मेधां मह्यं प्रजापतिः, मेधामग्निर्ददातु मे ॥

— மந்த்ரப்ரச்நம், 2.4.6.

இந்த மந்த்ரம் உபநயனகாலத்தில் வழங்குகிறது. உபநயனம் செய்யப்பெறும் சிறுவன் இதைச் சொல்லி அக்கினியில் ஹோமம் செய்ய வேண்டும். "எனக்கு நல்ல மேதை வேண்டும். அங்கிரஸ்ஸுக்கள், ஸப்தரிஷிகள், பிரஜாபதி, அக்கினி இவர்கள் எனக்கு அதைக் கொடுக்க வேண்டும்" என்பது கருத்து.

பிரம்மாண்டமான சப்தராசி, வேதம் எனப்படுவது. அதை முறைப்படி ஆசாரியனிடம் அடிபணிந்து கேட்டு மனத்தில் தேக்கி வைத்துக்கொள்ள வேண்டியதாகிய பெரிய தீரச்செயலில் இந்தச் சிறுவன் ஈடுபடப்போகிறான். அதற்காக ஆசாரியன் இவனைத் தன் சமீபத்தில் அழைத்துக் கொள்வதே 'உபநயனம்' எனப்படுகிறது. சிறந்த மேதை இவனுக்கு இருந்தால்தான் இந்தக் காரியம் பூர்த்தியாகும். அதற்காக மேதையைத் தரும் சக்தி வாய்ந்தவர்களான பலரையும் வேண்டிக்கொள்கிறான் சிறுவன்.

இவ்விடத்தில் அங்கிரஸ்ஸுக்கு முதலிடம் தரப்படுகிறது. மேதையைத் தருகிறவர்களுள் முதல்வராக அவர் விளங்குகிறார். இதன்மூலம் வேதம் கற்கப்போகும் மாணவர்கள் அனைவருக்கும், அதற்கேற்ற மேதையை அருளும் சக்தி அங்கிரஸ்ஸுக்கு இருப்பது புலனாகிறது. இப்படியே அநாதி வேதங்களை இவர் அழிந்துபோகாமல் காத்து வருகிறார்.

## பிஞ்சிலே பழுத்தது

இத்தகைய சக்தி அங்கிரஸ்ஸுக்கு மட்டும் பிறவியிலேயே ஏற்பட்டதாம். ஸாக்ஷாத் பிரம்மதேவருடைய முகத்திலிருந்து - அநவரதம் நாலுவேதங்களையும் நாலு முகங்களாலும் சொல்லிக்கொண்டே யிருந்து நான்முகன் என்று பெயர் பெற்றவருடைய வேதமணம் கமழும் முகத்திலிருந்து - பிறந்தவர் அல்லவா இவர்? அதனால் சிறு குழந்தையாக இருந்தபோதே, யாரிடமும் மாணவராக இருந்து வேதமோதாமலே, தாமாகவே இவர் ஸகல வேதங்களையும் ஆச்சரியமாகச் சொல்லிக்கொண்டே இருப்பாராம். இந்த அதிசயத்தைக் கண்ட பலரும் இவரையே தமக்கு வேதம் கற்பிக்க வேண்டிய ஆசாரியனாக வரிப்பராம். வயது முதிர்ந்தவர்கள்கூடச் சிறுபிள்ளையான அங்கிரஸ்ஸிடம் பெருமையுடன் மாணவராகி வேதம் கற்பராம். இவரும் தயங்காமல் முதுபெருங் கிழவர்களுக்கெல்லாம் வேதத்தைக் கற்பிப்பாராம். இம்மட்டோ? தம் மாணவர்களாகிய கிழவர்களை, இந்தக் குட்டி வாத்தியார் என்ன சொல்லிக் கூப்பிடுவார் தெரியுமா? "குழந்தைகளே! வேதம் அத்யயனம் பண்ண வாருங்கள்" என்றுதான் கூப்பிடுவாராம்.

'இவரோ சிறு குழந்தை. அவர்கள் எல்லாரும் தாடி நரைத்த கிழங்களாயிற்றே! விபரீதமாக அல்லவா இது காணப்படுகிறது?' என்று தோன்றுகிறது அல்லவா? ஆனாலும் இது இப்படித்தான் நடந்து வந்தது. மேதையைத் தந்து வேதத்தைக் கற்பிக்கும் ஆசாரியன் பிதாவே ஆகிவிடுகிறான். அவனிடம் வேதங்களாகிற அறிவுநூல்களைக் கற்று ஞானத்தைப் பெறுகிறவர்கள் பிள்ளைகளே ஆகிவிடுகின்றனர். இதில் வயது முக்கியமல்ல. அதனால் அங்கிரஸ்

மகரிஷி வயது முதிர்ந்த தம் மாணவர்களைக் 'குழந்தைகாள்!' என்று அழைத்தது பொருத்தமே. இந்தத் தீர்ப்பு, ஸாக்ஷாத் மநுவினுலேயே தமது தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டது —

अध्यापयामास पितॄन् शिशुराङ्गिरसः कविः ।
पुत्रका इति होवाच ज्ञानेन परिगृह्य तान् ॥

அத்யாபயாமாஸ பித்ரூன் சிசுராங்கிரஸ: கவி: ।
புத்ரகா இதி ஹோவாச ஜ்ஞாநேன பரிக்ருஹ்ய தான் ॥

— மநுஸ்ம்ருதி, 2.151.

என்னும் ச்லோகம் மேலே கூறப்பட்ட கருத்தை விவரிக்கிறது.

**ரகுவம்சம்**

காளிதாஸ மகாகவி எழுதிய உலகப் பிரஸித்தமான காவியம் இது. ரகு என்ற அரசன் மிக்க புகழ் வாய்ந்தவன். அவனுடைய பெயரை ஆதாரமாக வைத்துக்கொண்டு அந்தக் குலத்துதித்த அரசர்களுடைய சரித்திரத்தை இந்தக் காவியத்தில் வெகு அழகாக வர்ணிக்கிறர் மகாகவி. 'ரகூணுமந்வயம் வக்ஷ்யே' என்பது காண்க. எம்பெருமானுடைய தசாவதாரங்களில் ஏழாமவனுக ஸ்ரீராமன் இந்த வம்சத்தில் தோன்றினன். இந்த வம்சத்தின் மூலபுருஷர் யார் தெரியுமா? இந்த அங்கிரஸ்தாம். இவருடைய வழித்தோன்றல்களே ரகுவம்சத்து அரசர்கள் அனைவரும். 'ஸௌர்ய வம்சம்' என்னும் பிரஸித்தியும் இந்த வம்சத்துக்கு உண்டு. ஆங்கிரஸ வம்சம் என்பதும் பொருத்தமே. ஸ்ரீராமனுடைய கோத்ரப்ரவரம், 'ஆங்கிரஸ-ஆம்பரீஷ-யௌவநாச்வ' என்பதுதான். ஸ்ரீராமனைத் தோற்றுவித்த ரகுவம்சத்தின் மூலபுருஷராக இருப்பதனுல், அங்கிரஸ் வம்சத்திலுதித்த கோத்திரக்காரர்கள் பலருக்கும் போல, அவருக்கும் அவருடைய பூர்வ புருஷர்களான தசரதர் முதலானேருக்கும் பூஜ்யராகிறர் இந்த அங்கிரஸ் மகரிஷி.

ருசிகரமான இந்த வரலாற்றைச் சிறிது ஆராய்வோம் இங்கு. த்ரேதாயுகத்தில் ராமாவதாரம் நடந்தது. ராவணனுடைய தீய செயல்களினுல் துன்பமடைந்த தேவர்கள் ஸ்ரீமந்நாராயணனைச் சரணடைந்தனர். மானிடர்கள்தாம் ராவணனைக் கொல்ல முடியும். வேறு இனத்திலுதித்தவர்கள் அவனைக் கொல்ல முடியாது.

பிரம்மதேவனிடம் அவன் பெற்ற வரம் இது. அவனை ஸம்ஹரித்தேயாக வேண்டிய அவசர நிலைமை அப்போது தோன்றிவிட்டது. அதற்காக எம்பெருமான் மானிடருள் ஒருவனுகத் திருவவதாரம் செய்து அவனை மாய்த்தான். பற்பல வம்சங்கள் மனித குலத்தில் அப்போது இருந்தன. அங்கிரஸ் வம்சத்தையே தனது திருவவதாரத்துக்கு ஏற்றதாக எம்பெருமான் திருவுள்ளம் பற்றினன். அதிலும், தேவர்கள் சரணுகதி செய்த சந்தர்ப்பத்தில், பிள்ளையில்லாக் குறை நீங்குவதற்காகப் புத்ர காமேஷ்டியை அநுஷ்டித்துக் கொண்டிருந்த மகாதேஜஸ்வியான தசரத சக்ரவர்த்தியையே தனக்கு ஏற்ற தந்தையாகத் தேர்ந்தெடுத்தான் எம்பெருமான். அவருக்குப் பிள்ளையாகவே பிறந்தான். 'பிதரம் ரோசயாமாஸ ததா தசரதம் ந்ருபம்' என்பது காண்க.

'குணுநாமாகரோ மஹாந்' என்று போற்றப்பெறும் ஸ்ரீராமனுக்குத் தந்தையாக இருப்பதற்கு ஸகல விதத்திலும் பொருத்தமுள்ளவர் தசரத சக்ரவர்த்தி ஒருவரே. அவரிலும் பல்லாயிரம் மடங்கு உயர்ந்தவர்கள் அவருடைய பூர்வ புருஷர்கள். அதனுல்தான்போலும் ஸ்ரீமந்நாராயணன் இந்த ஆங்கிரஸ வம்சத்திலேயே அவதாரம் செய்து பேறுபெற்ருர். இதெல்லாம் ராமாயணத்தில் ஸ்ரீராமனுடைய திருவாய்மொழியாகவே பரவலாகக் காணக்கிடக்கிறது.

ஸீதாகல்யாண ப்ரகரணத்தில், வஸிஷ்டர் ஸ்ரீராமனுடைய வம்சத்தின் பூர்வபுருஷர்களை வரிசையாகக் கூறுகிருர். அதில், 'யுவநாச்வருடைய பிள்ளை மாந்தாதா. மாந்தாதாவின் மகன் அம்பரீஷன்' என்னும் கிரமம் இடம் பெற்றுள்ளது. இதற்கு முன்னும் பின்னும் பல உள்ளன. இப்பொழுது இதை மட்டும் விவரிப்போம். இந்த யுவநாச்வருடைய 'வம்சத்துதித்தவர்' என்பதைக் காட்டும் 'தத்தித ப்ரத்யயம்' இந்தச் சொல்லில் சேர்ந்து, 'யௌவநாச்வ' என்னும் சொல்லை உருவாக்குகிறது. இதேபோல் அம்பரீஷ என்னும் சொல்லில் 'வம்சத்துதித்தவர்' என்னும் கருத்தைக் காட்டும் தத்திதப்ரத்யயத்தைச் சேர்த்தால், 'ஆம்பரீஷ' என்று இந்தச் சொல் மாறுபடுகிறது. இந்த அம்பரீஷர், அவருடைய பிதாவான மாந்தாதா, அவருடைய தந்தையான யுவநாச்வர்-இவர்கள் எல்லாருமே

அங்கிரஸ் மகரிஷியின் வம்சத்தில் உதித்தவர்கள். அதனால் அந்த உண்மையைக் காட்டும் 'ஆங்கிரஸ' என்னும் சொல்லையும் முந்துற முன்னம் தமது ப்ரவரத்தில் இந்த ராஜரிஷிகள் கூட்டிக் கொள்வர்; ஆக, இந்த வம்சத்தின் ப்ரவரம், 'ஆங்கிரஸ-ஆம்பரீஷ-யௌவநாச்வ' என்பதாயிற்று.

இந்த ஆங்கிரஸ வம்சத்தில் அவதரித்த அரசர்கள் அனைவரும் விலக்ஷணமான தேஜஸ் உள்ளவர்கள்; உத்தமரான ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகள். அதனால்தான் ஸ்ரீமந்நாராயணன் இந்த வம்சத்தில் பிறந்தார். 'ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்' என்பது ஸ்ரீராமனுடைய குலதர்மமாகக் கூறப்பட்டுள்ளமை காண்க. அவ்வாறு இருக்க, யுவநாச்வரையும் அம்பரீஷரையும் மட்டும் குலமுதல்வரான அங்கிரஸ் மகரிஷியுடன் இணைத்து இந்த கோத்ரத்தின் ப்ரவரத்தை உருவாக்கியதில் ஒரு விசேஷம் உள்ளது. அதைச் சிறிது விளக்குவோம்.

யுவநாச்வருடைய சரித்திரம் புனிதமானது, பிரஸித்தமானது. இவருக்குப் பிள்ளைப்பேறு இல்லாதிருந்தது; அதனால் ஏங்கித் தவித்தார். 'நல்ல வம்சம் நம்மோடு முடிந்து போய் விடுகிறதே' என்று கலங்கினார். அதற்காக ஒரு யாகம் செய்தார். முனிச்ரேஷ்டர்கள் பலரும் ஒன்றுகூடி மிகுந்த சிரத்தையுடன் இந்த யாகத்தை நடத்தி வைத்தனர். ஸகல தேவர்களும் அருள் நிரம்பினவர்களாக இதில் கலந்து கொண்டனர். யாகமும் செவ்வனே செய்து முடிக்கப்பட்டது. இப்படித் தெய்வ மானுஷ சக்திகளெல்லாம் ஒருங்கிணைந்து செய்யும் காரியம் பயனுறாமற் போகுமா? கைமேல் பலன் கிடைத்துவிட்டது. மாந்தாதா என்று பெயர் பெற்ற உத்தம குமாரன் பிறந்தான். வம்சம் தழைத்தது.

ஆனால் ஒரு விபரீத நிகழ்ச்சி இதில் நடந்துவிட்டது. கடைசி நிமிஷத்தில் யுவநாச்வர் அறியாமையினால் ஒரு சிறு தவறு செய்துவிட்டார். அதனால் வம்சம் நிர்மூலமாகப் போகும்படியான நிலைமை தோன்றிவிட்டது. அச்வினி தேவர்கள் பெருமுயற்சியுடன் இதைத் தவிர்த்தனர். யுவநாச்வர் சாகாமல் பிழைத்தார். பிள்ளையையும் பெற்றார்; வம்சமும் விளங்கியது. இவ்விதமான பயங்கரச் சோதனையில் விழுந்து தேறினமையைக் காட்டும் வகையில்தான் இவருடைய திருநாமம் 'ப்ரவர'த்தில் பொருத்தப்பட்டது.

## தாகசாந்தி

யாகத்தில், முனிவர்கள் அனைவரும் கலந்து ஆலோசித்து, யுவநாச்வருக்குப் பிள்ளைப்பேறு உண்டாவதற்காக மந்திரித்த தீர்த்தத்தை ஒரு கலசத்தில் பத்திரமாக வைத்து மூடிவிட்டு உறங்கிக்கொண்டிருந்தனர். நள்ளிரவு. யுவநாச்வருக்குத் தண்ணீர் தாகம் மீதூர்ந்துவிட்டது. திடீரென்று யாகசாலையில் நுழைந்தார். அந்தக் கலசத்தில் வைத்திருந்த நீரை முற்றும் வேகமாகக் குடித்துவிட்டுத் தம்மிடத்தில் போய் உறங்கினார். பல நாளாக யாக காரியங்களில் ஈடுபட்டுள்ளவர், பாவம்! பட்டினியாகவே இருந்திருக்கிறார். விடாய்த்துப் போனார். யாரையும் ஒன்றும் கேட்காமல், மந்திரித்த தண்ணீரைக் குடித்து தாகசாந்தி செய்து கொண்டுவிட்டார்.

## புருஷ கர்பம்

காலையில் எழுந்திருந்து முனிவர்கள் அவசர அவசரமாக அந்தக் கலசத்தைப் போய்ப் பார்த்தனர். அதில் இருந்த மந்திரித்த தண்ணீரை யுவநாச்வருடைய மனைவிக்குக் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் திட்டமிட்டிருந்தனர். அதைப் பருகியவுடன் அவள் கர்பவதியாவாள்; யுவநாச்வருக்கு நல்ல பிள்ளையாகப் பிறக்கப்போகிறது என்று பாரித்திருந்த அவர்கள், கலசம் காலியாக இருப்பதைக் கண்டு பிரமித்துப் போய்விட்டனர். "இதில் இருந்த நீரை யார் பருகினது?" என்று பெரும் குழப்பத்துடன் வினவினர். "நான்தான் குடித்தேன்" என்னும் பதில் யுவநாச்வரிடமிருந்து வந்தது.

முனிவர்கள் பேரதிர்ச்சியுற்றனர். 'அரசனுடைய வயிற்றில் கர்பம் தோன்றிவிட்டதே! இனி என்ன செய்வது?" என்று திகைத்துப் போயினர். நடந்தது நடந்துவிட்டது. இனி அதை மாற்றவே முடியாது. அரசனுக்குப் பிள்ளை இல்லையே என்னும் குறையைத் தீர்க்கச் செய்த முயற்சி முதலுக்கே மோசம் செய்துவிட்டது. புருஷனுடைய வயிற்றில் கர்பம்! குழந்தை உருப்படியாகப் பிறக்கப்போவதில்லை என்பது மட்டுமல்ல; இதில் அரசனும் மாண்டு போவது திண்ணம். ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை.

### புருஷப் பிரஸவம்

*அது கிருதயுகம். நினைத்தபடி செய்ய வல்ல வைத்தியர்கள் பலர் இருந்தனர். அரசனுக்கு உயர்ந்த சிகிச்சை அளிக்கப்பட்டது. கர்பம் ஒருவிதமான குறைவுமின்றி வளர்ந்து வந்தது. பத்து மாஸங்களும் மின்னல் வேகத்தில் கழிந்தன. யுவநாச்வர் அழகிய ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தார். அச்வினி தேவர்கள் அவருடைய வயிற்றை அறுத்துக் குழந்தையை உருப்படியாக எடுத்துவிட்டு மீண்டும் பழையபடியே தையல் போட்டுவிட்டனர். அரசரும் குழந்தையும் பிழைக்கும்படியாயிற்று. அனைவருக்கும் ஒரு பெருங்கவலை நீங்கிற்று. அந்தக் குழந்தையே 'மாந்தாதா' எனப் பெயர்பெற்ற புண்ணிய புருஷனாகியது பிற்காலத்தில்.*

*'தாயும் நீயே, தந்தையும் நீயே' என்கிறபடி, யுவநாச்வரே இந்தக் குழந்தைக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்தார். பாவம்! துரதிர்ஷ்டம் பிடித்த குழந்தை பெரிய சக்ரவர்த்திக்குப் பிறந்தாலும் தாய்ப்பாலின் சுவையறியாததாகிவிட்டது. யுவநாச்வருக்குப் பால் கொடுத்துக் குழந்தையை உயிர்ப்பிக்கும் வாய்ப்பு இல்லை. அவர் பெண் இனமில்லையே! அவரது மனைவிக்குப் பால் சுரக்கவில்லை. அவள் கர்பம் தரித்துக் குழந்தையைப் பெறவில்லையே! 'இவ்வாறு இயற்கையையும் மீறின சோதனைக்குள்ளாகிய இந்தத் துரதிர்ஷ்டக் குழந்தை யாரிடம் பால் சாப்பிடப் போகிறது?' என்று அங்கே கூடியிருந்தவர்கள் அனைவரும் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டனர். "என்னிடம்தான் பால் பருகப்போகிறது" என்னும் பதில் இந்திரனிடமிருந்து வந்தது. தவப்புதல்வனாகிய குழந்தை சாகாமல் பிழைக்க வேண்டுமே என்ற கவலை இந்திரனுக்கு. தனது விரலை நீட்டினான் குழந்தையின் வாயினுள். அமுதம் தோய்ந்த அந்த விரலைக் குழந்தை சுவைத்தது. ஒரு குறையுமின்றிக்கே நன்றாகத் தேறிவிட்டது. இந்த நிகழ்ச்சியை உணர்த்தும் 'மாம் தாதா' என்பதே குழந்தையின் பெயராக அமைந்து விட்டது. பிற்காலத்தில் உலகம் முழுவதும் இந்த அரசனது ஆளுகையில் இருந்ததாம்.*

यावत् सूर्य उदेति स्म यावच्च प्रतितिष्ठति ।
सर्वं तद् यौवनाश्वस्य मांधातुः क्षेत्रमुच्यते ॥

*யாவத் ஸூர்ய உதேதி ஸ்ம யாவச்ச ப்ரதிதிஷ்டதி ।*
*ஸர்வம் தத் யௌவநாச்வஸ்ய மாந்தாது: க்ஷேத்ரமுச்யதே ॥*

என்கிறது அக்கினிபுராண ச்லோகம். இரவும் பகலும் சூரிய ஒளி பரவும் இடங்களனைத்தும் மாந்தாதாவினுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தனவாம்.

தெய்வங்களும் முனிவர்களும் ஒன்றுகூடி அருள் புரிந்தமையினால் தோன்றிய மாந்தாதாவையும் இந்த கோத்ரக்காரர்கள் ப்ரவரத்தில் சொல்லிக்கொள்வதுண்டு. அப்போது, 'மாந்தாத்ரு – ஆம்பரீஷ – யௌவநாச்வ' என்று ப்ரவரம் இருக்கும். இருந்தாலும் 'அங்கிரஸ்' கணம்தானே இவர்கள்? அதனால் அவருடைய திருமேனி ஸம்பந்தம் இவர்களுக்குக் குலதனமாகிவிட்டது.

இந்த மாந்தாதாவின் பிள்ளை அம்பரீஷர். இவருடைய சரித்திரமும் பிரஸித்தமானதே. இவருக்கு இரண்டு சகோதரர்கள் இருந்தனர். ஒருவர் புருகுத்ஸர்; மற்றொருவர் முசுகுந்தர். புருகுத்ஸருடைய குமாரர் த்ரஸதஸ்யு என்பவர். இவருடைய வம்சஸ்தர்களே சடமர்ஷண கோத்திரக்காரர்கள். இப்படி அங்கிரஸ் மகரிஷியின் குடல்துவக்கு ரகுவம்சத்தாருக்கும் மற்றுமுள்ள அங்கிரஸ் கணத்தைச் சேர்ந்தவர்களுக்கும் பொதுவாக அமைந்தது. ரகுவம்சம் ஸௌர்ய வம்சம் என்றும், இக்ஷ்வாகு வம்சம் என்றும், மநு வம்சம் என்றும் வழங்கி வருகிறது. அங்கிரஸ் வம்சம் என்று வழங்கப்படவில்லையே என்று எண்ண வேண்டாம். அங்கிரஸ் மகரிஷி பிரம்மதேவருடைய முகத்திலிருந்தே தோன்றியவர். இவர்தாம் ஸௌர்யனையும் மநுவையும் உண்டுபண்ணினாராம். 'தபஸச் ச மநும் புத்ரம் பாநும் சாப்யங்கிரா: ஸ்ருஜத்' என்பது மகாபாரத ச்லோகம்.

மகாபாரதக் கதையில் 'ஆசார்யர்' என்றே அழைக்கப்படும் த்ரோணாசார்யர் இந்த அங்கிரஸ் வம்சத்தில் உதித்தவரே. 'த்ரோணமங்கிரஸாம் வரம், அங்கிரஸாம் வரிஷ்ட: அச்வத்தாமா' என்பது மகாபாரத வாக்கியம். இவருடைய குமாரர்கள்தாம் தேவகுருவான ப்ருஹஸ்பதியும், அவருக்கு முத்தண்ணாவாகிய உசத்யரும். கர்தமப்ரஜாபதியின் பெண்ணான ச்ரத்தாதேவி இவரது பார்யை. ஸிநீவாலி, குஹூ:, ராகா, அநுமதி: என்பவர்கள் இவரது பெண்கள். வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் இந்த அங்கிரஸ்ஸின் பெருமை பலவாறாகப் பேசப்பெறுகிறது. இவருடைய சரித்திரம் வெறும் கதையாக மட்டும் அமையவில்லை; நல்ல கர்மாக்களை அநுஷ்டிப்பதற்கு இன்றியமையாத

ஆதாரமாகவும் உள்ளது. இவரும் இவருடைய வம்சத்தவரும் ரிக்வேதத்தைக் கண்டெடுத்த மகரிஷிகளின் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். இதை விரிவாக இந்தக் கட்டுரையிலேயே பிறகு கூறுவோம். இப்போது இந்த அங்கிரஸ் கணத்தைச் சேர்ந்தவர்களை இவருடைய பெயராலேயே பெருமையுடன் கூறி வாழ்த்தும் சில ரிக்வேத மந்த்ரங்களைத் தருகிறோம்.

ये यज्ञेन दक्षिणया समक्ताः, इन्द्रस्य सख्यममृतत्वमानश ।
तेभ्यो भद्रमङ्गिरसो वो अस्तु प्रतिगृभ्णीत मानवं सुमेधसः ॥

— ரிக்வேதம், 10.62.1.

அங்கிரஸ்களே! யஜ்ஞங்களும் தக்ஷிணைகளும் உங்களுடன் ஒருங்கிணைந்தவை. நீங்கள் இந்திரனுடைய நண்பர்கள். அதனால் அம்ருதத்வத்தைப் பெற்றவர்கள். நல்ல மேதாவிகளான உங்களுக்குப் பல்லாண்டு பாடுகிறோம். நீங்கள் க்ஷேமமாக இருக்க வேண்டும். அறிவிற் சிறந்த நீங்கள் மநுவின் மகனை என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

य उदाजन् पितरो गोमयं वसु ऋतेनाभिन्दन् परिवत्सरे वलम् ।
दीर्घायुत्वमङ्गिरसो वो अस्तु प्रतिगृभ्णीत मानवं सुमेधसः ॥

— ரிக்வேதம், 10.62.2.

அங்கிரஸ்ஸுக்களே! நீங்கள் என் பித்ருக்கள் (குலமுதல்வர்கள்); 'பணி'களினால் அபகரிக்கப்பட்ட பசுமாடுகளாகிற செல்வத்தை, அவர்கள் மறைந்திருந்த மலையிலிருந்து வெளிக்கொணர்ந்தீர்கள். ஸத்யமயமான யஜ்ஞத்தின் சக்தியினாலேயே இதைச் செய்தீர்கள். வருஷம் முடிந்து மீண்டும் தோன்றுவதற்குள் 'வலன்' என்னும் அஸுரனைக் கொன்றீர்கள். இப்படிப்பட்ட மகிமை வாய்ந்த உங்களுக்கு நீண்ட ஆயுள் உண்டாகட்டும். பல்லாண்டு பல்லாண்டு பல்கோடி நூறாயிரம் ஆண்டுகள். மநுவின் புத்திரனாகிய என்னை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

य ऋतेन सूर्यमारोहयन् दिव्यप्रथयन् पृथिवीं मातरं वि ।
सुप्रजास्त्वमङ्गिरसो वो अस्तु प्रतिगृभ्णीत मानवं सुमेधसः ॥

— ரிக்வேதம், 10.62.3.

அங்கிரஸ்ஸுக்களே! ஸத்யஸ்வரூபமான யஜ்ஞத்தின் சக்தியினால் நீங்கள் ஆகாயத்தில் சூரியனை ஏற்றி நிறுத்தினீர்கள். ஸகல ப்ராணி வர்கங்களுக்கும் தாயாகிய பூமியைப் பரவும் இயல்புள்ளதாக (கடினமான நிலை மாறி இளகினதாக)ச் செய்தீர்கள். உங்களுக்கு நல்ல பிள்ளைகள் நிறையப் பிறக்க வேண்டும். மநுவின் மைந்தனாகிய என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

अयं नाभा वदति वल्गु वो गृहे देवपुत्रा ऋषयस्तच्छृणोतन ।
सुब्रह्मण्यमङ्गिरसो वो अस्तु प्रतिगृभ्णीत मानवं सुमेधसः ॥

— ரிக்வேதம், 10.62.4.

அங்கிரஸ்ஸுக்களே! நீங்கள் தேவ புத்திரர்கள் — அக்கினி தேவனுடைய புத்திரர்கள்; ரிஷிகள்; புலன்களுக்கு எட்டாத விஷயங்களையும் அறியும் ஆற்றல் பெற்றவர்கள். உங்களுடைய க்ருஹத்தில் (யாகத்தில்), மநுவின் குமாரனான இந்த நாபாநேதிஷ்டன் நன்மொழிகளைக் கூறுகிறான். உங்களுக்கு அழகிய ப்ரஹ்மதேஜஸ் என்றும் குறைவில்லாமல் இருக்க வேண்டும். மநுவின் புதல்வனாகிய என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்.

குறிப்பு: இந்த மந்திரத்திலும் அடுத்ததிலும் ரிஷி தம்மைப் படர்க்கையில் பேசுகிறார்.

विरूपास इदृषयस्त इद्गंभीरवेपसः ।
ते अङ्गिरसस्सूनवस्ते अग्नेः परिजज्ञिरे ॥

— ரிக்வேதம், 10.62.5.

இந்த அங்கிரஸ்ஸுக்கள், அரிய விஷயங்களைக் காணும் சக்தி வாய்ந்தவர்கள் (ரிஷிகள்). பற்பல நிறங்களும் வடிவமும் கொண்டவர்கள்; கம்பீரமான யாகங்களைச் செய்பவர்கள். இந்த அங்கிரஸ்ஸுக்கள் அக்கினியிலிருந்து, அந்த அக்கினி தேவனுடைய பிள்ளைகளாகத் தோன்றினவர்கள்; தோன்றி எங்கும் வியாபித்துள்ளனர்.

ये अग्नेः परिजज्ञिरे विरूपासो दिवस्परि ।
नवग्वो नु दशग्वः, अंगिरस्तमः स चा देवेषु मंहते ॥

— ரிக்வேதம், 10.62.6.

பல விதமான நிறங்களுள்ள இந்த அங்கிரஸ்ஸுக்கள் ஒளிமயமான அக்கினியிலிருந்து பலவாருகத் தோன்றினர்கள். அனைவரும் ஸத்ரயாகங்களை அநுஷ்டித்தனர். சிலர் ஒன்பது மாஸங்களில் ஸ்வர்க்கலோகமடைந்தனர். சிலருக்குப் பத்து மாதங்களில் ஸ்வர்கலோகம் கிடைத்தது. இந்த இரு வகையானவர்களும் அங்கிரஸ்ஸுக்களுக்குள் சிறந்தவர்கள். அவர்களது அக்கினியும் சிறந்தது. அந்த அக்கினி, தேவர்களுடன் இருந்துகொண்டு எனக்கு மிகுந்த செல்வத்தைத் தருகிருர்.

इन्द्रेण युजा निःसृजन्त वाघतो व्रजं गोमन्तमश्विनम् ।
सहस्रं मे ददतो अष्टकर्ण्यः श्रवो देवेष्वक्रत ॥

— ரிக்வேதம், 10.62.7.

இந்த அங்கிரஸ்ஸுக்கள் கர்மவீரர்கள். இந்திரனுடன் கூடி அவனது ஸஹாயத்தைப் பெற்றவர்கள். 'பணி'களினல் ஆக்கிரமிக்கப்பட்ட ஆனிரைச் செல்வத்தையும் குதிரைகளின் கூட்டத்தையும் விடுவித்தவர்கள் இவர்களே. எனக்கு, ஸத்ரயாகம் பண்ணுவதற்கான ஆயிரம் பசுக்களைத் தந்தனர். அந்தப் பசுக்கள் என்ன சாமானியமானவையா? ஒவ்வொன்றுக்கும் எட்டுக் காதுகள். இவை போன்ற அதிசயமான பசுக்களை வேறு எங்கும் காண முடியாது. தேவர்களிடத்திலும் இந்த அங்கிரஸ்ஸுக்களின் புகழ் பரவிவிட்டது.

இவ்வாறு அங்கிரஸ்ஸுக்களை வாயார வாழ்த்தும் இந்த ரிக்வேத ரிஷிக்கு நாபாநேதிஷ்டர் (नाभानेदिष्ठः) என்று பெயர். இவர் மநுவின் குமாரர். இவர் ஏன் அங்கிரஸ்ஸுக்களை இப்படி வாழ்த்துகிருர்? இதற்குப் பதில் யஜுர் வேதம், தைத்திரீய ஸம்ஹிதை, மூன்ரும் காண்டம், முதல் ப்ரச்நம், ஒன்பதாம் அநுவாகத்தில் காண்கிறது. இது ஒரு குட்டிக் கதை.

சூரிய வம்சத்தின் ஆதிமன்னரான மநுவுக்குப் பிள்ளைகள் பலர் இருந்தனர். தமது செல்வத்தை அவரே தம் குமாரர்களுக்குப் பங்கு பிரித்துக் கொடுத்தார். அவருடைய குமாரர்களுள் நாபாநேதிஷ்டன்தான் கடைக்குட்டி. சொத்துப் பிரிவினை நடந்தபோது அவன் குருகுலத்தில் பிரம்மசாரியாக இருந்து வேதாத்தியயனம் பண்ணிக்கொண்டிருந்தான். பாகப் பிரிவினை நடந்ததே அவனுக்குத் தெரியாது. பிதாவான மநு அவனுக்காக ஒரு பாகம் நிறுத்தி வைக்கவில்லை. அவனை அறவே மறந்து, சொத்து

முழுவதையும் மற்றப் பிள்ளைகளுக்கே பங்கு போட்டுக் கொடுத்துவிட்டார்.

मनुः पुत्रेभ्यो दायं व्यभजत्, स नाभानेदिष्ठं ब्रह्मचर्यं वसन्तं निरभजत् ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 3.1.9.

அவன் தன் தந்தையிடம் வந்தான். "எனக்கு ஏன் பாகம் இல்லாமற் செய்துவிட்டீர்கள்?" என்று அப்பாவைக் கேட்டான். "உனக்குச் சொத்தில் பாகம் வைக்கவில்லை என்பது உண்மையே. ஆனால் அதனால் நீ குறைப்படாதே. வேறு வழியில் உனக்குச் சொத்து சேருவதற்கு வகை செய்திருக்கிறேன்" என்று பதிலிறுத்தார் மநு.

स आगच्छत्, सोऽब्रवीत्, कथा मा निरभागिति? न त्वा निरभाक्षमित्यब्रवीत् ।

"இதோ பார். இந்த அங்கிரஸ்ஸுக்கள் ஸ்வர்க்கலோகம் போவதற்காக ஸத்ரயாகம் அநுஷ்டித்துக்கொண்டிருக்கிறார்கள். சிறந்த மேதாவிகளான இவர்களுக்குங்கூட ஸ்வர்க்கலோகம் இருக்கும் இடமும் அதை அடையும் வழியும் தெரியவில்லை.

अङ्गिरस इमे सत्रमासते, ते सुवर्गं लोकं न प्रजानन्ति ।

"இந்த ப்ராஹ்மணத்தை (வேதபாகத்தை) நீ போய் அவர்களுக்குச் சொல். உடனே அவர்கள் ஸ்வர்கலோகத்தை அறிந்து கொண்டு அங்கே சென்றுவிடுவார்கள். போகும்போது தம் பசுக்களை உனக்குத் தந்துவிடுவார்கள். அதுவே உனக்குச் செல்வமாகும்" என்று சொன்னார் மநு.

तेभ्य इदं ब्राह्मणं ब्रूहि, ते सुवर्गं लोकं यन्तो य एषां पशवस्ताँस्ते दास्यन्तीति ।

அப்படியே நாபாநேதிஷ்டன் அங்கிரஸ்ஸுக்களின் யாக சாலையைச் சென்றடைந்தான். இந்த ப்ராஹ்மணத்தை அவர்களுக்குச் சொன்னான். அவர்கள் உடனே ஸ்வர்கத்துக்குப் போய்விட்டனர். போகும்போது தம்மிடம் இருந்த பசுக்களை நாபாநேதிஷ்டனுக்குக் கொடுத்துவிட்டுச் சென்றனர். அதுவே அவனுக்குப் போதுமான சொத்தாகிவிட்டது.

तदेभ्योऽब्रवीत्, ते सुवर्गं लोकं यन्तो य एषां पशव आसन् तानस्मा अददुः ।

இந்தக் கதையில் வருகிற மநுவின் கடைக்குட்டியான பிள்ளை நாபாநேதிஷ்டன்தான் அங்கிரஸ்ஸுக்களை அழகிய ரிக்வேத மந்திரங்களால் வாழ்த்துகிறுன். ஒவ்வொரு மந்திரத்திலும் 'ஸுமேதஸ: — சிறந்த அறிவு படைத்தவர்கள்' என்று அங்கிரஸ்ஸுக்களை வியந்து புகழ்ந்து கூறுகிறுன் இந்த நாபாநேதிஷ்டன். அவ்வாறு கூறித் தன்னை அங்கீகரிக்குமாறு வேண்டிக்கொள்கிறுன். ஆனுல் இவன் வந்த காரியம் என்ன? இவர்களுக்குத் தெரியாத விஷயமொன்றைச் சொல்லித்தரவே இவன் வந்திருக்கிறுன். ஸ்வர்கலோகம் அடையவேண்டி, ஸத்ரயாகம் பண்ணும் அங்கிரஸ்ஸுக்களுக்கு அந்த ஸ்வர்கலோகம் இருக்கும் இடம் தெரியவில்லை. ஒரு குறிப்பிட்ட வேதபாகம் அவர்களுக்குத் தெரியாது. அதை உபயோகித்துச் செய்ய வேண்டிய யாக காரியத்தை அவர்கள் செய்யவில்லை. அந்த வேதபாகம் நாபாநேதிஷ்டனுக்குத் தெரியும். இவனுடைய தந்தையான மநுவுக்கு மட்டும் அங்கிரஸ்ஸுக்களுக்கு இவ் விஷயத்தில் அறிவுக் குறைவுள்ளமை தெரியும். அவர்தாம் தம் மகனுகிய நாபாநேதிஷ்டனுக்கு இவ்விஷயத்தைச் சொல்லியனுப்பினுர்.

தெரியாத விஷயத்தைச் சொல்லிக் கொடுக்கும்போது, 'அறிவிற் சிறந்தவர்களே!' என்று அழைக்கிறுன். எவ்வளவு உயர்ந்த பண்பு! அவர்கள் எல்லாமறிந்தவர்கள். இந்த ஒரு விஷயம் அவர்களுக்குத் தெரியாததனுல் அவர்கள் அறிவிலிகளாகி விடமாட்டார்கள். இவ்வாறு கண்ணியமான முறையில் அவர்களை அணுகி, அவர்களுக்கு அவசியமான வேதமந்திரங்களைச் சொல்லிக்கொடுத்து, அவர்களை ஸ்வர்கலோகமடையச் செய்து, அவர்களின் ஆசியுடன், அவர்கள் வைத்திருந்த ஆனிரைச் செல்வத்தை நாபாநேதிஷ்டன் அடைந்து மகிழ்ந்தான். இந்தக் கதையிலிருந்து, யாகாநுஷ்டானத்தில் ஒரு முக்கியமான இடம், அங்கிரஸ்ஸுக்களின் வாயிலாக அனைவருக்கும் தெரியலாயிற்று.

இதேபோல் மற்ருெரு கதை: தர்சபூர்ணமாஸம் என்பது ஒரு யாகம். பௌர்ணமாஸியிலும் அமாவாஸ்யையிலும் ஆயுட்காலம் முழுவதும் செய்ய வேண்டிய யாகம் இது. ஆதித்தியர்களும் அங்கிரஸ்ஸுக்களும் இந்த யாகத்தைச் செய்ய விரும்பினர். அதற்காக அவர்கள் அக்ந்யாதாநம் (சாதராண அக்கினியை வைதிக காரியங்களுக்கு ஏற்றதாகச் செய்யும் சடங்கு)

பண்ணினார்கள். உடனே அங்கிரஸ்ஸுக்கள் அவசர அவசரமாக அந்த யாகத்தைப் பண்ணத் தொடங்கிவிட்டனர்.

आदित्याश्चाङ्गिरसश्चाग्नीनाऽदधत, ते दर्शपूर्णमासौ प्रैप्सन्, तेषामङ्गिरसां निरुप्तं हविरासीत् ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 3.5.1.

ஆதித்தியர்களோ அவ்வாறு அவசரப்படவில்லை. சற்று நிதானித்துப் பார்த்தனர். ஒரு விஷயம் அவர்களுக்குப் புலனாயிற்று: 'ஸாரஸ்வத ஹோமங்கள்' என்று வழங்கும் ஹோமங்கள் இரண்டு உண்டு. அவற்றை முந்துறமுன்னம் பண்ணிவிட்டு, அதன் பிறகுதான் தர்சபூர்ணமாஸ யாகங்களைப் பண்ண வேண்டும். அப்பொழுதுதான் அந்த யாகங்கள் தூயனவாக இருக்கும். இவ் விஷயத்தை அங்கிரஸ்ஸுக்கள் உணரவில்லை; ஆதித்தியர்கள் அறிந்தனர். ஸாரஸ்வத ஹோமங்களை முதலில் அநுஷ்டித்தனர். அதனால் அவர்களுடைய தர்சபூர்ணமாஸ யாகங்கள் புனிதமாயின.

अथाऽऽदित्या एतौ होमावपश्यन्, तावाजुहवुस्ततो वै ते दर्शपूर्णमासौ पूर्व आलभन्त ।

இனி வருங்காலத்தில் தர்சபூர்ணமாஸ யாகம் அநுஷ்டிப்பவர்கள் அனைவரும் இவ் விஷயத்தை நன்கு உணர்ந்து இவ்வழியிலேயே அநுஷ்டிக்க வேண்டும். அப்பொழுதுதான் முறைப்படி இந்த யாகங்களை அநுஷ்டித்தவர்களாவார்கள்.

दर्शपूर्णमासावालभमान एतौ होमौ पुरस्ताज्जुहुयात्, साक्षादेव दर्शपूर्णमासावालभते ।

இதிலிருந்தும் யாகாநுஷ்டானத்தில் ஒரு விசேஷம் புலனாகிறது. இதிலும் அங்கிரஸ்ஸுக்கள் செய்த தவறு மற்றவர்களால் திருத்தப்பட்டதாக உள்ளது. இதனால் அங்கிரஸ்ஸுக்களுக்குக் குறைவு ஏதும் வாராது. பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் அல்லவா இந்த விஷயம் நடைபெற்றது? அப்பொழுது எவருக்கும் யாகாநுஷ்டானத்தில் வழிவகை தெரியாத ஸமயம். அங்கிரஸ்தாம் முதல் முதலில் வழிகாட்டியாக யாகங்களை அனுஷ்டித்தார். அதில் இருந்த சில குறைகளை அவர்போன்ற அறிவு படைத்த மற்றவர்கள் எடுத்துக் காட்டினர். சாலை சீர் செய்யப்படாமல் கரடுமுரடாக இருந்த காலத்தில் தைரியமாக

வண்டியை ஓட்டி வழி வகுப்பவன்தான் பல இடங்களில் தடுக்கி விழுவான். அவன் காட்டிய வழியில் அழகாகச் செப்பனிட்ட பாதையில் யார் வேண்டுமானாலும் உல்லாஸமாக வண்டியை ஓட்டி இன்புறலாம். பிற்காலத்தில் அபாயமில்லாமல் வண்டி ஓட்டுகிறவர்களைக் காட்டிலும் முற்காலத்தில் தட்டுத் தடுமாறி வண்டி ஓட்டியவர்கள் தாம் மிகச் சிறந்தவர்கள். எதையும் ஒளிவு மறைவின்றி உள்ளது உள்ளபடியே-கள்ளங்கவடில்லாமல் பேசும் வேதம். அதனால் அங்கிரஸ்ஸின் தனிச் சிறப்பைப் பலகாலும் புகழ்ந்து கொண்டாடுவது போலவே அவருடைய தவறுகளையும் சொல்லிவிடும். அதனால் அவர்களுடைய பெருமை மேலும் மேலும் உயருமேயன்றிச் சிறிதும் குன்றாது.

## புரோடாசம்

தர்சபூர்ணமாஸ யாகத்தில் ஹோமம் செய்யப்பட வேண்டிய பொருள்களில் இதுவும் ஒன்று. இது அக்கினி தேவனுக்கு ஸமர்ப்பிக்க வேண்டியது. ஆமையின் வடிவம்போல் அரிசிமாவினால் இதைச் செய்ய வேண்டும். இந்த வழக்கத்துக்கு அங்கிரஸ்தாம் வழி வகுத்தவர். இதற்கும் வேதமே ஒரு கதையைச் சொல்லிக் காட்டுகிறது.

अङ्गिरसो वा इत उत्तमास्सुवर्गं लोकमायन्, तदृषयो यज्ञवास्त्वभ्यवायन्, तेऽपश्यन् पुरोडाशं कूर्मं भूतँ सर्पन्तम् ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 2.6.3.

அங்கிரஸ்ஸுக்கள் இவ்வுலகிலிருந்து உயர்ந்தவர்களாகி (மேல்நோக்கிக் கிளம்பி) ஸ்வர்கலோகம் சென்றடைந்தனர். அவர்களது யாகபூமியை ரிஷிகள் அடைந்தபோது அங்கு ஓர் அதிசயத்தைக் கண்டனர். புரோடாசம் (ஆமை வடிவமுள்ளது) மெதுவாக ஆமை நகருவதுபோல யாகசாலைக்கு வெளியில் ஊர்ந்து சென்றுகொண்டேயிருந்தது.

तमब्रुवन्निन्द्राय ध्रियस्व, बृहस्पतये ध्रियस्व, विश्वेभ्यो देवेभ्यो ध्रियस्वेति, स नाध्रियत ।

"புரோடாசமே! நீ வெளியில் செல்ல வேண்டாம். யாகசாலையிலேயே தங்கியிருப்பாயாக. உன்னை இந்திரனுக்கு ஹோமம் செய்கிறோம். ப்ருஹஸ்பதிக்கு ஹோமம் செய்கிறோம்.

விச்வேதேவர்களுக்கு ஹோமம் செய்கிறோம்" என்று அவர்கள் சொன்னார்கள். ஆனால் இதைக் கேட்டு அது நிற்கவில்லை; போய்க்கொண்டே இருந்தது.

तमब्रुवन्नग्नये ध्रियस्वेति, सोऽग्नयेऽध्रियत ॥

ரிஷிகள் விடவில்லை. "உன்னை அக்கினிக்கு ஹோமம் பண்ணுகிறோம். நீ வெளியேறாமல் நில்" என்று கூறினர். உடனே புரோடாசம் நிலைத்து நின்றுவிட்டது.

यदाग्नेयोऽष्टाकपालोऽमावास्यायां च पौर्णमास्यां चाच्युतो भवति ।

அதனால்தான் அமாவாஸ்யையிலும் பௌர்ணமாஸியிலும் அஷ்டாகபாலமான (எட்டுக் கபாலங்களில் வைத்துச் சூடேற்றப்படுகிற) புரோடாசம் அக்கினிக்கு மறவாமல் ஹோமம் பண்ணப் பெறுகிறது. கபாலம் என்பது மண்டையோடல்ல; மண்ணால் செய்த சிறு ஓடு. இதில் நெருப்புத் தணலைக் கொட்டிச் சூடேற்றி, நெருப்பை அகற்றிவிட்டு அதன்மேல் புரோடாசத்தை வைத்துச் சூடேற்றுவார்கள்.

**தீர்த்த ஸ்நானம்**

நமது பாரத புண்ணிய பூமியில் புண்ணிய தீர்த்தங்களுக்குக் குறைவில்லை. புண்ணியத்தைத் தரும் நதிகளும் எண்ணற்றவை. அதனால் தீர்த்த யாத்திரை செய்வதும் புண்ணிய தீர்த்தங்களில் முறைப்படி நீராடுவதும் நம் நாட்டு மக்களுக்கு மிகமிகப் பழக்கமானவை. இங்கே 'தீர்த்தம்' என்னும் சொல் இரண்டு பொருளுள்ளது. புனிதமான நீரையும் இந்தச் சொல் உணர்த்தும். அதுபோலவே மகான்கள் இறங்கி நீராடும் துறையையும் குறிக்கும். இதன் உட்பொருளைச் சிறிது விளக்குவோம் இங்கு.

கங்கை நதி புனிதமானது. இந்த ஜலத்துக்குத் தனியான மகிமையுண்டு. அதனால் எல்லாரும் கங்கா ஸ்நானம் செய்கின்றனர் -பாவம் தொலையும், புண்ணியம் சேரும் என்பதனால். கங்கா தீர்த்தம் என்னும் சொல் கங்கையின் நீரைக் குறிக்கும். கங்காதீர்த்த ஸ்நானம் என்றால் கங்கையின் நீரால் ஸ்நானம் செய்வதையே குறிப்பிடுகிறோம். நேராக, கங்கையாற்றில் சென்று ஸ்நானம்பண்ண முடியாதவர்கள் அங்கே செல்லும் சக்தியுள்ளவர்கள் மூலம் அதைத் தமது இருப்பிடத்தில் வரவழைத்து, அதில் ஸ்நானம் செய்து

விரும்பிய பயனைப் பெறுவர். 'கங்கை கொண்ட சோழன்', 'கங்கைகொண்டான் மண்டபம்' - இவை போன்ற சொற்கள் இந்த நிகழ்ச்சியையே எடுத்துக் காட்டுவனவாம்.

'கங்காதீர்த்த ஸ்நானம்' என்பதற்கு மற்றொரு பொருளும் உண்டு. கங்கை நதி ஓடும் இடங்களிலுள்ள இறங்கும் துறைகளை, 'கங்காதீர்த்தம்' என்னும் சொல்லால் சொல்லி, அந்தத் துறையில் ஓடிக்கொண்டிருக்கும் நீரில் முழுகுவதையே இந்தச் சொல்லால் உணர்த்தும் வழக்கமும் உண்டு. வெளியில் கொண்டுவரப்படும் நீருக்கு இந்த மகிமை இராது. நீண்ட தூரம் ஓடும் புண்ணிய நதிகளின் கரையில் வெவ்வேறு இடங்களில் ஆச்ரமம் அமைத்துக்கொண்டு பற்பல மகான்கள் பலகாலும் ஸ்நானம் செய்திருக்கின்றனர். அந்த அந்தத் துறைகளில் அதனால் ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டுள்ளது. அதையும் சேர்ந்து அடைய விரும்புகிறவர்கள், ஆறு ஒன்றேயாக இருந்தாலும் வெவ்வேறு துறைகளில் சென்று நீராடுவது நம் நாட்டில் ஸர்வஸஹஜமே. அத்ரி தீர்த்தம், ப்ருகு தீர்த்தம், ராம தீர்த்தம் என்று இவ்வாறாகப் பல இறங்கும் துறைகள் வழங்கப்பெறுவது நாடும் நகரமும் நன்கறிந்ததேயாம். இந்த ஸம்பிரதாயம் அங்கிரஸ் மகரிஷியினால் தோற்றுவிக்கப்பட்டது.

## தீக்ஷை - தபஸ்

யாகம் செய்து ஸ்வர்கலோகம் சென்றனர் அங்கிரஸ்ஸுக்கள். யாகம் செய்யும்போது தீக்ஷை செய்துகொள்ள வேண்டும். பட்டினி கிடக்க வேண்டும். தனது பொருளை ஏராளமாக வாரி வழங்க வேண்டும். தீக்ஷை என்பது, தலைமயிரை வளர்ப்பதுதான் என்று நினைக்க வேண்டாம். பல கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடந்துகொள்ளும் நியமங்களையே தீக்ஷை என்பர். நமைச்சலெடுத்தால் நகத்தால் சொறியக்கூடாது; மான் கொம்பினால்தான் சொறிந்து கொள்ள வேண்டும். உடம்பெல்லாம் வெண்ணெய் தடவிக்கொள்ள வேண்டும். இப்படி பல நியமங்கள் உள்ளன. இவற்றை ஒன்றுகூட்டித் 'தீக்ஷை' என்னும் சொல்லால் வழங்குகிறோம். இந்த நியமங்களை ஏற்று, இவற்றின்படியே தவறாமல் நடந்துகொள்பவரை 'தீக்ஷிதர்' என்கிறோம். அங்கிரஸ்ஸுக்களும்

இவ்வாறே தீக்ஷை செய்துகொண்டு தபஸ்ஸையும் மேற்கொண்டனர்.

तप इति तपो नानशनात्परम् ।

— தைத்திரீய ஆரண்யகம், 10.62.

एतत् खलु वाव तप इत्याहुः, यः स्वं ददातीति ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 6.1.6.3.

என்கிறபடியே பட்டினி கிடத்தல், செல்வத்தை வழங்குதல் முதலிய தபஸ்ஸையும் அவர்கள் அநுஷ்டித்தனர். யாகம் முடிந்ததும் ஸ்வர்கலோகத்துக்கு அவர்கள் சென்றுவிட்டனர். யாகத்துக்காக மேற்கொண்ட தீக்ஷையும் தபஸ்ஸும் இனி அவர்களுக்கு அவசியமில்லை. யாகம்தான் பூர்த்தியாகிவிட்டதே! அதற்குமேல், அதன் பயனும் கைகூடிவிட்டதே! அதனால் தீக்ஷையையும் தபஸ்ஸையும் அவர்கள் இங்கேயே விட்டுச் சென்றனர். தாங்கள் தினமும் இறங்கி நீராடும் தீர்த்தத்தில்தான் அவர்கள் தமது தீக்ஷையும் தபஸ்ஸையும் விட்டுச் சென்றனர். அதனால் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வது மிகவும் நல்லது. இப்படிச் செய்பவன் தீக்ஷையையும் தபஸ்ஸையும் நேராகவே பெறுவான். தன்னைப் போன்றவர்களின் நடுவில் மிகவும் புனிதனாகக் கருதப்படுவான். இதையே ஸோமயாக தீக்ஷா ப்ரகரணத்தில் வேதம் விளக்குகிறது.

अङ्गिरसस्सुवर्गं लोकं यन्तोऽप्सु दीक्षातपसी प्रावेशयन्नप्सु स्नाति, साक्षादेव दीक्षातपसी अवरुंधे, तीर्थे स्नाति, तीर्थे हि ते तां प्रावेशयन्, तीर्थे स्नाति, तीर्थमेव समानानां भवति ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 6.1.1.

இன்றும் கிராமங்களில் 'ஸ்வாமி துறை' என்பது போன்ற பெயர்களையிட்டு ஒவ்வொரு துறையை வழங்குதும், அந்த அந்தத் துறையில் ஏற்கனவே நீராடியுள்ள மஹநீயர்களின் ஸ்ரீபாததீர்த்தம் தனக்குக் கிட்டியதாக எண்ணி அவற்றில் ஸ்நானம் செய்வதும் நம் நாட்டில் வழக்கிலுள்ளது. இந்த அங்கிரஸ்ஸுக்களின் உதாரணத்தையே இது பிரதிபலிக்கிறது.

## அங்கிரஸாம் த்விராத்ரம்

அங்கிரஸ்ஸுக்களின் பெயராலேயே வழங்கும் யாகம் இது. அத்ரி சதூராத்ரம், ஜமதக்னி சதூராத்ரம் என்று இப்படி ஒவ்வொரு

மகரிஷியின் பெயரால் சில யாகங்கள் வழங்குகின்றன. அதுபோலத்தான் இதுவும். ஸகல யாகங்களையும் அனவரதம் அநுஷ்டித்து உலகக்ஷேமத்துக்கு அடிகோலினவர்களான அங்கிரஸ்ஸுக்களின் பெயர் இது ஒன்று தவிர மற்ற எல்லா யாகங்களுக்கும் ஸமானமாகப் பொருந்தக் கூடியதே. அங்கிரஸாம் தர்சபூர்ணமாஸம், அங்கிரஸாம் ஜ்யோதிஷ்டோமம் என்று இப்படியெல்லாம் வழங்குவதில் குற்றமொன்றுமில்லை. ஆயினும் இந்த த்விராத்ர யாகத்தில் ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. அது காரணமாக இந்தப் பெயரால் இது வழங்குகிறது.

த்விராத்ரம், த்வ்யஹம் என்று யாகங்களுக்குப் பெயர் உண்டு. இவற்றிலுள்ள 'ராத்ரி' என்னும் பதம் இரவை மட்டும் குறிப்பதன்று; அஹோராத்ரத்தையே (ஒரு முழு நாளையே) குறிக்கும். அவ்வாறே 'அஹஸ்' என்னும் சொல் பகலை மட்டும் குறிப்பதாகாது; முழு நாளையே உணர்த்தும். இரண்டு நாட்களில் பண்ணி முடிக்க வேண்டிய யாகம் 'த்விராத்ரம்' எனப்படும். இந்த அங்கிரஸாம் த்விராத்ரத்தில், முதல் நாளில் ஸாமகானத்தின் முடிவில் 'ஹவிஷ்மாந்' என்னும் பதம் இருக்க வேண்டும். இரண்டாம் நாள் ஸாமகானத்தின் முடிவில் 'ஹவிஷ்க்ருத்' என்னும் பதம் இருக்க வேண்டும். இந்த ஹவிஷ்மாந், ஹவிஷ்க்ருத் என்னும் சொற்கள் இரண்டும் அங்கிரஸ்ஸுக்களுடைய கணத்தைச் சார்ந்த இருவரின் பெயர்களாம். அவ்விருவர்தாம் இந்த த்விராத்ர யாகத்தைக் கண்டுபிடித்தவர்கள். அதை நினைவுறுத்தவே அவர்களுடைய பெயர்களை இந்த யாகத்தின் முடிவில் பாடுகிறோம்.

தைத்திரீய ஸம்ஹிதை, ஏழாம் காண்டம், முதல் ப்ரச்நம், நாலாவது அநுவாகத்தில் இந்த விஷயம் சொல்லியிருக்கிறது.

अङ्गिरसो वै सत्रमासत, ते सुवर्गं लोकमायन् ।

அங்கிரஸ்ஸுக்கள் (அங்கிரஸ் மகரிஷியின் வம்சஸ்தர்கள், குலமுதல்வருடைய பெயராலேயே வழங்கப்படுகிறவர்கள்) ஸத்ரயாகம் பண்ணினார்கள். அதன் பயனாக அவர்கள் ஸ்வர்க லோகமடைந்தனர்.

तेषाँ हविष्माँश्च हविष्कृच्चाहीयेताम् ।

அந்தக் கூட்டத்தில் இருவர் ஸ்வர்க லோகமடையாமல் இங்கேயே தங்கிவிட்டனர். அவ்விருவருக்கும் முறையே ஹவிஷ்மான், ஹவிஷ்க்ருத் என்று பெயர்.

तावकामयेतां सुवर्गं लोकमियावेति ।

'நாமும் மற்றவர்களைப் போலவே ஸ்வர்க லோகத்துக்குப் போக வேண்டும்' என்று அவ்விருவரும் விரும்பினர்.

तावेतं द्विरात्रमपश्यतां तमाहरतां तेनायजेताम् ।

அவர்கள் இந்த த்விராத்ர யாகத்தைக் கண்டுபிடித்தனர். அதை அநுஷ்டிக்கும் முறையை நன்கறிந்துகொண்டு அநுஷ்டித்தனர்.

ततो वै तौ सुवर्गं लोकमैताम् ।

அது காரணமாக அவ்விருவரும் ஸ்வர்க லோகமடைந்தனர்.

य एवं विद्वान् द्विरात्रेण यजते सुवर्गमेव लोकमेति ।

இவ் விஷயத்தை அறிந்துகொண்டு இந்த த்விராத்ரத்தை அநுஷ்டிப்பவருக்கும் ஸ்வர்க்க லோகம் சென்று சேரும் வாய்ப்பு கிட்டும்.

हविष्मन्निधनं पूर्वमहर्भवति, हविष्कृन्निधनमुत्तरं प्रतिष्ठित्यै ।

முதல் நாள் ஸாமகானத்தின் முடிவில் 'ஹவிஷ்மாந்' என்னும் பதமும், இரண்டாம் நாள் ஸாமகானத்தின் முடிவில் 'ஹவிஷ்க்ருத்' என்னும் பதமும் இருக்க வேண்டும். அப்போதுதான் யாகம் நிலைத்திருக்கும். இதுதான் அங்குள்ள வேத வாக்கியங்களின் கருத்து.

இந்த த்விராத்ர யாகத்தை அநுஷ்டிப்பவர்கள் அனைவரும், அன்றும் இன்றும் என்றும், 'அங்கிரஸாம் த்விராத்ரேண யக்ஷ்யே' என்று ஸங்கல்பித்துக்கொண்டுதான் இதைச் செய்ய வேண்டும். ஹவிஷ்மாந் ஹவிஷ்க்ருத் என்னும் அங்கிரஸ் கணத்தைச் சார்ந்த இரண்டு மகரிஷிகளுடைய புனிதமான திருநாமங்களை வேதமந்திரங்களோடு வாசியற ஸாமகானத்துடன் இசைத்து அவ்விருவருக்கும் நன்றி கலந்த வணக்கம் செலுத்த வேண்டும். இப்படியே இது நடந்து வருகிறது. அங்கிரஸ் மகரிஷியின் சாச்வதமான புகழுக்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

### ஸ்நாநாங்க தர்ப்பணம்

மற்றுமொன்று காண்மின்: ஸ்நானம் என்பது ஒவ்வொருவரும் பிரதிதினமும் தவறாமல் செய்ய வேண்டிய காரியம். 'ஸ்நாநமூலா:

க்ரியாஸ் ஸர்வா:' என்பது பழமொழி. திதி வார நக்ஷத்திரங்களைச் சொல்லி ஸங்கல்பித்துக்கொண்டுதான் ஸ்நானம் பண்ண வேண்டும். அபூர்வமான சில விசேஷ ஸந்தர்ப்பங்களில்தான் ஸங்கல்பமில்லாமல் ஸ்நானமுண்டு. இப்படி ஸங்கல்ப பூர்வகமான ஸ்நானத்தில் ஸ்நாநாங்க தர்ப்பணம் அவசியம் பண்ண வேண்டும். அதைப் பண்ணின பிறகேதான் ஸ்நான பூர்த்தி ஏற்படும். ஸர்வலோகத்தினராலும் தினந்தோறும் பலகாலும் அநுஷ்டிக்கப்படும் ஸ்நாநாங்க தர்ப்பணத்தில், மூன்றுவதான பித்ருகணத்தில் அங்கிரஸ் மகரிஷி கம்பீரமாக வீற்றிருக்கிறார். தீக்ஷையையும் தபஸ்ஸையும் நீருள் செலுத்தி, நீராடுகிறவர்கள் அனைவருக்கும் அவை கிடைக்குமாறு செய்தவர் அல்லவா இவர்? இவரைத்தானே நீரில் முழுகும்போது முதல்முதலாக நினைக்க வேண்டும்? தேவ-ரிஷி-பித்ரு-தர்ப்பணம் என்றும் இதை வழங்குவர். தேவர்களுள் முதன்மையான ப்ரஹ்மாவைச் சொல்லி, அவர்போன்ற மற்றத் தேவர்களுக்கும் தர்ப்பணம் செய்கிறோம், 'ப்ரஹ்மாதயோ யே தேவா: ...' என்று.

ரிஷிகளுள் முக்கியமாக வ்யாஸரைத் தேர்ந்தெடுத்து, அவர் முதலான ரிஷிகளையும் தர்ப்பிக்கிறோம். 'க்ருஷ்ணத்வைபாயநாதயோ யே ரிஷய: ...' என்று. பித்ருக்களில் முக்கியமான சிலரைக் கூறி, அவர்கள் போன்ற மற்றப் பித்ருக்களையும் தர்ப்பிக்கிறோம். ஆனால் இதில் மூவகைக் கணங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பெயரை எடுத்துக் கூறி தர்ப்பணம் செய்கிறோம். அதில் இரண்டாவது கணத்தின் முதல்வராக 'யமோங்கிரஸ்வாந்' வருகிறார்.

सोमः पितृमान्, यमोऽङ्गिरस्वान्, अग्निः कव्यवाहनः, इत्यादयो ये पितरस्तान् पितॄँस्तर्पयामि ।

என்பது ஸ்நானம் முடிந்ததும் அனைவரும் அநுஸந்திக்கும் வாக்கியம். அங்கிரஸ்ஸோடு கூடின யமன் பித்ருகணங்களின் தலைவனாக இருப்பதைக் கூறி இந்தத் தர்ப்பணம் செய்யப்படுகிறது.

ரிஷிகளுடைய கணத்தில் உத்தேச்யமாக இருந்து அனைவராலும் பூஜிக்கத் தக்கவராக இருப்பது போல், பித்ரு கணத்திலும் புகுந்து ஸர்வலோக மான்யராக விளங்குவது அங்கிரஸ்ஸின் தனிச் சிறப்பு. மேலும், அமாவாஸ்யை, க்ரஹண

புண்யகாலம், மாஸப் பிறப்பு, வருஷப் பிறப்பு இவை போன்ற ஸந்தர்ப்பங்களில் செய்யும் தர்ப்பணங்களிலும் அங்கிரஸ் முக்கியமான இடம் பெற்றுள்ளார்.

1. अङ्गिरसो नः पितरो नवग्वा अथर्वाणो भृगवस्सोम्यासः ।
2. इमं यम प्रस्तरमा हि सीदाङ्गिरोभिः पितृभिस्संविदानः ।
3. अङ्गिरोभिरागहि यज्ञियेभिर्यम वैरूपैरिह मादयस्व ।
4. मातली कव्यैर्यमो अङ्गिरोभिः ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 2.6.12.

என்பன காண்க.

இந்த மந்திரங்கள் பிரசித்தமானவையே. ஆயினும் இவற்றின் கருத்துச் சுருக்கத்தைத் தருகிறோம்.

1. நம் பித்ருக்களான அங்கிரஸ்ஸுக்கள், அதர்வா எனப்படுகிறவர்கள், ப்ருகுக்கள், இவர்கள் புதிய வருகையுள்ளவர்கள்; யாகத்தினால் அர்ச்சிக்கத் தகுந்தவர்கள். இவர்களுடைய நல்லெண்ணத்தில், சுபமான தன்மையில், நட்புறவில் யாம் இருப்போமாக.

2. யமதர்மராஜனே! பித்ருக்களில் ஒரு வகையினரான அங்கிரஸ்ஸுக்களுடன் இந்த ப்ரஸ்தரத்தில் வந்து அமருவாயாக.

3. யமதர்மராஜனே! பல வகையான நிறமுள்ள அங்கிரஸ்ஸுக்களுடன் நீ இங்கு வர வேண்டும்; வந்து மிகுந்த திருப்தியடைய வேண்டும்.

4. மாதலி கவ்யத்தை உண்ணும் பித்ருக்களோடும், யமன் அங்கிரஸ்ஸுக்களென்னும் பித்ருக்களோடும் விருத்தி யடைகின்றனர்.

இப்படி மற்றும் ஏராளமாக வேதமந்த்ரங்கள் உள்ளன. அங்கிரஸ்ஸுக்கள் பித்ருகணங்களில் சேர்ந்து உலகமனைத்துக்கும் பூஜிக்கத் தக்கவர்களாக இருக்கும் இருப்பை இந்த மந்திரங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

அங்கிரஸ் முனிவருடைய குமாரர்தாம் தேவகுருவான ப்ருஹஸ்பதி. அவருடைய குமாரன் கசன் என்பவன். அவன் ஒரு சந்தர்பத்தில் தேவர்களின் காரியத்துக்காக அஸுர குருவாகிய சுக்ராசாரியரிடம் செல்ல வேண்டியிருந்தது. தேவாஸுர யுத்தம்

நெடுநாள் தொடர்ந்து நடந்து வந்த ஸமயம் அது. இரு புறமும் பலர் செத்து மடிந்தனர். ஆனால் அஸுரர்களில் மாண்டவர்கள் அனைவரும் உடனுக்குடன் உயிர்பெற்றெழுந்து வந்து மீண்டும் போரில் ஈடுபட்டனர். தேவர் கூட்டங்களிலோ அவ்வாறு இல்லை. மாண்டவர்கள் மாண்டவர்களே. இதனால் தேவர்களின் ஆள்பலம் பெரிதும் குறைந்துவிட்டது. தேவர்களுள் முக்கியமானவர்கள் ஒன்றுகூடி இதன் காரணத்தை ஆராய்ந்தனர். காரணம் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது.

அஸுரகுருவாகிய சுக்ராசாரியர்தாம் இதற்குக் காரணம். செத்தவர்களை உடனுக்குடன் பிழைக்க வைக்க ஒருவகையான வித்யை அவர் வசம் இருந்தது. அதை அவர் உபயோகித்துத் தம் சிஷ்யர்களில் இறந்து போகிறவர்களை அவ்வப்பொழுதே பிழைப்பு மூட்டிக்கொண்டு வந்தார். ஆனால் தேவகுருவான ப்ருஹஸ்பதிக்கு இந்த ஆற்றல் இல்லை. ஈட்டிக்குப் போட்டியாக இவரும் அப்படிச் செய்துவிட்டாரானால், இருவருடைய ஆள்பலமும் சமானமாகவே இருக்கும். ஆனால் இது சாத்தியமாகவில்லை. ஒரு கட்சியிலுள்ள புரோஹிதர் தம் சிஷ்யர்களுக்குச் செய்யும் நன்மையை மற்றொரு கட்சியின் புரோஹிதரும் செய்தாக வேண்டும் என்பது போன்ற நிலைமை தோன்றிவிட்டது. வேறு வழியில்லை. சுக்ராசாரியருக்குச் சிஷ்யனாகியேதான் இந்த வித்தையைக் கற்க வேண்டும். அவர் மனமுவந்து சொல்லித் தரவேண்டும்.

ப்ருஹஸ்பதி, தாமே நேரில் சுக்ராசாரியரிடம் செல்வதற்குக் கொஞ்சம் ஸங்கோசப்பட்டார். இது இயற்கைதானே! இருவரும் ஒரே அந்தஸ்திலுள்ளவர்கள். ப்ருஹஸ்பதி தம் பிள்ளையான கசனை, சுக்ராசாரியரிடம் சிஷ்யனாக இருந்து இந்த வித்தையைக் கற்று வருமாறு ஆஜ்ஞாபித்தார். அவனும் அவ்வாறே சென்றான். சிஷ்யனாக இருந்து, இறந்தவர்களைப் பிழைப்பிக்கும் வித்தையைக் கற்று மீண்டான். தேவர்களின் குறை தீர்ந்தது.

கசன் சுக்ராசாரியரிடம் சென்று வணங்கித் தன்னை மாணவனாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டுகிற வார்த்தை என்ன தெரியுமா?

ऋषेरङ्गिरसः पौत्रं पुत्रं साक्षाद् बृहस्पतेः ।
नाम्ना कच इति ख्यातं शिष्यं गृह्णातु मां भवान् ॥

*ரிஷேரங்கிரஸ: பௌத்ரம், புத்ரம் ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதே ।*
*நாம்நா கச இதி க்யாதம் சிஷ்யம் க்ருஹ்ணாது மாம் பவாந் ॥*

— மகாபாரதம், 1.71.17.

'அங்கிரஸ் மகரிஷியின் பேரன்; ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியின் புத்திரன்' என்று சொல்லித் தன்னை மாணவனாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டுகிறான். அங்கிரஸ் வம்சம் ஜ்ஞாநவம்சம். அறிவுத்துறைகள் அனைத்துக்கும் மூலபுருஷர் அங்கிரஸ் முனிவர். அவருடைய பேரப்பிள்ளை ஜ்ஞாநப்பிச்சை எடுக்க வந்தானென்றால்! பிச்சை போடுபவருடைய மதிப்பு, பல்லாயிரம் மடங்கு உயர்ந்துவிடும் அல்லவா? இம்மட்டோ? அறிவாளிகளுக் கெல்லாம் எடுத்துக்காட்டாக இருப்பவர் ப்ருஹஸ்பதி. 'ப்ருஹஸ்பதிஸம: — ப்ருஹஸ்பதிக்கு ஒப்பானவர்' என்று ராமாயணம் முதலிய பெருநூல்கள் கோஷிக்கின்றன. "அந்த ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியின் மகனாகிய நான் உங்களிடம் அறிவுப் பிச்சையெடுக்க வந்திருக்கிறேன்" என்று கூறுகிறான் கசன்.

यस्याङ्गिरा वृद्धतमः पितामहो बृहस्पतिश्चापि पिता तपोधनः ।

*யஸ்யாங்கிரா வ்ருத்ததம: பிதாமஹோ*
*ப்ருஹஸ்பதிச்சாபி பிதா தபோதந: ।*

— மகாபாரதம், 1.71.37.

அறிவுக்காகப் பிறரை நாடும் பழக்கமே இல்லாத அங்கிரஸ் வம்சத்திலிருந்து, பிறவம்சஸ்தர்களிடம் சிஷ்யனாகி அறிவைப் பெற முயலுவது பெரிய அவமானகரமான நிகழ்ச்சிதான் என்பதைக் கசனும் சுக்ராசாரியரும் நன்கு உணர்ந்தே இருந்தனர். கசன் இந்த அவமானத்தைப் பொருட்படுத்தவில்லை. அறிவுத் துறையில் பிறரைவிட ஊனமாக இருப்பதுதான் பெரிய அவமானம்; அல்லவா?

கசன் உண்மையைக் கூறி, வந்த காரியத்தை முடித்துக் கொண்டு திரும்பினான். இந்த முயற்சியில் கசன் கொல்லப்பட்டான். சுக்ராசாரியர் இதே வித்தையைப் பிரயோகித்து அவனைப் பிழைக்க வைத்தார். இதைச் செய்கையில் அவரே மாண்டுபோனார். அவரிடம்

கற்ற வித்யையை முதல் முதலில் அவர் விஷயத்திலேயே உபயோகித்து அவரைப் பிழைக்க வைத்தான் கசன்.

ப்ருஹஸ்பதியின் மகனும், அங்கிரஸ்ஸின் பேரனுமான கசனுக்கு, ஆக்ஷேபமின்றிக்கே ஸஞ்ஜீவினி வித்யை கிடைத்தது.

'ரிஷேரங்கிரஸ: பௌத்ரம்' என்று சுக்ராசாரியருடைய செல்வக்குமாரி தேவயானியும் சொல்லுகிறாள். அவளே மீண்டும், 'ரிஷிர் யதாங்கிரா மாந்ய: பிதுர் மம' என்கிறாள். பாட்டனாரின் மகிமை பேரனுக்குப் பெரும்பேறுகளை எளிதில் கிடைக்கச் செய்துவிட்டது, பாருங்கள்!

**அக்ந்யாதாநம்**

'அக்னியை வைப்பது' என்பது இந்தச் சொல்லின் பொருள். ஆனால் இது ஸாங்கேதிகமாக உபயோகிக்கப்படுகிறது. அக்கினியில் சில ஹோமங்களைப் பண்ணி, அதன் மூலம் லௌகிகமாக (சாதாரணமாக) இருக்கும் அதை வைதிகமாக்குவதுதான் 'ஆதாநம்' என்றும், 'அக்ந்யாதாநம்' என்றும் சொல்லப்படுகிறது. இந்தச் சடங்கைச் செய்து வைதிகமான அக்கினியை வைத்திருப்பவர் 'ஆஹிதாக்நி' எனப்படுவார். இவ்வாறு தூய்மை பெற்ற அக்கினியில்தான் யாகங்களைச் செய்யலாம். இந்த ஆதாநத்தில் அங்கிரஸ்ஸுக்கு ஒரு தனிப்பட்ட மரியாதை காட்டப்படுகிறது; இவருடைய உறுதுணைவரான ப்ருகுவுக்குங்கூட. வேதங்களில் எங்கு பார்த்தாலும் ப்ருகு-அங்கிரஸ் இவ்விருவரும் இணைபிரியாமலே தோன்றுவர். இந்த ஆதாநத்திலும் அப்படியேதான்.

भृगूणां त्वाङ्गिरसां व्रतपते व्रतेनादधामीति भृग्वङ्गिरसामादध्यात् । आदित्यानां त्वा देवानां व्रतपते व्रतेनादधामीत्यन्यासां ब्राह्मणीनां प्रजानाम् ॥

— தைத்திரீய ப்ராஹ்மணம், 1.1.4.8.

என்னும் வாக்கியம் யஜுர்வேதத்தில் அக்ந்யாதாநத்தைச் சொல்லுமிடத்தில் காணகிறது. இதன் கருத்து – பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைச்யர்கள், 'ரதகாரன்' என்னுமொருவன்- இவர்கள் அக்ந்யாதாநம் பண்ணக்கூடியவர்கள். இதில் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே மந்திரங்கள் உண்டு.

அவையெல்லாம் . இவ்விடத்தில் கூறப்படுகின்றன. பிராம்மணர்களைத் தவிர ஏனையோருக்கு, ஒவ்வோர் இனத்துக்கு ஒவ்வொரு மந்திரமே பொதுவாகக் கூறப்படுகிறது. அந்தணர்களை மட்டும் இரு வகையாகப் பிரித்து, இரு வகையான மந்திரங்களை வேதம் விதிக்கிறது. ப்ருகு - அங்கிரஸ் இவர்களது குலத்துதித்தவர்கள் ஒரு வகை. ஏனைய அந்தணர்கள் மற்றொரு வகை. இவ்விரு வகையினருக்கும் உபயோகமான மந்திரங்கள் இரண்டும் மேலே தரப்பட்டுள்ளன.

முதல் மந்திரத்தின் கருத்து - "யாகம் முதலிய வைதிக கர்மங்களுக்கு அதிபதியான அக்கினிதேவனே! ப்ருகுக்கள் அங்கிரஸ்ஸுக்கள் இவர்களுடைய ஸத்கர்மங்களின் நிமித்தமாக, உன்னை இப்போது உரிய இடத்தில் வைக்கிறேன்" என்று சொல்லி, ப்ருகு வம்சம் - அங்கிரஸ் வம்சம் இவற்றில் தோன்றியவர்கள் அக்ந்யாதாநம் செய்ய வேண்டும்.

"யாகங்கள் முதலான வைதிக கர்மங்களுக்கு அதிபதியான அக்கினிதேவனே! ஆதித்தியர்கள் எனப்படும் தேவர்களுடைய ஸத்கர்மங்களின் நிமித்தமாக உன்னை உரிய இடத்தில் வைக்கிறேன்" என்பது இரண்டாவது மந்திரத்தின் கருத்து.

இங்கே தொடக்கத்தில், 'தன் தேவதைகளுக்குப் பொருத்தமாகவே அக்ந்யாதாநம் பண்ண வேண்டும். மீறிச் செய்யக்கூடாது' என்று கூறப்படுகிறது. மற்ற அந்தணர்களுக்கு ஆதித்தியர்கள் எனப்படும் தேவர்கள்தாம் தேவதை. அதனால் அவர்களைச் சொல்லி அக்கினியை ஆதாநம் பண்ண வேண்டும் ஏனைய அந்தணர்கள். ஆனால், ப்ருகுவம்சத்தில் உதித்தவர்களுக்குத் தங்கள் முன்னோர்களே (ப்ருகுக்களே) தேவதை. அங்கிரஸ வம்சத்தில் உதித்தவர்களுக்கும் தம் முன்னோர்களே (அங்கிரஸ்ஸுக்களே) தேவதை. அதனால் இவர்கள், மற்ற அந்தணர்கள் போல் ஆதித்தியர்களைச் சொல்லி அக்ந்யாதாநம் பண்ண வேண்டியதில்லை; கூடாது. தம் முன்னோர்களைச் சொல்லியே அக்ந்யாதாநம் பண்ண வேண்டும். ப்ருகு - அங்கிரஸ் வம்சத்தவருக்கு மட்டும் சிறப்பாக இவ்வாறான அநுஷ்டானம் வேதத்திலேயே விதிக்கப்படுகிறது. யாகங்களில் தேவதையாகவே அங்கிரஸ் இருப்பது இதனால் ஏற்படுகிறது.

**நான்கு சகோதரர்கள்**

ப்ருகு-அங்கிரஸ் இவர்களை ஒன்றுகூட்டியே பலகாலும் வேதம் பேசுகிறது. 'ப்ருகூணுமங்கிரஸாம் தபஸா தப்யத்வம்.' (தைத்திரீய ஸம்ஹிதை, 1.1.7.2). இப்படிப் பல உண்டு. இதற்குக் காரணம்? இவ்விருவரும் சகோதரர்கள். இருவர் மட்டுமல்ல, மற்றும் இருவரும் கூடி நால்வராகிவிட்டனர். முதலிரண்டு பேர் ப்ருகுவும் அங்கிரஸ்ஸும். மூன்றுமவரும் நாலாமவரும் அத்ரியும் விகநஸரும். அதில் ப்ருகு அக்கினிஜ்வாலையிலிருந்து தோன்றினார்; அல்லது அக்நிஜ்வாலையே ப்ருகுவாயிற்று. நெருப்புத் தணலிலிருந்து அங்கிரஸ் தோன்றினார்; அல்லது நெருப்புத் தணலே அங்கிரஸ் ஆயிற்று. அதனால் இவ்விருவரையும் வேதம் சேர்த்தே குறிப்பிடுகிறது. ஒரு சிறுகதையின் மூலம் ஐதரேய ப்ராஹ்மணம் இதற்கு விளக்கம் தருகிறது.

பிரபஞ்சைப் படைத்த ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஜாபதி தமது வீரியத்தை அக்கினியில் ஹோமம் பண்ணினார். அப்போது தோன்றிய அக்கினிஜ்வாலை ஒரு மகரிஷியாக மாறிற்று. அவர்தாம் ப்ருகு மகரிஷி. ஜ்வாலைகள் தணிந்தவுடன் நெருப்புத் தணல்கள் இருந்தன. அவையே மற்றொரு ரிஷியாக மாறிவிட்டன. அவர்தாம் அங்கிரஸ் மகரிஷி. உடனே அங்கே கூடியிருந்த தேவர்கள் சொன்னார்கள் – "இங்கு மூன்றுமவராக மற்றொருவரும் இருக்கிறார் (அத்ர த்ருதீயோப்யஸ்தி)" என்று. அப்போதுதான் அவ்விடத்திலிருந்து மூன்றுமவராக ஒருவர் தோன்றினார். அவருக்குப் பெயர் அத்ரி. அவர் தோன்றியபொழுது சொல்லப்பட்ட வார்த்தையே அவருக்குப் பெயராக அமைந்தது. 'அத்ர த்ரி' என்னும் சொல் அத்ரி என்று ஆயிற்றாம். அத்ரி என்று இந்தப் பெயரை அமைத்து மற்றொரு வகையிலும் பொருத்தம் காட்டுகிறது வேதம். "இங்கு மூவர்தாம் உற்பத்தியாயினர் என்று எண்ண வேண்டாம். அக்கினியின் அடிப்புறத்தைத் தோண்டிப் பாருங்கள். மற்றுமொருவர் இருப்பார்" என்று சொன்னார்களாம் தேவர்கள். அப்படியே தோண்டினார்கள். மற்றுமொருவர் வெளிவந்தார். 'மூவரோடு முடிந்துவிடவில்லை' என்னும் கருத்தைக் காட்டும் வகையில், 'அ-த்ரி' என்னும் பெயர் இவருக்கு இடப்பட்டதாம்.

நாலாவது பிறவிக்குத் 'தோண்டி எடுக்கப்பட்டவர்' என்னும் கருத்தை உணர்த்தும் 'விகநஸ்' என்பதே பெயராக வழங்கியது. இவ்வாறு பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே இந்த நால்வரும் ஒரே ஸமயத்தில் பிரம்மதேவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தமையால், ஒருவருக்கொருவர் சகோதரர்களாயினர். இவர்களுக்குள்ளேயும் ஒரு தனிக்கூட்டு ப்ருகுவுக்கும் அங்கிரஸ்ஸுக்கும். அக்கினிஜ்வாலையிலும் நெருப்புத் தணலிலும் தோன்றியவர்கள் அல்லவா? மூன்றுமவரும் நாலாமவரும் அக்கினி சாந்தமான பிறகு தானே தோன்றினர்? அதனால்தான் இந்தப் பாகுபாடு.

'அங்கிரஸ்' என்னும் சொல்லுக்கு, நிருக்தகாரரான யாஸ்கர் தரும் பொருள் சுவையானது. அங்காரம் என்று நெருப்புத் தணலுக்குப் பெயர். அதுவே அங்கிரஸ் என்ற திரிந்துவிட்டதாம். அங்காரம் என்று தணலுக்கு ஏன் பெயர் ஏற்பட்டது? 'அடையாளம் பண்ணுவது' என்னும் கருத்தில் 'அங்கார' (अङ्कार) என்னும் சொல் இருந்ததாம். நெருப்புத் தணலை ஓர் இடத்தில் வைத்தால் அது தன் கீழுள்ள பொருளைப் பொசுக்கிக் கரியாக்கிவிடும். அதுவே அவ்விடத்துக்கு அடையாளமாகும். அதனால் 'அங்காரம்' (अङ्कार) என்பது நெருப்புத் தணலுக்குப் பெயராகி, 'அங்காரம்' (अङ्गार) என்று திரிந்து, அதன் வடிவமாகவே தோன்றிய முனிவருக்கு 'அங்கிரஸ்' என்னும் பெயராகிவிட்டதாம். ராமலக்ஷ்மண பரதசத்ருக்னர்கள் நால்வரும் ஒருவருக்கே ஒரே காலத்தில் பிள்ளைகளாகப் பிறந்தவராயினும் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் ஒரு தனித்தன்மை வாய்ந்த அன்பு ஏற்படவில்லையா? அதுபோலவே ப்ருகுவுக்கும் அங்கிரஸ்ஸுக்கும் ஒரு விசேஷமான உறவு; வேறொன்றுமில்லை. அங்கிரஸ்ஸும் ப்ருகுவும் தம் சகோதரனாகிய அக்கினிதேவனை எப்பொழுதும் ஓயாமல் யஜ்ஞயாகாதிகளால் வளர்த்துக்கொண்டே இருப்பவர்கள். இந்த அடிப்படையில்தான் இவ்விருவரையும் இணையாகவே வேதம் வழங்குகிறது.

## கிருஷ்ணபக்தர்

பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே தோன்றிய அங்கிரஸ் சிறந்த கிருஷ்ணபக்தராக இருந்திருக்கிறார். இவருக்கும்

இவரது வம்சஸ்தர்களுக்கும் கிருஷ்ணனிடம் இடையறாத பக்தி இருந்தமையால், கிருஷ்ணனுக்கும் இவரிடமும் இவரது வம்சஸ்தர்களிடமும் விசேஷமான அபிமானம் இருக்கிறது. 'அங்கிரஸ் வம்சத்திலுதித்தவர்களிடம் கிருஷ்ணனுக்கு விசேஷ கடாக்ஷம் உண்டு' என்னும் விஷயத்தை வேதம் நிரூபிக்கிறது.

ஸாமவேதத்தைச் சார்ந்த சாந்தோக்யோபநிஷத்தில் புருஷவித்யை என்ற ஓர் உபாஸநம் சொல்லப்பட்டுள்ளது. அதில் கோரர் (घोरः) என்பவருடைய வரலாறு கூறப்பெறுகிறது. இவர் அங்கிரஸ் மகரிஷியின் குமாரர். இவர் இந்தப் புருஷவித்யையை அப்யஸித்தார். கிருஷ்ணனுடைய காலத்தில் இவர் இருந்தார். அதனால் கிருஷ்ணனுக்கு இதைச் சொன்னார். யோகேச்வரனாகிய கிருஷ்ணனுக்கே புருஷவித்யா என்னும் யோகமார்க்கத்தை அங்கிரஸ் மகரிஷியின் புதல்வரான கோரர் எடுத்துச் சொன்னார்.

तद्धैतद् घोर आङ्गिरसः कृष्णाय देवकीपुत्रायोक्त्वोवाच । अपिपास एव स बभूव । सोऽन्तवेलायामेतत् त्रयं प्रतिपद्येत, अक्षितमसि, अच्युतमसि, प्राणसँशितमसि, इति ॥

— சாந்தோக்யோபநிஷத், 3.17.

மற்றும் பல வேதங்களிலும், கல்பஸூத்ரங்களிலும் கோரர் குறிப்பிடப்பெறுகிறார். மகாபாரதத்திலும் இவரது ப்ரஸ்தாவம் வருகிறது. 'மரியாதை செய்யத் தகுந்தவர், பூஜிக்கத்தக்கவர், மதிப்புக்கு உரியவர்' என்று 'கோர:' என்னும் சொல்லுக்குப் பொருள் உண்டு. அந்தப் பொருளில்தான் இவருக்கு இந்தப் பெயர் அமைந்திருக்க வேண்டும். கிருஷ்ணபக்தரும் புருஷவித்யா நிஷ்டருமான இவர் பெரிதும் மதிப்புக்குத் தகுந்தவராக இருப்பது முற்றும் பொருத்தமே.

புருஷவித்யா என்று ஒரு வகை உபாஸனத்துக்குப் பெயர். மனித உடலிலுள்ள உறுப்புக்களையே யாகத்துக்கு வேண்டிய உபகரணங்களாகத் தியானித்து, அதன் மூலம் எம்பெருமானை வழிபடுவதேயாம் இது. நீண்ட ஆயுள் இதன் பயனாகக் கூறப்படுகிறது. க்ருஷ்ண யஜுர்வேதத்தைச் சார்ந்த தைத்திரீயோபநிஷத்தின் முடிவிலும் இதே போன்ற உபாஸனம் சொல்லப்பெறுகிறது. ப்ரஹ்மஸூத்ரத்தில், மூன்றாம் அத்தியாயத்தில் இதுபற்றின விசாரம் ஓர் அதிகரணத்தில் பண்ணப்படுகிறது.

## செத்த பிள்ளை

நம் புராணங்களிலும் இதிஹாஸங்களிலும் செத்த பிள்ளை பிழைத்தெழுவது ஆங்காங்கே காணப்படுகிறது. கிருஷ்ணவதார காலத்தில் ஓர் அந்தணருடைய குழந்தைகள் எல்லாம் பிறக்கப் பிறக்க இறப்பதும் உடலோடு காணுமற்போவதுமாக இருந்தன. அர்ஜுனனையும் உடன் அழைத்துக்கொண்டு, கண்காணுத இடத்துக்குத் தேரில் சென்று அந்தக் குழந்தைகளை மீட்டுக்கொண்டு வந்து கொடுத்தார் கிருஷ்ண பரமாத்மா. ராமாவதாரம் நிகழ்ந்த காலத்திலும் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது. ஒரு வைதிகருடைய குழந்தை அகால மரணமடைந்துவிட்டது. இது அரசனுடைய குற்றமே என்று, அந்த அந்தணர் செத்த பிள்ளையை அரண்மனை வாசலில் கொண்டு வந்து வைத்துவிட்டு ராமரைக் கேட்டார். ராமர் உடனே அதற்கேற்ற பரிஹாரம் பண்ணினுர். செத்த மகன் பிழைத்தெழுந்தான். அந்தணர் மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினுர்.

இதே வகையில், ஓர் அரசனுக்குப் பிறந்த ஆண் குழந்தை செத்துப்போய்விட்டது. அங்கிரஸ் முனிவர் நாரதருடைய துணையுடன் அதைப் பிழைக்க வைத்தார். ஆனுல், பாவம்! மீண்டும் இறந்து போய்விட்டது அந்தக் குழந்தை. ஏன் தெரியுமா? பிழைத்தெழுந்து வாழ அதற்கு விருப்பமில்லை. உயிரற்ற தனது பழைய உடலில் மீண்டும் உட்புகுந்து பேசவும், பிறகு தொடர்ந்து ஜீவித்திருக்கை அல்லது மரித்துவிடுதல் - இவற்றிலொன்றைத் தன் இஷ்டம்போல் முடிவு செய்யவும் அவசியமான ஆற்றலை அங்கிரஸ் முனிவரும் நாரதரும் அந்தக் குழந்தைக்கு அருளினர். இது ஒரு விசித்திரமான கதை. இது ஸ்ரீ பாகவத புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. இதனைச் சுருக்கமாகக் கூறுவோம் இங்கு.

## அங்கிரஸ் வருகை

யமுனைக்கரையில் சூரஸேன தேசத்தில் சித்திரகேது என்ற அரசன் இருந்தான். அவன் பரம தார்மிகன். கடல் சூழ்ந்த மண்ணுலகத்தில் ஒரே சக்ரவர்த்தியாகத் தனிக்கோலாட்சி புரிந்து வந்தான். அவனுடைய ராஜ்ய பரிபாலனத்தில், பூமி காமதேனுபோல் வேண்டின பொருள்களை எல்லாம் தாராளமாகக் கொடுத்து வந்தது. ஆயிரம் பதினுயிரம் அழகிகள் அவனுக்கு மனைவிமாராக

இருந்தனர். இன்பக்கடலில் தோய்ந்து கிடந்த அவனைக் காண வந்தார் பகவான் அங்கிரஸ் மகரிஷி. 'அங்கிரா பகவாந் ரிஷி:' என்று போற்றுகிறார் சுகர்.

## பிள்ளை வரம்

அரசன் முறைப்படி மகரிஷியை வரவேற்று உபசரித்தான். அங்கிரஸ் மகரிஷி ஆசீர்வாதம் பண்ணினார். இருவரும் பரஸ்பரம் யோகக்ஷேமம் விசாரித்துக்கொண்டனர். அரசன் தன் மனக்குறையைத் தெரிவித்தான். எவ்வளவு தனதான்ய ஸமிருத்தி இருந்தும், ஆயிரக்கணக்கான அழகிய மனைவியர் இருந்தும், தனிக்கோல் செலுத்தும் சக்கரவர்த்தியாக இருந்தும் மனநிம்மதி இல்லை அவனுக்கு. ஸந்ததி இல்லாத குறைதான். தனக்குப் பிறகு இந்த வம்சம் தொடர்ந்து விளங்கும் வகையில் ஓர் ஆண்குழந்தை பிறக்கவில்லையே அவனுக்கு! அங்கிரஸ் மகரிஷியிடம் மனம் விட்டுப் புலம்பினான் சித்திரகேது. அங்கிரஸ்ஸுக்கு மனம் இளகியது. உடனே அவர், த்வஷ்டாவைத் தேவதையாகக் கொண்ட யாகம் ஒன்றைச் செய்தார். யாகத்தில் ஹோமம் செய்து எஞ்சிய ஹவிஸ்ஸை அரசனுடைய மனைவியருள் மூத்தவளும் பட்டமகிஷியுமான க்ருதத்யுதி என்பவளுக்குக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார். "இதனால் அரசி கர்ப்பம் தரிப்பாள். உனக்கு மகிழ்ச்சியையும் துயரத்தையும் தரும் ஆண்குழந்தை பிறக்கும்" என்று சொல்லிச் சென்றுவிட்டார் மகரிஷி. அரசனுக்கு அளவிட முடியாத ஆனந்தம். இந்த ஸந்தோஷவேகத்தில், முனிவரின் வார்த்தையின் பிற்பகுதியை அவன் நினைவில் கொள்ளவில்லை.

க்ருதத்யுதி கர்ப்பம் தரித்தாள். பத்து மாதங்கள் பறந்தோடின. அழகிய ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தாள். அரசனுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. நிறைய தானதர்மங்கள் செய்தான்; கோடிக்கணக்கான பசுக்களை வழங்கினான். அன்னதானம், வஸ்திரதானம் முதலியன அளவிட முடியாதபடி நடந்தன. குழந்தைக்கு ஜாதகர்மம் நாமகரணம் முதலிய சடங்குகள் சிறப்பாகச் செய்யப்பட்டன. க்ருதத்யுதிக்குத் தன் அருமைப் புதல்வனிடம் அளவிடவொண்ணாத பாசம். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் குழந்தை வளர்ந்து வந்தது.

## சக்களத்தி பொறாமை

குழந்தை பிறந்ததுமுதல் க்ருதத்யுதியின் மதிப்பு, பன்மடங்கு உயர்ந்தது. ஏனைய ராஜபத்தினிகள் எல்லாருக்கும் துளிகூட அந்த அரண்மனையில் மதிப்பில்லை. வேலைக்காரிகள்கூட அவர்களை லக்ஷ்யம் செய்வதில்லை. இயற்கையாகவே அவர்களுக்குத் தங்கள் மூத்தவள்மேல் இருந்த அஸூயை இதனால் பன்மடங்காக வளர்ந்தது. 'இந்தக் குழந்தைதானே இதற்கெல்லாம் காரணம்?' ஒரு நாள் ஒரு சக்களத்தி, மற்றவர்களுடைய அபிப்பிராயத்தையும் கலந்துகொண்டு, விஷம் கொடுத்துக் குழந்தையைக் கொன்றுவிட்டாள். ராஜகுமாரன் செத்துப் போய்விட்டான். தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்த குழந்தை, நெடுநேரமாகியும் எழுந்திருக்கவே இல்லை. க்ருதத்யுதி தன் வேலைக்காரியைக் கூப்பிட்டுக் குழந்தையை எடுத்து வரும்படி பணித்தாள். தொட்டிலிலுள்ள குழந்தையை எடுக்கக் குனிந்து பார்த்தவள் கோவென்று கதறி அழுத வண்ணம் கீழே விழுந்துவிட்டாள்.

அவளுடைய கூக்குரலைக் கேட்ட அனைவரும் மின்னல் வேகத்தில் பாய்ந்து வந்து நடந்ததை அறிந்துகொண்டனர். விஷங்கொடுத்த சக்களத்திகள் அனைவருங்கூட ஒன்றுமறியாதவர்கள் போல் கதறிக் கதறி அழுதனர். பெருங் குழப்பம், புலம்பல், இரைச்சல், அலறல் அரண்மனையைச் சூழ்ந்து கொண்டன.

சித்திரகேதுவுக்கும் க்ருதத்யுதிக்கும் விஷயம் தெரிந்தது. பெற்ற தாய், வயிற்றெரிச்சல் தாளாமல் குழந்தையைக் கட்டியணைத்து விழுந்து புரண்டு புலம்பினாள், கதறினாள். அரசனும் புத்திரசோகத்தால் தன்னை மறந்து கதறியழுதான். நெடுநாள் கழிந்த பிறகு புத்திரகாமேஷ்டியினால் மகரிஷியின் அருளுடன் தோன்றிய ஒரே செல்வக்குழந்தை திடீரென்று இப்படியாகிவிட்டதென்றால்? எல்லாரும் திகைத்துப் போய்விட்டனர். அரண்மனை பொலிவிழந்தது. கோரக் காட்சி குடிகொண்டது. க்ருதத்யுதி பலவாறுப் புலம்பினாள்.

## அங்கிரஸ் வருகை

அரசன் செயலற்று விழுந்து கிடந்தான். முதலுக்கே மோசம் வந்துவிடும் போலாகிவிட்டது. தமது ஞானத்ருஷ்டியினால் இவற்றை

உணர்ந்த அங்கிரஸ் முனிவர், நாரதரையும் அழைத்துக்கொண்டு அதிவேகமாக அரண்மனையில் நுழைந்தார். சித்திரகேதுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவன் பைத்தியம் பிடித்தவன்போலப் புலம்பிக் கொண்டிருந்தான். "நீங்கள் இருவரும் நாடோடிகள் போன்ற தோற்றத்துடன் இங்கு வந்திருக்கிறீர்கள். யாரோ தெரியவில்லையே?" என்று துயரக் கடலில் மூழ்கியபடியே அவன் கேட்டான்.

"பிள்ளையில்லாமல் ஏங்கித் தவித்த உனக்குப் பிள்ளை பிறக்கும்படி புத்திரகாமேஷ்டி பண்ணிவைத்த அங்கிரஸ் நான்தான். பிரம்மாவின் மகனை ஸாக்ஷாத் நாரத பகவான் இவர்தாம். உனக்கு நல்ல அறிவு உண்டாகுமாறு உபதேசங்களைச் செய்து மன அமைதியை நிலைநிறுத்தவே நாங்கள் இருவரும் இப்போது இங்கு வந்துள்ளோம்" என்றார் அங்கிரஸ் மகரிஷி.

"இன்பமும் துன்பமும் பிள்ளையினால் உனக்கு வரும் என்பது நான் அப்பொழுதே சொன்னதுதானே? பிள்ளை பிறந்ததும் இன்பமநுபவித்தாய். இப்போது துன்பப்படுகிறாய்" என்று உண்மையை விளக்கினார்.

இதெல்லாம் அரசன் காதில் ஏறவில்லை. முனிவர்கள் ஒரு முடிவுக்குவந்தனர். 'செத்த பிள்ளையே வந்து உண்மையை விளக்கிக் கூறட்டும். அப்போதுதான் அரசனது மனம் தெளியும்' என்று தீர்மானித்தனர். நாரதர் சொன்னார் :—

जीवात्मन् पश्य भद्रं ते मातरं पितरं च ते ।
सुहृदो बान्धवास्तप्ताः शुचा त्वत्कृतया भृशम् ॥
कलेवरं समाविश्य शेषमायुस्सुहृद्वृतः ।
भुंक्ष्व भोगान् पितृप्रत्तानधितिष्ठ नृपासनम् ॥

ஜீவாத்மன் பச்ய பத்ரம் தே மாதரம் பிதரம் ச தே ।
ஸுஹ்ருதோ பாந்தவாஸ்தப்தா: சுசா த்வத்க்ருதயா ப்ருசம் ॥
கலேவரம் ஸமாவிச்ய சேஷமாயு: ஸுஹ்ருத்வ்ருத: ।
புங்க்ஷ்வ போகான் பித்ருப்ரத்தாநதிதிஷ்ட ந்ருபாஸநம் ॥

— ஸ்ரீபாகவதம், 6.16.2,3.

"குழந்தாய்! (இந்தக் குழந்தை உடலிலிருந்து வெளியேறிய ஜீவாத்மாவே.) உனக்கு நன்மை உண்டாகுக. இதோ பார், உன் தாயும் தந்தையும் நண்பர்களும் உறவினர்களும் உன்னைப் பிரிந்த சோகத்தினால் மிகவும் தவிக்கின்றனர். நீ பழையபடி இந்த உடலினுள் புகுந்து வாழ்வாயாக. நண்பர்கள் சூழ, நீண்ட ஆயுள் பெற்று வாழ்ந்து, மாதா பிதாக்களை மகிழ்விப்பாயாக. ராஜ்ய சிம்மாசனத்தில் அமர்ந்து அரசு புரிவாயாக" என்பது இந்த ச்லோகங்களின் கருத்து.

இதைக் கேட்டவுடன், பிணமாகக் கிடந்த குழந்தையின் உடலில் மீண்டும் ஜீவாத்மா பிரவேசித்தது. செத்த குழந்தை பேச ஆரம்பித்தது. அனைவரும் பிரமித்துப் போய்விட்டனர். அரசனுக்கும் அரசிக்கும் ஆனந்தம் கரை புரண்டோடியது. அங்கிரஸ்ஸும் நாரதரும் இந்த அதிசயத்தை நடத்திக் காட்டினர். அனைவருக்கும் நன்றாகக் கேட்கும்படி, கணீரென்று அழுத்தந் திருத்தமாகக் குழந்தை பேசியது —

बन्धुज्ञात्यरिमध्यस्थमित्रोदासीनविद्विषः ।
सर्व एव हि सर्वेषां भवन्ति क्रमशो मिथः ।
न ह्यस्यातिप्रियः कश्चित्, नाप्रियः स्वः परोऽपि वा ॥

*பந்துஜ்ஞாத்யரிமத்யஸ்தமித்ரோதாஸீனவித்விஷ: ।*
*ஸர்வ ஏவ ஹி ஸர்வேஷாம் பவந்தி க்ரமசோ மித: ।*
*ந ஹ்யஸ்யாதிப்ரிய: கச்சித், நாப்ரிய: ஸ்வ: பரோபி வா ॥*

— *ஸ்ரீ பாகவதம், 6.16.5.10.*

"உறவினர், பங்காளிகள், பகைவர், நடுநிலையிலுள்ளவர், நண்பர், உதாஸீனமாக இருப்பவர்கள், விரோதிகள் என்று இவ்வாறெல்லாம் ஜனங்களைப் பிரிப்பது தவறு. நம் கண்ணெதிரிலேயே இவர்கள் யாவரும் மாறி மாறி வேறு விதமாகிவிடுவதை நாம் உணர வேண்டும். இது ஒரே பிறவிக் காலத்தில். இறந்து மறுபிறவியில் தோன்றும்பொழுதோ, எல்லாம் தலைகீழாக மாறிவிடும். இந்த நிலைநின்ற உண்மையை நாம் உணர்ந்தோமானால், யார் இறந்தாலும் இருந்தாலும் நமக்குத் துக்கமோ ஸந்தோஷமோ உண்டாகாது. எவனுக்கும் எவனும் நிலையான பகைவனாகவோ அன்பனாகவோ இருக்க முடியாது.

அவனவன் தலைவிதிப்படியே எல்லாம் நடக்கிறது. 'என்னைச் சேர்ந்தவன், என்விரோதி' என்றெல்லாம் நாம் எண்ணுவதும் சொல்லுவதும் வெறும் கற்பனையே. ஆற்றுவெள்ளத்தின் வேகத்தில், எங்கேயோ கிடந்த ஒரு சிறு மணல் மற்றொரு மணலோடு சிறிது நேரம் சேர்ந்திருக்கிறது. உடனே பிரிந்து எங்கேயோ போய்விடுகிறது. இது போன்றதேதான் தாய் தந்தை பிள்ளை என்று இவ்வாறாக உலகவழக்கில் உள்ள உறவுமுறை. விவேகிகள் இந்த அற்ப விஷயத்தில் மனக் குழப்பமடைய மாட்டார்கள். அழுகின துர்நாற்றமடிக்கும் இந்தக் குழந்தையுடலில் மீண்டும் புகுந்து ஸுகப்படுமாறு மகரிஷிகளாகிய நீங்கள் சொல்வது அரசனுடைய மனதைத் தெளிவிக்கவேதான். இனி ஒரு நிமிஷமும் என்னால் இதனுள் இருக்க முடியாது" என்று சொல்லி, அந்த ஜீவாத்மா உடலிலிருந்து வெளியேறிவிட்டது. குழந்தை பழையபடி பிணமாகிவிட்டது.

மகரிஷிகளின் அருளினால் அரசனுக்கும் அரசிக்கும் உண்மை விளங்கியது. இருவரும் சோகம் தீர்ந்தனர். குழந்தையை விஷம் வைத்துக் கொன்றவர்கள் தாமாகத் தமது செயலை எடுத்துக் கூறி, அந்தணர்களிடம் கேட்டு, தக்க பிராயச்சித்தம் செய்துகொண்டனர். சித்திரகேதுவுக்கு உயர்ந்த ஞானத்தைப் புகட்டி அவனைச் சிறந்த பகவத்பக்தனாக்கிவிட்டு, பிரம்மபுத்திரர்களான அங்கிரஸ்ஸும் நாரதரும் பழையபடி பிரம்மலோகத்துக்கே திரும்பிச் சென்றனர். இவ்வாறு செத்த பிள்ளையைப் பேச வைத்தார் அங்கிரஸ் மகரிஷி.

## ததீசி முனிவர்

நமது புராணக் கதைகளில் பழகியவர்களுக்கு இவருடைய அருமை பெருமைகள் பிரஸித்தமாக இருக்கும். தவஷ்டாவின் மகனாகிய விருத்திரன் பிரபஞ்சம் முழுவதையும் அழிக்கத் தொடங்கினான். தேவேந்திரன் தன் வஜ்ராயுதத்தினால் அவனைக் கொன்றான். உலகம் பேரபாயத்திலிருந்து தப்பித்துக்கொண்டது. அந்த வஜ்ராயுதம் அற்புதமான சக்தி வாய்ந்ததாக இருப்பினும், விருத்திரனைக் கொல்லுவதற்குப் போதுமானதாக இல்லை. தேவர்கள் கூடி ஆலோசித்தனர். ஒரு முடிவு காணப்பட்டது. ததீசி முனிவர் நீண்ட காலமாகத் தவம் புரிந்து வந்தார். தவத்தின் வீரியம்

அனைத்தையும் அவர் தமது முதுகெலும்பில் சேமித்து வைத்திருந்தார். அவருடைய முதுகெலும்பை வஜ்ராயுதத்துடன் இணைத்து அதனால் விருத்திரனை அடித்தால் நிச்சயமாக அவன் செத்துப் போய்விடுவான். இதுதான் தேவர்களின் முடிவான தீர்மானம். அவரைக் கொன்றால்தானே அவருடைய எலும்பை எடுத்துக்கொள்ள முடியும்? இதை யார் எப்படிச் செய்வது? இது மற்றொரு மாபெரும் ப்ரஹ்மஹத்தி ஆகிவிடுமே!

ஒரே ஒரு வழிதான் இதற்கு உள்ளது. அவராகவே மனமுவந்து உலக க்ஷேமத்துக்காகத் தம் உயிரை விடத் துணிந்தால் அவருடைய எலும்பு இந்திரனுக்குக் கிடைக்கும்; ப்ரஹ்மஹத்தி தோஷமும் வாராது. இதுதான் நடந்தது. ததீசி முனிவர் இந்திரனுடைய வேண்டுகோளுக்கிணங்க, உலக க்ஷேமத்தைக் கருத்தில் கொண்டு மிகப் பெரிய செயற்கரிய தியாகத்தைச் செய்தார். உத்தேசித்த காரியம் செவ்வனே நடந்து முடிந்தது. உலகம் அழியாமல் தப்பியது. இந்தத் ததீசி முனிவர் யார் தெரியுமா? அதர்வா என்னும் ரிஷியின் குமாரர். அந்த அதர்வா என்பவர் யார் தெரியுமா? அவரே அங்கிரஸ். அங்கிரஸ் முனிவருக்கே 'அதர்வா' என்று மற்றொரு பெயர். அவருடைய பிள்ளையே ததீசி முனிவர். உலக க்ஷேமத்துக்காக விதம் விதமான யாகங்களையும், அவற்றை அநுஷ்டிக்கும் முறைகளையும் முதல்முதலில் வழிகாட்டியாக இருந்து வகுத்துக் கொடுத்து உலகத்தின் க்ஷேமத்தை நிலைநாட்டிய அங்கிரஸ்ஸின் புதல்வரான ததீசி முனிவர், தம்மையே தியாகம் செய்துகொண்டது மிகவும் பொருத்தமானதே அல்லவா?

இந்த முனிவரின் பெயர் ததீசி என்றே வழங்குகிறது. பௌராணிகர்களும் அவர்களுடைய உபந்நியாஸங்களைக் கேட்டவர்களும் ஒரே குரலாக இப்படியே சொல்லி வருகின்றனர். ஆனால் இது அவருடைய உண்மையான பெயரின் திரிபுதான். 'தத்யங்' என்பதுதான் இவரது வாஸ்தவமான பெயர்.

தத்யங் முனிவரின் பிதாவான அதர்வாவின் பெயரும் அங்கிரஸ்ஸின் பெயரும் வேதங்களில் பலகாலும் கூறப்பெறுகின்றன. சிலவற்றைக் காண்மின் :-

त्वामग्ने अङ्गिरसो गुहाहितमन्वविन्दन् ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.4.4.

"அக்கினியே! நீ ஒருவருக்கும் புலனாகாதவாறு மறைவான இடத்தில் இருந்தபொழுது அங்கிரஸ்ஸுக்கள்தாம் உன்னைக் கண்டுபிடித்தனர். அரணிக்கட்டையைக் கடைந்து உன்னைத் தோற்றுவித்தனர்" என்பது கருத்து. இந்த அங்கிரஸ்தாம் அதர்வா எனப்படுகிறார். மற்றொரு மந்திரத்தின் மூலம் இதைத் தெளிவுபடுத்துவோம்.

अथर्वा त्वा प्रथमो निरमन्थदग्ने ।
त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! உன்னை அதர்வாதாம் முதல்முதலில் கடைந்தெடுத்தார்"; "அக்கினியே! தாமரையிலையின் மேல் அதர்வா உன்னைக் கடைந்தெடுத்தார்" என்பது முறையே இந்த மந்திரங்களின் கருத்து. இவற்றிலிருந்து, முதல் முதலில் அக்கினியை உண்டுபண்ணும் முறையை (அரணிக் கட்டையைக் கடைந்து நெருப்பை உண்டுபண்ணும் முறையை)க் கண்டுபிடித்து உலகத்துக்கு வழிகாட்டியவர் அதர்வா என்று ஒரு மந்திரமும், இதே காரியத்தைச் செய்தவர் அங்கிரஸ் என்று மற்றொரு மந்திரமும் சொல்லுவதனால் அதர்வா அங்கிரஸ் என்னும் இவ்விரண்டும் பிரம்மதேவனுடைய குமாரரான ஒருவரையே சொல்லுகின்றன என்பது உறுதிப்படுகிறது.

மற்றும் காண்மின்: அங்கிரஸ் என்னும் சொல், பிரம்மாவின் புத்திரராகிய (அங்கிரஸ்) மகரிஷிக்குப் போல் அக்கினிக்கும் பெயராகவே வேதங்களில் வழங்கப்படுவதை முன்பே எடுத்துக் காட்டியுள்ளோம். அதர்வா என்னும் சொல்லும் அப்படியேதான். இது ஒன்றே பிரம்மதேவனுடைய குமாரருக்கும் அக்கினிக்கும் பெயராக அமைந்துவிட்டது. முதல் முதலில் அக்கினி பூஜையை உலகுக்குக் காட்டிக்கொடுத்து, அதே அக்கினியில் ஸோமயாகத்தையும் பண்ணி வழிகாட்டினவர் என்பது அதர்வா என்னும் சொல்லுக்குப் பொருள்.

## முண்டகோபநிஷத்

இதன் தொடக்கத்திலுள்ள மூன்று மந்த்ரங்கள் இங்கே கவனிக்கத்தக்கவை. அவையாவன —

ब्रह्मा देवानां प्रथमस्संबभूव विश्वस्य कर्ता भुवनस्य गोप्ता ।
स ब्रह्मविद्यां सर्वविद्याप्रतिष्ठां अथर्वाय ज्येष्ठपुत्राय प्राह ॥

— முண்டகோபநிஷத், 1.1.1.

தேவர்களுக்கும் ஆதிதேவராகத் தோன்றிய பிரம்மா உலகங்களையெல்லாம் படைத்துக் காத்தவர். அவர் ஸகல வித்யைகளுக்கும் ஆதாரமான ப்ரஹ்மவித்யையைத் தம் மூத்த குமாரனாகிய அதர்வனுக்கு உபதேசித்தார்.

अथर्वणे यां प्रवदेत ब्रह्मा अथर्वा तां पुरोवाचाङ्गिरे ब्रह्मविद्याम् । स भारद्वाजाय सत्यवाहाय प्राह भारद्वाजोऽङ्गिरसे परावराम् ॥

— முண்டகோபநிஷத், 1.1.2.

"அதர்வா அதை முந்துறமுன்னம் அங்கிரஸ்ஸுக்கு உபதேசித்தார். அவர் பரத்வாஜருடைய வம்சத்திலுதித்த ஸத்யவாஹருக்கு அந்த ப்ரஹ்மவித்யையை உபதேசித்தார். ஸத்யவாஹர் அங்கிரஸ்ஸுக்கு அதை உபதேசித்தார்."

शौनको ह वै महाशालोऽङ्गिरसं विधिवदुपसन्नः पप्रच्छ ।

— முண்டகோபநிஷத், 1.1.3.

பெரிய க்ருஹஸ்தராகிய சௌனக முனிவர் அங்கிரஸ் மகரிஷியை முறைப்படி வணங்கி (அந்த ப்ரஹ்மவித்யையை)க் கேட்டார்.

இங்கே பிரம்மா தம்முடைய மூத்த குமாரராகிய அதர்வனுக்கு அக்ஷரவித்யை என்று வழங்கும் ப்ரஹ்மோபாஸனத்தை முதல்முதலில் உபதேசம் செய்ததாகக் கூறப்படுகிறது. பிறகு இவர் இதையே பிற்காலத்தில் அங்கிரஸ்ஸுக்கு உபதேசித்ததாகக் கூறப்படுகிறது. இந்த அதர்வா என்பவரே அங்கிரஸ்-1. பிறகு இவரது வம்சத்தில் உதித்த அங்கிரஸ்-2க்கு இந்த அதர்வா உபதேசம் செய்ததையே இது விளக்குவதாகும். பரத்வாஜர் ப்ருஹஸ்பதியின் குமாரர். ப்ருஹஸ்பதி அங்கிரஸ்ஸின் குமாரர். பரத்வாஜருடைய வம்சஸ்தராகிய ஸத்யவாஹருக்கு இந்த வித்யையை அங்கிரஸ்-2 உபதேசம் செய்தார். மீண்டும் இந்த ஸத்யவாஹர் இதே வித்யையை அங்கிரஸ்-3க்கு உபதேசித்தார். இந்த மூன்றும் அங்கிரஸ் முனிவரைத்தான் சௌனகர் வணங்கித்

தமக்கும் இதை உபதேசிக்கும்படி கேட்டார். இதன்மூலம் இந்த ப்ரஹ்மவித்யை, ஆதிமுதல் உபதேச பரம்பரையாக அங்கிரஸ் வம்சத்தினரிடமே குடிகொண்டிருந்ததாக நன்கு விளங்குகிறது அல்லவா?

## அக்கினிஹோத்திரம்

உலகில் முதல்முதலாக அக்கினியைத் தோற்றுவித்து, அதில் ஸோமயாகம் முதலிய யாகங்களை அநுஷ்டானம் செய்து வழிகாட்டியவர் அதர்வா என்பதை மேலே காட்டிய மந்திரங்கள் அறிவிக்கின்றன. இதே காரியத்தைச் செய்தவர் அங்கிரஸ் என்கிறது மற்ரொரு வேத வாக்கியம். இதனாலும் அதர்வாவும் அங்கிரஸ்ஸும் வெவ்வேறானவர் அல்லர் என்பதை அறியலாம்.

அக்கினிஹோத்ரம் என்றால் அக்கினியில் ஹோமம் செய்தல் என்று பொருள். இந்த அக்கினிஹோத்திரத்தை முதல் முதலில் அங்கிரஸ்ஸே தோற்றுவித்தாராம். அக்கினிஹோத்திரம் பண்ணுவதற்கு அக்கினி வேண்டுமே. அதை அவர்தாம் கண்டுபிடித்து உபயோகித்தார். அக்கினியில் ஹோமம் செய்வதற்குப் பால் நெய் தயிர் வேண்டாமா? இவை யாவும் பசுவினிடமிருந்துதானே கிடைக்கும்? அதனால் பசுவும் வேண்டும்; அதற்கு மேய்வதற்குப் புல்லும் வேண்டும், புல் முளைப்பதற்கு மழை வேண்டும். புல் மேய்ந்துவிட்டு மடி நிறையப் பாலுடன் பசுமாடு வீட்டுக்கு வந்தால் மட்டும் போதுமா? கன்று போட்ட மாடுதான், கன்றுக்குட்டி வாய்வைத்து ஊட்டிய பிறகுதான், பால் தரும். அந்தக் கன்றுகளையும் தாய்ப் பசுவுடன் கூடவே பகலெல்லாம் அவிழ்த்து விட்டால், ஸாயங்காலம் பால் கிடைக்குமா? அதனால் தாய்ப் பசுவினிடமிருந்து பிரித்துக் கன்றுகளை வீட்டிலேயே கட்டிப் போட வேண்டும். இதிலும் ஒரு வரையறை இருக்க வேண்டும். பசு கன்று போட்டவுடனே பால் கறக்கக்கூடாது. பத்து நாட்கள் கழித்த பிறகுதான் கறக்கலாம். பால் முழுவதையும் கன்றுக்கே விட்டுவிட வேண்டும், முதல் பத்து நாட்களில். அப்பொழுதுதான் கன்றுக்குட்டி ஓங்கி வளரும்.

இவ்வளவு முன்னேற்பாடுகளையும் பிரபஞ்சத்தில் அங்கிரஸ்தாம் தோற்றுவித்து அக்கினிஹோத்திரத்தையும் நடத்திக்

காட்டினர். இன்றளவும் உலக க்ஷேமார்த்தமான இந்தப் புனிதமான காரியம், இந்த அங்கிரஸ் வம்சத்தினர் சிலருடைய திருமாளிகைகளிலும், மற்றும் பல மகரிஷிகளுடைய வம்சஸ்தர்களின் திருமாளிகைகளிலும் தொடர்ந்து நடந்து வருகிறது.

अङ्गिरसो वै सत्रमासत । तेषां पृश्निर्घर्मधुगासीत् । सर्जीषेणा-जीवत् ।

— தைத்திரீய ப்ராஹ்மணம், 2.1.1.

அங்கிரஸ்ஸுக்கள் ஸத்ரயாகம் பண்ணினர்கள். யாகத்துக்கு வேண்டிய பாலை ஒரு பசுமாடு அவர்களுக்குக் கொடுத்து வந்தது. அந்தப் பசு பல நிறமுள்ள அழகியதொன்று. ஆனால் பாவம்! அதற்கு உணவு இல்லை. புல் பூண்டுகள் எவையும் பூமியில் முளைக்கவில்லை. காரணம்? மழையே இல்லை. யாகத்தில் ஸோமம் எனப்படும் ஒரு வகையான கொடியை நசுக்கிப் பிழிந்து சாறு எடுத்துத்தான் ஹோமம் செய்வார்கள். அந்த அஸாரமான சக்கையை வீசி எறிந்துவிடுவார்கள். அதைத்தான் மென்று தின்றுகொண்டு அந்தப் பசு சாகாமல் பிழைத்து வந்ததாம்.

तेऽब्रुवन् । कस्मै नु सत्रमास्महे । येऽस्या ओषधीर्न जनयाम इति ।

— தைத்திரீய ப்ராஹ்மணம், 2.1.1.

அவர்கள் சொன்னர்கள் – 'நாம் ஸத்ரயாகம் பண்ணிப்பயன் என்ன? இந்த மாட்டுக்குப் புல் பூண்டுகளை உண்டு பண்ண முடியவில்லையே!'

ते दिवो वृष्टिमसृजन्त । यावन्तः स्तोका अवापद्यन्त । तावतीरोषधयोऽजायन्त ।

அவர்கள் வானத்திலிருந்து மழையைத் தோற்றுவித்தனர். எத்தனை நீர்த் துளிகள் பூமியில் விழுந்தனவோ, அத்தனை ஓஷதிகள் (செடி கொடிகள், புல் பூண்டுகள்) பூமியில் முளைத்தன.

ता जाताः पितरो विषेणालिम्पन् । तासां जग्ध्वा रुप्यन्त्यैत् ।

'பித்ருக்கள்' எனப்படும் ஒருவகையான கணங்கள் அவற்றில் விஷத்தைப் பூசிவிட்டனர். விஷம் கலந்த அந்தப் புல்லைத் தின்றதும் அந்தப் பசுமாடு நோய்வாய்ப்பட்டது.

तेऽब्रुवन् । क इदमित्थमकरिति ।

"இவ்வாறு செய்தது யார்?" என்று அவர்கள் கேட்டனர்.

वयं भागधेयमिच्छमाना इति पितरोऽब्रुवन् ।

"எங்களுக்கும் யாகத்தில் பாகம் வேண்டும். அதற்காகவே நாங்கள் இதை இவ்வாறு செய்தோம்" என்று பித்ருக்கள் சொன்னார்கள்.

किं वो भागधेयमिति ।

"உங்களுக்கு எவ்விதமான பாகம் வேண்டும்?" என்று அங்கிரஸஸுக்கள் பித்ருக்களைக் கேட்டனர்.

अग्निहोत्र एव नोऽप्यस्त्वित्यब्रुवन् ।

"எங்களுக்கு அக்கினிஹோத்திரத்தில்தான் பாகம் வேண்டும்" என்று பித்ருக்கள் சொன்னார்கள்.

तेभ्य एतद्भागधेयं प्रायच्छन् । यद्धुत्वा निमार्ष्टि । ततो वै त ओषधीरस्वदयन् ।

அவர்கள் விரும்பியவாறே பாகம் வழங்கப்பட்டது. அக்கினிஹோத்திர ஹோமம் பண்ணினவுடன், தென்புறத்தில் பித்ருக்களுக்காகப் பால் முதலிய ஹோமப் பொருள்களைத் தரையில் தேய்க்க வேண்டும். அதுதான் பித்ருக்களுக்காக ஏற்பட்ட பாகம். இவ்வாறு தமது விருப்பம் ஈடேறியவுடன் பித்ருக்கள் ஓஷதிகளிலிருந்து விஷத்தை விலக்கிவிட்டனர். மாடுகள் அவற்றைச் சுவைத்துத் தின்ன வழி ஏற்பட்டது.

य एवं वेद । स्वदन्तेऽस्मा ओषधयः ।

இந்த வரலாற்றை அறிந்தவனுக்கு ஓஷதிகள் சுவைக்கத்தக்கவையாகும்.

ते वत्समुपावासृजन् । इदं नो हव्यं प्रदापयेति ।

அந்த அங்கிரஸஸுக்கள் கன்றுக்குட்டியை அவிழ்த்து விட்டனர். "தாய்ப் பசுவிடம் ஊட்டுவதன் மூலம் எங்களுக்குப் பால் சுரக்கச் செய்" என்று சொன்னார்கள்.

सोऽब्रवीद् वरं वृणे । दशमा रात्रीर्जातं न दोहन् । आसंगवं मात्रा सहचराणीति ॥

அது ஒரு வரம் கேட்டது. "நான் (கன்று) பிறந்ததும் பத்து நாட்கள் பால் கறக்கக்கூடாது. பிறகுதான் கறக்கலாம். அந்தக் காலங்களிலும் ஸங்கவம் வரையில் ((சூரியோதயம் முதல் 6 நாழிகை காலை வேளை. பிறகு ஏழாவது நாழிகை முதல் 12 நாழிகை வரை ஸங்கவ காலம்) அம்மாவுடன் கூடவே ஸஞ்சரிக்கும் வாய்ப்பு வேண்டும். (பிறகுதான் தாயை விட்டு என்னைப் பிரிக்கலாம்.)" இதுதான் கன்றுக்குட்டி கேட்ட வரம்.

तस्माद् वत्सं जातं दशरात्रीर्न दुहन्ति । आसंगवं मात्रा सह चरति । वारे वृतँ ह्यस्य ।

அவ்வாறே வரம் அருளப்பட்டது. அன்றுமுதல் இன்றளவும் இந்த ஏற்பாடு மாறுபடாமல் அநுஷ்டானத்தில் இருந்து வருகிறது.

तस्माद् वत्सँ सँ सृष्टधयँ रुद्रो घातुकः । अति हि संधां धयति ॥

இந்த உடன்பாட்டை மீறிக் கன்றுக்குட்டி, ஸங்கவ காலத்துக்குப் பிறகும் தாயை ஊட்டினால் ருத்திரன் அதைக் கொன்றுவிடுவான்.

இந்த வரலாற்றின் மூலம் பிரபஞ்ச ஸ்ருஷ்டியில் உலகம் க்ஷேமமாக வாழ்வதற்கான ஏற்பாடுகள் பலவற்றையும் அங்கிரஸ் தோற்றுவித்தார் என்பது புலனாகிறது. இதே வரலாறு, அதர்வா என்னும் பெயருடன் வேறு இடத்தில் காணப்படுவதனால் அங்கிரஸ்ஸும் அதர்வாவும் ஒருவரே என்பதை நன்கு அறியலாம்.

ப்ரஹ்மயஜ்ஞத்தில் வேதங்களெல்லாவற்றையும் சிறப்பித்துக் கூறும் இடத்தில்,

'यदथर्वाङ्गिरसः'

என்று அதர்வ வேதத்தை ஆங்கிரஸ வேதமாகவும் வேதவாக்கியம் வழங்குகிறது. நாலு திசைகளையும் நாலு வேதங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் வேத வாக்கியமும் இப்படியே பேசுகிறது.

ऋचां प्राची महती दिगुच्यते । दक्षिणामाहुर्यजुषामपाराम् । अथर्वणामङ्गिरसां प्रतीची, साम्नामुदीची महती दिगुच्यते ॥

— காடகம், 3.12.9.1.

'மேற்குத் திசை அதர்வ வேதத்தைச் சார்ந்தது' என்னும் இடத்தில், அங்கிரஸ் என்னும் சொல்லும் மறவாமல் கையாளப்பட்டுள்ளமை காண்க.

இது போல் மற்றும் ஏராளமான சான்றுகள் உள்ளன. விரிவைத் தவிர்க்க வேண்டி அவற்றை இங்கே காட்டவில்லை. அதர்வா, அங்கிரஸ் என்ற சொற்கள் இரண்டும் பிரம்மாவின் மூத்த குமாரர் ஒருவருக்கே (அங்கிரஸ்ஸுக்கே) தான் என்பது இவற்றால் நிலைநின்றதாயிற்று.

லோகக்ஷேமார்த்தமான பல விஷயங்கள் இந்த அதர்வ (ஆங்கிரஸ) வேதத்தில் கூறப்பட்டிருப்பதைக் கண்டு அறிவாளிகள் வியப்படைகின்றனர். மழை பெய்வதும், புல் பூண்டுகள் தோன்றுவதும், மாடு அவற்றைத் தின்பதும், பால் கறப்பதும், கன்றுக்குட்டி ஊட்டுவதும் – இவை போன்ற ஜீவாதாரமான விஷயங்களுடன் அக்கினியைத் தோற்றுவித்து அக்கினி ஹோத்திரத்தை நடத்திக் காட்டி, அன்றும் இன்றும் என்றும் லோகக்ஷேமத்துக்கு வழி வகுத்தவர் அங்கிரஸ் முனிவர் ஒருவரே. இன்றும் அக்கினிஹோத்திரம் பண்ணுகிறவர்கள் மழையைக் கொண்டு வருபவர்கள் ஆகிறார்கள். அங்கிரஸ் முனிவருடைய ஏற்பாட்டின்படியே அவர்கள் நடக்கிறவர்கள் அல்லவா?

## தக்ஷிணா தானம்

யாகங்களில் யஜமானனுக்கு ஸஹாயமாக இருந்து யாக காரியங்களைச் செய்பவர்கள் 'ரித்விக்குகள்' எனப்பெறுவர். அவர்களுக்கு யஜமானன் (யாகம் பண்ணுகிறவர்) கொடுக்கும் பொருளுக்குத் 'தக்ஷிணை' என்று பெயர். இந்த தக்ஷிணை ஒவ்வொரு யாகத்திலும் ஒவ்வொரு விதமாக இருக்கும். வேதங்களில் எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறதோ அப்படியேதான் தக்ஷிணைகளைக் கொடுக்க வேண்டும். இதை வாங்கிக்கொள்பவர்கள் ஒரு மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே இதை ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்த மந்திரம் அங்கிரஸ்ஸின் பெயரையே கூறுகிறது. அவருடைய திருநாமத்தைச் சொல்லிக்கொண்டேதான் ரித்விக்குகள் தமது தக்ஷிணையைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

அங்கிரஸ் வம்சத்தைச் சேர்ந்தவர்களாயினும், மற்ற வம்சஸ்தர்களாயினும், இவ் விஷயத்தில் வாசி இல்லை; ஒரே ஒரு வழிதான் உள்ளது. அதில்தான் அனைவரும் செல்ல வேண்டும்.

क इदं कस्मा अदात् । कामः कामाय । कामो दाता । कामः प्रतिग्रहीता । कामँ समुद्रमाविश । कामेन त्वा प्रतिगृह्णामि । कामैतत्ते । एषा ते काम दक्षिणा । उत्तानस्त्वाङ्गीरसः प्रतिगृह्णातु ।

— தைத்திரியாரண்யகம், 3.10.1,2.

என்பதுதான் அந்த மந்த்ரம். இதன் அர்த்தம் ஸாதாரணமாக எல்லாருக்கும் விளங்கக் கூடிய வகையிலேயே இருக்கிறது. இதன் முடிவிலுள்ள வாக்கியத்தின் கருத்தை மட்டும் தருகிறோம் இங்கு: —

"(தக்ஷிணையே!) உன்னை ஆங்கிரஸர் வாங்கிக் கொள்ளட்டும்" என்பது இந்த மந்த்ரத்தின் கடைசி வாக்கியத்தின் கருத்து. தக்ஷிணையை வாங்கிக் கொள்வது இகழக்கூடிய காரியம். ஒருவடைய பொருளைத்தானே மற்றொருவன் வாங்கிக் கொள்கிறான்?" 'ஏற்பதிகழ்ச்சி' என்பது பழமொழி.

प्रतिग्रहसमर्थोऽपि प्रसङ्गं तत्र वारयेत् ।

என்பது யாஜ்ஞவல்க்ய முனிவரின் தர்ம சாஸ்திரம். '(பிறர் பொருளை) ஏற்கத் தகுதியுள்ளவனாக இருந்தாலும் அதைக் கைவிடுவதிலேயே மனத்தைச் செலுத்த வேண்டும்' என்பது கருத்து.

रिच्यत इव वा एष प्रेव रिच्यते यो याजयति प्रति वा गृह्णाति ।

— தைத்திரீயாரண்யகம், 2.16.

என்று கோஷிக்கிறது வேதம். 'பிறருக்கு யாகம் செய்வித்தல், தொடர்ந்து தக்ஷிணையை வாங்கிக்கொள்ளுதல் இவற்றால் ஒருவன் தன்னை மேலும் மேலும் இழிவாக்கிக்கொள்கிறான்' என்பது கருத்து.

தக்ஷிணையைப் பெறுவதில் இவ்வளவு கண்டிப்பாய்த் தடைகளை விதிக்கும் வேதமும், மற்ற தர்ம சாஸ்திரங்களும், இதே போன்ற அழுத்தமான குரலில், 'தக்ஷிணை கொடுத்தால்தான் யாகம் முதலிய நற்காரியங்கள் முறைப்படி பூர்த்தியாகும். இல்லாவிட்டால்

வீணாகிவிடும்' என்றும் பறைசாற்றுகின்றன. இது பெரிய சங்கடமாக அல்லவா இருக்கிறது? இதைத் தீர்த்து வைத்தவர் அங்கிரஸ் மகரிஷிதாம்.

பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலேயே யாகங்கள் பலவற்றையும் அநுஷ்டிக்கும் வழிவகைகளை ஏற்பாடு செய்தார் அல்லவா இவர்? தக்ஷிணையைப் பற்றிய இந்தப் பிரச்னையைத் தீர்மானிக்காமல் விடுவாரா? அப்படி அவர் கூறிய தீர்ப்புதான் என்ன, தெரியுமா? மேலே சொன்னதுதான். "தக்ஷிணையே! உன்னைக் கையேந்தி வாங்கிக் கொள்பவர் அங்கிரஸ்" என்று சொல்லி அதை வாங்க வேண்டும் என்று முடிவு கட்டினார் அங்கிரஸ் முனிவர். இப்படிச் சொல்லி தக்ஷிணை வாங்குவதனால் என்ன லாபம்? தக்ஷிணையை வாங்குவதனால் நமக்கு வரக் காத்திருக்கும் இழிவு, குறைவு, இகழ்வு நம்மை அணுகாது. அதுதான் லாபம். அப்படியானால் அந்தக் குறைவு அங்கிரஸ்ஸிடம் போய்ச் சேருமா? ஆம், அவரிடம்தான் போய்ச் சேரும். ஆனால் அங்கே போகும் போதே உருக் குலைந்து, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். நெருப்புத் தணல்தானே அங்கிரஸ் முனிவராக மாறியது? அவரிடம் இந்த அற்பமான பொருள் எவ்வாறு தங்கியிருக்க முடியும்? 'அங்கிரஸ்ஸின் கையால் வாங்குகிறேன்' என்று சொல்லி தக்ஷிணையை வாங்கினால் பாவங்கள் அணுகா என்றபடி.

'இது சாத்தியமா?' என்று நமக்குத் தோன்றும். வேதவழியில் சென்று, இந்தச் சந்தேகத்துக்கு விடை காண்போம்.

### ப்ராசித்ரம்

யாகத்தில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸில் எஞ்சிய பகுதிக்கு (ப்ரஹ்மா என்னும் ரித்விக் சாப்பிட வேண்டிய பாகத்துக்கு) இந்தப் பெயர் வழங்கும். இதைப் பற்றின வேத வாக்கியங்களில் மேற்படி ஸந்தேகத்தைத் தீர்க்கக் கூடிய விஷயம் இடம் பெற்றுள்ளது.

तत् पूष्णे पर्यहरन् तत् पूषा प्राश्यदतोऽरुणत् तस्मात् पूषा प्रपिष्टभागोऽदन्तको हि ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 2.6.8.

"அதைப் பூஷா என்னும் தேவனிடம் கொடுத்தார்கள். அதை அவன் (பூஷா) அவசர அவசரமாக வாயில் போட்டுக் கொண்டு பற்களால் கடித்தான். பாவம்! அவனுடைய பற்களெல்லாம் நொறுங்கிப் பொடியாயின. ஆனால் அந்த ப்ராசித்ரம்? அது அப்படியே கல்போல் இருந்தது. அதுமுதல் பூஷா பல் இல்லாதவனாகிவிட்டான். யாகங்களில் அதன் பிறகு அவனுக்கு மாவுப் பண்டங்களை கொடுக்க வேண்டிய தாயிற்று."

तद् बृहस्पतये पर्यहरन् सोऽबिभेत् बृहस्पतिः इत्थं वा वस्य आर्तिमारिष्यतीति ।

"அந்த ப்ராசித்ரத்தை ப்ருஹஸ்பதியிடம் கொடுத்தனர். ப்ருஹஸ்பதிக்கு அதைப் பார்த்ததும் பயம் உண்டாகிவிட்டது. 'இந்தப் பூஷா பட்ட பாடுதானே நமக்கும்?' என்று அஞ்சினார். அதனால் அவர் அதை உடனே எடுத்து வாயில் போட்டுக்கொண்டு கடித்துத் தின்னவில்லை. சற்று யோசித்தார். 'முன்னே போகிறவன் தடுக்கி விழுந்தால் பின்னால் போகிறவனுக்கு விளக்குப் பிடித்தாற் போலாகும்' என்பார்களே! அதே கதைதான் இங்கும். அவர் அதைப் பார்த்து எடுத்து வாயில் போட்டுக்கொண்டு மென்று தின்று வயிற்றுக்குள் செலுத்த வேண்டியிருந்தது. மேற்கூறிய நான்கு செயல்களிலும் அவருக்கு அச்சம் இருந்தது. அதனால் அவர் மேற்படி காரியங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மந்திரத்தைச் சொல்லி, அந்த அந்தக் காரியங்களைச் செய்தார். ஒரு கஷ்டமும் இல்லாமல் காரியம் பூர்த்தியாயிற்று. இதோ அந்த நான்கு மந்த்ரங்கள்:—

1. सूर्यस्य त्वा चक्षुषा प्रतिपश्यामि इत्यब्रवीत्, न हि सूर्यस्य चक्षुः किञ्चन हिनस्ति ।

"ப்ராசித்ரமே! உன்னை ஸூர்யனுடைய கண்ணால் பார்க்கிறேன்" என்று சொன்னார். (அதைப் பார்க்கும்போது எதிர்பார்த்த கஷ்டம் ஒன்றும் அவருக்கு ஏற்படவில்லை) ஸூர்யனுடைய கண்ணை ஹிம்ஸிப்பதற்கு யாராலும் முடியாது அல்லவா?

2. देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां प्रतिगृह्णामीत्यब्रवीत् ।

"ஸவிதா என்னும் தேவனால் தூண்டப்பட்டு, அச்வினி தேவர்களுடைய புஜங்களால், பூஷா என்னும் தேவனுடைய கரங்களால், ப்ராசித்ரமே! உன்னை ஏற்றுக்கொள்கிறேன்" என்று சொன்னார். வாங்கிக்கொள்ளும்போது எதிர்பார்க்கப்பட்ட கஷ்டம் ஒன்றுமே இல்லாமல் ஸஹஜமாய் அதை வாங்கிக்கொண்டுவிட்டார். ஸவிதா, பூஷா, அச்வினி தேவர்கள் முதலிய தெய்வங்களெல்லாம் ஒன்றுகூடி, மந்த்ர சக்தியையும் உபயோகித்து அவரைக் காப்பாற்றிவிட்டன.

3. अग्नेस्त्वास्येन प्राश्नामीत्यब्रवीत्, न ह्यग्नेरास्यं किंचन हिनस्ति ।

"ப்ராசித்ரமே! உன்னை அக்கினியினுடைய வாயினால் சாப்பிடுகிறேன்" என்று சொல்லி அதைச் சாப்பிட்டார். சாப்பிடும்போது எதிர்பார்த்த கஷ்டம் ஒன்றும் அவருக்கு உண்டாகவில்லை. அக்கினியின் முகத்தை ஹிம்ஸிப்பதற்கு யாரால் முடியும்?

4. ब्राह्मणस्योदरेणेत्यब्रवीत्, न हि ब्राह्मणस्योदरं किंचन हिनस्ति ।

"ப்ராசித்ரமே! நீ ப்ராஹ்மணனுடைய வயிற்றுக்குள் போய்ச் சேருகிறாய் என்பதை நினைவில் கொள்" என்று சொன்னார். சாப்பிட்ட பின்பு வயிற்றில் தோன்றக்கூடிய உபத்திரவம் ஒன்றும் தோன்றவில்லை. பிராம்மணனுடைய வயிற்றில் எந்தப் பொருள் சென்று சேர்ந்தாலும் உடனே ஜீர்ணமாகிவிடும். அவ்வளவேயன்றி அதில் உபத்திரவங்களைத் தோற்றுவிக்க முடியாது.

இந்தப் பிரகரணத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அர்த்த புஷ்டியுள்ளவை. ப்ராசித்ரத்தை ப்ருஹஸ்பதி, தம் சொந்தக் கண்ணாலேயே பார்த்தார். தம் சொந்தக் கைகளாலேயே அதை வாங்கிக்கொண்டார். தம் வாயில்தான் போட்டுக்கொண்டு மென்று தின்றார். அது அவருடைய சொந்த வயிற்றுக்குள்தான் போய் விழுந்தது. அங்கேயே ஜீர்ணமாகியும் விட்டது. அன்றுமுதல் இன்றுவரை, இனி வருங்காலத்திலும் ஸகல ப்ராணிகளும்

ஒவ்வொரு பொருளையும் தின்னும்போது இதே நிகழ்ச்சிதான் நடக்கிறது. 'இதில் என்ன அதிசயம்?" என்று தோன்றுகிறது அல்லவா? ப்ருஹஸ்பதிக்கு இந்த நிலைமை இல்லை. சற்று முன் பூஷா பட்ட பாடு அவர் கண்முன்னே நின்றது. அவன் பல்லெல்லாம் நொறுங்கிப் போய் விட்டதே! அந்த ப்ராசித்ரத்தைப் பார்ப்பதற்கும், கைகளால் வாங்கிக்கொள்வதற்கும், மென்று தின்பதற்கும், வயிற்றினுள் அதை வைக்கவும் அவர் அஞ்சினார். கண்ணும் கையும் வாயும் வயிறும் வெவ்வேறு தெய்வங்களுடையனவாக அவர் அநுஸந்தானம் பண்ணினார். அந்த அந்த சக்திகள் அந்த அந்த இடங்களில் வந்து சேர்ந்து அவரைத் துன்பப்படாமல் காப்பாற்றின.

அதேபோல்தான் தக்ஷிணையை வாங்கிக் கொள்கிறவர்கள் அங்கிரஸ் மகரிஷியின் கைகளினால் வாங்கிக் கொள்வதாக அநுஸந்தித்து அதை வாங்கிக் கொண்டால் அவருடைய சக்தி இவர்களுக்கும் வந்து சேர்ந்து, தக்ஷிணை வாங்குவதனால் உண்டாகக்கூடிய குறையைத் தீர்த்துவிடும். இது வேத ஸித்தமான ஸம்பிரதாயம்.

இதைக் கருத்தில் கொண்டுதான் ரிக்வேத மந்த்ரம்,

ये यज्ञेन दक्षिणया समक्ताः..... अङ्गिरसः ॥

என்று பறை சாற்றுகிறது. 'அங்கிரஸ் மகரிஷி, யாகங்கள் தக்ஷிணை இவற்றுடன் இணைந்தே இருப்பவர்' என்பது கருத்து. முடிவு காலத்தில் பயங்கரமான யமதரிசனம் ஏற்படும். அவன் உயிரைக் கட்டிப் பிடித்து இழுத்துக்கொண்டு போவான்; தாக்ஷிண்யம் பார்க்கவே மாட்டான். ஆனால், 'நாராயணா' என்னும் நாமத்தைச் சொல்லிவிட்டால், யமன் உடனே விலகிச் சென்றுவிடுவான். பாகவதம் முதலிய புராணங்களும் திருமழிசையாழ்வாருடைய நான்முகன் திருவந்தாதியும் இவ் விஷயத்தை விளக்குகின்றன. அது போலவேதான் 'அங்கிரஸ்' மகரிஷியின் பெயரைச் சொன்னால் தக்ஷிணை வாங்குவதனால் உண்டாகும் பாவம் தானே விலகிச் சென்றுவிடும்.

'याजयित्वा प्रतिगृह्य वानश्नन् त्रिः स्वाध्यायं वेदमधीयीत, तपो हि स्वाध्यायः'

— தைத்திரீயாரண்யகம், 2.16, 2.14.

என்று வேதம் கோஷிக்கிறது. "யாகம் பண்ணிவைத்து, தக்ஷிணையையும் வாங்கிக்கொண்டால், மூன்று நாட்கள் பட்டினி கிடக்க வேண்டும். வேதம் முழுவதையும் சொல்ல வேண்டும். இது பெரிய தபஸ்ஸாகும். பாவங்களெல்லாம் இந்தத் தபஸ்ஸினால் தொலையும்" என்பது கருத்து. அங்கிரஸ்ஸின் பெயரைச் சொல்லி தக்ஷிணையை வாங்கினவனுக்குத்தான் இந்தப் பிராயச்சித்தம் ஸபலமாகும் என்பதையும் ஊகிக்க இடமிருக்கிறது.

## பிராணாயாமம்

இந் நாட்களில் பல காரணங்களால் இது அனைவருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயமாகிவிட்டது. பிராணன் என்பது மூச்சுக் காற்று. ஆயாமம் என்பது அடக்கி வைத்தல். பிராணாயாமம் என்றால், 'மூச்சுக் காற்றை அடக்கி வைத்தல்' என்பது திரண்ட பொருள். தர்மசாஸ்திரகாரர்கள் இதற்கு ஒரு லக்ஷணம் சொல்லி வைத்திருக்கிறார்கள்.

सव्याहृतिकां सप्रणवां गायत्रीं शिरसा सह ।
त्रिः पठेदायतप्राणः प्राणायामस्स उच्यते ॥

ஸவ்யாஹ்ருதிகாம் ஸப்ரணவாம் காயத்ரீம் சிரஸா ஸஹ ।
த்ரி: படேதாயதப்ராண: ப்ராணாயாம: ஸ உச்யதே ॥

"ஏழு வ்யாஹ்ருதிகள், காயத்ரீ, சிரஸ்-இவற்றை ஓங்காரத்துடன் மூன்று முறை ஆவ்ருத்தி பண்ண வேண்டும். மூச்சுக்காற்றை வெளிவிடாமல். இதுதான் பிராணாயாமம்" என்பது கருத்து. இதைச் செய்வதற்கு முன்பு, இவற்றின் ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவற்றை அநுஸந்திக்க வேண்டும். எல்லா மந்திரங்களுக்கும் பொதுவான விதி இது. இப்படியேதான் அநுதினமும் ஸந்த்யா வந்தனம் செய்பவர்கள் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதில் அங்கிரஸ் மகரிஷி கம்பீரமாக வீற்றிருக்கிறார். ஏழு வ்யாஹ்ருதிகள் என்பன —

भूः, भुवः, सुवः, महः, जनः, तपः, सत्यम् ।

ஆகியவையே. இவற்றில் ஒவ்வொன்றுக்கும் ரிஷி, சந்தஸ், தேவதை எல்லாம் உண்டு. ஏழாவதான வ்யாஹ்ருதி ஸத்யம் என்பது. இதற்கு அங்கிரஸ்தான் ரிஷி. மற்ற ஆறு வ்யாஹ்ருதிகளுக்கு ஆறு ரிஷிகள்,

ஆறு சந்தஸ், ஆறு தேவதை எல்லாம் உண்டு. இது தவிர, காயத்ரிக்கும் காயத்ரீ சிரஸ்ஸுக்குங்கூட ரிஷி, சந்தஸ், தேவதை எல்லாம் உண்டு. இவற்றை எல்லாம் அநுஸந்தானம் செய்த பிறகே பிராணுயாமம் செய்ய வேண்டும். இப்படி ஸகல காரியங்களுக்கும் முதல் முதலில் இன்றியமையாததாக அமைந்துள்ள பிராணுயாமத்திலேயே வீற்றிருக்கும் அங்கிரஸ் முனிவர், அனைவருக்கும் வழிபட வேண்டியவராகிருர். இவருடைய வம்சத்தைச் சேர்ந்தவர்கள் போல் ஏனையோரும் அநுதினமும் பலகாலும் பக்தி ச்ரத்தையுடன் இந்த அங்கிரஸ் மகரிஷியை வணங்கி வழிபடும் பெருமை காணீர்!

## அக்கினி, அங்கிரஸ், அதர்வா

இந்த மூன்று பெயர்களும் அக்கினிக்கு உண்டு. அங்கிரஸ் என்னும் பெயரால் அக்கினி வழங்கப்படுவதை வேத மந்திரங்களின் மூலம் இதற்குமுன் காண்பித்திருக்கிறோம். மகாபாரதத்தில் ஆரண்ய பர்வத்தில் 'ஆங்கிரஸம்' என்னும் பெயருடனே ஓர் 'அவாந்தரபர்வ' அமைந்திருக்கிறது. அதில் அங்கிரஸ் முனிவருடையவும் அக்கினியினுடையவும் பரஸ்பர உறவு முறைகளும் மகிமையும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சில வேத மந்திரங்களையும் அவற்றின் கருத்தையும் இங்கே தருகிறோம் —

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां पृथिव्या-स्सधस्थेऽग्निं पुरीष्यमङ्गिरस्वत्खनामि ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! இப்பொழுது இந்தப் பூமியிலிருந்து உன்னைத் தோண்டி எடுக்கிறேன். எல்லாரையும் தத் தம் செயல்களில் ஈடுபடும்படி தூண்டுகிறவனை ஸவிதா என்னும் தேவனுடைய தூண்டுதலின் பேரில்தான் இதைச் செய்கிறேன். அச்விநீ தேவர்களுடைய புஜங்களால், பூஷாவினுடைய கைகளால், அங்கிரஸ் முனிவர் தோண்டி எடுத்தாற்போல் உன்னைத் தோண்டி எடுக்கிறேன்" என்பது இதன் கருத்து. அக்கினியை வைப்பதற்காக ஒரு மண் பாத்திரம் (குமட்டி போன்றது) செய்ய வேண்டும். அதற்காக மண் தோண்டி எடுக்கப்படும். அந்த மண்ணையே

'அக்கினி' என்னும் சொல்லால் இங்கு வேதம் வழங்குகிறது. அக்கினிக்கு ஆதாரமான பாத்திரமே 'அக்கினியே!' என்று அழைக்கப்படுகிறது.

अथर्वा त्वा प्रथमो निरमंथदग्ने ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! அதர்வாதாம் உன்னை முதல்முதலாகக் கடைந்தெடுத்தார்" என்று கருத்து.

अग्निर्देवेभ्यो निलायत तमथर्वान्वपश्यदथर्वा त्वा प्रथमो निरमंथदग्न इत्याह य एवेनमन्वपश्यत् तेनैवैनं संभरति ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.1.4.

"அக்கினி, தேவர்களை விட்டு விலகிச் சென்றுவிட்டான். அவன் சென்ற இடத்தை அதர்வாதாம் கண்டார். இந்த நிகழ்ச்சியைக் கூறும் மேற்படி மந்திரத்தைச் சொல்லியே அக்கினியை (அதை வைப்பதற்கான மண்பாத்திரத்துக்கான மண்ணை) எடுத்துக் கொண்டு வர வேண்டும். இவ்வாறு செய்வதனால், அக்கினியை முதல்முதலில் கண்டவரான அதர்வாவினாலேயே அக்கினி கொண்டு வரப்பட்டதாகும்" என்று கருத்து.

त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमंथत ।

मूर्ध्नो विश्वस्य वाघतः ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! உன்னை அதர்வாதாம் முன்பு நன்றாகக் கடைந்தெடுத்தார். உலகுக்கே ஆதாரமாக இருப்பதும், தலைபோல் முக்கியமானதுமாகிய தாமரையிலையின் மேல்தான் அவர் உன்னைக் கடைந்தார்" என்று கருத்து.

त्वामग्ने पुष्करादधीत्याह पुष्करपर्णे ह्येनमुपश्रितमविन्दत् ॥

"அதர்வா முதல்முதலாக அக்கினியைத் தேடிக் கண்டு பிடித்தபொழுது தாமரையிலையின் மேல்தான் அதைப் பார்த்தார். அதை நினைவூட்டுவதற்காகவே, 'त्वामग्ने पुष्करादधि' என்னும் மந்திரம் ஓதப்படுகிறது" என்று கருத்து.

तमु त्वा दध्यङ् ऋषिः पुत्र ईधे अथर्वणः ।
वृत्रहणं पुरन्दरम् ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! அதர்வாவினுல் கண்டெடுக்கப்பட்ட உன்னையே, அவருடைய புத்திரனுகிய தத்யங் என்னும் ரிஷி (ததீசி முனிவர்) வளர்த்தார். பகைவர்களை அழிக்க வல்லவன் நீ. அவர்களது கோட்டைகளையும் தகர்த்துவிடும் ஆற்றல் உள்ளவன்" என்று கருத்து.

तमु त्वा दध्यङ् ऋषिरित्याह दध्यङ् वा आथर्वणस्तेजस्व्यासीत् तेज एवास्मिन् दधाति ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.1.4.

"அதர்வாவினுடைய புத்திரனை தத்யங் – ததீசி முனிவர்தாம்– தேஜஸ் மிக்கவராக இருந்தார். 'तमु त्वा दध्यङ् ऋषिः' என்னும் மந்திரத்தை சொல்வதனுல் இந்த அக்கினியில் விலக்ஷணமான தேஜஸ்ஸை அமைத்துக் கொடுத்ததாகும்" என்று கருத்து.

तमु त्वा पाथ्यो वृषा समीधे दस्युहन्तमम् ।
धनञ्जयँ रणे रणे ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.

"அக்கினியே! அதர்வாவினுல் கண்டெடுக்கப்பட்ட உன்னையேதான், அவருடைய குமாரர் (தத்யங்) நன்ருக வளர்த்தார். அவர் ஜலத்திலேயே வஸிப்பவர். வேண்டிய பேறுகளை எல்லாம் வர்ஷிக்க வல்லவர். நீயும் தஸ்யுக்களை (யாக விரோதிகளை) எல்லாம் கொல்லும் ஆற்றல் படைத்தவன். ஒவ்வொரு போர்முனையிலும் செல்வத்தை வென்று தருபவன்" என்று கருத்து.

तमु त्वा पाथ्यो वृषेत्याह पूर्वमेवोदितमुत्तरेणाभिगृणाति ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.1.4.

'तमु त्वा पाथ्यो वृषा.....' என்னும் மந்திரத்தைச் சொல்வதனுல், முன் மந்திரத்தில் சொன்னதையே உறுதிப்படுத்தியதாகிறது என்று கருத்து.

त्वामग्ने अङ्गिरसो गुहाहितमन्वविन्दन् शिश्रियाणं वने वने ।
स जायसे मथ्यमानस्सहो महत्त्वामाहुस्सहसस्पुत्रमङ्गिरः ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.4.4.

"அக்கினியே! நீ (முற்காலத்தில்) யாருக்கும் புலனாகாதவாறு ரகசியமான இடத்தில் காடுதோறும் மறைந்திருந்தாய். அங்கிரஸ்ஸுக்கள்தாம் உன்னைக் கண்டுபிடித்தனர். (அரணிக் கட்டைகளில்) கடையப்பட்டு நீ தோன்றுவது அதுமுதலாக ஏற்பட்டது. அப்படிக் கடைந்தெடுக்கும்போது உனது வலிமை மிகப் பெரியதாக இருக்கும். அங்கிரஸ்ஸே! உன்னை வலிமையின் புத்திரனென்றே வழங்குகின்றனர்" என்பது கருத்து.

இப்படிப் பல மந்த்ரங்களும் ப்ராஹ்மணங்களும் அக்கினி, அதர்வா, அங்கிரஸ் ஆகிய இந்த மூன்று சொற்களையும், கார்யகாரணமாகவும், நேராகவும் ஒருங்கிணைந்த பொருளுள்ளனவாகப் பறைசாற்றுகின்றன. 'அக்நிசயநம்' என்பது அனைவரும் செய்ய வேண்டிய முக்கியமான சடங்கு. அங்கிரஸ் கோத்திரக்காரர்கள், மற்றவர்கள் அனைவரும் வாசியற, மேற்படி மந்த்ரங்களைச் சொல்லியே அதற்கான மண்ணைத் தோண்டி எடுத்துக்கொண்டு வர வேண்டும். இப்படிச் செய்வதில்தான் அந்த அக்கினிக்கு அபாரமான திருப்தி, கௌரவம், ஆனந்தம். இப்படி இந்த அங்கிரஸ் அக்கினியுடன் இணை பிரியாதவராகவே பிரபஞ்ச ஸ்ருஷ்டி முதல் இன்றளவும் எக்காலமும் வாழ்ந்து வருபவர்.

### ஏழு நாக்குகள்

ஸகல ப்ராணிகளுக்கும் ஒரே நாக்குதான் உண்டு. பாம்புகளுக்குத்தான் இரண்டு நாக்குகள். இந்த அக்கினி தேவனுக்கு எத்தனை நாக்குகள், தெரியுமா? ஏழு. ஒரு வேத மந்திரம் இதை வர்ணிக்கிறது—

सप्त ते अग्ने समिधस्सप्त जिह्वाः सप्तर्षयः सप्त धाम प्रियाणि।
सप्त होत्रास्सप्तधा त्वा यजन्ति सप्त योनीरापृणस्वा घृतेन ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 4.6.5.5

"அக்கினியே! உனக்கு எல்லாம் ஏழுதாம். ஸமித்துக்கள்,

நாக்குகள், ரிஷிகள், இருப்பிடங்கள், ஹோதாக்கள், அவர்கள் உன்னை வழிபடும் முறைகள், பிறப்பிடங்கள் எல்லாமே உனக்கு ஏழுதாம்" என்பது கருத்து.

இந்த ஏழு நாக்குகள் அக்கினிக்கு இருப்பதைக் கண்டு பிடித்துச் சொன்னவர் யார் தெரியுமா? அதர்வ வேதம் ஓது பவர்கள்தாம். அவற்றின் பெயரையுங்கூட அவர்கள்தாம் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். ஒரு வேத வாக்கியம் இந்த ஏழு நாக்குகளையும் ஏழு ரத்தினங்கள் என்றே சிறப்பித்துக் கூறுகிறது.

दमे दमे सप्त रत्ना दधानोऽग्निः ।

— *தைத்திரீய ஸம்ஹிதை, 4.1.3.*

काली कराली च मनोजवा च
सुलोहिता या च सुधूम्रवर्णा ।
स्फुलिङ्गिनी विश्वरुची च देवी
लेलायमाना इति सप्तजिह्वाः ॥

— *முண்டகோபநிஷத், 1.2.4.*

இவற்றின் பெயர்களில் சில வேறுபாடும் உண்டு.

அக்கினியின் ஏழு நாக்குகளும் பொதிந்துள்ள இடத்தையும், அவ்வவற்றில் செய்யப்பட வேண்டிய ஹோமங்களின் விசேஷங்களையும் தர்மசாஸ்திரகாரர்கள் விஸ்தாரமாக விளக்கியிருக்கின்றனர். அங்கிரஸ்தாம் இவற்றையெல்லாம் அறிந்து உலகுக்கு எடுத்துக் கூறியவர். அக்கினியையே அவர் தாமே கண்டுபிடித்தவர்! ஒரு குழந்தையைப் பெற்றெடுத்து வளர்த்த தாய்க்கு அதன் இயல்புகளெல்லாம் நன்றாகத் தெரியும் அல்லவா? அதுபோலவே அங்கிரஸ்ஸுக்கும் அக்கினியின் இயல்புகளெல்லாம் வெகு நன்றாகத் தெரிகின்றன. அவற்றை அவர் அனைவருக்கும் சொல்லித் தருகிறார். அவற்றைத் தெரிந்துகொண்டு யாகம் முதலிய சடங்குகளை அநுஷ்டித்தால்தானே அவை சிறப்புள்ளனவாக அமையும்? யஜ்ஞங்களை அநுஷ்டிப்பதில்தான் இந்த அங்கிரஸ்ஸுக்கு அளவிட முடியாத ச்ரத்தையாயிற்றே! தாமும் அநுஷ்டிக்க வேண்டும்; மற்றவர்களும் அநுஷ்டிக்க வேண்டும். அதனால்தான் இவற்றையெல்லாம் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

### ஹயக்கிரீவர்

தத்யங் என்ற முனிவர் மகாதபஸ்வி— அதர்வாவின் குமாரர். அதர்வாவும் அங்கிரஸ்ஸும் ஒருவரே என்பது ஏற்கனவே பரக்க நிரூபிக்கப்பட்டுள்ளது. இந்த தத்யங் முனிவர்தாம் ஹயக்கிரீவர், அதாவது குதிரை முகத்தவர். பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் ஆதிகாலத்தில் என்ன என்னவோ விதவிதமான பிறவிகள் இருந்திருக்கின்றன. அவ்வோ யோனிகளிலும் எம்பெருமானும் உலக க்ஷேமார்த்தமாகத் தானும் அவதாரம் பண்ணியிருக்கிறான். ஹயக்கிரீவ அவதாரம் செய்து, மறைந்துபோன வேதங்களை மீண்டும் நான்முகனுக்கு உபதேசித்தான். அந்த இனத்தைச் சார்ந்தவரே தத்யங் முனிவரும்.

दध्यञ्चमश्वशिरसम् ।

தத்யஞ்சமச்வசிரஸம்.

— ஸ்ரீபாகவதம், 4.1.42.

கீழ்க்கண்ட மந்திரம் இதைக் கூறுகிறது —

इन्द्रो दधीचो अस्थभिः । वृत्राण्यप्रतिष्कुतः । जघान नवतीर्नव । इच्छन्नश्वस्य यच्छिरः । पर्वतेष्वपश्रितम् । तद्विदच्छर्यणावति ॥

— ரிக்வேதம், 1.84.13.

சாட்யாயநி ப்ராஹ்மணத்தில் இந்தக் கதை விவரிக்கப் பட்டுள்ளது. தத்யங் முனிவர் தவத்தில் சிறந்து விளங்கினார். அவர் பூமியில் இருந்த வரையில் அஸுரர்களால் யாருக்கும் ஏதும் துன்பமில்லாதிருந்தது. அவரைக் கண்ட மாத்திரத்தில் அஸுரர்கள் அஞ்சி நடுங்கி ஓடிவிடுவார்கள். ஒரு காலத்தில் அவர் இந்த நில உலகை விட்டு ஸ்வர்க்கலோகம் சேர்ந்தார். அஸுரர்களுக்குக் கொண்டாட்டமாகிவிட்டது. நாடெங்கும் சூழ்ந்துகொண்டு துன்புறுத்தினர்.

இந்திரன் தத்யங் முனிவருடைய இடத்துக்கு வந்து அவரைத் தேடினான். அங்கு இருந்தவர் மூலம் அவர் ஸ்வர்கலோகம் போய்விட்டதாக அறிந்தான்; திகைத்துப் போனான். அஸுரர்களை ஒழித்துக்கட்டும் வகையறியாமல் திணறினான். அங்கிருந்தவர்களைக் கேட்டான், "இறந்து போன தத்யங் முனிவருடைய

உடலுறுப்புக்களின் எலும்புகள் எங்காவது சிதறி விழுந்து கிடக்கின்றனவா?" என்று.

அவர்கள் சொன்னார்கள்: "ஒரு சமயம் அச்வினி தேவர்கள் தத்யங் முனிவரிடம் கல்வி கற்க வந்திருந்தனர். குதிரை முகமுள்ள தத்யங் முனிவர், அவர்களுக்கு மதுவித்யையை உபதேசித்தார். அந்தக் குதிரைத் தலை மட்டும் இந்தப் பக்கம்தான் எங்கேயோ விழுந்து கிடக்கிறது. ஆனால் இன்ன இடமென்று திட்டமாகக் கூற எங்களுக்கு ஸாத்தியமில்லை" என்று.

உடனே இந்திரன் அந்த இடத்தின் சுற்றுப்புறமெல்லாம் தேடினான். நிறைய மலைகளும் ஏரிகளும் நிறைந்த இடம் அது. 'சர்யணாவத்' என்பது ஒரு பெரிய ஏரி. அதில் அதைக் கண்டான். குருக்ஷேத்திரத்தின் மேற்புறத்தில் இது உள்ளது. அந்தத் தலையெலும்பு வஜ்ராயுதத்தைக் காட்டிலும் பன்மடங்கு உறுதியாக இருந்ததாம். அதனால் ஆயிரக்கணக்கான அஸுரர்களை அடித்துக் கொன்றான். உலகம் கவலையற்று வாழ்ந்து வந்தது. இதுதான் சாட்யாயநி ப்ராஹ்மணத்திலுள்ள கதை. செத்துப்போனவருடைய எலும்புக்கு இவ்வளவு சக்தி இருந்திருக்கிறது. அங்கிரஸ் வம்சத்தின் பெருமைதான் என்னே!

ஏற்கெனவே இதே கதை வேறு விதமாக எழுதப்பட்டுள்ளதே என்று ஸந்தேஹிக்க வேண்டாம். அதுவும் சரிதான், இதுவும் சரிதான். இந்த மந்த்ரத்தில் 'அஸ்தபி: – எலும்புகளால்' என்ற கருத்தைத் தருமாறு பன்மை இடம் பெற்றுள்ளது. அவ்வாறே, 'வ்ருத்ராணி — வ்ருத்ரர்களை' என்னும் இடத்திலும் பன்மை காண்கிறது. அதனால் வ்ருத்ரர்கள் பலர் இருந்தமை புலனாகிறது. ஒவ்வொரு வ்ருத்ரனையும் இந்திரன்தான் கொன்றவன். தத்யங் முனிவருடைய ஒவ்வோர் எலும்பும் அவ்வப்போது வஜ்ராயுதத்துடன் இணைக்கப்பெற்று, அதில் விசேஷ சக்தியை உண்டுபண்ணி வ்ருத்ரனைக் கொல்ல உதவியது. அதனால் பூர்வோத்தர விரோதமில்லை என்று கொள்ள வேண்டும்.

## தர்ம சாஸ்திரம்

அங்கிரஸ் மகரிஷி உலக க்ஷேமார்த்தமாக யாகங்களை அநுஷ்டித்து வழிகாட்டியதோடு நில்லாமல், தர்ம சாஸ்திரம் ஒன்றையும் அருளிச் செய்திருக்கிறார். 'அங்கிரஸ் ஸ்ம்ருதி' என்றே

இது வழங்குகிறது. இவருடைய வம்சஸ்தர்கள் பலரும் தர்ம சாஸ்திரங்களை இயற்றியுள்ளனர். அவையெல்லாம் மற்ற மகரிஷிகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவை. யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியில், தர்ம சாஸ்த்ர ப்ரவர்த்தகர்களான மகரிஷிகளைப்பற்றிக் கூறுகிருர் :—

मन्वत्रिविष्णुहारीतयाज्ञवल्क्योशनोऽङ्गिराः ।
यमापस्तम्बसंवर्ताः कात्यायनबृहस्पती ॥
पराशरव्यासशंखलिखिता दक्षगौतमौ ।
शातातपो वसिष्ठश्च धर्मशास्त्रप्रवर्तकाः ॥

மந்வத்ரிவிஷ்ணுஹாரீதயாஜ்ஞவல்க்யோசநோங்கிரா: ।
யமாபஸ்தம்பஸம்வர்த்தா: காத்யாயநப்ருஹஸ்பதீ ॥
பராசரவ்யாஸசங்கலிகிதா தக்ஷகௌதமௌ ।
சாதாதபோ வஸிஷ்டச்ச தர்மசாஸ்த்ரப்ரவர்த்தகா: ॥

— யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி, 1.1.4,5.

அங்கிரஸ், ஸம்வர்த்தர், ப்ருஹஸ்பதி ஆகியவர்களும் இந்தப் பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். இவர்கள் மூவரும், குல முதல்வரும் வழித்தோன்றல்களுமாவர்.

இவ்வாருக அங்கிரஸ் மகரிஷியின் பெருமை வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் கோஷிக்கப்படுகிறது. ரிக்வேத மந்திரங்கள் பலவற்றுக்கும் இவர் தேவதையாக விளங்குகிருர். மேலும், பல ஸூக்தங்களைக் கண்டு உபதேசம் செய்த ரிஷியாகவும் காட்சியளிக்கிருர். பித்ருக்களுடைய கோஷ்டியிலும் இவருக்கு ஸ்தானம் உள்ளது. மனுஷ்ய ஸமூஹத்திலோ கேட்க வேண்டியதில்லை. எண்ண முடியாத பிரம்மாண்டமான ஜனஸமூஹம் இவருடைய வம்ச பரம்பரையில் தோன்றி ஓங்கி வளர்ந்து உலகெங்கும் வியாபித்துள்ளது. இவருடைய பிள்ளைகளும் பேரன்களும் கொள்ளுப்பேரன்களும் ரிஷிகளாகவே இருந்து வேதமந்திரங்களைக் கண்டுபிடித்து உபதேசம் செய்தவர்கள். ரிக்வேதத்தில் எட்டாவது மண்டலத்தில் முப்பத்தைந்தாவது ஸூக்தத்தில், 16,17,18 எண்ணுள்ள மூன்று மந்திரங்களுக்கு ரிஷி யார் என்பதைப் பாஷ்யகாரர் கூறுகிருர் —

वसुरोचिषः अङ्गिरोगोत्राः सहस्रसंख्याकाः, 'आयदिन्द्रश्च' इत्यादीनां तासां तिसृणामृषयः ॥

என்பது வேதபாஷ்யம். 'அங்கிரஸ் கோத்திரத்திலுதித்த ஆயிரக்கணக்கான ரிஷிகள் இந்த மூன்று மந்திரங்களுக்கு ரிஷிகள்' என்பது இதன் பொருள். ரிக்வேதத்தில் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு ஸூக்தங்கள் இவராலும் இவருடைய வம்சஸ்தர்களாகிய ரிஷிகளாலும் கண்டுபிடிக்கப்பெற்றவை. அதர்வ வேதத்தில் இவருடைய மகிமை பரக்கப் பேசப்பெறுகிறது. இவரையே தேவதையாக வைத்து ஹோமங்கள் பலவும் சொல்லப் பெற்றிருக்கின்றன. அந்த வேதமே இவருடையதுதானே!

இவருடைய பெருமைகளை எல்லாம் எடுத்துரைப்பதானால் அது ஒரு மகாபாரதமாகிவிடும். ஒரு ரிக்வேத மந்திரத்தையும் அதன் கருத்தையும் சொல்லி இதை முடிப்போம்—

दध्यङ् ह मे जनुषं पूर्वो अङ्गिराः प्रियमेधः कण्वो अत्रिर्मनुर्विदुस्ते मे पूर्वे मनुर्विदुः । तेषां देवेष्वायतिरस्माकं तेषु नाभयः । तेषां पदेन मह्या नमे गिरेन्द्राग्नी आ नमे गिरा ॥

— ரிக்வேதம், 1.139.9.

திவோதாஸர் என்பவருடைய குமாரரான பருச்சேபர் என்பவர் சொல்லும் வார்த்தையாக இந்த மந்திரம் அமைந்துள்ளது. "தத்யங், பழைய அங்கிரஸ், ப்ரியமேதர், கண்வர், அத்ரி, மநு— இந்த மகரிஷிகள் அனைவரும் என்னுடையவும் என் முன்னோர்களுடையவும் பிறவியை அறிவர். அவர்கள் தேவர்களிடம் மிகுந்த செல்வாக்கு உள்ளவர்கள். எமது யாகம் போன்ற ஜீவாதாரமான செயல்கள் யாவும் அவர்கள் வசமானவை. அதாவது— 'இவன் நற்குலத்துதித்தவன், யாகம் பண்ணத் தகுதியுள்ளவன்' என்று அவர்கள் சொல்ல வேண்டும். அப்போதுதான் மற்றவர்கள் யாகம் பண்ணுவது சரியாகும். இங்கு வேதபாஷ்ய வாக்கியம்—

'असौ विशिष्टजन्मा, अतो यज्ञयोग्यः' इति तैर्वक्तव्यत्वेन तदधीनत्वम् ॥'

'அஸௌ விசிஷ்டஜந்மா, அதோ யஜ்ஞயோக்ய:' இதி தைர் வக்தவ்யத்வேந தததீநத்வம் ॥' என்பதாம். "அவர்களுடைய

அநுக்கிரகத்திஞல் நான் யாகம் பண்ணத் தகுதியுள்ளவஞகி ஸ்தோத்திரம் பண்ணுகிறேன். வணங்குகிறேன்" என்பது இதன் கருத்து.

மற்றவர்களுக்கு இல்லாமல் அங்கிரஸ்ஸுக்கு மட்டும் 'பூர்வ:' (பழமையானவர்) என்னும் அடைமொழி இங்கே தரப்பட்டுள்ளது. யாகம் முதலிய நற்காரியங்களைச் செய்பவர் அனைவருக்கும் அங்கிரஸ்ஸினுடைய இன்னருள் இன்றியமையாதது என்பதும் இதில் தெளிவாகக் கூறப்படுகிறது. தத்யங், மநு ஆகிய இருவரும் அங்கிரஸ்ஸின் திருமேனி ஸம்பந்தம் பெற்றவர்கள். அவரோடும் மற்றவர்களோடும் சரிசமானமாக இவர்களும் இந்த மந்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவ்வாருக ஸகல வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் அங்கிரஸ் மகரிஷியின் மகிமை பரக்கப் பேசப்பெறுகிறது. நமது புனிதமான நூல்களில் எங்கே பார்த்தாலும் அங்கிரஸ்ஸின் தொடர்பு இருக்கும்.

# குத்ஸர்

அங்கிரஸ் மகரிஷிக்குப் பிறகு அவருடைய வம்சத்தில் உதித்தவராகிய குத்ஸர் என்னும் மகரிஷியின் சரிதத்தை அறிய முயலுவோம். இதில் பொருத்தம் நிறைய உண்டு. அங்கிரஸ் மகரிஷி போலவே குத்ஸரும் வேதங்களில் பிரஸித்தமானவர். பல ரிக்வேத மந்திரங்களைக் கண்டெடுத்ததன் மூலம் அவற்றுக்கு ரிஷியாக இருப்பவர். அங்கிரஸ் வம்சம் பல சாகைகளாகப் பிரிந்து விரிந்தது. அந்தக் கூட்டங்களுள் (கணங்களுள்) 'கேவலாங்கிரஸ கணம்' என்பது ஆறு வகை. அவற்றுள் ஒரு கணத்துக்குத் தலைவர் குத்ஸர். 'ஆங்கிரஸ-மாந்தாத்ரு-கௌத்ஸ' என்பது அதனுடைய ப்ரவரம்.

## பெயரின் பொருள்

இது ஒரு விசித்திரமான பெயர்தான். இதற்குப் பொருள் கூறுவதிலும் சிறிது சிரமம் இருப்பது உண்மையே. 'குத்ஸ' என்பது ஸம்ஸ்க்ருதத்தில் அதிகமாகப் பழக்கத்திலுள்ள தாது. 'நிந்தனை செய்தல், இழிவு, வைவது' என்பது போன்ற தாழ்வான பொருள்கள்தாம் இந்தத் தாதுவுக்கு உள்ளன. இந்தத் தாதுவில்தான் குத்ஸர் என்னும் பெயர் உருவாகியிருக்கிறது. இந்தப் பெயருக்கு, 'நிந்திப்பவர், வைகிறவர், இழிவுபடுத்துகிறவர்' என்ற ரீதியில்தான் பொருள் கூறலாம். 'வேதப் பிரஸித்தராகி வேதங்களையே கண்டுபிடித்துத் தந்தவரான அங்கிரஸ்ஸின் வழித்தோன்றலான புனித மகரிஷியின் பெயரா இது?' என்று நமக்கு வியப்பு உண்டாவது இயல்பே. தொன்மையான சொற்களுக்கு, இக் காலத்திலுள்ள வழக்கை ஆதாரமாகக் கொண்டு பொருள் கூறுவது சிரமம்தான். ஆயினும் வேறு வழி இல்லையே! இவர், துர்மார்க்கத்தில் செல்லுகிறவர்களை ஸதா ஸர்வ காலமும் நிந்தித்துக்கொண்டே, வைதுகொண்டே, இழிவு படுத்திக்கொண்டே, இருந்திருக்கக் கூடும். அதனால் அதுவே இவருக்குப் பெயராகி யிருக்கக் கூடும். அல்லது, அயோக்கியர்கள் எப்பொழுதும் இவரை நிந்தனை செய்து கொண்டே இருந்திருக்கலாம். இவர் தமது நீண்ட ஆயுட்காலத்தில் பற்பல

சந்தர்ப்பங்களில் பலரால் நிந்திக்கப்பட்டிருக்கலாம் பலரை நிந்தித்திருக்கலாம். அதனால் அதுவே பெயராகியிருக்கலாம் இவருக்கு. இதனால் இந்த மகரிஷியின் தூய்மை, பெருமை, மகிமை, மேன்மை, தவ வலிமை, ஞானம், அநுஷ்டானம், லோகோபகாரம், வேதப் புகழ், எல்லாராலும் வணங்கக்கூடிய தன்மை முதலியவை சிறிதளவும் குறையா.

**ப்ரோக்ஷணம்**

இது அனைவருக்கும் நன்கு தெரிந்த விஷயமே. கையில் சிறிதளவு தீர்த்தத்தை எடுத்து, உத்தேசித்த பொருளின்மேல் தெளிப்பதுதான் 'ப்ரோக்ஷணம்' எனப்படும். இதற்கு ஒரு மந்திரம் உண்டு. வேதம் சொல்லக்கூடிய நிலையிலுள்ளவர்கள் இந்த மந்திரத்தைச் சொல்லி ப்ரோக்ஷிக்க வேண்டும் மற்றவர் மந்திரமில்லாமலே ப்ரோக்ஷிக்க வேண்டும் 'ஓம் பூர் புவஸ்ஸுவ' என்பதுதான் அந்த மந்திரம். இதில் நான்கு சொற்கள் அடங்கியுள்ளன 'ஓம்' என்பது முதல் வார்த்தை 'பூ' என்பது இரண்டாவது ''புவ'' என்பது மூன்றாவது 'ஸுவ' என்பது நாலாவது. இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் தேவதைகள், ரிஷிகள், சந்தஸ்கள் எல்லாம் உண்டு அவற்றைச் சொல்லித்தான் இந்த மந்திரத்தை உபயோகிக்க வேண்டும் ஆனால் இப்போது முக்கியமான சந்தர்ப்பங்களில் தவிர மற்றச் சமயங்களில் இப்படிச் செய்வதில்லை. இவற்றில் நாலாவதான 'ஸுவ' என்னும் வ்யாஹ்ருதி (வார்த்தை)க்கு குத்ஸர்தாம் ரிஷி. அதாவது இதைக் கண்டுபிடித்து உபயோகிக்கும் முறையை உலகினருக்கு முதல்முதலில் உபதேசித்த பெருமை இவருடையதே. ஸந்தியாவந்தனம் பண்ணுகிறவர்கள் அனைவரும் இன்றும் என்றும் இவர் பெயரைச் சொல்லியே அதைப் பண்ண வேண்டும்

'भूरादिव्याहृतित्रयस्य अत्रिभृगुकुत्सा ऋषयः, गायत्र्युष्णिगनुष्टुभश्छन्दांसि, अग्निवाय्वर्का देवताः ॥'

என்பதை, காயத்ரீ ஜபம் பண்ணுவதற்கு முன்பு அனைவரும் சொல்லி வருகிறார்கள்.

இந்த முக்கியமான மந்திரத்தைக் கண்டுபிடித்து உலகில் நடக்க வேண்டிய வைதிக காரியங்களனைத்தையும் புனிதமாகப் பண்ணிய பெருமையுடன் குத்ஸ மகரிஷி வைதிகர்களின் மனத்தில் நிலைபெற்று நிற்கிறார் இதன் மகிமையை ஒரு வேதவாக்கியம் விளக்கிக் கூறுகிறது—

ब्रह्मवादिनो वदन्त्यद्भिर्हवींषि प्रौक्षीः केनाप इति ब्रह्मणेति ब्रूयात्,
अद्भिर्ह्येव हवींषि प्रोक्षति ब्रह्मणापः ॥

— தைத்திரீய ஸம்ஹிதை, 2.6.5

என்பதுதான் அந்த வேதவாக்கியம் இதன் கருத்து-(இது யாகப்ரகரணத்தில் இருக்கும் வாக்கியம், ஆதலால் யாக ஸம்பந்தமுள்ள விஷயத்தையே பேசும். நாம் இதைப் பொதுவான ரீதியில் அமைத்துக் கொள்ளலாம்) "ஹவிஸ்ஸுக்களை ஜலத்தினால் ப்ரோக்ஷிக்கிறீர்கள் (அவை சுத்தமாவதற்காக). ஆனால், அந்த ஜலத்தை எதனால் ப்ரோக்ஷிக்கிறீர்கள்? (அது முந்துற முன்னம் சுத்தமாக இருந்தாலதானே மற்றப் பொருள்களைச் சுத்தமாக்க முடியும்?)" என்று, ப்ரஹ்மவாதிகள் (வேதம் வல்லார்கள்) கேட்கிறார்கள் 'மந்திரத்தினால்' என்பதுதான் இதற்குப் பதில். அதாவது ஜலத்தினால் ஹவிஸ்ஸுக்களை ப்ரோக்ஷிக்கிறோம். ஜலத்தை மந்திரத்தினால் ப்ரோக்ஷிக்கிறோம் (சுத்தப்படுத்துகிறோம்) என்று தேறுகிறது மந்திரமில்லாமல் 'வெறும்' ஜலத்தினால் மட்டும் ப்ரோக்ஷணம் பண்ணினால் வஸ்துக்கள் சுத்தமாகமாட்டா என்பது முடிவு"

அந்த மந்திரம் என்ன தெரியுமா? வேறொன்றுமில்லை; மேலே சொன்ன 'ஓம் பூர்புவஸ்ஸுவ:' தான். இதைக் கண்ட ரிஷிகள் அத்ரி ப்ருகு குத்ஸர் என மூவர். இந்த மூவரும் ஒருங்குசேர்ந்து, பிரபஞ்சம் தோன்றினது முதல் பிரளயம் வரையில் ஸகலமான லௌகிக வைதிக காரியங்களுக்கும் மூலாதாரமான இந்த மூன்று வ்யாஹ்ருதிகளைக் கண்டு உபதேசித்த மகாபுருஷர்கள். இந்த 'ஓம் பூர்புவஸ்ஸுவ:' உபநிஷத்துக்களிலும், மற்ற வேதங்களிலும், ஸந்தியாவந்தனம் முதலிய ஸகல நித்ய நைமித்திக கர்மாக்களிலும், யாகங்களிலும், எம்பெருமானை ஆராதிக்கும்போதும்; 'ஸர்வப்ராயச்சித்தம்' என்னும் கம்பீரமான பெயருடன் ஹோமங்களின் 'மத்தியிலும், 'காயத்ரீ ஜபத்திலும்,

பிராணாயாமத்திலும் அமர்ந்து காட்சியளிக்கிறது. இதைக் கண்டு பிடித்த மகரிஷிகள் மூவருள் கடையானவர் இந்தக் குத்ஸ மகரிஷியே.

இவர் தனிமை பெற்ற ரிஷி. இவரைப் பற்றி இதிஹாஸ புராணங்களில் கதைகள் அதிகமாகக் காண்பதில்லை. ஆனால் வேதங்களில்–அதிலும் ரிக்வேதத்தில்–இவருடைய பெருமைகள் நிறையப் பேசப்பெறுகின்றன. இவருடைய புனிதமான திருநாமம் ரிக்வேதத்தில் நாற்பது ஐம்பது இடங்களில் வந்துள்ளது. வேதம் வல்லோர்களால் ஸ்வரம் அக்ஷரம் மாத்திரை பிசகாமல் ஸம்பிரதாயமாக இவரது திருநாமம் அத்தியயனம் பண்ணி ஓதப்பெற்று வருகிறது. அந்த ரிக்வேத மந்திரங்களிலிருந்தே இவரது வரலாறும் ஓரளவு புலனாகிறது. சிலவற்றை இங்கு தருகிறோம்—

आ दस्युघ्ना मनसा याह्यस्तं
भुवत् ते कुत्सः सख्ये निकामः ।
स्वे योनौ निषदतं सरूपा
वि वां चिकित्सदृतचिद्ध नारी ॥

— ரிக்வேதம், 4.16.10.

வாமதேவர் என்னும் ரிஷி, இந்திரனைப் பார்த்துச் சொல்லும் வார்த்தை இது. இதன் கருத்தில் ஒரு குட்டிக்கதை உள்ளடங்கியுள்ளது. அதை முதலில் விளக்கி, பிறகு மந்திரத்தின் கருத்தைத் தருகிறோம்.

**கதை**

ருரு என்னும் பெயருள்ள ராஜரிஷி ஒருவர் இருந்தார். அவருடைய குமாரர்தாம் குத்ஸர். இவரும் பெரிய ராஜரிஷியாக விளங்கினார். அக்காலத்தில் இவரால் தம் பகைவர்களை வெல்ல முடியவில்லை. அதனால் மிகவும் கஷ்டப்பட்டார். பரம தார்மிகரான இவர் இவ் விஷயத்தில் இந்திரனுடைய உதவியை வேண்டினார். உடனே உதவி கிடைத்தது. இவருடைய வீட்டிலேயே இந்திரன் வந்து தங்கினான்; இவரது எதிரிகளையெல்லாம் அழித்தான். குத்ஸர் பேரானந்தமடைந்தார். பிறகு இந்திரன் மீண்டும் தனது இருப்பிடம் சென்றான். போகும்போது இவரையும் கூடவே அழைத்துச்

சென்றான். இருவருக்கும் பரஸ்பரம் அவ்வளவு பாசம். இவரை விட்டுப் பிரிய மனமில்லை அவனுக்கு. இந்திரனுடைய மாளிகையில் இருவரும் புகுந்தனர்; ஆசனத்தில் அமர்ந்தனர். பல நாட்களாகக் கணவனைக் காணாமலிருந்த இந்திராணி ஆவலுடன் உட்புறத்திலிருந்து ஓடி வந்தாள், இந்திரனைக் கண்டு உரையாடி மகிழ்வதற்காக. ஆனால்? அப்படியே திகைத்துப் போய்விட்டாள். 'இருவருள் யார் இந்திரன்?' என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. இருவரும் ஒரே அச்சில் வார்த்தது போலல்லவா இருக்கின்றனர்? சிறிதளவுகூட வித்தியாசமில்லையே! என்ன செய்வாள் பாவம்! வாயால் கேட்டுத் தெரிந்துகொண்டாள். இந்திரனோடு அப்படிப்பட்ட ஒற்றுமையாம் இந்தக் குத்ஸருக்கு, வடிவழகிலும் மனப்போக்கிலும், அப்படிப்பட்ட ஸ்நேஹமாம். இதுதான் கதை.

இனி இந்த மந்திரத்தின் கருத்தைத் தருகிறேன்-"இந்திரனே! பகைவர்களைக் கொல்ல வேண்டுமென்னும் எண்ணம் நிறைந்த மனத்துடன் நீ குத்ஸருடைய வீட்டிற்குச் சென்றாய். (என்ன காரணம்?) அந்தக் குத்ஸர் உன் துணையைப் பெரிதும் நாடினார். உன் மாளிகையில் நீங்கள் இருவரும் ஒரே விதமான வடிவத்துடன் அமர்ந்திருந்தீர்கள். உண்மையை அறிய விரும்பின இந்திராணி, உங்கள் இருவருக்குள் யார் தன் கணவன் என்பதை அறிய முடியாமல் திணறினாள்" என்பது கருத்து.

இதில் குத்ஸருடைய வடிவழகும், உத்தமமான தார்மிக ராஜரிஷி வம்சத்தில் உதித்தமையும் அறியப்படுகின்றன. இக் காலத்தில் பரஸ்பர நட்புறவு ஒப்பந்தங்கள் செய்து கொள்கிறார்களே, அப்படி அக் காலத்திலும் இருந்திருக்கிறது. ஒருவருக்குப் பகைவர்களால் அபாயம் நேர்ந்தால் மற்றொருவர் ஓடோடி வந்து உதவ வேண்டும் என்னும் உடன்படிக்கை குத்ஸருக்கும் இந்திரனுக்கும் இருந்திருக்கிறது. அதனால்தான் குத்ஸர் தமக்கு அபாயம் வந்த ஸமயத்தில் அஞ்சாமல் உறுதியுடன் போராடிக்கொண்டே இந்திரனது துணையை எதிர்பார்த்தார். தக்க ஸமயத்தில் தவறாமல் இந்திரன் வந்து உதவினான். குத்ஸர் தம் பகைவர்களை வென்றார். வெற்றிவிழாவை இந்திரனுடைய இருப்பிடத்தில் சென்று இருவரும் கொண்டாடினார்கள். அவ்வளவு

ஆழ்ந்த நட்பு இவ்விருவருக்கும். அந்த ஸந்தர்ப்பத்தில் நடந்த எதிர்பாராத நிகழ்ச்சியையே மேலே காட்டிய ரிகவேத மந்திரம் விவரிக்கிறது. மற்றுமொன்று, காணீர் —

इन्द्रं कुत्सो वृत्रहणं शचीपतिं ।
काटे निबाह्ळ ऋषिरह्वदूतये ।
रथं न दुर्गाद् वसवः सुदानवो ।
विश्वस्मान्नो अंहसो निष्पिपर्तन ॥

— ரிக்வேதம், 1 106 6

இந்த மந்திரம் ஒரு ஸூக்தத்தில் உள்ளது இது போன்ற மற்றும் ஆறு மந்திரங்களுடன் சேர்ந்து மொத்தத்தில் ஏழு மந்திரங்கள் கொண்டது இந்த ஸூக்தம் இந்த ஸூக்தத்திற்கு இந்தக் குத்ஸரே ரிஷி ஆனாலும் இவருடைய பெயர் தனிமையில குறிப்பிடப்படவில்லை. 'குத்ஸ ஆங்கிரஸ' எனறே தரப்படுகிறது தம் குலமுதலவரான ஆங்கிரஸ்ஸின் பெயரை இணைத்தே தம பெயரைக் குறிப்பிடுவதில் இவர் பெருமை கொளகிறார். இதில மற்றொரு விசேஷம் இதிலுள்ள ஏழு மந்திரங்களுள் ஆறு (1 முதல் 6 வரையில்) ஒரே உத்தரார்த்தத்தையுடையவை ஒவ்வொரு மந்திரத்திலும் முதற் பாதிதான் வேறுபடும்

ஒரு ஸமயம் குத்ஸர் கிணற்றில் விழுந்துவிட்டாராம் தமக்கு உதவி புரிவதற்காக, இந்திராணியின் கணவனும், விருத்திரனைக் கொன்றவனுமாகிய இந்திரனைக் கூப்பிட்டாராம் அவன உடனே ஓடிவந்து இவரைக் காப்பாற்றினன் - கரடுமுரடான வழியில் சிக்கின தேரை, ஸாரதி ஸாமர்த்தியமாகக் காப்பாற்றுவது போல்

மற்றொரு மந்திரம் —

युवं कवी ष्ठः पर्यश्विना रथं
विशो न कुत्सो जरितुर्नशायथः ।
युवोर्ह मक्षा पर्यश्विना मध्वासा
भरत निष्कृतं न योषणा ॥

— ரிக்வேதம், 10 40 6

கக்ஷீவான் என்பவருடைய மகள் கோஷா என்பவள் இதற்கு ரிஷி. அச்வினி தேவர்களைப் பார்த்து அவள் சொல்லுகிறாள் —

"அச்வினி தேவர்களே! நீங்கள் சிறந்த மேதாவிகள். ஸ்தோத்திரம் பண்ணுகிறவனுடைய யாகத்திற்குப் போவதற்காகத் தேரில் ஏறி வருகிறீர்கள் நாட்டு மக்களிடம் அதிகமான பரிவுள்ள குத்ஸர், தம்முடன் இந்திரனையும் அழைத்துக் கொண்டு, இருவருமாகத் தேரில் வருவது போன்ற காட்சி, உங்கள் இருவரையும் தேரில் பார்க்கும்போது நினைவிற்கு வருகிறது" குத்ஸரும் இந்திரனும் ஒரே விதமான வடிவமும் தோற்றமும் உள்ளவர்கள் வெளித் தோற்றத்தில் மட்டும் இந்த ஒற்றுமை முடிந்துவிடவில்லை அவ்விருவருக்கும் பரஸ்பரம் உள்ள பாசம் அளவிட முடியாதது எப்போதும் இருவரும் இணை பிரியாமல் சேர்ந்தே இருப்பதில் அவர்களுக்கு பரம திருப்தியாம் அச்வினி தேவர்களும் இரட்டையர் ஒருவருக்கொருவர் வாசியில்லாத ஒரே வகையான வடிவமுள்ளவர்கள் எப்பொழுதும் இணைபிரியாமலே இருப்பவர் இவர்கள் தேரில் ஏறிக்கொண்டு அழகாக உலா வருவது கண்கொள்ளாத் காட்சியாக இருக்கும். அதற்குப் பொருத்தமான உபமானத்தை வேதம் எடுத்துக் காட்டுகிறது. குத்ஸரும் இந்திரனும் இணையாகத் தேரில் ஊர்வலம் வருவது போலிருக்கிறதாம் குத்ஸரிடம் இந்திரனுக்கு அவ்வளவு மதிப்பு, ஆசை, கொண்டாட்டம் இப்படிப் பல வேத மந்திரங்கள் குத்ஸருடைய பெருமையைப் பேசுகின்றன

அங்கிரஸ் மகரிஷியின் வம்சஸ்தர்களை அங்கிரஸஸ்கள் என்றும், ப்ருகு, அத்ரி ஜமதக்னி வஸிஷ்டர் இவர்களது வம்சஸ்தர்களையும் அவரவர் பெயரிலேயே பன்மையிலும் சொல்வது போலவே இந்தக் குத்ஸ விஷயத்திலும் சொல்லப்படுகிறது. இவருடைய வம்சஸ்தர்களை, பொதுவில் இவருடைய பெயரிலேயே பன்மையை உபயோகித்துக் 'குத்ஸா' என்று கூறுகிறது வேதம்.

ரகுவம்சம் ஐந்தாம் ஸர்க்கத்தில் முதல் ச்லோகத்தில்,

कौत्सः प्रपेदे वरतन्तुशिष्यः ।

கௌத்ஸ: ப்ரபேதே வரதந்துசிஷ்ய: ।

என்று கதையைத் தொடங்குகிறார் காளிதாஸர் இந்தக் குத்ஸருடைய வம்சத்தில் உதித்தவர்தாம் வரதந்து முனிவருடைய சிஷ்யரான

இந்தக் கௌத்ஸர். இவருக்கு வேறு பெயர் இருந்ததாகத் தெரியவில்லை. இருந்தால் கவி சொல்லாமல் விடுவாரா? இவருடைய ஆசார்யனுடைய பெயரை வரதந்து என்று சொல்லவில்லையா? அதுபோல் இவருக்கு வேறு பெயர் இல்லாமையினாலேயே, குல முதல்வருடைய பெயரையே ஆதாரமாக வைத்துக் கௌத்ஸர் என்று சொல்லுகிறார். இந்தக் கௌத்ஸர் வரலாறு பிரஸித்தமானது. சுருக்கமாகக் கூறுவோம் இங்கு.

வரதந்து மகரிஷியிடம் இவர் வேத சாஸ்திரங்களை முறைப்படி மாணவராக இருந்து கற்றார். முடிவில் "குரு தக்ஷிணை என்ன கொடுக்க வேண்டும்?" என்று இந்த சிஷ்யர் ஆசார்யரை வணங்கிக் கேட்டார். ஆசார்யர், தக்ஷிணையாக எதையும் பெற்றுக் கொள்ள விரும்பவில்லை. அப்படி விரும்பினாலும் சிஷ்யரிடம் என்ன இருக்கிறது? அப்படியே அவர் எங்கேயாவது ஸம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்தாலும் இந்தக் காட்டு நடுவில் அதை வைத்துக்கொண்டு என்ன செய்வது? அதனால் ஸாதிக்கக் கூடிய ஸுகபோகங்களில் வரதந்து மகரிஷிக்கு ஆசை இருந்தால்தானே அந்தப் பொருள் அவருக்கு உபயோகப்படும்?

இதையெல்லாம் நன்கு உணர்ந்து ஆசார்யர் ஸஹஜமாகச் சொல்லிவிட்டார்— "குருதக்ஷிணை ஒன்றும் வேண்டாம். இவ்வளவு காலம் பக்திசிரத்தையுடன் பணிவிடை செய்து வந்தாயே, அதுவே போதும்" என்று.

கௌத்ஸர் அதை ஒப்புக்கொள்ளவில்லை; நிர்ப்பந்தித்தார். ஆசாரியருக்குக் கோபம் வந்துவிட்டது. கடுமையாக தக்ஷிணை கேட்டார். நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், நான்கு உபாங்கங்கள் ஆக மொத்தம் பதினான்கு விதமான வித்யைகளை அல்லவா அவர் தம் சிஷ்யருக்குக் கற்பித்திருக்கிறார்! இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோடி பொன் தாளாதா? இந்தக் கணக்கையே ஆதாரமாக வைத்து, "பதினாலு கோடி பொன் குருதக்ஷிணை கொண்டு வா" என்று பணித்தார் வரதந்து மகரிஷி.

கௌத்ஸர் அந்தக் காலத்துப் பிரம்மசாரி. தினந்தோறும் பிச்சையெடுத்துத் தின்று வயிறு வளர்த்துக்கொண்டு கல்வி கற்றவர். அவர் திகைத்துப் போய்விட்டார்; ஆனாலும் பயப்படவில்லை.

ரகு மகாராஜனிடம் வந்து விஷயத்தைச் சொன்னார். அவன் தன் சக்தியினால் பிரம்மாண்டமான பொற்குவையைத் தருவித்துக் கௌத்ஸரிடம் ஒப்படைத்தான். இவர் அவற்றை எண்ணிச் சரியாகப் பதினாலு கோடி எடுத்துக்கொண்டு மீதியை ஏற்க மறுத்துவிட்டார். "உமக்காகத்தானே இந்தப் பணமெல்லாம் தருவிக்கப்பட்டது? ஆதலால் இது முழுவதையும் நீரே ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றான் ரகு மகாராஜன். கௌத்ஸர் இணங்கவில்லை. அரசனும் தளரவில்லை. ஊரெல்லாம் ஒன்றுகூடி விட்டது இந்த அதிசயத்தைப் பார்க்க. முடிவில் வெற்றி யாருக்கு? இருவருக்கும்தான்! அந்த அதிகப்படியான பொற்குவையை ரகு மகாராஜனும் தன்னிடம் வைத்துக் கொள்ளவில்லை; கௌத்ஸரும் ஏற்றுக்கொள்ளவில்லை. நடந்தது என்ன தெரியுமா? நூற்றுக் கணக்கில் ஆண் ஒட்டகங்களும் பெண் ஒட்டகங்களும் கொண்டு வரப்பட்டன. இந்தப் பொற்குவை முழுவதும் மூட்டை மூட்டையாகக் கட்டப்பெற்று அவற்றின் மேல் ஏற்றப்பட்டது. கௌத்ஸருடைய தலைமையில் இந்தப் பெருங் கூட்டம் வரதந்து மகரிஷியின் ஆச்ரமத்தை நோக்கி நகர்ந்தது. திரவியம் முழுவதும் ஆசார்யரிடம் ஒப்படைக்கப்பட்டது. கேட்டதற்கு அதிகமாகவே இருந்தாலும் அருள்கூர்ந்து அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று பிரிய சிஷ்யரான கௌத்ஸர் ஆசார்யரை அடிபணிந்து வேண்டிக்கொண்டார். ஆசார்யர் கோபம் தணியப்பெற்றுத் தம் பரமானந்த சிஷ்யருடைய பிரார்த்தனையை நிறைவேற்றினார். கௌத்ஸரும் ரகு மகாராஜனும், ஏன், ஆசார்ய ஸார்வபௌமனாகிய வரதந்து மகரிஷியும் மிகுந்த திருப்தியடைந்தனர்.

அது அந்தக் காலம்; கிருதயுகம். தேவைக்கு அதிகமான பொருளைத் தேடுவதும் தம் வசம் வைத்துக்கொண்டிருப்பதும் மகாபாவம் என்று அனைவரும் உணர்ந்திருந்த காலம். இதைக் கதையாகச் சொன்னால்கூட, 'இப்படியும் நடந்திருக்குமா?' என்று ஸந்தேகப்படுமளவுக்குத் தலைகீழாக மாறிவிட்டது காலகதி.

ரகுவினிடம் விடைபெற்றுச் செல்லும்போது கௌத்ஸர் அகமகிழ்ந்து ஆசீர்வாதம் செய்தார். அவனுக்கு ஒரு குறையுமில்லை. ஒரே ஒரு குறை மட்டும் இருந்தது. இவருடைய ஆசீர்வாதத்தினால் அதுவும் நீங்கிவிட்டது. அவர் சொன்னது —

"ரகு மகாராஜனே, உனக்குத் தகுந்த ஸத்புத்திரன் பிறக்க வேண்டும்என்று ஆசீர்வதிக்கிறேன்—உன் தந்தைக்கு நீ பிள்ளையாகப் பிறந்ததுபோல்" என்பதுதான்.

மகரிஷியின் அருள்வாக்கு, கைமேல் பயனளித்தது. உரிய காலத்தில் அழகிய ஆண்குழந்தை பிறந்தது ரகு மகாராஜனுக்கு அஜன் என்று பெயர் அதற்கு. இவனுடைய பரம்பரையில்தான் தசரதர் பிறந்தார் அவருக்கு ராமர் பிறந்தார். இப்படி ரகுவம்சத்தை மறைந்து போகாமல் தழைக்கச் செய்த பெருமை கௌத்ஸருக்குக் கிடைத்தது.

குத்ஸ மகரிஷியின் வம்சத்தில் உதித்தவர்கள் அனைவரும் அவரைப்போலவே மகா தேஜஸ்விகளாக இருப்பர்; ஞானத்தை ஸம்பாதிக்க அரும்பாடு படுவர். ஞானத்துக்கு ஏற்ப அநுஷ்டானம் இந்தக் குலத்திற்கு இயற்கையாகவே அமைந்தது. வைராக்கியம் இவர்களுக்கு உடன்பிறந்தது. ரகு வம்சத்தில் வரும கௌத்ஸரே இதற்கு உதாஹரணம்.

இந்தக் குத்ஸ மகரிஷி க்ஷத்திரிய அரசராக இருந்தவராகத் தெரிகிறதே என்று எண்ண வேண்டாம். அதனால் ஒன்றும் பாதகமில்லை பல ரிஷிகள் இப்படி இருந்திருக்கிறார்கள். தவமும் ஞான அநுஷ்டானங்களும் லோகோபகாரமான செயல்களுமே ரிஷிகளின் பெருமைக்குக் காரணம் பாணினி வ்யாகரணத்தில் ஒரு ஸூத்ரம் —

अत्रिभृगुकुत्सवसिष्ठगोतमाङ्गिरोभ्यश्च ।

— அஷ்டாத்யாயீ, 2.4.65

இவரது பெயரில் பன்மையைக் கூட்டி, இவரது வம்சஸ்தர்களையும் சொல்வதற்கு வழி செய்கிறது புருகுத்ஸர் என்றும் ஒரு மகரிஷி இருந்திருக்கிறார் அவர் சடமர்ஷண கோத்ரப்ரவர்த்தகர் அவருடைய வரலாற்றையும், அவருடைய குமாரரான த்ரஸதஸ்யுவின் சரிதத்தையும் பிறகு விவரிப்போம். குத்ஸ மகரிஷியின் சரிதத்தை இவ்வளவில் நிறுத்திக் கொள்கிறோம்.

# கௌதமர்

அங்கிரஸ் மகரிஷியின் வம்சஸ்தர்களான மகரிஷிகள் பலர், தனித்தனியே ஒவ்வொரு குல முதல்வராகித் தமது வம்சத்தை வாழையடி வாழையாக வளர்த்திருக்கின்றனர். அவர்கள் திருநாமத்துடன் ஒவ்வொரு கோத்திரமும் தோன்றி அன்றுமுதல் இன்றுவரை வழங்கி வருகிறது. இவர்களில் குத்ஸருடைய சரித்திரத்துக்குப் பின் கௌதமருடைய சரித்திரத்தை அறியப் புகுவோம். இந்த மகரிஷிகளின் சரித்திர வரிசையை ஆதாரமாகக் கொண்டு இவர்களில் ஒருவர் பழையவர், ஒருவர் பிற்காலத்தியவர் என்று முடிவு பண்ணுவது தகாது. எல்லாருமே மிகமிகப் பழங்காலத்துப் பிறவிகள். நாம் யாராவது ஒருவரைப்பற்றி முதலில் எழுதுவதும், மற்றொருவரைப்பற்றிப் பிறகு எழுதுவதும் தவிர்க்க முடியாததொன்று. வம்சகூடஸ்தரான அங்கிரஸ் மகரிஷிக்குப் பிறபட்டவர்களே இவர்கள் அனைவரும் என்பது மட்டும் உண்மை.

அங்கிரஸ மகரிஷியின் வம்சம் முதல்முதலில் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிந்தது — 1 கௌதமர்கள், 2 பரத்வாஜர்கள், 3 கேவலாங்கிரஸ்ஸுக்கள் என்று. இவர்களில், கேவலாங்கிரஸ்ஸுக்கள் என்னும் பிரிவில் இடம் பெற்றவர் குத்ஸர். கௌதமரோ தம் திருநாமத்துடனேயே மாபெரும் வம்சாவளியைத் தோற்றுவித்தவர்.

இவரது வம்சம், பத்து பிரிவுகளாக விரிந்தது — 1 ஆயாஸ்யர்கள், 2 சாரத்வதர்கள், 3. கௌமண்டர்கள், 4 தீர்க்கதமஸ்ஸுக்கள், 5 ஔசநஸர்கள், 6 கரேணுபாலிகள், 7 ராஹூகணர்கள், 8. ஸோமராஜகர்கள், 9. வாமதேவர்கள், 10 ப்ருஹதுக்தர்கள் என்பவை அந்தப் பிரிவினரின் பெயர்களாம். இவற்றில் ஒவ்வொரு கோத்திரப் பிரவரத்திலும் முதலில் 'ஆங்கிரஸ' என்பதும், முடிவில் 'கௌதம' என்பதும் தொடர்ந்து வரும். மத்தியில்தான் அந்த அந்தத் தனிப் பெயர்கள் இடம் பெறும். இவ்வாறாகப் பிரம்மாண்டமான வம்ச விருக்ஷத்தின் மூல புருஷராக விளங்குகிறார் கௌதமர். மேலே சொன்ன பத்து கோத்திரக்

காரர்களும் பரஸ்பரம் கன்யகாதானம் செய்து கொள்ளக்கூடாது. ஒரே மூலபுருஷருடைய பிரிவுதானே இவர்கள்!

இந்த கௌதமர் ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வ வேதம், இதிகாஸ புராணங்கள், கல்பஸூத்ரங்கள், தர்க்கம் முதலிய சாஸ்த்திரங்கள் பலவற்றிலும் பரவலாகக் குறிப்பிடப்பெறுகிறார். இவர்கள் யாவரும் ஒருவரேயா வெவ்வேறானவரா என்னும் சர்ச்சை விரிவான ஆராய்ச்சிக்குரிய விஷயம். அதில் இப்போது நாம் இறங்கவில்லை. அங்கிரஸ் வம்சத்தில் தோன்றிய பத்துக் கோத்திரங்களுக்கும் மூலபுருஷரான கௌதமர் என்னும் மகரிஷியை மனத்தில் கொண்டு அவரது சரித்திரத்தை எழுதுகிறோம். கௌதமர் என்னும் திருநாமத்துடன் இணைந்து காணப்படும் வரலாறுகளை இங்கு விவரிக்கிறோம். இதில் ஏதாவது தாரதம்யம் தோற்றுமாயின் அதை வாசகர்கள் உசிதம்போல் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும்.

## பெயரின் பொருள்

கௌதமர் என்னும் பெயர் கோதமர் என்பதன் விரிவாகத் தோன்றியது-கோதமருடைய குமாரர் கௌதமர் என்றவாறு, பாணினிஸூத்ரத்தில் கோதமர் என்றே குறிப்பிடப்படுகிறார் இந்த மகரிஷி.

अत्रिभृगुकुत्सवसिष्ठगोतमाङ्गिरोभ्यश्च ।

என்னும் ஸூத்ரம் இதைத் தெளிவுபடுத்துகிறது.

एभ्यो गोत्रप्रत्ययस्य लुक् स्यात् । तत्कृते बहुत्वे, न तु स्त्रियाम् ।

என்பது இங்குள்ள வ்யாக்யாநவாக்யம். அத்ரி முதலானவர்களுடைய வம்சத்தைச் சார்ந்தவர்களைச் சொல்ல வேண்டியிருந்தால் ஒரு தத்திதப்ரத்யயம் வைத்துச் சொல்வது பொதுவான விதி. ஆத்ரேயர், பார்க்கவர், கௌத்ஸர், வாஸிஷ்டர், கௌதமர், ஆங்கிரஸர் என்று வழங்க வேண்டும். இவ்விடத்தில் முதலில் சொன்ன பெயர் சிறிது விரிந்து காணப்படும். இவ்வாறு இல்லாமல் மூலபுருஷருடைய பெயரை மாறுபாடு இல்லாமலே உபயோகித்து அவரது வம்சஸ்தர்களைச் சொல்லலாம். அவர்கள் பலராக இருக்க வேண்டும். ஒரு மூலபுருஷருடைய வம்சத்தைச்

சேர்ந்தவர்களாகவே பலர் இருந்தால், மூலபுருஷருடைய பெயரில் மாறுபாடு இல்லாமலே பன்மையை மட்டும் சேர்த்துச் சொல்லலாம். இப்பொழுது அத்ரய:, ப்ருகவ:, குத்ஸா:, வஸிஷ்டா:, கோதமா:, அங்கிரஸ: என்று சொற்களின் வடிவம் இருக்கும். இதில், 'கோதமர்கள்' என்றால், 'கோதமருடைய வம்சத்தில் தோன்றியவர்கள்' என்று பொருள் தேறுகிறது. இந்த விதியை வகுத்துக்கொடுத்த பாணிநி முனிவர், கோதமர் என்பதே தொன்மையான பெயர் என்பதையும், கௌதமர் என்பது அதன் விரிந்த வடிவம் என்பதையும் ஸ்பஷ்டமாக நிரூபித்து விட்டார். இனி இதன் பொருளை விவரிப்போம்.

கோ+தமஸ் என்று இரண்டு சொற்களின் சேர்க்கையினால் உண்டானது கோதமர் என்னும் பெயர். இதில் இரண்டாவது சொல்லான தமஸ் என்பது இருள் என்று பொருள்படும். முதற் சொல்லாகிய கோ என்பது, பிரகாசம் ஒளி தேஜஸ் கிரணம் காந்தி என்னும் பொருளுடையது. ஆக இவ்விரண்டு சொற்களும் ஒன்றுகூடி, பிரகாசம் இருள் என்று இரண்டு பொருள்களை உணர்த்துகின்றன. 'தமது தேஜஸ்ஸின் சக்தியினால் இருளை ஒழிப்பவர்' என்பது திரண்ட பொருள். அங்கிரஸ் என்பது போல் கோதமஸ் என்றுதான் இவரது பெயரையும் சொல்ல வேண்டும். ஆனால் கோதமர் என்று வழக்கத்தில் வந்துவிட்டது. அதனால் வ்யாகரண விரோதமொன்றும் இல்லை. 'ப்ருஷோதராதித்வாத் ஸாது' என்று இதற்குப் பரிகாரம் கூறுவர் வையாகரணர்கள். அதனால் கோதமர் என்றே இவரது பெயரை வைத்துக் கொள்ள வேண்டும். இந்தப் பெயருக்குத்தான் மேற்கண்டபடி இவரே பொருள் கூறுகிறார். மகாபாரதத்தில் அநுசாஸந பர்வத்தில் தொண்ணூற்றுநாலாம் அத்தியாயத்தில் இவரது வார்த்தையாகவே ஒரு ச்லோகம்: —

गोभिस्तमो मम ध्वस्तं जातमात्रस्य देहतः ।
विद्धि मां गोतमं कृत्ये यातुधानि निबोध माम् ॥

கோபிஸ் தமோ மம த்வஸ்தம் ஜாதமாத்ரஸ்ய தேஹத: ।
வித்தி மாம் கோதமம் க்ருத்யே! யாதுதாநி! நிபோத மாம் ॥

என்பது. ஒரு ராக்ஷஸியைப் பார்த்துத் தமது பெயரைச்

சொல்லுகிறார் கோதமர் இந்த ச்லோகத்தில் சொல்லும் போது தமது பெயரின் பொருளையும் விளக்கிக் கூறிவிடுகிறார். அந்த ராக்ஷஸி யார்? ஏன் அவளிடம் இவர் தமது பெயரை விளக்கிக் கூறவேண்டிய அவசியம் ஏற்பட்டது? இது ஒரு குட்டிக் கதை. மகாபாரதத்தில் உள்ளது.

முன்னொரு காலத்தில் கடும் பஞ்சம் நாட்டில் தோன்றிவிட்டது. உணவின்மையால் ஆடுமாடுகளும் மானிடர்களுடன் பறவைகளும் செத்து மடிந்தன. புல் பூண்டு தண்ணீர் ஒன்றும் கிடையாது. எங்கே பார்த்தாலும் கோரக்காட்சி. மிருகம்போல் மனிதனையே மனிதன் பிடுங்கித் தின்றான். ஸப்தரிஷிகள் ஒருங்கு சேர்ந்து உணவுக்காக அலைந்து திரிந்தனர் அவர்களின் பெயர்கள்?

कश्यपोऽत्रिर्वसिष्ठश्च भरद्वाजोऽथ गौतमः ।
विश्वामित्रो जमदग्निः साध्वी चैवाप्यरुन्धती ॥

கச்யபோத்ரிர் வஸிஷ்டச்ச பரத்வாஜோத கௌதம: ।
விச்வாமித்ரோ ஜமதக்நி: ஸாத்வீ சைவாப்யருந்ததீ ॥

— மகாபாரதம், 13.94.4.

1. கச்யபர், 2. அத்ரி, 3. வஸிஷ்டர், 4. பரத்வாஜர், 5. கௌதமர், 6. விச்வாமித்ரர், 7. ஜமதக்னி இவர்களுடன், வஸிஷ்டருடைய தர்மபத்தினி உத்தமி அருந்ததியும் இருந்தாள். இந்த ஸப்தரிஷிகளின் பட்டியல் ஒவ்வொரு மந்வந்தரத்திலும் வெவ்வேறாக மாறும். மேற்கூறியவர்கள் ஒரு மந்வந்தரத்தில் ஸப்தரிஷிகளாக இருந்தனர். கௌதமரும் அவர்களுள் ஒருவராக இருந்தார். அப்போது நடந்த நிகழ்ச்சி இது.

ஸப்தரிஷிகள் அனைவரும் நெடுநாளைப் பசியின் கொடுமையினால் அவதியுற்றனர். ஓர் இடத்தில் ஒரு மனிதன் இறந்து விழுந்து கிடந்தான். அந்தப் பிணத்தைச் சுற்றி இவர்கள் எழுவரும் உட்கார்ந்துகொண்டனர். அதைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தனர். என்னே பசியின் கொடுமை!

அப்போது சிபி சக்கரவர்த்தியின் வம்சத்தில் உதித்த வ்ருஷாதர்பி (शैब्यो वृषादर्भिः) என்னும் அரசன் அவ்வழியே வந்தான் இந்தக் கோரக் காட்சியைக் கண்டு திகைத்துப் போய்விட்டான் ஸப்தரிஷிகளா இந்த ஈனச் செயல் புரிவது? அவர்களுடைய ஜ்ஞானம்

அநுஷ்டானம் வைராக்கியம் தபஸ் எல்லாம் எங்கே? 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்னும் பழமொழிக்கு இவர்களுமா இலக்காகிவிடுவது? அரசன் பறந்தோடி வந்தான் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினன். "மகரிஷிகளே, இந்தச் செயலை நிறுத்துங்கள். இது உங்களுக்குத் தகாது. ஆபத்துக்காகப் பற்பல பொருள்களை நான் ஏராளமாகச் சேமித்து வைத்திருக்கிறேன். அவற்றிலிருந்து உங்களுக்குத் தேவையான வற்றை வேண்டிய அளவு தருகிறேன். நீங்கள் பசியாற உண்டு களியுங்கள். இந்த ஈனச் செயல் வேண்டாம்" என்று உள்ளம் குமுறி வேண்டிக்கொண்டான். அரசனது வேண்டுகோள் உடனே பலித்தது. ஸப்தரிஷிகள் அந்தப் பிணத்தை விட்டு விலகிச் சென்றுவிட்டனர்.

அரசனது மகிழ்ச்சியை அளவிட முடியுமா? மிகப் பெரிய அளவு தானிய வகைகளும் தின்பண்டங்களும் காய்கனிகளும் பொற்குவையும் ஆடையாபரணங்களும் அவனது சேமிப்பிலிருந்து வரவழைக்கப்பட்டன. ஸப்தரிஷிகளை அடிபணிந்து வேண்டிக் கொண்டான் அவன். "முனிச்ரேஷ்டர்களே! இவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். பசியாற உண்டு களிக்க வேண்டும் என்னை ஆசிர்வதிக்க வேண்டும்" என்று விநயத்துடன் கூறினன்.

ஆனல் அவர்கள் அவனுடைய நன்கொடையை ஏற்றுக் கொள்ளவில்லை. காரணம்? 'ஏற்பதிகழ்ச்சி' என்பதுதான். ஸப்தரிஷிகள் அப்போது இருந்த கஷ்டத்தையில்கூடத் தமது உறுதியைத் தளர்த்திக்கொள்ளவில்லை. ஒவ்வொரு ரிஷியும் ஒவ்வொரு காரணம் கூறி, அரசனது உதவியை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டயர். "நாங்கள் ஓர் இழிவான காரியம் செய்து பசியைத் தணிக்க முயன்றோம். அரசனே, அதிலிருந்து எங்களைத் தடுத்துக் காத்த நீ, அதனிலும் பன்மடங்கு இழிவான ஒரு காரியத்தைச் செய்யச் சொல்லுகிறாய். நாங்கள் இதைச் செய்யவே மாட்டோம். இந்த நிகழ்சசிகளால் எமக்குப் பசி மறந்து போய்விட்டது. பழையபடி, ஜன ஸஞ்சாரமில்லாத காட்டிலேயே தங்கியிருந்து தவம் செய்வோம்" என்று கூறி, அரசனை வாழ்த்திவிட்டுக் காட்டுக்குப் போய்விட்டனர் ஸப்தரிஷிகள்.

ஸப்தரிஷிகள் ஒரே குரலாகச் சொன்ன வார்த்தை இது:-

राजन् प्रतिग्रहो राज्ञो मध्वास्वादो विषोपमः ।

ராஜந்' ப்ரதிக்ரஹோ ராஜ்ஞோ மத்வாஸ்வாதோ விஷோபம:

"அரசே! விஷம் கலந்த தேனைச் சுவைப்பது போன்றது உன் பொருளை ஏற்றுக்கொள்வது" என்பது இதன் கருத்து. அரசனுக்குப் பெரும் சங்கடம். அரண்மனைக்குச் சென்றான். மனத்தில் நிம்மதி இல்லை. தன் பணியாட்களைக் கூப்பிட்டான். சிறந்த அத்திப் பழங்களைக் கொண்டு வரச் சொன்னான். மந்திரிமார்களைக் கூப்பிட்டு, "காட்டுக்குச் சென்று எப்படியாவது அந்த ஸப்தரிஷிகளைத் தேடிக் கண்டுபிடித்து இவற்றைக் கொடுங்கள். இவற்றையாவது உண்டு பசியாற்றிக் கொள்ளட்டும்" என்று பணித்தான். பழங்களினுள்ளே தங்கத்தை வைத்துப் பக்குவமாக மறைத்துக் கொடுத்து அனுப்பினான் ரகசியமாக. நல்ல ஸத்பாத்திரத்தில் தனது திரவியம் சேர வேண்டும் என்னும் ஆசைதான் காரணம்.

மந்திரிகள் எப்படியோ தேடியலைந்து ஸப்தரிஷிகளைக் கண்டுபிடித்து, அத்திப் பழங்களை அரசன் அனுப்பியதாகச் சொல்லி, வணக்கத்துடன் ஸமர்ப்பித்தனர். ஆனால் ஸப்தரிஷிகள் அவற்றையும் ஏற்றுக்கொள்ளவில்லை; மறுத்துவிட்டனர். பழங்களினுள்ளே பொன்னை மறைத்து வைத்திருப்பதை அவர்கள் நன்கு தெரிந்து கொண்டுவிட்டனர். "இஹலோகத்திலும் பரலோகத்திலும் ஸுகத்தை விரும்புகிறவன் இதை ஏற்கக்கூடாது" என்று ஒரே குரலில் மறுத்துவிட்டனர்.

अप्रतिग्राह्यमेवैतत् प्रेत्य चेह सुखेप्सुना ॥

அப்ரதிக்ராஹ்யமேவைதத் ப்ரேத்ய சேஹ ஸுகேப்ஸுநா ॥

மேலும், அந்தப் பழங்களையும் அவற்றினுள்ளே மறைத்து வைத்திருந்த தங்கத்தையும் வாங்கிக் கொள்ளக்கூடாது என்பதற்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணமும் சொன்னார்கள். கௌதமர் சொன்ன காரணத்தை மட்டும் இங்கே கவனிப்போம்–

न तल्लोके द्रव्यमस्ति यल्लोकं प्रतिपूरयेत् ।
समुद्रकल्पः पुरुषो न कदाचन पूर्यते ॥

ந தல்லோகே த்ரவ்யமஸ்தி யல் லோகம் ப்ரதிபூரயேத் ।
ஸமுத்ரகல்ப: புருஷோ ந கதாசந பூர்யதே ॥

— மகாபாரதம், 13.94.29.

"இவ்வுலகத்தில் ஆசையை முழுவதும் தீர்க்க வல்லபொருள் எதுவுமில்லை. மனிதன் கடல் போன்ற (ஆசையுள்ள)வன். அவன் எப்போதும் திருப்தியடையமாட்டான்" என்பது இதன் கருத்து.

மந்திரிகள் அரசனிடம் திரும்பிச் சென்று நடந்ததைச் சொன்னார்கள். ஸப்தரிஷிகள் தன்னை மிகவும் அவமதித்து விட்டதாக அவன் நினைத்தான்; கடுஞ்சினம் கொண்டான். கோபித்துக்கொண்டு இவனால் அவர்களை என்ன பண்ணமுடியும்? அவர்கள் மேல் குற்றம் ஏதுமில்லையே! மேலும், அவர்களுடைய தபஸ்சக்தி எங்கே? இவன் எங்கே? இருந்தாலும் அரசனுக்கு அவமானம் தாங்க முடியவில்லை. ஒரு யாகம் செய்தான். பயங்கரமான ராக்ஷஸி ஒருத்தி அக்கினி மத்தியத்திலிருந்து தோன்றினாள். ஸப்தரிஷிகளையும் கொல்லும்படி அரசன் அவளை ஏவினான். அந்த ராக்ஷஸி மட்டும் அவ்வளவு ஸுலபமாக இவர்களைக் கொன்றுவிட முடியுமா? அவள் ஸமயம் பார்த்திருந்தாள்: ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது.

பிரம்மாண்டமான ஓர் ஏரி. அந்த மஹாக்ஷாமத்திலும் அது ஒன்றுதான் நீர் நிறைந்திருந்தது. ஸகல பிராணிகளும் விடாய் தீர்த்துக்கொள்ள அங்கே வந்துதான் ஆகவேண்டும். 'இந்த ஸப்தரிஷிகளும் வருவார்கள். அப்போது கொன்றுவிடலாம்' என்று எண்ணி, அந்த ஏரியின் கரையில் காத்திருந்தாள் அரக்கி.

எதிர்பார்த்தபடியே நடந்தது. ஸப்தரிஷிகள் அங்கு வந்தனர். கோரமான பசி, தாகம். ஏரியில் தாமரைக் கொடிகள் அடர்த்தியாகப் படர்ந்திருந்தன. நீரில் மூழ்கி அடிப்புறத்தில் சென்று வெண்மையான தாமரைத் தண்டுகளைப் பறித்து வெளியில் கொணர்ந்து உணவாக உட்கொள்ள வேண்டுமென்பது அவர்களுடைய திட்டம். அவர்களை ஏரியின் பக்கம் போகவொட்டாமல் மடக்கி நிறுத்திவிட்டாள் அவள்.

"நான் இந்த ஏரியின் காவற்காரி. என் அநுமதி இல்லாமல் யாரும் இதில் இறங்கக் கூடாது" என்றாள்.

"அப்படியே ஆகட்டும். நாங்கள் பெருவிடாய்ப்பட்டு வந்திருக்கிறோம். எங்களை நீ அநுமதிக்க வேண்டும்."

"நீங்கள் ஒவ்வொருவராக என்முன் வந்து உங்கள் பெயர் முதலிய விவரங்களைச் சொல்ல வேண்டும். அதன் பிறகுதான் அநுமதிப்பேன்" என்றாள் அரக்கி.

ஸப்தரிஷிகளில் ஒவ்வொருவரும் பொறுமையுடன் அவளெதிரில் சென்று தங்கள் பெயர் முதலிய விவரங்களைக் கூறினர். ஏரியினுள்ளே இறங்குவதற்கு அநுமதி கிடைத்தது.

கௌதமரும் அவர்களுள் ஒருவராயிற்றே! அவரும் தம் பெயரைச் சொன்னார். அந்த ச்லோகமும் அதன் கருத்தும்தான் முன்னம் தரப்பட்டவை.

ராக்ஷஸியின் எண்ணம் ஈடேறவில்லை. கடுமையான தாகத்தில் வழிமறித்தால் தன்னை லக்ஷ்யம் பண்ணாமல் ஏரியில் இறங்குவார்கள்; அதையே காரணமாகக் கொண்டு இவர்களைக் கொன்றுவிடலாம் என்பது அவளுடைய திட்டம். அது நடக்கவில்லை. அவளுடைய ஆணையை இவர்கள் மீறவில்லையே!

ஒவ்வொருவரும் தனித்தனியாக ஆழமான நீரில் மூழ்கி அடிப்புறத்தில் சென்று, தாமரைக் கொடியின் வெண்மையான தண்டைக் கொண்டு வந்து சேர்த்தனர். மீண்டும் மீண்டும் இவ்வாறே செய்து அதைப் பெரிய அளவாகச் செய்தனர். முடிவில் சாப்பிடலாம் என்ற எண்ணம். ஆனால்? கடைசியாக முழுகி வெளியில் வந்து பார்த்தபொழுது தாமரைத் தண்டுகள் முழுவதும் வைத்த இடத்தில் காணப்படவில்லை. யாரோ எடுத்துப் போய்விட்டனர். என்ன அநியாயம்! அரும்பாடுபட்டுக் கொண்டு வந்த பொருள்; கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாது போயிற்றே!

ஸப்தரிஷிகள் ஒவ்வொருவரும் பரஸ்பரம் ஸந்தேஹப்பட்டுக் கொண்டனர். இந்த ஸந்தேஹத்தை யார் தீர்த்து வைப்பது? அவர்களே ஒவ்வொருவரும் சபதம் பண்ணித் தம் மேல் இந்தப் பாவம் இல்லை என்பதை ஊர்ஜிதப்படுத்தினர். இங்கு ஒவ்வொருவருடைய சபதமும் வெகு அழகாகவும் உபயோகமானதாகவும் இருக்கும்.

இப்போது நாம் எடுத்துக்கொண்ட விஷயம் கௌதமருடைய தாகையால் அவருடைய சபதத்தை மட்டும் இங்கே தருகிறோம் —

अधीत्य वेदांस्त्यजतु त्रीनग्नीनपविध्यतु ।
विक्रीणातु तथा सोमं बिसस्तैन्यं करोति यः ॥

அதீத்ய வேதாந் த்யஜது த்ரீநக்நீநபவித்யது ।
விக்ரீணாது ததா ஸோமம் பிஸஸ்தைந்யம் கரோதி ய: ॥

"வேதங்களை முறைப்படி கற்றுப் பிறகு மறந்தவன், த்ரேதாக்நிகளைப் பூஜிக்காதவன், ஸோமத்தை விற்கிறவன் இவர்களது பாவத்தை யான் அடைவேனாக-தாமரைத் தண்டுகளைத் திருடியிருப்பேனாகில்" என்பது கருத்து.

இங்கேயே மற்றொரு சந்தர்ப்பத்தில் கௌதமருடைய சபதம் —

जीवत्वहंकृतो बुद्ध्या विपणात्वघमेन सः ।
कर्षको मत्सरी चास्तु यस्ते हरति पुष्करम् ॥

*ஜீவத்வஹங்க்ருதோ புத்த்யா விபணாத்வதமேந ஸ: ।*
*கர்ஷகோ மத்ஸரீ சாஸ்து யஸ் தே ஹரதி புஷ்கரம் ॥*

— மகாபாரதம், 13.96.19.

"தனது மேதையின் சிறப்பை எண்ணிப் பிறரை அலக்ஷ்யம் செய்து அகம்பாவத்துடன் வாழ்கிறவன், இழிவான முறையில் வர்த்தகம் செய்பவன், பயிர்த் தொழில் செய்பவன், தீராப் பகை கொண்டவன் – இவர்களது பாவத்தில் நான் போவேனாக – உமது தாமரைத் தண்டைத் திருடியிருப்பேனாகில்" என்பது கருத்து.

இவர்களுடன் மற்றொரு ரிஷியும் இந்த ஏரிக்கு வந்திருந்தார். அவர்தாம் தாமரை தண்டுகளைத் திருடி மறைத்து வைத்திருந்தார். அவரே முன்வந்து, அவரவரது பாகத்தை அவரவரிடமே கொடுத்து விட்டார். எல்லாருக்கும் மனநிம்மதி ஏற்பட்டது. அங்கு உடன் வந்திருந்த ராக்ஷஸியின் கெட்ட எண்ணத்தை அவர் நன்றாக அறிந்திருந்தார். இவர்களது மேன்மையைச் சபதம் மூலம் வெளிப்படுத்துவதற்காகவே அவர் இவ்வாறு செய்தார். தமது தபஸ்ஸின் சக்தியால் அவரே அந்த ராக்ஷஸியைக் கொன்று விட்டார்.

## மற்றொரு வகையில் பொருள்

'கோதமர்' என்பதே 'கௌதமர்' என்று ஆயிற்று. கோ என்பது பசுவின் பெயர். தம என்பது மிகுதியைக் காட்டும் ப்ரத்யயம். நிறையக் கோக்களை வைத்திருப்பவர், சிறந்த மாடுகளை வைத்திருப்பவர், பசுமாடுகளை வைத்திருப்பவர்களுள் சிறந்தவர் என்று இவ்வாறெல்லாம் இந்தப் பெயருக்குப் பொருள் கூறலாம். சாதாரணமாக, தர, தம என்னும் ப்ரத்யயங்கள் பெயர்ச் சொல்லின்மேல் வருவதில்லை. ஆனால் வேதம் இப்படியெல்லாம் பேசுகிறது. மாதா என்பது மாத்ரு சப்தம். அதன் மேல் 'தம' என்பதைச் சேர்த்து 'மாத்ருதமாஸ:' என்றும், அங்கிரஸ் என்னும் மகரிஷியின் பெயரின் மேல் 'தம' என்பதைச் சேர்த்து 'அங்கிரஸ்தம'

என்றும் இப்படிப் பலவாருக வேதம் பெயர்ச் சொல்லின் மேலும் 'தம' ப்ரத்யயத்தைச் சேர்த்து உபயோகிக்கிறது. கோதமரும் அவ்வாறே இருப்பதில் தவறு ஒன்றுமில்லே.

## தாய் தந்தையர்

கௌதமருக்குத் தாயார் ப்ரத்வேஷீ என்பவள். தந்தையார் தீர்க்கதமஸ் என்னும் மகரிஷி. தீர்க்கதமஸ் ஸாக்ஷாத் அங்கிரஸ் மகரிஷியின் பேரர்; உசத்யர் என்பவருடைய குமாரர். ப்ருஹஸ்பதியின் சாபம் கர்பவாஸ காலத்திலேயே இவர்மேல் விழுந்ததனுல் அப்போதே இவர் இரண்டு கண்களும் தெரியாதவராகிவிட்டார். பிறவிக் குருடர். ஆனுல் அபாரமான மேதை இவருக்கு. ஸகல வேதங்களேயும் கற்றுத் தேர்ந்தார். ப்ரஹ்மசாரியாகவே நெடுங்காலம் இருந்து வந்தார்.

இந்தக் குருடரை மணக்கப் பெண்கள் யாரும் முன்வரவில்லே. ப்ரத்வேஷீ என்பவள்தான் இவரை மணந்துகொண்டாள், இவருடைய வித்யையைக் கண்டு. முதற் குழந்தைதான் இவர்களுக்குக் கௌதமர். தொடர்ந்து நிறையத் தம்பிமார்கள் கௌதமருக்கு. குடும்பம் பெருத்துப் போய்விட்டது. பிழைக்க வழியில்லே. கணவனுக்கும் மனேவிக்கும் ஓயாத சண்டை; எலியும் பூனேயும் போலாகிவிட்டது. தன் பிள்ளேகளுக்குத் தாய் ஒரு கட்டளே பிறப்பித்தாள் — "இந்தக் குருட்டுக் கிழத்தைக் கங்கையாற்றில் தூக்கிப் போட்டு விடுங்கள்" என்று. கௌதமரும் அவருடைய தம்பிமார்களும் நொடிப்பொழுதில் இதைச் செய்துவிட்டனர். வீடு நிம்மதியடைந்தது. பாவம்! குருடர் ஆற்று வெள்ளத்தில் சிக்கித் தவித்துக்கொண்டிருந்தார்.

## தாய்ச் சொல் தட்டாதவர்

கௌதமருக்கு அம்மாவிடம் அவ்வளவு பாசம். அவள் என்ன சொன்னுலும் உடனே தயக்கமில்லாமல் செய்துவிட வேண்டும் இவருக்கு. தினமும் வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளே இவரும் கவனித்துக்கொண்டேதானே இருந்திருக்கிருர்? இந்தக் குருட்டுக் கிழம் ஒரு காரியத்துக்கும் உபயோகமில்லே. ஆனுல் நன்ருக

வயிறுரச் சாப்பிடுவதில் மட்டும் குறையொன்றுமில்லை. 'குதிரை குருடானாலும் கொள்ளு தின்னக் குறையில்லை.' ஏழைக் குடித்தனம். இந்தக் கிழத்திற்கு ஆயுஸ் முடியப்போவதாகத் தெரியவே இல்லை. தீர்க்காயுஸ்ஸாக இருக்கிறது. ஒரு நோவுநொடியில்லை. அப்படியாவது சோற்றைப் போட்டால் தின்றுவிட்டுச் சும்மா கிடக்கிறதா? அதுதானே இல்லை. ப்ரஜைகளைப் பெருக்கிக்கொண்டே இருக்கிறது. வருஷம் தவறினாலும் தவறும், ப்ரத்வேஷீக்கு பிள்ளையுண்டாவது தவறாது. கர்பிணியாகவோ கைக்குழந்தைக் காரியாகவோதான் அவள் எப்போதும் காணப்படுவாள்.

இக்காலத்தில் இருப்பது போல் குடும்பக் கட்டுப்பாட்டு முறை ஏதுவும் அந்தக் காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. ஒரு நாள், ஒரு வேளை தள்ளுவது எவ்வளவு கஷ்டமாக இருக்கிறதென்பது அவளைக் கேட்டால் தெரியும். அவளும் புக்ககம் வந்த புதிதில் பர்த்தாவைத் தெய்வமாகவே நினைத்துப் பணிவிடைகள் செய்தவள்தான். இப்போது அவளுக்கே அலுத்துப் போய்விட்டது. 'லப்தபுத்ரா பதிம்த்வேஷ்டி' என்பார்கள்: 'நிறையப் பிள்ளைகளைப் பெற்றுவிட்ட ஸ்த்ரீ தன் கணவனை த்வேஷிப்பாள்' என்பது இதன் கருத்து. அது இந்த ப்ரத்வேஷியிடம்தான் முதல்முதலாகத் தோன்றியிருக்க வேண்டும். அவளுக்குப் பெயரே அதுதானே! இந்தக் கிழம் வீட்டில் இல்லாமற் போனால் அவளுக்கு ஒரு குறையுமில்லை. இருந்தால்தான் சங்கடம்! அவளும் எவ்வளவோ பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டாள்! முடியவில்லை. என்ன செய்வாள் பாவம்! துணிந்து மேற்கண்டவாறு ஒரு பரிகாரம் தேடிக்கொண்டுவிட்டாள்.

இது கொடிய பாவம். பல்லாயிரம் பிரம்மஹத்திக்குச் சமமானது. ஆனாலும் செய்தாகவேண்டியிருந்தது. அதில் ஒரு சிறு பரிகாரமும் காணப்பட்டது. பல மரக்கட்டைகளால் ஒரு தெப்பம் கட்டப்பட்டது. தீர்க்கதமஸ் பலாத்காரமாக அதன்மேல் தூக்கி அமர்த்தப்பட்டார். அந்தத் தெப்பம் கங்கையாற்றில் மிதக்க விடப்பட்டது. ஆற்றுநீரின் சுழல்களில் சிக்கி, இது எங்கேயாவது கவிழ்ந்துவிடுவது நிச்சயம். பெரிய முதலைகளும் மீன்களும் இவரை இரையாக்கிக் கொண்டுவிடும். 'போனால் போகட்டுமே! நாம்

நேராகக் கொல்லவில்லை அல்லவா?' என்று எண்ணம். பழங்காலத்தில், வேண்டாதவர்களை இப்படி ஆற்றோடு போகுமாறு விட்டு விடுவது வழக்கத்தில் இருந்ததாகத் தெரிகிறது.

மகாபாரதக் கதையில் தோன்றும் மகாவீரனுகிய கர்ணன் இப்படி ஆற்றோடு போனவன்தானே! இவைபோன்ற பிறவிகள் பத்திரமாய்க் கரை சேர்ந்துவிடுவதும் க்ஷேமமாக வாழ்வதுங்கூட வழக்கமாகிவிடுகிறது. கர்ணனை யாரோ எடுத்து வளர்த்தார்கள் அல்லவா? அதேபோல் இந்த தீர்க்கதமஸ் மகரிஷியையும் ஓர் அரசன் கண்டெடுத்துக் காப்பாற்றி விட்டான். இவர் சாகவில்லை; நெடுங்காலம் சௌக்கியமாக வாழ்ந்தார்.

கௌதமரைப் பற்றியவரையில் பிதாவைக் கொன்ற தோஷம். அவரது தாய்க்குக் கணவனைக் கொன்ற தோஷம். இருவருக்கும் கடுமையான ப்ரஹ்மஹத்யா தோஷம் உண்டா இல்லையா? இக்காலத்தியவர்களான பரம நாஸ்திகர்கள்கூடக் கனவிலும் கருத முடியாத கொடிய பாவம் அல்லவா இது? இதை ஸர்வஸஹஜமாக ஒரு நொடிப்பொழுதில் செய்து தீர்த்துவிட்ட இந்தக் கௌதமரைத் தம் கோத்ரப்ரவர்த்தகராகச் சொல்லிக்கொண்டு திரிவதில்தான் எவ்வளவு அவமானம்? அந்தக் கோத்ரக்காரர்களுக்கு மட்டும்தானு இந்த நிலை? இல்லை இல்லை; அவருக்குச் சமமான மற்ற ரிஷிகளின் பரம்பரையைச் சார்ந்தவர்களுக்கும் இதில் தாராளமாகப் பங்கு இருக்கத்தான் இருக்கிறது. "மொத்தத்தில் இந்த ரிஷிகளே இப்படித்தான். ஒவ்வொரு ரிஷியும் விதம்விதமான அநியாயங்களைக் கூசாமல் செய்திருக்கிறுர். பரசுராமர் தம் தாயின் தலையை வெட்டவில்லையா? இன்னும் சொல்லப்போனுல் எவ்வளவோ கிளர்ந்தெழும். இந்த லக்ஷணத்தில் இந்த கௌதமர், தமது கோத்ரக்காரர்களுக்குப் பூஜ்யராக இருப்பது மட்டுமல்லாமல், மானிட வர்க்கத்துக்கே தலைவணங்க வேண்டிய முக்கியமான ஒருவராக விளங்குகிறுர். 'கௌதம தர்மஸூத்ரம்' என்பது இவரால்தான் அருளிச்செய்யப்பட்டது. இதிலுள்ள அருமையான தர்மோபதேசங்கள், மனித ஸமூகம் சீர்குலைந்து போகாமல் நல்வாழ்வு வாழ்வதற்கு இன்றியமையாதவை. பிறருக்கு அழகாக உபதேசம் நடக்கிறது! தமது சொந்த அநுஷ்டானம் முழுப்பூஜ்யம்!"

இவ்வாறெல்லாம் நமக்குத் தோன்றுகிறது அல்லவா? கௌதமருக்கும் இது தோன்றியே இருக்கிறது. அவருடைய தர்மஸூத்ரத்தில் தொடக்கத்திலேயே, அவசர அவசரமாக இவ்விஷயத்தைப் பொதுவான பாஷையில் எடுத்துக்கூறி, அதற்கான பதிலையும் தாமே எழுதி வைத்துவிட்டார். கேள்வியும் பதிலும் பொதுவாகவே இங்கு அமைந்துள்ளன. ஆனாலும், 'நிர்விசேஷம் ந ஸாமாந்யம்' என்ற ரீதியில் இவருடைய சொந்த விஷயமும் இதில் சொல்லாமற் சொல்லப்பட்டுள்ளது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இனி இவருடைய தர்மஸூத்ரங்கள் இரண்டையும் அவற்றின் கருத்தையும் இங்கே தருகிறோம். வாசகர்கள் நடுநிலையில் நின்று ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

दृष्टो धर्मव्यतिक्रमः साहसं च महताम् ।

த்ருஷ்டோ தர்மவ்யதிக்ரம: ஸாஹஸம் ச மஹதாம் ।

— கௌதமதர்மஸூத்ரம், 1.1.3.

अवरदौर्बल्यात् ।

அவரதௌர்பல்யாத் ।

— கௌதமதர்மஸூத்ரம், 1.1.4.

இவ்விரண்டு ஸூத்ரங்கள்தாம் இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டவை.

"மகான்கள் தர்மத்தை மீறிச் சென்றுள்ளனர்; ஸாஹஸமான செயல்களையும் செய்திருக்கின்றனர்."

"பிற்காலத்தியவர்களுக்கு அவ்வளவு பலம் இல்லை; அதனால்."

இந்த விஷயத்தில் அந்த உதாஹரணத்தை ஆதாரமாகக் கொண்டு, பின்புள்ளவர்களும் தர்மத்தை மீறிச் செல்லக்கூடாது; ஸாஹஸமான செயல்கள் புரியக்கூடாது; பெரியோர் தமது தபஸ்சக்தியால் பாவத்தை ஒழித்துக் கட்டித் தூய்மையடையும் ஆற்றல் மிக்கவர்கள். அவர்களுக்கு உறுதியான மனம் உண்டு. மனத்தில் உள்ளதை உள்ளபடியே சொல்வதிலோ, அதற்கான பிராயச்சித்தங்களைச் செய்துகொள்வதிலோ அவர்கள் சிறிதும் பின்வாங்க மாட்டார்கள். எப்படியாவது ஆத்மசுத்தி ஏற்பட வேண்டுமே என்ற கவலைதான் அவர்களுக்கு. வீண் கௌரவம்,

அவமானம் இதெல்லாம் அவர்களுக்கு ஒருசிறிதும் இல்லே. அதனுல் அவர்கள் அரும்பாடுபட்டு ஆயிரமாயிரம் ஆண்டுகள் தவம் கிடந்து உடலே வாட்டிப் பரிசுத்தராகிவிடுவார்கள். பிற்காலத்தியவர்கள் அவ்வளவு உறுதி பெற்ற மனம் படைத்தவர்களல்ல. அதனுல் தவறுதலுக்கு மட்டும் மகரிஷிகளே உதாஹரணமாகக் கொள்வது அபாயகரமானது என்பது மேலே கூறப்பட்ட ஸூத்ரங்களின் திரண்ட கருத்து.

'பெரியோர்களுடைய அநுஷ்டானத்தை ஆதாரமாகக் கொண்டு, அதை அடியொற்றியே பின்புள்ளாரும் செயற்பட வேண்டும்' என்னும் உபதேசம் இங்கு முன் ஸூத்ரத்தில் இடம் பெற்றுள்ளது. உடனடியாக இந்த விலக்கு செய்யப்பட்டுள்ளது. பெரியோர்களுடைய ஆசாரங்கள் இரண்டு வகைப்படும்-1. சாஸ்த்ர ஸம்மதமானவை, 2. சாஸ்த்ர விரோதமானவை. இவற்றுள் சாஸ்த்ர ஸம்மதமானவற்றைப் பின்புள்ளார் அனேவரும் தங்குதடையின்றி அநுஷ்டிக்கலாம்; சாஸ்த்ரவிருத்தமானவற்றை அநுஷ்டிக்கக் கூடாது. அவற்றைப் பண்ணும்போது அவர்களுக்கே 'இது தர்மம்' என்னும் எண்ணம் இல்லே. 'இது அதர்மம்' என்று தெரிந்துவைத்தே அவர்கள் அதை அநுஷ்டித்துள்ளனர். இதுதான் இந்த விஷயத்தின் முடிவு.

"மகரிஷிகளுடைய அநுஷ்டானங்களில், 'இது தர்மம், இது அதர்மம்' என்று நம் போல்வார் தீர்ப்பு கூறுவது சரியாகுமா? நமக்கு அவ்விதமான சக்திதான் உண்டா?" என்னும் கேள்வி இங்கு எழும். 'தர்மசாஸ்திரங்களில் விலக்கப்பட்டவை அதர்மம்; விதிக்கப்பட்டவை தர்மம்' என்று, சாஸ்திரங்களுடன் சரிபார்த்துத்தான் சிஷ்டாசாரத்தின் ப்ராமாண்யத்தை முடிவுபண்ண வேண்டும். பூர்வமீமாம்ஸா தர்சனத்தில் குமாரிலபட்டர் இவ்விஷயத்தை மிகவும் தெளிவாக விளக்கியுள்ளார்:

दृष्टकारणहीनानि यानि कर्माणि साधुभिः ।
प्रयुक्तानि, प्रतीयेरन् धर्मत्वेनेह तान्यपि ॥

शरीरस्थितये यानि सुखार्थं वा प्रयुञ्जते ।
अर्थार्थं वा न तेष्वस्ति शिष्टानामेव धर्मधीः ॥

धर्मत्वेन प्रपन्नानि शिष्टैर्यानि तु कानिचित् ।
वैदिकैः कतृसामान्यात् तेषां धर्मत्वमिष्यते ॥

यो हि सदाचारः पुण्यबुद्ध्या क्रियते, स धर्मादर्शत्वं प्रतिपद्येत । यस्तु कामक्रोधलोभमोहशोकादिहेतुत्वेनोपलक्ष्यते, स यथाविधिप्रतिषेधं वर्तिष्यते ॥

शिष्टं यावच्छ्रुतिस्मृत्योस्तेन यन्न विरुध्यते ।
तच्छिष्टाचरणं धर्मे प्रमाणत्वेन गम्यते ॥

यदि शिष्टस्य कोपः स्याद् विरुध्येत प्रमाणता ।
तदकोपात्तु नाचारप्रमाणत्वं विरुध्यते ॥

— பூர்வமீமாம்ஸாதர்சநம், 1.3.7; தந்த்ரவார்த்திகம்.

இந்த ச்லோகங்கள், மேலே நாம் எடுத்துக்காட்டிய கருத்தையே நிரூபிக்கின்றன. இவ்வாறு சாஸ்திரகாரர்கள் உட்புகுந்து இதில் முடிவு கூறியுள்ளனர்.

ஆதலின், கௌதமர் தாயின் வார்த்தையைக் கேட்டுத் தந்தையை ஆற்றில் தள்ளினது அதர்மமேதான். பரசுராமர் அப்பாவின் வார்த்தையைக் கேட்டு அம்மாவின் தலையை வெட்டியதும் அதர்மமே. இவற்றை ஆதாரமாகக் கொண்டு நம் போல்வாரும் இவ்விதமான செயலில் இழியக்கூடாது.

மாதாபிதாக்கள் பரஸ்பரம் வேறுபட்ட மனப்போக்குடன் தமது பிள்ளைக்குத் தனித்தனியே முரண்பட்ட கட்டளைகளைப் பிறப்பிப்பது பெரிய தர்மசங்கடம்தான். ராமாயண கதையில் ஸ்ரீராமருக்கும் இதேபோன்ற சங்கடம் தோன்றியது. தசரதர், "காட்டுக்குப் போ" என்றார். கௌஸல்யை, "காட்டுக்குப் போகாதே" என்றாள். வெகு சாமர்த்தியமாக ஸ்ரீராமர் இருவரையும் திருப்திப்படுத்தி இதைச் சமாளித்துவிட்டார். பரசுராமருக்கும் கௌதமருக்கும் அவ்விதமான சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. பிரம்மாண்டமான, கொடிய அதர்மத்தையே இவ்விருவரும் செய்துவிட்டனர். தமது தபோபலத்தினால் பிறகு இந்த தோஷத்தை நிவிருத்தி செய்துகொண்டனர். சாதாரணமானவர்கள் இதை உதாரணமாகக் கொண்டு, தாமும் இப்படிச் செய்யக்கூடாது.

मन्दतपसां गजैरिव महावटकाष्ठादिभक्षणमात्मविनाशायैव स्यात् ।

மந்ததபஸாம் கஜைரிவ மஹாவடகாஷ்டாதி-
பக்ஷணமாத்மவிநாசாயைவ ஸ்யாத் ।
— தந்த்ரவார்த்திகம், 1.3.7.

என்பது குமாரிலபட்டருடைய பொன்மொழி. பெரிய யானை ஆலமரத்தின் கிளையொன்றை முறித்துத் தின்பதைப் பார்த்து, "நானும் அப்படியே தின்பேன்" என்று ஒருவன் செய்வானாகில் அழிந்துதான் போவான். அதை ஜீர்ணித்துக் கொள்ளும் சக்தி இவனுக்கு ஏது? என்பது இதன் கருத்து. இதை இவ்வளவில் நிறுத்தி, இனிக் கௌதமருடைய சரித்திரத்தைக் கூறுவோம்.

### தேவபாகர்

தேவபாகர் என்பது ஒரு ரிஷியின் பெயர். இவர் கௌதமருடைய வம்சத்தில் உதித்தவர். காடகத்தில் இவருடைய பெருமை பேசப்பெறுகிறது. ஸாவித்ராக்நிசயநம் இவருக்கு வெகு நன்றாகத் தெரியும். நிரந்தரம் அந்த விஷயத்தையே எண்ணி எண்ணி அதிலேயே ஒன்றிவிட்டார் இவர். ஒரு நாள் ஓர் அசரீரி வாக்கு இவரது காதில் கேட்டது. 'ஸாவித்ரத்தை அறிந்தவராகிய கௌதமர் (தேவபாகர்) எல்லாவற்றையும் அறிந்தவராவார்' என்று அது ஒலித்தது. தமது உண்மை நிலைமையை உள்ளவாறே கம்பீரமாக எடுத்துரைத்த (கண்ணால் காண முடியாத) அந்த வார்த்தையையே விளித்துக் கேட்டார் தேவபாகர், "நீ யார்?" என்று. "நானேதான் ஸவித்ராக்கினி; தேவர்களின் உயர்ந்த உலகமாக இருப்பவன்; ரஹஸ்யமான ஒளியைத் தாங்கி நிற்பவன்" என்ற பதில் வந்தது. அளவு கடந்த பக்தி சிரத்தையுடன் அக்கினியை உபசரித்தால் அந்த அக்கினிதேவன் மனமிளகி மானிட பாஷையில் அடியவனுடன் பேசி அருள்புரிவது அக்காலத்தில் வழக்கமாக இருந்தது.

ப்ரஹ்மவித்யையை அடைய விரும்பி ஓர் ஆசார்யனிடம் சென்று சேர்ந்தான் ஒரு மாணவன். உபகோஸலன் என்பது அவனுடைய பெயர். பன்னிரண்டு வருஷங்கள் குருகுலவாஸம் பண்ணினான். ஆசார்யனுடைய அக்கினிகளை அநுதினமும் பக்தி சிரத்தையுடன் உபசரித்துக் காத்து வந்தான். அவன் தன்னை எதற்காக அணுகியுள்ளான் என்பது குருவுக்கு வெகு நன்றாகத்

தெரியும். அவரிடம் தனக்கு வேண்டிய விஷயம் இருப்பது மாணவனுக்கும் தெரியும். ஆனால், வருஷம் பன்னிரண்டாகியும் அவனுக்கு அந்த ப்ரஹ்மவித்யை உபதேசிக்கப் பெறவில்லை. அதனால் சிஷ்யனுடைய ஊக்கம் சிறிதும் தளரவில்லை. அளவு கடந்த பொறுமையுடன் அக்கினிபூஜையில் அவன் ஈடுபட்டிருந்தான். என்றைக்காவது ஒரு நாள் ஆசார்யர் அருள்புரிவார் என்ற திடநம்பிக்கை அவனுக்கு.

ஒரு நாள் காலையில் அவன் தன் கடமைகளை முடித்துக்கொண்டு வழக்கம் போல் ஆசார்யருக்குப் பாதவந்தனம் பண்ணப் போனான். அவர் அங்கு இல்லை; எங்கேயோ போய் விட்டார். ஆசார்ய பத்தினியைக் கேட்டான். தனக்கு அவர் போன இடம் தெரியாது என்றும், எப்போது திரும்பி வருவார் என்பதும் தெரியாது என்றும் அவள் கூறிவிட்டாள். அவளிடம் அவர் சொல்லியிருந்தால்தானே அவளுக்குத் தெரியும்? அவர்தாம் யாரிடமும் ஒன்றும் சொல்லாமலே எங்கேயோ போய்விட்டாரே!

சிஷ்யனுக்குப் பெருங் கவலை; தலையில் பேரிடி இடித்தாற் போலிருந்தது அவனுக்கு. நம்பிக்கையிழந்த நிலையில் உள்ளக் குமுறலுடன் திகைப்படைந்தவனாகத் திணறினான் அவன். ஆகாரம் பிடிக்கவில்லை. அவனுடைய துயரத்தை உணர்ந்த அக்கினிகள் அவனுக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசித்தன.

अथ हाग्नयस्समूदिरे ।

— சாந்தோக்யம், 4.10.4.

அதன் பிறகு ஆசார்யரும் அருள் கூர்ந்து திரும்பி வந்து அதைப் பூர்த்தி செய்து வைத்தார்.

இந்த தேவபாகர் விஷயத்திலும் இதே நிகழ்ச்சிதான் நடந்தது.

एतावति ह गौतमः । यज्ञोपवीतं कृत्वाधो निपपात । नमो नम इति । स होवाच । मा भैषीर्गौतम । जितो वै ते लोक इति ।

— காடகம், 1.9.

என்னும் வேதபாகத்தில்தான் இந்த வரலாறு கூறப்பெற்றுள்ளது. இந்த ரிஷிக்கு தேவபாகர் என்ற தனிப் பெயர் இருந்தாலும், வம்ச முதல்வருடைய பெயராலேயே வேதம் அவரைக் குறிப்பிடுகிறது. இந்த கௌதம வம்சஸ்தர்களுக்கே வேதாந்த விசாரத்தில் அபாரமான ஈடுபாடு. உபநிஷத்துக் கதைகளில் மிக மிக

முக்கியமான மதபேதத்துக்கும் சர்ச்சைக்கும் காரணமான ப்ரஹ்மவித்யைகள் கௌதம குலத்துதித்தவர்களாலேயே தோற்றுவிக்கப்பட்டவையாக இருக்கின்றன. உதாரணமாகச் சிலவற்றை இங்கே தருகிறோம்.

ஸத்வித்யை, பஞ்சாக்நிவித்யை ஆகிய இரண்டும் உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ள வித்யைகளுள் முக்கியமானவை. இவ்விரண்டும் இந்தக் கௌதம வம்சஸ்தர்களாலேயே தோற்றுவிக்கப்பட்டன. இவை இரண்டும் ப்ரஹ்ம ஸூத்ரங்களிலும் ஸூத்ரபாஷ்யங்களிலும் வெகு அழகாக விசாரிக்கப்பட்டிருக்கின்றன. இங்கே சிறிது கூறுவோம்.

கௌதமருடைய வம்சத்தில் அருணர் என்னும் ஒரு மகரிஷி அவதரித்தார். அவருடைய குமாரர் உத்தாலகர் என்பவர். அவருடைய குமாரர்தான் ச்வேதகேது என்று பிரஸித்தி பெற்றவர். இவர் தம் தந்தையாகிய உத்தாலகரிடமே கல்வி கற்று அறிவு நிரம்பப்பெற்று மகா தேஜஸ்வியாக விளங்கினர். பாஞ்சால தேசத்து அரசனை ப்ரவாஹணன் என்பவனுடைய ஸபைக்கு இவர் சென்றார். அந்த அரசன் இந்தச் சிறுவனைப் பரீக்ஷித்தான். ஐந்து கேள்விகளைக் கேட்டான். ஒன்றுக்குக்கூட ச்வேதகேதுவினால் பதில் சொல்ல முடியவில்லை. துக்கமும் அவமானமும் நிறைந்தவனாகத் தந்தையிடமே அவன் திரும்பி வந்தான். அரசன் கேட்ட கேள்விகளைக் கேட்டு அவற்றுக்குப் பதில் வேண்டினான். அவர் என்ன செய்வார், பாவம்! அவருக்கும் அந்த விஷயம் விளங்கவில்லை. தெரிந்திருந்தால் தம் அருமைப் புதல்வனுக்குச் சொல்லாமல் இருந்திருப்பாரா?

ச்வேதகேதுவுக்குக் கோபம் வந்துவிட்டது. "ஒரு க்ஷத்திரியப் பையல் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லும் வகையறியாத நிலையில் என்னை வைத்து, 'உனக்கு எல்லாவற்றையும் சொல்லிக் கொடுத்துவிட்டேன்' என்று எப்படிச் சொன்னீர்கள்?" என்று அப்பாவைக் கடிந்து கொண்டான். உத்தாலகருக்கு மட்டும் அவமானம் இல்லையா என்ன? கல்வித் துறையில் அவமானமும் தோல்வியுமே ஒருவனை மேன்மைப்படுத்துகின்றன. உடனே பாஞ்சால நாட்டுக்கு விரைந்தோடினார். ப்ரவாஹண மன்னனிடம் சென்று அந்த விஷயங்களைத் தமக்குச் சொல்லித் தரவேண்டுமென்று அடிபணிந்து கேட்டார்.

க்ஷத்திரியனுக்கு ப்ராஹ்மணன் சிஷ்யனாக இருப்பது பொருத்தமற்றது. இதை உணர்ந்த அரசன், முறைப்படி கௌதமரை உபசரித்து, தன தான்யங்களையும் ஏராளமான பசுமாடுகளையும் அவருக்கு வழங்கினான். அத்துடன் திருப்தியடையும்படி வேண்டினான். உத்தாலகர் அவற்றை ஏற்க மறுத்துவிட்டார். தம் மைந்தனிடம் கேட்ட கேள்விகளுக்குப் பதில் தான் அவருக்கு வேண்டும். அவசியமான விஷயங்களைத் தெரிந்துகொள்ளாமலிருப்பதுதான் பெரிய அவமானம். க்ஷத்திரியனிடம் சிஷ்யனாக இருப்பதில் ஏற்படும் அவமானம் அதைவிடப் பல மடங்கு சிறியதே. கல்வித்துறையில் ஜாதிகுலங்களால் உயர்வு பாராட்டுவது பொருத்தமற்றது. அறிவு நிரம்பப் பெற்றவனே ஆசாரியன்; அறிவு குறைந்தவனே மாணவன். உத்தாலகர் இதை நன்கு உணர்ந்தவர். ப்ரவாஹணனை ஆசார்யனாக வரித்து உபதேசம் பண்ணியருளுமாறு வேண்டினார். கௌதமருடைய வம்சத்தில் தோன்றியவர் அல்லவா? தம் குல முதல்வருடைய உபதேசம் இவருக்குத் தெரியாமலிருக்குமா?

आपत्कल्पो ब्राह्मणस्याब्राह्मणाद्विद्योपदेशः । समाप्ते ब्राह्मणो गुरुः ।

ஆபத்கல்போ ப்ராஹ்மணஸ்யாப்ராஹ்மணாத் வித்யோபதேச: ।
ஸமாப்தே ப்ராஹ்மணோ குரு: ।

என்பது கௌதம தர்மஸூத்ரம். 'ப்ராஹ்மணன் அறிவு நிரம்பப்பெற்றவனாக இருக்க வேண்டும். அதற்காக மற்றவரிடம் தாற்காலிகமாக மாணவனாக இருக்கத் தயங்கக்கூடாது. கல்வி கற்று முடிந்த பிறகு இவன் மீண்டும் ஆசார்யனாகி விடலாம்' என்பது இந்த ஸூத்ரங்களின் கருத்து. இதையே உத்தாலகர் அநுஷ்டித்தார்.

பாஞ்சாலராஜன் சற்று நேரம் யோசித்தான். "இந்தப் பஞ்சாக்நி வித்யை இன்று வரையில் ப்ராஹ்மணர்களுக்குத் தெரியாது; க்ஷத்திரியர்களிடமே நிலவி வருகிறது. முதல் முதலாக உமக்கு நான் சொல்லித்தரப்போகிறேன். இதற்காக நீண்ட நாள் என்னிடம் பணிவிடைகள் செய்துகொண்டு காத்திருக்க வேண்டும். பிறகுதான் சொல்வேன்" என்றான்.

உத்தாலகர் அப்படியே இருந்து இந்த அரிய வித்யையைக் கற்று உலகுக்குத் தந்தருளினார். இன்று நமக்கெல்லாம் ஸர்வ ஸாதாரணமாக இந்த வித்தை கிடைத்திருக்கிறது. ஒரு ஜீவன் உடலை

விட்டுக் கிளம்பி மீண்டும் பிறப்பதற்குள் ஐந்து இடங்களில் மாறி மாறித் தங்குகிறது. ஐந்தாவது இடந்தான் மனுஷ்யனைகப் பிறக்கும் இடம். புண்ணியம் செய்தவர்கள் இறந்த பின் எந்த மார்க்கத்தில் செல்கிறார்கள்? பாவம் செய்தவர்கள் இறந்தபின் செல்லும் வழி எது? எந்த வழியில் செல்பவர்கள் மீண்டும் பிறவித் துயரறுத்துப் பேரின்பம் பெறுவர்? இவை போன்ற அரிய தத்துவங்கள் இந்த வித்யையில் பரக்கப் பேசப்படுகின்றன.

இதே உத்தாலகர்தாம் தம் குமாரராகிய ச்வேதகேதுவுக்கு ஸத்வித்யையை உபதேசித்தருளினார். இதே உத்தாலகர்தாம் யாஜ்ஞவல்க்யரைக் கேள்வி கேட்டு, பிரசித்தமான அந்தர்யாமிப்ராஹ்மணத்தை அவர் வாயால் வெளிப்படுத்தினார். இது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு இன்றியமையாததொன்று. உபநிஷத்தில், 'கௌதமர்' என்றே உத்தாலகர் குறிக்கப்பெறுகிறார்.

கௌதமருடைய வழித்தோன்றலாகிய மகரிஷிகள் அனைவரும் மகா வேதாந்திகளாக வாழ்ந்திருக்கின்றனர். அவர்கள் மூலமாகவே முக்கியமான வேதாந்த வித்யைகள் உலகுக்குக் கிடைத்திருக்கின்றன. இந்த வரலாறுகள் சுவைமிக்கவை. உபநிஷத்துக்களிலும் பாஷ்ய க்ரந்தங்களிலும் இவை பரக்கப் பேசப்பட்டுள்ளன. அங்கே கண்டு அநுபவிக்கலாம். கௌதமருடைய பெருமைக்கு எடுத்துக் காட்டாக இருப்பதனால் இவருடைய சரித்திரத்தில் இவ் விஷயங்களை ப்ரஸ்தாவித்தோம். இதை இவ்வளவில் நிறுத்தி, இவருடைய சரித்திரத்தை விளக்குவோம் இப்போது.

### அஹல்யை

கௌதமருடைய தர்மபத்னியின் பெயர் இது. ராமாயணக் கதை கேட்டவர்களுக்கு இந்தப் பெயர் நன்றாக ஞாபகத்தில் இருக்கும். பாலகாண்டத்தில் விச்வாமித்ர மகாமுனிவர் ராம லக்ஷ்மணர்களுடன் மிதிலாபுரிக்கு எழுந்தருளியபோது கௌதமருடைய ஆச்ரமம் வழியில் தோன்றியது. நெடுநாளாகப் பாழடைந்து கிடந்த அந்த ஆச்ரமத்தை அணுகியவாறே இதன் வரலாற்றை விளக்குமாறு ராமன் முனிவரைக் கேட்டான். விச்வாமித்ரர் அவ்வாறே விளக்கிக் கூறினார். பாலகாண்டம், 48-49-ஆம் ஸர்க்கங்களில் இந்த வரலாறு இடம் பெற்றுள்ளது.

கௌதமரும் அஹல்யையும் இல்வாழ்க்கை நடத்தி வந்த காலத்தில்* ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. சிறந்த கட்டழகியான அஹல்யையை இந்திரன் ஆசைப்பட்டான். கௌதமரிடம் மகாபயம் அவனுக்கு. பயங்கரமாகச் சபித்துவிடுவாரே! அவர் வெளியில் சென்றிருந்த ஸமயம் ஆச்ரமத்தில் நுழைந்தான், கௌதமரைப் போலவே வேஷம் போட்டுக்கொண்டு. அஹல்யையை அணுகித் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். மகா உத்தமியான அவளும் அந்த ஸமயத்தில் புத்தி கெட்டுப்போய் அதற்கு இசைந்தாள்.

मतिं चकार दुर्मेधाः, देवराजकुतूहलात् ।

மதிம் சகார துர்மேதா:, தேவராஜகுதூஹலாத் ।

என்கிறார் வால்மீகி. மீண்டும் இந்திரன் வெளியேறிய பொழுது கௌதமர் எதிரே வந்து கொண்டிருந்தார். நொடிப் பொழுதில் உண்மையை உணர்ந்துகொண்டுவிட்டார்; கடுஞ்சினங் கொண்டார். ஆயுதம் தேட வேண்டுமா என்ன அவருக்கு? எதிர்பார்த்தபடியே கடுமையான சாபம் இந்திரன் மேல் விழுந்தது. காமவிகாரத்தின் ஆதாரமான பகுதி அவனது உடலிலிருந்து துண்டிக்கப்பட்டு விழுந்தது. உடம்பெல்லாம் மகா கோரமான, அருவருக்கத்தக்க தோற்றமும் உண்டாகி விட்டது. அவமானம் தாங்க முடியாமல் தன் இருப்பிடம் சென்று சேர்ந்தான். தேவர்களும் முனிவர்களும் ஒன்றுகூடி ஏதோ ஒரு வகையில் இதற்குப் பரிகாரம் செய்துவைத்தனர். மகரிஷிகளின் தவ வலிமைக்கெதிரில் இந்திரனாக இருந்தால் என்ன? நான்முகனாகவேதான் இருந்தால் என்ன? தப்பியோட முடியாது.

இந்திரன்மேல் தமது சாபாயுதத்தைப் பிரயோகித்ததனால் மட்டும் கௌதமருடைய கோபம் தணியவில்லை. அஹல்யை மீதும் அது மின்னல்வேகத்தில் பாய்ந்தது. நீண்ட காலம் பசி தாகங்களால் பீடிக்கப்பட்டு, மானிடத்தன்மையை இழந்து, பிசாசு வடிவத்துடன் கல்லாகச் சமைந்து கிடக்கும்படி அவள் சபிக்கப்பட்டாள். சாபத்தின் விமோசனத்தையும் கௌதமரே அறிவித்துவிட்டார். "ராமபிரான் அவதரித்து இவ் வழியே செல்லும்போது அவருடைய பாததூளியின் ஸம்பந்தத்தினால் சாபம் தீரும். பழையபடி உன் சுய வடிவத்தைப் பெறலாம். பிறகு முன்போலவே என்னுடன்

ஸஹதர்மசாரிணியாக இருந்து இல்வாழ்க்கை நடத்தலாம்" என்பது அவரே அருளிய சாபவிமோசனம். அவ்வாறே 'நடந்தது. முனிவருடைய வார்த்தை மாறுபடுமா?

தசரத சக்ரவர்த்திக்குத் தவப்புதல்வனுக ராமன் அவதாரம் செய்வதற்குப் பல வருஷங்கள் முன்னதாகவே இந்த நிகழ்ச்சி நடந்தது. வருங்காலத்தில் நடக்கப்போகிற விஷயத்தை முன்கூட்டியே நன்கு உணர்ந்து, தமது சாபவிமோசனத்திற்கு நாளிட்டு வைத்தார் கௌதம மகரிஷி. தபோபலத்தினுல் முக்காலத்தையும் உணரும் சக்தி மகரிஷிகளுக்கு ஸர்வஸாதாரணமாகவே இருந்திருக்கிறது அந்தக் காலத்தில். அதிலும் ராமாவதார விஷயத்தில் சிறப்பாகப் பல ரிஷிகள் முன்கூட்டியே அறிந்துகொண்டு காத்திருந்தனர். சரபங்கர், சபரீ இவர்களது வரலாற்றிலும் இதைக் காணலாம். இவ்வாருக ராமாவதாரத்திற்குக் காரணபூதராகவும் கௌதமர் ஆகிவிட்டார். ராமனுடைய பாததூளியின் ஸம்பந்தத்தினுல் சாபவிமோசனம் அடைந்த அஹல்யையுடன் கௌதமரும் கூடியிருந்து, ராமனுக்கு நல்லாசிகளை வழங்கினுர். விச்வாமித்ர முனிவர் இவற்றுக்கெல்லாம் ஸாக்ஷியாகக் கூடவே இருந்தார். பிறகு மிதிலை சேர்ந்த பின்பு ஜனக சக்ரவர்த்தியின் புரோகிதரான சதானந்தரும் இவ் விஷயங்களை ஆவலுடன் விசாரித்தறிந்து மனஸ்ஸந்துஷ்டி அடைகிருர். சதானந்தர், கௌதமருக்கும் அஹல்யைக்கும் குமாரர். அதனுல் இவ் விஷயத்தில் அவருக்கு அதிகமான சிரத்தை இருப்பது ஸகஜமே.

ராமாயணத்திற்போல் மகாபாரதத்திலும் அஹல்யை கௌதமர் வரலாறும், இந்திரனுடைய அதிக்கிரமமான செயலும், கௌதமருடைய சாபமும் பேசப்பெறுகின்றன.

गौतमेनासि यन्मुक्तो भगाङ्कपरिचिह्नितः ।

கௌதமேநாஸி யந் முக்தோ பகாங்கபரிசிஹ்நித: ।

என்று இந்திரனுக்கு ஏற்பட்ட கௌதம சாபத்தைப் பாரத ச்லோகம் விளக்குகிறது.

வேதத்திலும் இவ் வரலாறு இடம் பெற்றுள்ளது. தைத்திரீயாரண்யகம், முதல் ப்ரச்நத்தில் —

इन्द्रागच्छ हरिव आगच्छ मेधातिथेः । मेष वृषणश्वस्य मेने । गौरावस्कन्दिन्नहल्यायै जार । कौशिकब्राह्मण गौतमब्रुवाण ।

என்னும் வாக்கியங்கள் காணக்கின்றன. இவற்றில் அஹல்யா, கௌதமர், இந்திரன் என்னும் பெயர்கள் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளன. 'அஹல்யாயை ஜார' என்று இந்திரனைப் பார்த்து இவ் வேதவாக்கியம் அழைக்கிறது. ஜாரன் என்னும் சொல் கள்ளப்புருஷனை உணர்த்தும். அஹல்யையின் ஜாரன் என்று இந்திரனை அழைப்பது மேற்படி வரலாற்றையே வெளியிடுவதாம். மேலும், 'கௌதமப்ருவாண' என்றும் இந்திரன் அழைக்கப்படுகிறான். சாபத்தைக் கேட்டு நடுநடுங்கிப் போய், கௌதமரை இந்திரன் பலவாறாக ஸ்தோத்திரம் பண்ணினதையே இவ் வாக்கியம் எடுத்துக் காட்டுகிறது. இவ்விடத்திலுள்ள மற்ற வாக்கியங்கள் இந்திரனுடைய வேறு வரலாற்றைக் குறிப்பிடுகின்றன. மகாபாரதம், ராமாயணம் இவ்விரண்டு நூல்களிலும் பேசப்பட்ட வழியிலேயே இந்த வேதவாக்கியங்களுக்கு அர்த்தம் சொல்வது பொருத்தமானது.

इतिहासपुराणाभ्यां वेदं समुपबृंहयेत् ।

இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் ।

என்றபடி வேதத்தின் உட்கருத்தை விளக்கி கூறுவதற்காகவே இதிஹாஸ புராணங்கள் தோன்றுகின்றன. இவற்றை அடியொற்றியே பிற்காலத்தவரும் தத்தம் காவியங்களில் இவ் வரலாற்றை வர்ணித்துள்ளனர். ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனும் அபயப்ரதான ஸாரத்தில் —

नमस्तस्मै कस्मैचन भवतु निष्किञ्चनजन-
स्वयंरक्षादीक्षासमधिकसमिन्धानयशसे ।
सुराधीशस्वैरक्षणकुपितशापायुधवधू-
दृषत्तादुर्जातप्रशमनपदाम्भोजरजसे ॥

நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜந-
ஸ்வயம்ரக்ஷாதீக்ஷாஸமதிகஸமிந்தாநயசஸே ।
ஸுராதீசஸ்வைரக்ஷணகுபிதசாபாயுதவதூ-
த்ருஷத்தாதுர்ஜாதப்ரசமநபதாம்போஜரஜஸே ॥

என்றும், பாதுகாஸஹஸ்ரத்தில், ப்ரபாவபத்ததியில் —

योषिद्भूतदृषन्व्यपोढशकटस्थेमानि वैमानिक-
स्रोतस्विन्युपलम्भनानि भसितोदञ्चत्परीक्षिन्ति च ।
दूत्यादिष्वपि दुर्वचानि पदयोः कृत्यानि मत्त्वेव यद्
धत्ते तत्प्रणयं तदेव चरणत्राणं वृणे रङ्गिणः ॥

யோஷித்பூதத்ருஷந்த்யபோடசகடஸ்தேமாநி வைமாநிக-
ஸ்ரோதஸ்விந்யுபலம்பநாநி பஸிதோதஞ்சத்பரீக்ஷிந்தி ச ।
தூத்யாதிஷ்வபி துர்வசாநி பதயோ: க்ருத்யாநி மத்வேவ யத்
தத்தே தத்பரணயம் ததேவ சரணத்ராணம் வ்ருணே ரங்கிண: ॥

என்றும் அருளிச் செய்தார்.

வேதபாஷ்யகாரர்கள் இருவரும் (வித்யாரண்யரும் பட்டபாஸ்கரரும்) இந்த வேதவாக்கியங்களுக்கு முதலில் வேறுவிதமாகப் பொருள் கூறியுள்ளனர். முடிவில், 'இதிஹாஸகாரர்கள்' கூறுவதாக இந்த வரலாற்றையும் தந்திருக்கின்றனர். நிருக்தகாரர் காட்டிய வழியில், ஏனைய வேதங்களில் கூறப்படும் வரலாறுகளைத் தழுவியே, பாஷ்யகாரர்கள் இந்த வேதவாக்கியங்களுக்கு மாறுபட்ட கருத்தைத் தந்திருக்கின்றனர். அவ்வழியில் சென்று பார்த்தால், அஹல்யா என்னும் பதம் கௌதமருடைய பத்தினியைக் குறிப்பதாகாது. ஜாரன் என்னும் சொல்லும் கள்ளக் காதலனைக் குறிப்பிடாது. இவ்விரண்டு சொற்களும் சேர்ந்து, 'வார்த்தைகளால் அளவிட்டுத் துதிக்க முடியாத, எண்ணிறந்த பெருமைகளையுடையவன்' என்னும் கருத்தையே தரும். அவ்வாறே, 'மேதாதிதே: மேஷ' என்றும், 'வ்ருஷணச்வஸ்ய மேநே' என்றும் சொற்கள் இணைக்கப்படும்; அதற்கேற்பப் பொருளும் அமையும். 'மேஷவ்ருஷண' என்று பதங்களைக் கூட்டி, கௌதம சாபத்தால் இந்திரனுக்கு உண்டான பரிபவத்தையும் அதற்குத் தேவர்களும் முனிவர்களும் செய்துவைத்த பரிகாரத்தையும் இதன் பொருளாகக் கற்பிக்க முடியாது. 'மேதாதிதே:' என்னும் முன்பதம் மேலே தொடர்பற்றுத் தனியாக ஒரு பொருளையும் உணர்த்தமாட்டாமல் காத்திருக்கும். 'ச்வஸ்ய மேநே' என்னும் மேல்பதமும் ஒரு கருத்தையும் தரமாட்டாமல் ஏங்கிக் கிடக்கும். 'மேதாதிதேர் மேஷ வ்ருஷணச்வஸ்ய மேநே!' என்று பதங்களை இணைத்தால் சரியாகக் கருத்து உருவாகும். மேதாதிதி என்பது ஒரு ரிஷியின் பெயர். வ்ருஷணச்வர் என்பதும் அப்படியே.

"மேதாதிதி மகரிஷியிடம் மேஷ (செம்மறியாடு) வடிவத்துடன் வந்தவனே! வ்ருஷணச்வர் என்னும் மகரிஷியினுடைய பெண்ணாகிய மேநா என்பவளைக் காதலித்தவனே! அல்லது பெண்ணாக மாறி வ்ருஷணச்வ மகரிஷிக்கு மனைவியாக இருந்தவனே!" என்ற பொருள் கிடைக்கும். இந்தப் பிரகரணத்தில் இந்திரனை விளித்துக் கூறுவதாகவே பதங்கள் அமைந்திருக்கின்றன. இந்த வியாக்கியானம் அந்த நிலைக்குப் பொருத்தமாக அமைகிறது.

ராமாயணாதிகளில் கூறப்பட்டுள்ள வரலாற்றுக்கு இந்த வேதவாக்கியமே ஆதாரமாக இருந்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. மகரிஷிகள் எவ்வளவோ விஷயங்களைத் தமது திவ்யஜ்ஞாநத்தின் வலிமையால் உணர்ந்து உலகுக்கு எடுத்துக்காட்டவில்லையா? அந்த வழியில் சேர்ந்ததாகவே இதையும் கொள்வதில் குற்றமொன்றுமில்லை. இதை ரஸிகர்கள் ஆராய்ந்து முடிவு கூற வேண்டும். இதை இவ்வளவில் நிறுத்தி, மிகமிக முக்கியமான ஒரு விஷயத்தை இங்கு எடுத்துக்காட்டுவோம்.

'கௌதமர் சிவபக்தரா? வைஷ்ணவரா?' என்னும் கேள்விக்குத் திட்டவட்டமான பதில் தரும் வகையில் சில ச்லோகங்கள் இவ்விடத்தில் ராமாயணத்தில் ஒரு பதிப்பில் காண்கின்றன.

ராமாயணம், பாலகாண்டம், 48-ஆம் ஸர்கம் —

गौतमं स ददर्शाथ प्रविशन्तं महामुनिम् ।
देवदानवदुर्धर्षं तपोबलसमन्वितम् ॥ २५ ॥
तर्थोदकपरिक्लिन्नं दीप्यमानमिवानलम् ।
भस्मोद्धूलितसर्वाङ्गं उमापतिमिवापरम् ॥ २६ ॥
शिवभक्तं महात्मानं सर्वतत्त्वार्थवादिनम् ।
गृहीतसमिधं राम सकुशं मुनिपुङ्गवम् ॥ २७ ॥
दृष्ट्वा सुरपतिस्त्रस्तो विषण्णवदनोऽभवत् ।

கௌதமம் ஸ ததர்சாத ப்ரவிசந்தம் மஹாமுநிம் ।
தேவதாநவதுர்தர்ஷம் தபோபலஸமந்விதம் ॥
தீர்த்தோதகபரிக்லிந்நம் தீப்யமாநமிவாநலம் ।
பஸ்மோத்தூலிதஸர்வாங்கம், உமாபதிமிவாபரம் ॥
சிவபக்தம் மஹாத்மாநம் ஸர்வதத்வார்த்தவேதிநம் ।
க்ருஹீதஸமிதம் ராம ஸகுசம் முநிபுங்கவம் ।
த்ருஷ்ட்வா ஸுரபதிஸ் த்ரஸ்தோ விஷண்ணவதநோபவத் ॥

இந்த ச்லோகங்களின் கருத்து:— "அவன் (இந்திரன்) ஆச்ரமத்தில் பிரவேசித்துக் கொண்டிருந்த கௌதம முனிவரைக் கண்டான். அவர் தேவர்களாலும் அஸுரர்களாலும் அசைக்க முடியாதவர். மிகுந்த தவவலிமையுள்ளவர். புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டு வருகிறார். சுடர்விட்டெரியும் அக்கினி போன்றவர். உடம்பெல்லாம் பஸ்மத்தை (விபூதியை)த் தெளித்துக்கொண்டிருக்கிறார். இந்த நிலையில் அவரைப் பார்த்தால் பார்வதீ நாதனை பரமசிவனே மற்றொரு வடிவத்துடன் வருகிறார் என்னலாம்படி இருக்கிறது. சிவனடியார்களுள் சிறந்தவராக அவர் காட்சியளிக்கிறார். அவர் மகாத்மா; தத்துவங்கள் அனைத்தையும் உணர்ந்தவர். ஸமித்துக்களையும் தர்ப்பங்களையும் எடுத்துக்கொண்டு வருகிறார். இந்த முனிச்ரேஷ்டர் இவ்வாறு எதிர்ப்படுவாரென்று இந்திரன் நினைக்கவே இல்லை. இவரைப் பார்த்தவுடன் நடுநடுங்கிப் போய்விட்டான்; முகத்தில் ஒளியிழந்தான்" என்பது.

தேவநாகரி எழுத்தில் மூலமும் தமிழ் எழுத்தில் பதவுரையுமாக வெகு அழகான முறையில் இந்தப் பதிப்பு அமைந்துள்ளது. முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு மலையாளத்தைச் சேர்ந்த பாலக்காட்டில் இந்தப் பதிப்பு நடந்துள்ளது. ஸம்ஸ்கிருதப் புஸ்தகங்களைப் பல பலவிதமாகப் பதிப்பித்து உலகப் புகழ்பெற்ற ப்ரஹ்மஸ்ரீ ஆர்.எஸ். வாத்யார்தாம் இதைப் பதிப்பித்தவர். தமிழ்நாட்டிலுள்ள ஆஸ்திக மகாஜனங்களுக்காகவே தமிழ் மொழிபெயர்ப்புடன் இந்த நூல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

கௌதமர் உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக்கொண்டு சிவப்பழமாகக் காட்சியளித்ததாகக் கூறும் ச்லோகம் இந்தப் பதிப்பில் மட்டுமே புதிதாக இணைக்கப்பட்டுள்ளது. இதற்கு முன்பு, நாகரியிலும் தெலுங்கிலும் கிரந்தத்திலும் ராமாயணம் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இந்தக் கருத்தைத் தரும் ச்லோகத்தை எங்கும் காணவில்லை. இந்தப் பதிப்பில் மட்டும் புதிதாக இந்த ச்லோகம் இடம் பெற்றுள்ளது. இந்தப் பதிப்பாளருக்கு மட்டும் இந்த ச்லோகம் எங்கு கிடைத்ததோ தெரியவில்லை. சுத்த வைஷ்ணவ க்ரந்தமான ஸ்ரீமத் ராமாயணத்தைச் சைவமாகப் பண்ணிவிடுவதற்கு நெடுநாளாகவே படித்த அறிவாளிகள் பலரும்

பெருவாரியாக முயன்று வந்திருக்கின்றனர். பழம்பெரும்புலவரான அப்பய்யதீக்ஷிதர்கூட இந்தத் துறையில் இழிந்து காடு பாய்ந்திருக்கிறுர். வேண்டுமென்றே ராமாயணத்தில் பல இடங்களிலும் புதிய ச்லோகங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

வால்மீகி ராமாயணமொன்றே பழமையானது; சான்ருக ஏற்கக்கூடியது. இதன் தாத்பர்யத்தை விபரீதமான வழியில் திருப்பித் திரித்துக் கூறிக் குழப்பம் உண்டாக்குவதற்காகவே பிற்காலத்தில் பல 'ராமாயணப் போலிகள்' தோன்றியுள்ளன. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இவை இருப்பதுகூடத் தெரியாது. ஆனுல், மற்றவர்கள் பக்தி ச்ரத்தையுடன், வால்மீகராமாயணத்துடன் சரி சமானமாகவே ஏனைய ராமாயணங்களையும் பாராயணுதிகள் செய்வதன் மூலம் பிரசாரம் செய்து வருகின்றனர். இதைக் கண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏமாறக் கூடாது. மேற்படி ச்லோகம் அவ்வகையான இடைச்செருகலேயாம். இப்போது புதிதாக இருக்கும் இது காலப் போக்கில் 'மிகப் பழையதாகி' ஆதாரமாகிவிடும். உண்மையை ஆராய்ந்தறிய விரும்புகிறவர்களுக்கு மாபெரும் குழப்பத்தை உண்டுபண்ணும். ராமாயணத்தில் விபூதியின் ப்ரஸ்தாவம் எந்த இடத்திலுமே கிடையாது. ஆஸ்திகப் பெருமக்கள் விழிப்புடன் நடந்துகொள்ள வேண்டியது அவசியம்.

கௌதமரைப் பற்றியவரையில் அவர் சுத்த ஸ்ரீவைஷ்ணவர் என்றே ராமாயணத்திலிருந்து அறியக்கிடக்கிறது. தம் தர்மபத்தினியின் சாப விமோசனத்திற்கு அவர் முன்கூட்டியே செய்த பரிஹாரமே இதற்கு எடுத்துக்காட்டு. ஸ்ரீமந்நாராயணனுடைய அவதாரமான ஸ்ரீராமபிரானுடைய பாததூளியின் ஸம்பந்தத்தையே சாபவிமோசன காரணமாக விதித்தது ஒன்றே போதும்.

ऋषीणां पुनराद्यानां वाचमर्थोऽनुधावति !

ரிஷீணும் புநராத்யாநாம் வாசமர்த்தோநுதாவதி ।

என்றபடி அவர் வாய்திறந்து எதைச் சொன்னுலும் அது அப்படியே தவருமல் நடக்கும். இது அவருக்கு நன்ருகத் தெரிந்ததே. அவர்தாமே ஸ்ரீராமனுடைய திருவடிதூளியினுல் பயங்கரமான பாவம் தீயினில் தூசாகுமென்று பணித்தது, சுத்த பரமைகாந்திகளான ஸ்ரீவைஸ்ணவோத்தமர்களுடைய திருவுள்ளப்

போக்கையே பிரதிபலிக்கிறது. மற்றும், இது ஒன்றைத் தவிர இந்தக் கொடிய பாவத்துக்கு வேறு பரிஹாரம் ஏதுமில்லை என்பதும் கௌதமருடைய திருவுள்ளமாக இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர் இந்த வழியில் இழிந்தாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏன் தோன்றியது? ஆழ்வார் பாசுரங்கள் சில இங்கு அநுஸந்திக்கத்தக்கவை —

*மதுவார் துழாய்முடி மாயப்பிரான் கழல் வாழ்த்தினால்*
*அதுவே இவளுற்ற நோய்க்கும் அருமருந்தாகுமே.*

— *திருவாய்மொழி*, 4.6.3.

*கவளக் கடாக்களிறட்ட பிரான் திருநாமத்தால்*
*தவளப் பொடிக்கொண்டு நீரிட்டிடுமின் தணியுமே.*

— *திருவாய்மொழி*, 4.6.5.

*மணியின் அணிநிற மாயன் தமரடி நீறுகொண்டு*
*அணிய முயலின் மற்றில்லை கண்டீர் இவ்வணங்குக்கே.*

— *திருவாய்மொழி*, 4.6.6.

*ஏழ்மைப் பிறப்புக்கும் சேமம் இந்நோய்க்குமீதே மருந்து,*
*ஊழ்மையில் கண்ணபிரான் கழல் வாழ்த்துமின் உன்னித்தே.*

— *திருவாய்மொழி*, 4.6.9.

*உன்னித்து மற்றொரு தெய்வந் தொழாள் அவனையல்லால்.*

— *திருவாய்மொழி*, 4.6.10.

இந்தப் பாசுரங்களில் வெள்ளமிட்டோடுகிற உத்தமோத்தமமான பாரமைகாந்த்யகாஷ்டையை அப்படியே கௌதமரிடம் காண்கிறோம். மேலும், சாபவிமோசனம் ஆனவுடனே கௌதமரும் அஹல்யையும் ராமனைப் பூஜித்தனர் என்கிறது ராமாயணம். இது தற்செயலாக நிகழ்ந்ததல்ல. முன்கூட்டித் திட்டமிட்டபடியே நடந்தது. இவைபோன்ற காரணங்கள் பலவற்றாலும் கௌதமர் விஷ்ணுபக்தரே என்பது குன்றின் மேலிட்ட விளக்காகிவிட்டது. இவர் சைவர் என்பதற்கோ எவ்வகை ஆதாரமும் ராமாயணத்தில் இல்லை. பாலக்காட்டுப் பதிப்பில் இடம் பெற்றுள்ள ச்லோகமொன்றே ஆதாரம். அது தொன்மையானதல்ல; இடைச்செருகலேயாம். பாலக்காட்டுப் பதிப்பாளர் நன்றாக ஏமாந்திருக்கிறார். அவருக்குக் கிடைத்த ஆதாரமான சுவடியையோ அச்சுப் பிரதியையோ யாம் கண்டும் கேட்டுமறியோம். அந்த ச்லோகம் இல்லாத சுத்தமான பழைய பதிப்புக்களையும் சுவடிகளையும் ஏராளமாக இன்றும் என்றும் காணலாம்.

பாலக்காட்டு ராமாயணப் பதிப்பாளர் நமது பெருமதிப்புக்கு உரியவர். ஸம்ஸ்கிருத பாஷைக்கு அவர் செய்த அளவுக்கு வேறு யாரும் உபகாரம் செய்யவில்லை. அதனால் நம் நாட்டினருடையவும் பிற நாட்டினருடையவும் நன்றி கலந்த வணக்கங்கள் அவருக்கு உரியனவாகும். அவரிடத்திலும் அவருடைய சிறந்த பதிப்புக்களிடத்திலும் மற்ற எல்லாருக்கும் இருப்பது போலவே எமக்கும் பெருமதிப்பு உண்டு. ஆனால் இந்த கௌதமர் விஷயத்தில் உண்மைக்கு மாறாக அவர் மேற்படி ச்லோகத்தைச் சேர்த்துப் பதிப்பித்ததனால் உண்மையை எடுத்துக்காட்ட முற்பட்டோமித்தனை.

எம்பெருமானுடைய அவதாரங்கள் எல்லாம் ஏற்கனவே திட்டமிட்டபடியே நடக்கின்றன. இதிஹாஸ புராணங்களில் ஒவ்வோர் அவதாரத்தின் போதும் முன்பு நடந்த நிகழ்ச்சிகளைக் கவனித்தால் இது நன்கு விளங்கும். இதே வழியில்தான் ராமாவதாரமும் நடந்திருக்கிறது. ராவணவதம், ஜனஸ்தானத்து அரக்கர்களை ஒழித்துக்கட்டியது போன்ற முக்கியமான காரணங்களுடன், சபரீமோக்ஷம், சரபங்க மோக்ஷம், அஹல்யா சாப விமோசனம் இவை போன்றவையும் இந்த அவதாரத்தின் குறிக்கோளாக அமைந்துவிட்டன. அதிலும் முந்தியவகை எம்பெருமானுடைய ஸங்கல்பமாத்திரத்தினால் நடந்துவிடக்கூடியது; பிந்தியது அப்படியன்று; நேராகவே எம்பெருமான் வந்தாக வேண்டிய நிர்ப்பந்தம் இதில் உண்டு. 'பரித்ராணாய ஸாதூநாம்' என்னும் கீதாச்லோகத்தில், 'தர்மஸம்ஸ்த்தா பநார்த்தாய' என்ற இடத்தில் பாஷ்யக்ரந்தத்தில் நம் இராமாநுசன் இதை வெகு அழகாகக் குறிப்பிட்டிருக்கிறார். ராமாவதாரத்திற்கான காரணங்கள் பலவற்றுள், கௌதமருடைய பத்தினியின் சாபவிமோசனமும் ஒன்று. இதன் மூலம் கௌதமரும் ராமாவதாரத்திற்கு வித்திட்டவர்களுள் ஒருவராகிறார்.

## வாமதேவர்

கௌதமருடைய வம்சத்தில் தோன்றிய மகரிஷிகளுள் இவரும் ஒருவர். பராசரருடைய குமாரரான வ்யாஸரை, 'வ்யாஸ: பாராசர்ய:' என்பது போலவே இவரையும், 'வாமதேவோ கௌதம:' என்றே வழங்குவர். ரிக்வேதம், நாலாவது மண்டலம் முழுவதும் – 589 மந்திரங்கள் கொண்டது, இந்த வாமதேவரால் கண்டு

உபதேசிக்கப்பெற்றதாம். தமது குல முதல்வரான அல்லது பிதாவான கௌதமருடைய ஸம்பந்தத்தினால் வந்த பெருமை தவிர இவருடைய சுயமகிமையே நாடும் நகரமும் நன்கறிந்ததே. ஆனாலும் இவருடைய திருவுள்ளத்தில் தம்மை 'வாமதேவோ கௌதம:' என்று சொல்வதில்தான் திருப்தி இருந்திருக்கிறது. அதனால் வேதஸம்பிரதாயத்தில் அப்படியேதான் இவர் வழங்கப் பெறுகிறார். கௌதமருடைய வம்சத்தில் உதித்த இவர் வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் பலவாறாகப் புகழ்ந்து பேசப்பெறுகிறார்.

ராமாயணத்தில், யுத்த காண்டத்தில், ராம பட்டாபிஷேக காலத்தில், முதல்முதலாக எட்டு மகரிஷிகள் புண்ணிய தீர்த்தங்களால் ராமனுக்கு அபிஷேகம் செய்தனர். அவர்களுள் இரண்டாமவர் வாமதேவர்.

वसिष्ठो वामदेवश्च जाबालिरथ काश्यपः ।... अभ्यषिञ्चन् नरव्याघ्र ...॥

வஸிஷ்டோ வாமதேவச்ச ஜாபாலிரத காச்யப: ।
அப்யஷிஞ்சந் நரவ்யாக்ரம்..... ॥

என்பது பிரஸித்தமான பட்டாபிஷேக ஸர்க ச்லோகம். இங்கு வஸிஷ்டரையும் வாமதேவரையும் முதல் முதலாக எடுத்திருப்பதில் ஒரு காரணமும் உள்ளது. (ராமாவதாரத்துக்கு முன்பே) தசரதருடைய புரோகிதர்களுள் முக்கியமானவர் இருவர்; அவர்கள் வஸிஷ்டரும் வாமதேவருமே.

ऋत्विजौ द्वावभिमतौ तस्यास्तामृषिसत्तमौ ।
वसिष्ठो वामदेवश्च मन्त्रिणश्च तथापरे ॥

ரித்விஜௌ த்வாவபிமதௌ தஸ்யாஸ்தாம் ரிஷிஸத்தமௌ ।
வஸிஷ்டோ வாமதேவச்ச மந்த்ரிணச்ச ததாபரே ॥

— ராமாயணம், 1.7.4.

என்பது காண்க. அதனால்தான் பட்டாபிஷேகத்திலும் இவ்விருவருக்கும் முக்கியமான இடம் அமைந்துவிட்டது. தசரதருடைய மந்திரிமார்கள் யாவருமே பழுத்த ப்ரஹ்மஜ்ஞானிகளான மகரிஷிகள். அவர்களுடைய வரிசையில் கௌதமரும் ஒருவராக இருந்திருக்கிறார். கௌதமருடைய வம்சஸ்தரான வாமதேவரோ அவருக்கும் மேம்பட்ட ரித்விக்காக வஸிஷ்டரோடு ஸமானமாக வீற்றிருந்தார். இந்தப் பெருமை

கௌதமருடையதே. ராமாவதாரத்திற்கு முன்பு, தசரதர் அச்வமேதயாகம் பண்ணுவதற்காக யோசனை செய்தபோதும் வஸிஷ்டரும் வாமதேவருமே அவரை உற்சாகப்படுத்தினர். அயோத்தியாகாண்டத்தில், தசரதர் இறந்ததும் மந்திரிமார்களான மகரிஷிகள் அனைவரும் கூடி ஆலோசித்து பரதனைத் தூதர் மூலம் வரவழைக்க ஏற்பாடு செய்கின்றனர். அவ்விடத்திலும் கௌதம குமாரரான வாமதேவர் முக்கியமாக விளங்குகிறார். இவ்வாறாக ராமாயணத்தில் கௌதமருக்கும் வாமதேவருக்கும் சிறந்த இடம் ஏற்பட்டுள்ளது.

மேலும், கௌதம வம்சஸ்தர்களுக்கே தனியாக ஒரு சிறப்பு உண்டு. வேதாந்த மார்க்கத்தில் உலகுக்கு வழி காட்டியாக இவர்கள் இருக்கின்றனர். வாமதேவரும் அவ்வாறே இருந்திருக்கிறார். ரிக்வேதத்தில், நாலாவது மண்டலம் முழுவதும் இவருடையது. இதில் இருபத்தாறாவது ஸூக்தம் அத்யத்புதமானது. பரப்ரஹ்மத்தை உள்ளபடி உணர்ந்தவனுடைய மனநிலை எவ்வாறு இருக்கும் என்பதை இதில் மூன்று மந்திரங்களால் இவர் தெளிவாகக் கூறுகிறார். உலக வழக்கில் சாதாரணமாக அறிந்துகொள்ளக்கூடிய விஷயமல்ல இது. பரப்ரஹ்மத்தை உணர்ந்தவர்கள் மீண்டும் இந்தப் பிரபஞ்சத்திற்குத் திரும்பி வந்து தமது அநுபவத்தை நம் போல்வாருக்கு எடுத்துரைப்பதும் இல்லை. அப்படியே சொன்னாலும் நமக்கு அதைப் புரிந்துகொள்ளும் சக்தி இருப்பதில்லை. அதனால் இவ் விஷயம் யாருக்கும் எட்டாமல் பேச்சளவிலேயே கனவாகவே இருந்தது. கௌதமருடைய குமாரரான வாமதேவர் சிறந்த ப்ரஹ்மஜ்ஞானி. இவர் தமது அநுபவத்தைப் பாமர மக்களுக்கும் புரியும்படி ரிக் மந்திரங்களால் தெளிவாகப் பாடினார். அவற்றை இங்கே தருகிறோம் —

अहं मनुरभवं सूर्यश्च, अहं कक्षीवाँ ऋषिरस्मि विप्रः ।
अहं कुत्समार्जुनेयं न्यृञ्जे, अहं कविरुशना पश्यता मा ॥ १ ॥
अहं भूमिमददामार्याय, अहं वृष्टिं दाशुषे मर्त्याय ।
अहमपो अनयं वावशाना, मम देवासो अनु केतमायन् ॥ २ ॥
अहं पुरो मन्दसानो व्यैरं नव साकं नवतीः शम्बरस्य ।
शततमं वेश्यं सर्वताता दिवोदासमतिथिग्वं यदावम् ॥ ३ ॥

— ரிக்வேதம், 4.26.

"பிரபஞ்சத்தில் நடக்கும் விஷயங்களுக்கெல்லாம் ஆதாரமானவன் நானே" என்பது இவற்றின் சுருக்கமான கருத்து. ப்ருஹதாரண்யகோபநிஷத்திலும் இந்த மந்திரங்கள், வாமதேவருடைய அநுபவம் எல்லாம், எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

तद्धैतत् पश्यन् ऋषिर्वामदेवः प्रतिपेदे अहं मनुरभवं सूर्यश्चेति ॥

— ப்ருஹதாரண்யகம், 3.4.10.

शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् ॥

— ப்ரஹ்மஸூத்ரம், 1.1.31.

என்னும் ஸூத்ரத்தில் வேதவ்யாஸரும் இவ் விஷயத்தை விவரித்திருக்கிறார். வேதத்தின் உட்பொருளை நம் நெஞ்சுள் நிற்குமாறு செவிக்கினிய செஞ்சொல்லால் பாடியருளிய ஆழ்வாரும் அற்புதமாக இதை மொழிபெயர்த்திருக்கிறார் —

கடல்ஞாலம் செய்தேனும் யானே என்னும்

— திருவாய்மொழி, 5.6.1.

என்று தொடங்கும் திருவாய்மொழி இங்கு அநுபவிக்கக் கூடியது.

கௌதமரது வம்சத்தின் பெருமைதான் என்னே! 'கௌதமர் ஸாமவேதகாரர்' என்று ஊகிக்க இடம் இருக்கிறது. இவருடைய குமாரராகிய வாமதேவரும் அப்படியே. 'வாமதேவ்யம்' என்று, ஒரு ஸாம மந்திரத்திற்குப் பெயரே ஏற்பட்டிருக்கிறது. 'வாமதேவரால் காணப்பெற்றது' என்று பொருள். பாணினி முனிவர், தமது வ்யாகரண ஸூத்ரங்களில்,

दृष्टं साम । वामदेवाड्ड्यड्ड्यौ ।

— அஷ்டாத்யாயீ, 4.2.7,9.

என்னும் ஸூத்ரங்களால் இதை விளக்குகிறார். கௌதமருடைய வம்சஸ்தர்களின் பெருமை இவ்வாறு லோகோபகாரகமாக அமைந்தது.

## நசிகேதஸ்

இவரும் பிஞ்சிலே பழுத்த பெரிய ப்ரஹ்மஜ்ஞாநி; கௌதமருடைய வம்சத்தில் தோன்றியவர். இவரது வரலாறும் உலகப் பிரஸித்தமானது, லோகோபகாரகமானது. இதைச் சுருக்கமாக இங்கே கூறுவோம்.

கௌதமருடைய வம்சத்தில் ஆருணி என்பவர் தோன்றினுர். அவருடைய குமாரர் உத்தாலகர். இவருடைய குமாரர்தாம் பிரஸித்தரான ச்வேதகேது. இந்த உத்தாலகருக்கே மற்றொரு குமாரர் வாஜச்ரவஸ் என்பவர். அவருடைய குமாரர் வாஜச்ரவஸர் என்பவர். அவருடைய குமாரர்தாம் இந்த நசிகேதஸ். இவர்கள் அனைவருக்குமே பொதுவில் 'கௌதமர்' என்றே தங்களைக் குறிப்பிடுவதில் ஒரு தனியான பற்றுதல். அதனுல்தான் போலும் 'கௌதமர்' என்றே இவர்கள் வரலாற்றுப் பகுதியில் வழங்கப்பெறுகிறுர்கள். முன் பின் ஸந்தர்ப்பங்களை உற்று நோக்கி நாம் விவரங்களை அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

வாஜச்ரவஸர் என்னும் மகரிஷி விச்வஜித் என்னும் யாகத்தைப் பண்ணினுர். அதைப் பண்ணுகிறவர்கள் தமது ஸர்வஸ்வத்தையும் (சொத்து முழுவதையும்) தக்ஷிணையாகக் கொடுத்துவிட வேண்டும். அக்காலங்களில் பசுமாடுகள்தாம் சொத்தாக இருந்தன. வாஜச்ரவஸர் தம்மிடம் இருந்த பசுக்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார். அவருடைய குமாரன் சிறுவன் நசிகேதஸ் உடன் இருந்து கவனித்து வந்தான். தானமாகக் கொடுக்கப்படும் பசுமாடுகளைக் கவனித்தான். 'இவை யாவும் வெறும் கிழங்கள். ஒன்றுக்கும் உபயோகமில்லை. புல்லைக் கடித்து மென்று தின்னும் சக்தியும் தண்ணீரை உறிஞ்சிக் குடிக்கும் சக்தியுங்கூட இவற்றுக்கு இல்லை. பால் கறப்பதைப்பற்றியோ கேட்கவே வேண்டாம். இவற்றையா தானமாக வழங்குவது? வாங்கிக்கொண்டு போகிறவன் எவ்வளவு கஷ்டப்படுவான்? அந்தக் கஷ்டமெல்லாம் நமக்கே திரும்பி வரும். நமக்கு நல்ல கதியே கிடைக்காது. இவ்வாறெல்லாம் இந்தச் சிறுவனுடைய சிந்தனை ஓடியது. ஆனுல் இவனுல் என்ன செய்ய முடியும்? எல்லாவற்றையும் நன்கு உணர்ந்த இவனுடைய தந்தையார்தாமே தானம் பண்ணுகிறுர்?

ஆனுலும் நசிகேதஸ் அசிரத்தையாக இருக்கவில்லை. கௌதமருடைய வம்சம் அல்லவா? தர்ம ஸூக்ஷ்மங்களில் ஆழ்ந்த அறிவு படைத்தவன். அப்பாவை அணுகி ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்; "என்னை யாருக்கு (தக்ஷிணையாக)க் கொடுக்கப் போகிறீர்கள், அப்பா?" என்பதுதான் அவன் கேட்ட கேள்வி. வாஜச்ரவஸருக்குக் குமாரனுடைய கருத்து விளங்கவில்லை. இதை அவர் லக்ஷ்யம் பண்ணவே இல்லை. சிறுவன் இரண்டாம் தரமாக

அதே கேள்வியைக் கேட்டான். ஒன்றும் பதில் இல்லை. மூன்றும் தரமும் அதே கேள்வியைத் தொடர்ந்து கேட்டான் தனயன். தந்தைக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்தது. 'இதென்ன அதிகப் பிரசங்கித்தனம்? மகனை யாகதக்ஷிணையாகப் பிறருக்குக் கொடுப்பதென்பது கண்டும் கேட்டும் அறியாத புதுமை!' "உன்னை யமனுக்குக் கொடுத்துவிட்டேன்" என்று சொல்லி விட்டார் கோபவேகத்தில். சிறுவன் மனம் நிம்மதியடைந்தது. மிகச் சிறந்த ப்ரஹ்மஜ்ஞாநி அவன். இவ்வளவு உயர்ந்த வஸ்துவைத் தானம் செய்தால் ஏற்கெனவே கிழட்டுப் பசுக்களைத் தானம் பண்ணியதனால் உண்டான பாவம் தொலைந்துவிடும் என்பது அவன் எண்ணம்.

நொடிப்பொழுதில் கௌதமர் தாம் செய்துவிட்ட மாபெரும் தவறுதலை உணர்ந்துகொண்டுவிட்டார். யாகம் பண்ணுகிற லக்ஷணம், மகாதேஜஸ்வியான அருமை மைந்தனை யமனிடம் அனுப்புவதில் வந்து முடிந்துவிட்டதே! அவர் மீளாத் துயரத்தில் ஆழ்ந்தார். சிறுவன் அதிசயிக்கத்தக்க முறையில் அவருக்குத் தேறுதல் கூறி, யமனுடைய இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டுவிட்டான். அவன் அப்பாவுக்குச் சொன்ன ஆறுதல்மொழி அற்புதமானது. அசைக்க முடியாத உண்மை, அரிய பெரிய தத்துவம் :—

बहूनामेमि प्रथमो बहूनामेमि मध्यमः ।

— கடோபநிஷத், 1.1.5.

"அளவிட முடியாத மாபெருங் கூட்டம் (யமனிடம் செல்லும்) என்னைத் தொடர்ந்து வருகிறது. எனக்கு முன் புறத்திலும் இதனிலும் பெரிய ஜனத்திரள் சென்று கொண்டே இருக்கிறது. தனியாக நான் போகவில்லை. நீங்கள் கவலைப்படாதீர்கள், அப்பா!" என்பது கருத்து.

இப்படி அப்பாவின் கவலையைத் தீர்த்து வைத்த சிறுவனுக்கு மற்றொரு பெருங் கவலை தோன்றிவிட்டது. கௌதமகுலம் அல்லவா? தர்மஹானியில் அவ்வளவு பயம் :—

किँ स्विद् यमस्य कर्तव्यं यन्मयाद्य करिष्यति ॥

— கடோபநிஷத், 1.1.5.

'யமனுக்கு என்னால் ஓர் உபயோகமும் இருக்காதே?' என்பது கருத்து. தானம் கொடுப்பதில் ஓர் அடிப்படையான தத்துவம் உள்ளது. வாங்கிக்கொள்பவருக்கு ஏதாவது ஒரு வகையில் அந்தப்

பொருள் உபயோகமாக இருக்க வேண்டும். அப்போதுதான் தானம் பூர்த்தியடையும். இல்லையேல் கிழட்டுப் பசுக்களைக் கொடுத்தற்கொப்பாகவே முடியும். எண்ண முடியாத ஜனத்திரள் யமனுடைய இருப்பிடத்தை நோக்கி ஊர்ந்து சென்று கொண்டிருக்கிறதே. இவர்களாலெல்லாம் ஆகாத காரியம் யமனுக்கு என்ன இருக்கும்? அப்படியே இருந்தாலும் அது என்னால் ஆகுமா? இதுதான் சிறுவனுடைய கவலை.

तँ ह स्मोत्थितं वागभिवदति । गौतमकुमारमिति ।

— காடகம், 2.8

சின்னஞ்சிறு பாலகன் யமலோகத்திற்கு யாத்திரை கிளம்பிவிட்டான். ஆகாயத்தில் ஓர் அசரீரி வாக்கு ஒலித்தது, "கௌதமரே, குமாரனை இப்படிச் செய்துவிட்டீரே!" என்றது ஆகாசவாணி.

கௌதமருடைய மூளை சுறுசுறுப்பாக வேலை செய்தது. குமாரனுக்குப் பக்குவமாக யோசனை கூறி அனுப்பினார். அவன் மகா ஸாமர்த்தியசாலி. அப்பாவின் சொற்படியே செய்து, மீண்டும் (சாகாமல்) தந்தையின் இருப்பிடமே வந்து சேர்ந்துவிட்டான். அது மட்டுமா? யமனைப் பயப்படுத்தி அவனிடம் அரிய வரங்கள் மூன்றையும் பெற்றுக்கொண்டு வீடு திரும்பினான். இவற்றுள் மூன்றாவது வரம் மிக மிகச் சிறந்தது. இறந்தவன் யமன்முகத்தில் விழிக்காமல், மீண்டும் பிறவித் துயரற்று ப்ரஹ்மாநந்தத்தில் தோய்ந்து பேரின்பம் பெறுவதற்கான வழியே அது. நசிகேதஸ் மூலமாக யமனால் உபதேசிக்கப்பெற்ற இந்த வித்யை இன்று உலகுக்கெல்லாம் கிடைத்திருக்கிறது. ப்ரஹ்மஸூத்ரகாரரும் இதைத் தமது ஸூத்ரங்களில் விசாரித்திருக்கிறார். இவ்வாறாக முக்கியமான ப்ரஹ்மவித்யைகளெல்லாம் கௌதமருடைய வம்சஸ்தர்களாலேயே உலகத்தினருக்கு வழங்கப்பெற்றுள்ளன.

## சிரகாரீ

இது ஒரு ரிஷிகுமாரருடைய பெயர். இவருடைய பிதா கௌதமர்தாம். மேதாதிதி (मेधातिथिः) என்று இவருக்கு மற்றொரு பெயர். கௌதமருடைய வம்சத்தில் உதித்தவர்கள் அனைவரும் தமது குல முதல்வருடைய பெயரையே தாமும் வைத்துக்கொள்வது

வழக்கம். இந்த மேதாதிதி மகரிஷியும் 'கௌதமர்' என்றே புராணங்களில் வழங்கப்பெறுகிறார். இவருடைய குமாரருக்குச் சிரகாரீ என்று பொருத்தமான முறையில் பெயர் வைக்கப்பெற்றது. எந்தக் காரியத்தையும் சுறுசுறுப்பாகச் செய்யமாட்டார் இவர்; மிகவும் தாமதமாகவே எதையும் செய்வார். 'அவசரம்' என்பது இவருடைய அகராதியில் இடம் பெறவேயில்லை; மகா நிதானம். இவருடைய இயல்பை உணர்த்தும் வகையிலேயே இவருக்குப் பெயரிடப்பட்டது. 'சிரகாரீ' என்பதற்கு எதிர்ப்பதம் 'சீக்ரகாரீ' என்பது. இவருடைய அதிமந்த ஸ்வபாவம் காரணமாக அனைவருக்கும் இவரிடம் ஓர் அவமதிப்பு. இவரை யாரும் லக்ஷ்யம் பண்ணுவதில்லை. இவரும் அதைப் பொருட்படுத்துவதில்லை. இவருடைய இந்த மந்தஸ்வபாவமே ஒரு ஸந்தர்ப்பத்தில் பெருநன்மையைக் கொடுத்துவிட்டது.

இவருடைய பிதாவான கௌதமருக்குத் தம் மனைவியின் நடத்தையில் சந்தேகம் தோன்றிவிட்டது. தம் பிள்ளைகள் பலருள் சிரகாரீயைப் பார்த்து அவர் உத்தரவிட்டார், "இந்த உன் தாயின் தலையை வெட்டித் தள்ளு" என்று. தந்தையின் சொல்லைத் தலைமேல் தாங்கி ஏற்றுக்கொண்டான் தனயன். உடனே கத்தியும் கையுமாக அம்மாவின் இருப்பிடம் சென்றான். ஆற்றங்கரையில் சென்றிருந்தாள் அப்போது அவனுடைய தாய். தாயின் ஸமீபத்தில் போய் அமர்ந்தான் அருமை மகன். தாயினிடம் தனது உத்தேசத்தைத் தெரிவிக்கவில்லை. இவன் மனத்துள் பெரும் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. தந்தை சொல்லை அவமதித்தால் தாயைக் காப்பாற்றலாம். தாயைக் கொன்றால் தந்தையின் சொற்படி நடந்ததாகத் தேறும். ஒன்றுக்கொன்று நேர்விரோதமாக இரண்டு விஷயங்கள் எதிர்ப்பட்டால் என்ன செய்வது? ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய்விட்டான். சாஸ்திரங்களில் கூறப்பட்ட வழியில் தந்தையின் கௌரவத்தைப் பலவாறாகச் சிந்தித்துப் பார்த்தான். மற்றொருபுறம் தாயின் பெருமைகளை நினைந்து நினைந்து உருகினான். இவ்விரண்டும் தனித்தனியே பார்க்கையில் மிகவும் இனியனவாகவே இருக்கின்றன. ஒன்றுக்கொன்று முரண்பாடு ஏற்படும்போது என்ன செய்வது? இதுதானே இவனுக்கு இப்போது தெரியவேண்டும்?

கௌதமருடைய வம்சத்தில் பிறந்தவனுக்கு இதில் தெளிவாக முடிவு காண வசதி உள்ளது. ஏன், மானிடவர்க்கத்திற்கே இது பொருந்தும்.

आचार्यः श्रेष्ठो गुरूणाम् ।
मातेत्येके । मातेत्येके ।

ஆசார்ய: ச்ரேஷ்டோ குரூணாம் ।
மாதேத்யேகே । மாதேத்யேகே ।

— கௌதமதர்மஸூத்ரம், 1.2.56.

என்பது கௌதமர் எழுதிவைத்த தர்மஸூத்ரம். ஒவ்வொருவருக்கும் 'குரு' என்று மதிப்புடன் நடந்துகொள்ள வேண்டிய அவசியம் சில விஷயங்களில் உண்டு. தாய், தந்தை, கல்வி கற்பித்த ஆசார்யன், தாய்மாமன், யாகங்களைச் செய்து வைக்கும் ருத்விக்குகள் என்னும் இவர்கள் 'குரு' எனப்பெறுவர். ஏனையோரைக்காட்டிலும் சிறந்த முறையில் ஒவ்வொருவரும் இந்த இனங்களைச் சேர்ந்தவர்களிடம் மரியாதையுடன் நடந்துகொள்ள வேண்டும். இது முன் ஸூத்ரங்களில் சொல்லியுள்ள விஷயம். இந்த (குரு) இனத்தைச் சார்ந்தவர்களுக்குள்ளேயே முரண்பாடு தோன்றினல் தாரதம்யம் எப்படி என்பதற்குப் பதில் கூறுவனமேலே காட்டிய ஸூத்திரங்கள். 'குருமார்களுள் ஆசார்யனே சிறந்தவன்; மாதாவே சிறந்தவள் என்று சிலர் கூறுவர்' என்பது கருத்து. 'சிலர்' என்று கூறுவதன் மூலம் இதை உயர்ந்த பக்ஷமாகக் காட்டி இத்துடன் முடித்து விடுகிறார் கௌதமர். இவருக்கும் இந்தப் பக்ஷமே இஷ்டமானது என்பது இதிலிருந்து உள்ளங்கை நெல்லிக்கனி. தாயின் சொல்லைக்கேட்டுத் தந்தையை ஆற்று வெள்ளத்தில் தூக்கி எறிந்தவர்தாமே இவர்? இதெல்லாம் சிரகாரீக்குத் தெரியாதா என்ன? நெடுநேரம் சிந்தையில் ஆழ்ந்தான். இவனுக்குப் பெயர் பொருத்தமாகத்தானே வைத்திருக்கிறார்கள்!

இதற்கிடையில் தேவேந்திரன் ஓர் அந்தண வடிவத்துடன் கௌதமருடைய ஆச்ரமத்தின் சமீபத்தில் வந்தான். அவருடைய மனத்திலும் பெரும் குழப்பம்; 'அவசரமாக அவளைக் கொல்லச் சொல்லிவிட்டோமே! ஒரு ப்ரஹ்மஹத்யையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டுவிட்டோமே!' என்னும் பெருங்கவலை. ஒரு பழமொழியை இந்திரன் பாடிக்கொண்டே வந்தான். "அபலைகளாகிய பெண்மக்களிடம் தாராளமாக மனோபாவத்துடன்

நடந்துகொள்ள வேண்டும். குற்றம் காண்பதையே குறிக்கோளாக வைத்துக்கொள்ளக் கூடாது" என்பதுதான் அந்தப் பழமொழியின் உட்கருத்து. மேதாதிதியின் காதில் இவ்வினிய மொழி தேனெனப் பாய்ந்தது. உடனே பாய்ந்தோடினார்; தம் மைந்தன் சிரகாரியைத் தேடினார். ஆற்றங்கரையில் ஆழ்ந்த சிந்தனையுடன், பெரும் மனக்குழப்பத்துடன் சோர்ந்து கிடந்த அவனையும், அவனருகில் அவளையும் கண்டார். நல்ல காலம். இன்னும் அவன் அவளை வெட்டிக் கொல்லவில்லை. கௌதமருடைய மனம் ஆறுதலடைந்தது. மகனிடம் சென்று உண்மையை வெளியிட்டார். தமது பயங்கரமான முடிவைத் தாமே மாற்றிக் கொண்டுவிட்டதாகவும், இந்தக் கொடிய செயலைச் செய்ய வேண்டாமென்றும் அவனைத் தடுத்தார். அவசரமாக எதையும் செய்துவிடாமல் நெடுநேரம் தாமதிக்கும் அவனுடைய இயல்பைப் பெரிதும் பாராட்டினார். அதனால்தானே இப்பொழுது அவளை உயிருடன் பார்க்க முடிந்தது? அவளைக் கொல்ல அவசரமாகத் தாம் உத்தரவிட்டதற்காகப் பெரிதும் பச்சாத்தாபமடைந்தார். மணிபோல் இரண்டு ச்லோகங்களையும் சொன்னார் —

रोगे दर्पे च माने च द्रोहे पापे च कर्मणि ।
अप्रिये चैव कर्तव्ये चिरकारी प्रशस्यते ॥
धर्मे शत्रौ शत्रुहस्ते पात्रे च निकटस्थिते ।
भये च साधुपूजायां चिरकारी न शस्यते ॥

ரோகே தர்ப்பே ச மாநே ச த்ரோஹே பாபே ச கர்மணி ।
அப்ரியே சைவ கர்த்தவ்யே சிரகாரீ ப்ரசஸ்யதே ॥
தர்மே ஶத்ரௌ சத்ருஹஸ்தே பாத்ரே ச நிகடஸ்திதே ।
பயே ச ஸாதுபூஜாயாம் சிரகாரீ ந சஸ்யதே ॥

— ஸ்காந்தம், குமாரிகாகண்டம், 6,25,29.

"வியாதி, வன்முறை, மானம், துரோகம், தீய செயல், அநிஷ்டத்தைச் செய்தல் — இவற்றில் தாமதித்துச் செய்தல் நன்றாகும்."

"தர்மம், பகைவன், அவனுடைய கை, ஸத்பாத்ரம் (தானத்திற்கு) அண்மையில் இருத்தல், பயம், நல்லோரைப் பூஜித்தல் - இவை போன்றவற்றில் விளம்பித்துச் செய்வது தகாது."

கௌதமர் (மேதாதிதி) இவ்வாருகத் தமது மைந்தனைப் புகழ்ந்துரைத்துத் தம் இல்லாளுடன் மனமொத்துப் பல்லாண்டுகள் வாழ்ந்து வந்தார். இதெல்லாம் கிருதயுகத்துக் கதை. உள்ளதைக் கூசாமல் உள்ளபடியே சொல்லிக்கொள்வதில் பின்வாங்காத காலம் அது. இக்காலத்திய மக்கள்போல் மாபெரும் அநீதியான காரியங்களைக் கூசாமல் செய்வதும், மகா யோக்கியராக நடிப்பதுமான இயல்புள்ளவர்கள் அல்லர் அவர்கள். அதனுல் மகாதேஜஸ்விகளான மகரிஷிகள் விஷயத்தில் நம்போல்வார் எள்ளளவும் குறையை எண்ணக் கூடாது. அது பெரிய அபசாரமாகும்.

## க்ருபாசார்யர்

மகாபாரதக் கதையில் இவரும் இவருடைய மருமகனை அச்வத்தாமாவும் முக்கிய இடம்பெற்றவர்கள். ஏழு சிரஞ்சீவிகளுள் இவர்கள் இடம்பெற்றுள்ளனர். கௌதமருடைய புதல்வர் சரத்வான் என்பவர். அவருக்கு ஒரு பெண்ணும் ஒரு பிள்ளையும் பிறந்தனர். ஆணுகப் பிறந்தவர் க்ருபாசார்யர். இவருடைய ஸஹோதரியான பெண்பிள்ளைக்குக் க்ருபீ என்று பெயரிட்டனர். இவளைத் துரோணுசார்யர் மணந்துகொண்டார். இவளுடைய பிள்ளையே அச்வத்தாமா. இவ்வாருக உலகப் பிரசித்தி பெற்ற மகாவீரர்களும் சிரஞ்சீவிகளுமான க்ருபாசார்யரும் அச்வத்தாமாவும் கௌதமருடைய வம்சத்தில் உதித்தவர்கள்.

## தாயில்லாப் பிள்ளைகள்

க்ருபாசாரியரும் அவருடைய ஸகோதரியான க்ருபீயும் தாயில்லாப் பிள்ளைகள். கௌதமருடைய குமாரரான சரத்வான் என்பவர் இவர்களுக்குத் தந்தை. இந்த வம்சத்தின் வழக்கப்படி, சரத்வானையும் கௌதமர் என்றே குறிப்பிடுவதுண்டு. க்ருபாசார்யரும் கௌதமர் என்று அழைக்கப் பெறுவார். அவருடைய உடன்பிறந்தவளாகிய க்ருபீ என்பவளும் கௌதமீ என்று அழைக்கப்பெறுவாள். அவளுடைய பிள்ளை என்னும் கருத்தில் அச்வத்தாமாவும் கௌதமீநந்தனர் என்று அழைக்கப்பட்டு வந்திருக்கிருர். க்ருபாசாரியருக்கும் க்ருபீ என்னும் பெண்ணுக்கும்

தந்தையாகிய சரத்வான் மகாதபஸ்வி; அஸ்திரவித்யையில் இணையற்றவர். எப்போதும் வில்லும் அம்பும் அவர் கைகளில் காணப்படும். இவருடைய தவவலிமையைக் கண்டு தேவேந்திரன் அச்சம் கொண்டான். எப்படியாவது இவரது மனத்தைக் கலைத்துச் சிற்றின்பத்தில் ஈடுபடச் செய்து தவத்திற்கு இடையூறு விளைவித்துவிடத் திட்டமிட்டிருந்தான். தக்க சந்தர்ப்பம் வாய்த்தது. ஜாலவதி என்ற அழகியை இவருடைய ஆச்ரமத்திற்கு அனுப்பினான். அவள் தனிமையில் இவரை அணுகித் தன் அழகைக் காட்டி மயக்கினாள். ஆனால் இவருடைய உறுதியான மனம் தளரவில்லை. அவளுடைய இஷ்டத்திற்கு இவர் உடன்படவில்லை. அவள் இஷ்டபூர்த்தி இல்லாமலே திரும்பிப் போய்விட்டாள். முதல்முதலில் ஜனஸஞ்சாரமில்லாத நாணற்காட்டின் நடுவில் அந்தச் சிறந்த கட்டழகியைக் கண்ட மாத்திரத்தில் இவருடைய மனத்தில் சிறிது விகாரம் தோன்றிவிட்டது. கையிலிருந்த வில்லும் அம்பும் இவரறியாமலே கீழே நழுவி விழுந்தன. அப்படியே இவருடைய வீரியம் ஸ்கலிதமாகிக் கீழே விழுந்தது. இவையெல்லாம் இவரறியாமல் தன்னடையே நடந்துவிட்டன. இந்த நிலையில் இவர் தமது மனத்தை மீண்டும் திடப்படுத்திக் கொண்டார். அவ்வாறு நழுவிய இவருடைய வீரியம் அங்கிருந்த அடர்ந்த நாணற் செடிகளின்மேல் விழுந்தது. அந்த க்ஷணத்திலேயே ஓர் ஆண்குழந்தையும் ஒரு பெண்குழந்தையுமாக அது மாறிவிட்டது. அந்த இரட்டையர்தாம் க்ருபாசாரியரும் க்ருபீ என்பவளும்.

சிவபெருமானுக்கு நாணற்காட்டில்தான் சுப்பிரமணியன் பிறந்தான். அதனால் சரவணபவன் என்று அவனுக்குப் பெயராயிற்று. வேதவ்யாஸருக்கு அரணிக்கட்டையிலிருந்து சுகபரப்பிரம்மம் அவதரித்தார். அதனால் அவருக்கு ஆரணேயர் என்று பெயராயிற்று. அவ்வாறே க்ருபாசாரியரும் 'க்ருப: சாரத்வத:' என்று அழைக்கப்பெற்றார். அதாவது இவருடைய அப்பாவின் பெயரும் நாணற்காடுமே இவரைக் குறிப்பிடுவதற்கு ஆதாரமாக அமைந்தன. இவ்வாறு இவர்கள் எல்லாரும் தாயில்லாப் பிள்ளைகள். குந்தியின் மகனான தர்மபுத்திரரையும் அர்ஜுனனையும் பீமனையும் கௌந்தேயர் என்று தாயின் பெயரையிட்டு

அழைப்பார்கள். கௌஸல்யையின் மணிவயிறு வாய்த்தவனுகிய இராமபிரானைக் 'கௌஸல்யாநந்தவர்தந:' என்பர். ஸுமித்திரையின்பிள்ளையான லக்ஷ்மணனை 'ஸௌமித்ரி:' என்று அழைப்பார்கள். அப்படியெல்லாம் இவரை அழைக்க வழியில்லை. தாயின் வயிற்றில் பல மாதங்கள் வஸிப்பதும், அதிலுள்ள கஷ்டங்களும், பிரஸவ காலத்தில் வெளிவருவதில் உள்ள வேதனைகளும் க்ருபாசாரியருக்கும் க்ருபீக்கும் தெரியா. நினைத்த மாத்திரத்தில் கம்பத்தைப் பிளந்துகொண்டு வெளிவந்த நரஸிம்ஹாவதாரம் போல் இவர்கள் இருவரும் அயோனிஜர்கள். தற்செயலாக வேட்டையாட அந்தப் பக்கம் வந்த சந்தனு மகாராஜன் இவ்விரு குழந்தைகளையும் 'கிருபையால்' எடுத்து வளர்த்தான். அதுவே இவர்களின் பெயராயிற்று. துரியோதனுதியர்க்கும் பாண்டவர்களுக்கும் தனுர்வித்யாசார்யரானுர் க்ருபர். க்ருபீயைத் துரோணுசார்யர் மணந்து கொண்டார். இவ்வாருக இவ்விருவரும் கௌதமருடைய குமாரரான சரத்வான் என்பவருடைய இரட்டைப் பிள்ளைகளானுர்கள்.

### ஏகதன், த்விதன், த்ரிதன்

கௌதமருடைய மூன்று குமாரர்களின் பெயர்கள் இவை. இம்மூவரும் தந்தையைப் போலவே மகா தபஸ்விகள்; வேதங்களைக் கசடறக் கற்றவர்கள். கௌதமருக்கு இவர்களிடம் மதிப்பு மிகவும் அதிகம். இப்படிப்பட்ட தேஜஸ்விகளான பிள்ளைகளைப் பெற்றமைக்காக அவர் அகமகிழ்ந்திருந்தார். இந்த ஆனந்தத்துடனே நெடுநாள் வாழ்ந்து தேவலோகம் சென்றுர் கௌதமர். அவரைப் புரோகிதராக வைத்திருந்த அரசர்கள் அனைவரும் இந்த மூன்று பிள்ளைகளிடம் அதே ரீதியில் கௌரவத்துடன் நடந்துகொண்டனர். இந்த மூவருக்குள், த்ரிதன் ஸகல விதத்திலும் சிறந்து விளங்கினுன். அனைவரும் அவனை அதிகமாகப் பூஜித்தனர். மற்ற இருவரிடம் அவ்வளவு கௌரவமில்லை.

இவர்களுக்கு ஸோமயாகம் பண்ண வேண்டும் என்ற ஆசை. அதற்குப் பணம், பசுக்கள், மற்ற வசதிகள் எல்லாம் வேண்டுமே?

என்ன செய்வது? மற்ற இருவரும் த்ரிதனை முக்கியமாக வைத்துப் பொருள் பசுக்கள் முதலியவற்றைச் சேகரித்தனர். த்ரிதனிடம் இருந்த பெருமதிப்பு காரணமாகச் செல்வர்களும் அரசர்களும் ஏராளமாக வாரி வழங்கினர். பொருளை எடுத்துக்கொண்டு, பசுக்களை ஓட்டிக்கொண்டு ஸோமயாகம் பண்ணுவதற்காக இவர்கள் கிழக்குத் திசையில் ஸரஸ்வதி நதிக்கரைக்குச் சென்றனர்.

த்ரிதன் முன்னே செல்கிறான். ஏகதனும் த்விதனும் பசுக்களை ஓட்டிக்கொண்டு பின்னே செல்கிறார்கள். இருவருக்கும் பரஸ்பரம் ஒற்றுமை. த்ரிதனிடம் பொறாமை; த்ரோஹசிந்தை. த்ரிதனை வஞ்சித்து இந்தப் பசுக்களையெல்லாம் தாமே வசப்படுத்திக் கொண்டு அவனைத் தன்னந்தனியாக விட்டுப் போய்விடுவதற்கு ஆயத்தமாயினர் அவ்விருவரும். இவ்வாறு செய்வதற்கு ஏற்ற சந்தர்ப்பமும் வாய்த்தது.

இவர்கள் ஸரஸ்வதி நதிக்கரையை வந்தடைந்தனர். நள்ளிரவு. ஒரு பாழுங் கிணறு. அதன் கரையில் பயங்கரமான ஓநாய். இதைப் பார்த்ததும் நடுநடுங்கிப் போனான் த்ரிதன். தடுமாறிப் பாழுங்கிணற்றில் விழுந்துவிட்டான். பாவம்! தன் சகோதரர்களைக் கூவி அலறிக் கொண்டிருக்கிறான் கிணற்றினுள்ளே. அந்தக் கயவர்கள், சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். பசுக்களையும் பொருள்களையும் அபகரித்துக் கொண்டு மாயமாக மறைந்துவிட்டனர். 'த்ரிதன் கிணற்றினுள்ளேயே செத்துப்போனால் போகட்டும். அப்படியே தப்பிப் பிலைழத்தெழுவானானால் பசுக்களும் மற்றப் பொருள்களும் நினைத்த மாத்திரத்தில் அவனுக்கு ஏராளமாகக் கிடைக்கும்' என்ற எண்ணம் அவர்களுக்கு.

கிணற்றில் சிக்கிக்கொண்ட த்ரிதன் முழு மூச்சுடன் நெடுநேரம் வரையில் கதறினான். யாரும் ஏனென்று கேட்டவில்லை. பயங்கரமான பாழுங்கிணறு. நடுநிசி. கரையில் பயங்கரமான ஓநாய். மரணம் சமீபித்துவிட்டது த்ரிதனுக்கு. அவனுக்கு அதில் பயமில்லை. எப்படியானாலும் செத்துத்தானே ஆக வேண்டும்? இது தெரியாதா அவனுக்கு? அவனது கவலை வேறொரு விதமானது. ஸோமயாகத்துக்காக ஸகல விதமான முன்னேற்பாடுகளையும் செய்துவிட்டபிறகு, கடைசி நிமிஷத்தில் எல்லாம் விபரீதமாகிவிட்டதே! ஸோமரஸத்தைப் பானம் பண்ணாமலே

இறந்துபோகும்படியான நிலை வந்துவிட்டதே. இதுதான் அவனுடைய மனக்கவலை. கௌதமருடைய குமாரன் அல்லவா?

உள்ளம் குமுறிப்போய்த் தெய்வங்களைக் கூவிக் கதறினன். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை என்பது பொய்யாகுமா? நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். ஒரு மூலையில் அடர்ந்த புற்களின் நடுவில் ஒரு கொடி தொங்கிக்கொண்டிருந்தது. என்ன அதிசயம்! அது ஸோமலதையேதான். அதை எட்டிப்பிடித்தான். இந்தத் திடீர் மாறுதலால் மனத்தில் குடிகொண்டிருந்த மாபெரும் பீதி மறைந்தோடியது. ஸோமயாகம் செய்வதாக ஸங்கல்பம் செய்துகொண்டான். சுக்காங்கற்களால் அந்தக் கொடியை நசுக்கிச் சாறு பிழிந்தான். அந்தப் பாழுங் கிணற்றிலும் சிறிது நீர் இருந்தது. அதை உபயோகித்துக் கொண்டான். த்ரேதாக்நிகளையும் யாகவேதியையும் மனத்திலேயே ஸ்ருஷ்டி பண்ணிக்கொண்டான். ரித்விக்குகள் பலரும் கூடிப் பெருங்குரலுடன் மந்திரங்களை கோஷிப்பதுபோல் தானொருவனே உரக்கக் கத்தினன். அவனுக்குத்தான் எல்லாம் மனப்பாடமாயிற்றே. அவனுடைய குரல் தேவலோகத்தைத் தொட்டது. இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம் ஓடோடியும் வந்தனர். 'கௌதமருடைய உத்தமபுத்திரன் யாகம் பண்ணுகிறான். இதற்குப் போகாமல் இருந்தால் பெரும் விபரீதம் வந்துவிடும்' என்னும் பயம் அவர்களுக்கு. ஸோமரஸத்தை முறைப்படி அவர்களுக்கெல்லாம் பகிர்ந்து கொடுத்தான். தானும் அதைப் பருகினன். அவனுடைய ஆசை ஈடேறியது.

தேவர்கள் மனமுவந்து அவனுக்கு வரமருளினர். "இந்தப் பாழுங் கிணற்றிலிருந்து கரையேற வேண்டும்" என்று அவன் வரம் கேட்டான். தேவர்கள் அவ்வாறே அருள்புரிந்தனர். அந்தப் கிணற்றின் கீழ் வெகு ஆழத்தில் பூமிக்குள்ளே மறைந்து பெருகியோடிக் கொண்டிருந்த ஸரஸ்வதி நதி மேல் நோக்கிக் கிணற்றின் வழியாகப் பொங்கி வழிந்தது. அந்தப் பெருவெள்ளத்தில் மிதந்து அநாயாஸமாகக் கரை சேர்ந்தான் கௌதமபுத்திரன். அவன் தேவர்களிடம் மற்றொரு வரமும் கேட்டான்; இனி வருங்காலத்தில் இந்தக் கிணற்றில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு ஸோமயாகம் பண்ணின பலன் உண்டாக வேண்டும் என்று. அதுவும் தேவர்களால் அநுமதிக்கப்பட்டது.

வெற்றிகரமாக வீடு திரும்பினுன் த்ரிதன். தனக்குத் துரோகம் செய்த தம்பிமார்களைப் பார்த்தான்; கடுஞ்சினம் கொண்டான். "நீங்கள் செய்தது கொடிய பாவம். அதன் பயனுக இந்த க்ஷணத்திலேயே நீங்கள் இருவரும் மானிடத்தன்மையை இழந்துவிட வேண்டும். குரங்குகளாகவும் கரடிகளாகவும் இனி நீங்கள் பிறக்க வேண்டும்" என்று சபித்தான். உடனே அவ்வாறே நடந்துவிட்டது.

## கௌதமி

இது ஒரு பிராம்மண ஸ்திரீயின் பெயர். இவள் கௌதமருடைய மனைவியாகவோ பெண்ணுகவோ உடன்பிறந்தாளாகவோ கோத்திரத்தில் உதித்தவளாகவோ இருக்க வேண்டும். இந்த வம்சத்தினருடைய வழக்கப்படி குல முதல்வரின் பெயராலேயே வழங்கப்பெற்றிருக்கிருள். மகா உத்தமி. பொறுமையே வடிவம் கொண்டாற் போன்றவள். மகாபாரதக் கதையில் ஒரு முக்கியமான திருப்பம் இவளது வரலாற்ருல் தோன்றியது. அநுசாஸன பர்வம் இவளது வரலாற்றுடன்தான் தொடங்குகிறது.

மகாபாரத யுத்தம் முடிந்தது. பீஷ்மர் சரதல்பத்தில் (அம்புகளாலான படுக்கையில்) செத்துப்போவதற்கு நாளிட்டு வைத்துப் படுத்திருக்கிருர். பீஷ்மைகாதசி என்று உலகப் பிரசித்தமான அந்தப் புனிதமான நாள் இன்னும் வரவில்லை. அதுவரையில் இவர் சாகப் போவதில்லை. அதற்குப் பிறகு ஒரு நொடிபொழுதும் ஜீவித்திருக்கப் போவதில்லை. இது அவராலேயே தீர்மானிக்கப்பட்டு முடிந்துபோன விஷயம். மரணப்படுக்கையில் அவரை அணுகி யுதிஷ்டிரர் தர்மஸூக்ஷ்மங்களை ஓயாமல் கேட்டுக்கொண்டே யிருக்கிருர். பீஷ்மர் சொல்லிக்கொண்டே யிருக்கிருர். சாந்தி பர்வம் என்று பெயர் பெற்ற அரிய பெரிய உபதேச பரம்பரை பூர்த்தியடைந்தது. தர்மபுத்திரருடைய மனத்தில் சாந்தி உண்டாகவில்லை. பாரதப் போரில் நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் மற்றொன்ருகத் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அவரவருடைய வீர ஸாஹஸங்களும், வஞ்சம் தீர்த்துக்கொண்ட விதங்களும், துரோகச் செயல்களும் உள்ளத்தில் கிளர்ந்தெழுந்து, பெரும் குழப்பத்தை உண்டுபண்ணுகின்றன. அவர் பீஷ்மரைக் கேட்டார் "இவ்வளவு பெரிய சாந்தி பர்வத்தைக் கேட்டபின்பும் என் மனம் அமைதியடையவில்லையே! என்ன செய்வேன்? மேலும்

ஏதாவது நல்ல விஷயத்தைச் சொல்ல வேண்டும்" என்று. பீஷ்மர் கௌதமியின் வரலாற்றைச் சொன்னார். தர்மபுத்திரருடைய மனம் நிம்மதியடைந்தது. அதன் சுருக்கம் வருமாறு—

ஒரு காட்டில், கௌதமி என்னும் பிராம்மண ஸ்த்ரீ இருந்தாள். அவளுக்கு ஒரே ஒரு பிள்ளை. ஒரு நாள் அந்தப் பிள்ளையைப் பாம்பு கடித்துவிட்டது. சிறுவன் உடனே செத்துப் போய்விட்டான். அர்ஜுனகன் என்னும் வேடனொருவன் இந்த கோரக் காட்சியைக் கண்டான். உடனே அந்தப் பாம்பைத் தேடிப்பிடித்து வன்மையான நரம்புகளால் அதைக் கட்டி எடுத்துக்கொண்டு வந்து அந்தப் பிராம்மணக் கிழவியின் முன் வைத்துவிட்டான். "இதோ உன் பிள்ளையைக் கொன்ற பாம்பு. இதை எப்படிக் கொல்ல வேண்டும்? நெருப்பில் போட்டுப் பொசுக்கட்டுமா? துண்டு துண்டாக வெட்டிப் போடட்டுமா? வேறு என்ன செய்ய வேண்டும்? சீக்கிரம் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

கௌதமி சொன்னாள் — "மூடனே! அந்தப் பாம்பை விட்டுவிடு. அதைக் கொல்லாதே. கொல்வதனால் என் பிள்ளை பிழைத்தெழமாட்டான். ஆனால் அதுவே காரணமாக நாம் நீண்ட நரகத்துக்குப் போகவேண்டி வரும்" என்று அவள் சொன்ன ச்லோகம்:—

हत्वा चैनं नामृतः स्यादयं मे जीवत्यस्मिन् कोऽत्ययः स्यादयं ते ।
अस्योत्सर्गे प्राणयुक्तस्य जन्तोः, मृत्योर्लोकं को नु गच्छेदनन्तम् ।

ஹத்வா சைநம் நாம்ருத: ஸ்யாதயம் மே
ஜீவத்யஸ்மிந் கோத்யய: ஸ்யாதயம் தே ।
அஸ்யோத்ஸர்கே ப்ராணயுக்தஸ்ய ஜந்தோ:,
ம்ருத்யோர் லோகம் கோ நு கச்சேதநந்தம் ॥

— மகாபாரதம், 13.1.23.

கௌதமிக்குத் தன் பிள்ளையைக் கொன்ற பாம்பைக் கொன்று வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் எண்ணம் உண்டாகவே இல்லை. தர்ம ஸூக்ஷ்மங்களில் கௌதம வம்சத்தாருக்குத் தெரியாதது ஏதேனுமுண்டோ? வேடனுக்கு இது புரியவில்லை.

அவன் சொன்னான் –"குணதோஷங்களை அறிந்த மூதாட்டியே! நீங்கள் சொல்லும் இந்த உபதேசங்கள் சாதாரணமான நிலைமைக்குப் பொருந்தும். இப்போது அஸாதாரணமான

நிலைமையில் நாம் இருக்கிறோம். உங்களுடைய பிள்ளையை இந்தப் பாம்பு அநியாயமாகக் கொன்றுவிட்டது. இதற்குப் பதிலாக இந்தப் பாம்பின் உயிரை வாங்கி இதைத் தண்டிக்க வேண்டும். இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் பொறுமையைக் கைவிடவேண்டும். இதைக் கொன்று வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும்" என்று.

கௌதமி சொன்னாள்—"இதைக் கொல்லக்கூடாது. என் பிள்ளைக்கு ஆயுள் முடிந்துவிட்டது; அவன் செத்துப் போனான். இதனால் எனக்குக் கொஞ்சமும் வருத்தமில்லை. என்றைக்கு இருந்தாலும் சாவு தவிர்க்க முடியாததுதானே? அதனால் இந்தப் பாம்பினிடமும் எனக்குக் கோபமில்லை. இதை விட்டுவிடு" என்று.

இவ்விருவருடைய வாதப்ரதிவாதங்கள் தொடர்ந்து நீடித்தன. இவ்வளவில், வேடனால் கட்டப்பட்டு மூச்சுத் திணறிக் கொண்டிருந்த பாம்பு மனுஷ்ய வார்த்தையில் பேச ஆரம்பித்தது. அது சொன்ன ச்லோகம்—

कोन्वर्जुनक दोषोऽत्र विद्यते मयि बालिश ।
अस्वतन्त्रं हि मां मृत्युर्विवशं यदचूचुदत् ॥
तस्यायं वचनाद्दष्टो न कोपेन न काम्यया ।
तस्य तत्किल्बिषं लुब्ध विद्यते यदि किल्बिषम् ॥

கோந்வர்ஜுநக! தோஷோத்ர வித்யதே மயி பாலிச ।
அஸ்வதந்த்ரம் ஹி மாம் ம்ருத்யுர் விவசம் யதசூசுதத் ॥
தஸ்யாயம் வசநாத் தஷ்டோ ந கோபேந ந காம்யயா ।
தஸ்ய தத் கில்பிஷம் லுப்த! வித்யதே யதி கில்பிஷம் ॥

— மகாபாரதம், 13.1.35,36.

இதன் கருத்து—"வேடனே! இவ் விஷயத்தில் என்னிடம் சிறிதும் தோஷமில்லை. நான் பராதீனனாக இந்தப் பையனைக் கடித்தேன் 'ம்ருத்யு' (மரணத்தை நிறைவேற்றும் தெய்வம்) என்னை இவ்வாறு தூண்டியது. எனக்கு இந்தப் பையனிடம் கோபமொன்றுமில்லை. இவனைக் கடித்துக் கொன்றதனால் எனக்கு ஆகவேண்டியதும் ஒன்றுமில்லை. இதில் ஏதாவது குற்றம் இருந்தால் அது அந்த மிருத்யுவையே சாரும்" என்பதாம்.

பாம்புக்கும் வேடனுக்கும் வாக்குவாதம் நீடித்தது. அப்பொழுது மிருத்யுதேவனே அங்கு வந்துவிட்டான். அவன் சொன்ன ச்லோகம்—

प्रचोदितोऽहं कालेन पन्नग त्वामचूचुदम् ।
विनाशहेतुर्नास्य त्वमहं न प्राणिनश्शिशोः ॥
यथा वायुर्जलधरान् विकर्षति ततस्ततः ।
तद्वज्जलदवत् सर्प कालस्याहं वशानुगः ॥

ப்ரசோதிதோஹம் காலேன பன்னக! த்வாமசூசுதம் ।
விநாசஹேதுர் நாஸ்ய த்வமஹம் ந ப்ராணின: சிசோ: ॥
யதா வாயுர் ஜலதரான் விகர்ஷதி ததஸ்தத: ।
தத்வஜ்ஜலதவத் ஸர்ப காலஸ்யாஹம் வசானுக: ॥

— மகாபாரதம், 13.1.50,51.

இதன் கருத்து—"பாம்பே! காலனால் தூண்டப்பட்டு நான் உன்னை ஏவினேன். இந்தப் பையன் இறந்ததற்கு நீயும் காரணமல்ல; நானும் காரணமல்ல; காலனே காரணமாவான். ஆகாயத்தில் நீர்கொண்ட மேகங்களைக் காற்று தன் இஷ்டப்படி இங்குமங்கும் இழுத்துச் செல்கிறதல்லவா? அப்படியே நானும் காலனுக்கு வசப்பட்டவன்" என்பதாம்.

பாம்புக்கும் மிருத்யுவுக்கும் வாக்குவாதம் நீடித்தது. அப்போது காலனே அங்கு வந்துவிட்டான். அவன் சொன்ன ச்லோகம்—

न ह्यहं, नाप्ययं मृत्युः, नायं लुब्धक पन्नगः ।
किल्बिषी जन्तुमरणे न वयं हि प्रयोजकाः ॥
अकरोद्यदयं कर्म तन्नोर्जुनक चोदकम् ।
विनाशहेतुर्नान्योऽस्य वध्यतेऽयं स्वकर्मणा ॥

ந ஹ்யஹம், நாப்யயம் ம்ருத்யு: நாயம் லுப்தக! பன்னக: ।
கில்பிஷீ ஜந்துமரணே ந வயம் ஹி ப்ரயோஜகா: ॥
அகரோத் யதயம் கர்ம தன்னோர்ஜுனக! சோதகம் ।
விநாசஹேதுர் நான்யோஸ்ய வத்யதேயம் ஸ்வகர்மணா ॥

— மகாபாரதம், 13.1.70,71.

இதன் கருத்து—"வேடனே! இந்தப் பிள்ளை செத்துப் போனதற்கு நானும் காரணமல்ல; மிருத்யுவும் காரணமல்ல; இந்தப் பாம்பும் காரணமல்ல. நாங்கள் இதற்குப் பொறுப்பாளிகளல்ல. எங்களை இவ்வாறு தூண்டிவிட்டது மற்றொன்று. அதுதான் இவன் செய்த கர்மம் (பழைய வினை). அதைத் தவிர இவனுடைய அழிவிற்குக் காரணம் வேறொன்றும் இல்லை. தன் வினையாலேயே இவன் செத்தான்" என்பதாம்.

இங்கே, பழவினைகளின் விசித்திரமான போக்கை விரிவாக எடுத்துரைக்கிறான் காலன். கௌதமி இதை எல்லாம் கேட்டுக் கொண்டே இருந்தாள். அவளுக்கு ஏற்கனவே உள்ளத்தில் இருந்த அமைதியும் தெளிவும் உறுதியாயின.

नैव कालो न भुजगो न मृत्युरिह कारणम् ।
स्वकर्मभिरयं बालः कालेन निधनं गतः ॥
मया च तत् कृतं कर्म येनायं मे मृतस्सुतः ।
यातु कालस्तथा मृत्युः, मुञ्चार्जुनक पन्नगम् ॥

நைவ காலோ ந புஜகோ ந ம்ருத்யுரிஹ காரணம் ।
ஸ்வகர்மபிரயம் பால: காலேந நிதனம் கத: ॥
மயா ச தத் க்ருதம் கர்ம யேனாயம் மே ம்ருதஸ்ஸுத: ।
யாது காலஸ்ததா ம்ருத்யு:, முஞ்சார்ஜுனக பன்னகம் ॥

— மகாபாரதம், 13.1.78,79.

இதன் கருத்து—"இதற்குக் காரணம் காலனும் அல்ல; பாம்பும் அல்ல; மிருத்யுவும் அல்ல. தன் கர்மத்தாலேயே இவன் செத்தான். நானும் கொடிய பாவம் செய்திருக்கிறேன். அதனால்தான் என் பிள்ளை செத்துப்போனான். காலனே! நீ இருப்பிடம் செல். மிருத்யுவே! நீயும் உன் இருப்பிடம் செல்வாயாக. அர்ஜுனக! பாம்பை அவிழ்த்து விடு" என்பதாம்.

தன் அருமைப் புதல்வனை அநியாயமாகப் பறிகொடுத்த பரிதாபமான நிலையிலும் சிறிதும் மனம் கலங்காத கௌதமியின் உதாரணத்தை பீஷ்மர் தர்மபுத்திரருக்கு எடுத்துக் காட்டினார். பாரதப் போரில் நடந்த விஷயங்கள் யாவும் அவரவர் வினைப்பயனாக நடந்தன. வேறு யாருக்கும் அவற்றில் சம்பந்தமில்லை என்னும்

அசைக்க முடியாத உண்மையை உணர்ந்து மன அமைதியுடன் இருக்குமாறு கிழவர் உபதேசித்தார்.

इत्येतद्वचनं श्रुत्वा बभूव विगतज्वरः ।
युधिष्ठिरो महातेजाः पप्रच्छेदं च धर्मवित् ॥

இத்யேதத் வசனம் ச்ருத்வா பபூவ விகதஜ்வர: ।
யுதிஷ்டிரோ மஹாதேஜா: பப்ரச்சேதம் ச தர்மவித் :॥

— மகாபாரதம், 13.1.83.

இதன் கருத்து—"கௌதமியின் உதாரணத்துடன் பீஷ்மர் அருளிய உபதேச வார்த்தைகளைக் கேட்டு, மகாதேஜஸ்வியான தர்மபுத்திரர் துயரம் நீங்கப்பெற்றார்" என்பதாம்.

கௌதம வம்சத்தில் பிறந்தவர்கள் ஆணாயினும் பெண்ணாயினும் ஜ்ஞாந அநுஷ்டானங்களில் சிறந்து விளங்குவர். இதிஹாஸ புராணங்களில் இவர்களுடைய புண்ணியமான வரலாறு, மகான்களால் அடிக்கடி எடுத்துக்காட்டப் பெறுகிறது. கௌதமர், கௌதமி என்னும் பெயர்கள் இந்த வம்சஸ்தர்களுக்குப் பொதுவாகவே வழங்கப் பெறுகின்றன. அவர்களுக்குத் தனித் தனியாக பெயர்கள் இருந்திருக்கக்கூடும். ஆனால் அவை இதிஹாஸ புராணங்களில் பிரித்துக் காட்டப்பெறவில்லை. தமது குலமுதல்வராகிய கௌதமருடைய தொடர்பைக் காட்டும்வண்ணம் அதே பெயரையே இவர்கள் எல்லாரும் வைத்துக் கொண்டுவிட்டார்கள் போலும்.

## கௌதம புத்தர்

புத்த மதத்தின் பிரவர்த்தகரான மூலபுருஷர் புத்தர் என்றே அனைவராலும் வழங்கப்பெறுவார். இவருடைய மதம் பௌத்த மதம், புத்தமதம் என்று வழங்கப்பெறும். இந்த மதத்தைச் சார்ந்தவர்கள் பௌத்தர்கள் என்றே வழங்கப் பெறுவர். இது யாவரும் அறிந்ததே. ஆனால் இவர் கௌதமருடைய வம்சத்தில் அவதரித்தவர் என்பது இவருடைய மற்றொரு பெயராகிய கௌதமர் என்பதனால் அறியப்பெறுகிறது. 'கௌதம்ச் சார்க்கபந்துச்ச மாயாதேவீஸுதச்ச ஸ:' என்று அமரகோசம் இதை வெளியிடுகிறது. இதை அடியொற்றியே கௌதம புத்தர் என்றும் இவரைக் குறிப்பிடுவதுண்டு.

புத்தர் பிறந்தது க்ஷத்திரிய குலம். கௌதமர் பிராம்மணராகிய ரிஷி. ஆனாலும் புத்தர் கௌதமராகக் குறிப்பிடப் பெறுவதில் ஏதோ உண்மை இல்லாமலில்லை. புத்தருடைய குடியில் கௌதமர் புரோகிதராக இருந்திருக்கக்கூடும். புரோகிதருடைய கோத்திரத்தையே பழங்காலத்து க்ஷத்திரியர்கள் வைத்துக் கொள்வது வழக்கத்தில் இருந்தது. அந்த ரீதியிலும், கௌதம வம்சத்தாரின் பரம்பரையான வழக்கப்படியும் இவருக்கு, கௌதமர் என்றே பெயர் தோன்றியிருக்கக்கூடும். கருணாமூர்த்தியான இவருடைய உபதேசம் உலகத்தின் பிரம்மாண்டமான பகுதியில் வெகு வேகமாகப் பரவி இன்றளவும் நிலைத்து நிற்கிறது. எவ்வளவு மேதாவிகள் இவரது மதத்தின் மேல் கண்டனங்கள் எழுதியிருக்கிறார்கள்? அவ்வளவுக்கும் திறமையுடன் மறுப்பு நூல்கள் இவரது சிஷ்யர்களால் அவ்வப்போது வெளியிடப்பெற்று வந்திருக்கின்றன. தர்க்கசாஸ்திரமே பௌத்தர்களால்தான் ஓங்கி வளர்ந்தது.

மகாவீரரும் கௌதமஸ்வாமீ (கௌதமருடைய சிஷ்யர்) என்றே வழங்கப்பெறுகிறார். கௌதமேச்வர தீர்த்தம் என்றே ஒரு புண்ணிய தீர்த்தத்தின் பெயர் உள்ளது. பிரசித்தி பெற்ற கோதாவரி நதி, கௌதமருடைய மகளாம். இதைக் காட்டும் வகையில், 'கௌதமஸம்பவா' என்ற பெயர் அந்த நதிக்கு உள்ளது. இதிஹாஸ புராணங்களில் கௌதமருடைய வரலாறு விரிவாக இடம் பெற்றுள்ளது. அந்த கௌதமர்கள் எல்லாரும் மூலபுருஷரா அல்லது அவருடைய வம்சத்தில் உதித்தவர்களா என்பது திட்டமாகக் கூற முடியாமலிருக்கிறது. புனிதமான கௌதமருடைய சரித்திரத்தை இவ்வளவில் முடித்துக் கொள்வோம்.

# பரத்வாஜர்

भरद्वाजो ह त्रिभिरायुर्भिर्ब्रह्मचर्यमुवास । तँ ह जीर्णिँ स्थविरँ शयानम् । इन्द्र उपव्रज्योवाच । भरद्वाज, यत् ते चतुर्थमायुर्दद्याम् । किमेनेन कुर्या इति । ब्रह्मचर्यमेवैनेन चरेयमिति होवाच ।

— காடகம், 1.11.3.

பரத்வாஜருடைய பெருமையை வேதம் இப்படி எடுத்துரைக்கிறது. பரத்வாஜ மகரிஷி மூன்று ஆயுட்காலம் தொடர்ந்து வேதாத்யயனமே பண்ணிக்கொண்டிருந்தார். உடம்பெல்லாம் தளர்ந்து வயது முதிர்ந்து படுத்திருந்த அவரை அணுகி இந்திரன், "பரத்வாஜரே, உமக்கு நாலாவது ஆயுட்காலத்தையும் கொடுப்பேனாகில் அதில் என்ன செய்வீர்?" என்று கேட்டான்.

"வேதாத்யயனத்தையேதான் இதிலும் செய்வேன்" என்றார் பரத்வாஜர்.

மூன்று பெரிய மலைகளைத் தெளிவாகத் தெரியாததுபோல் அவருக்குக் காண்பித்தான் இந்திரன். அவற்றுள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒவ்வொரு பிடி மண் எடுத்தான். "பரத்வாஜரே, இதோ இந்த மலைகளைப் பாரும். வேதங்களே இவை. வேதங்கள் எல்லையற்றவை; அளவிட முடியாதவை. இந்த மூன்று பிடியளவுதான் நீர் உமது மூன்று ஆயுட்காலத்திலும் அத்யயனம் பண்ணிக் கற்ற வேதத்தின் பகுதி. மற்றது கற்கப்படாத பகுதியே. இங்கே வாரும். எல்லா வித்தைகளினுடையவும் ஸாரமான ஒன்றை உமக்குச் சொல்லுகிறேன். இதை அறிந்துகொள்ளும்" என்று கூறி, அவன் அவருக்கு ஸாவித்ராக்கினியைச் சொல்லிக் கொடுத்தான். அதை அறிந்து அவர் அமரராகி ஸ்வர்கலோகத்தை அடைந்தார் என்பது கதை.

பரத்வாஜ மகரிஷிக்கு வேதங்களை அத்யயனம் பண்ணுவதில் எவ்வளவு ஆவல் இருந்தது என்பதை இதிலிருந்து அறியலாம். இந்தக் கதையில் மற்றொரு விசேஷமும் காண்கிறது. மூன்று ஆயுட்காலம் வேதாத்யயனம் பண்ணினதாகக் கூறுவதனால், மூன்று

வேதங்களையும் முறையே ஒவ்வொன்றுக்கும் நூறு நூறு வருஷமாகக் கணக்கிட்டு அத்தியயனம் பண்ணினுர் என்பதாகவும் கொள்ளலாம். 'த்வாதச வர்ஷாண்யேகவேதே ப்ரஹ்மசர்யம் க்ரஹுந்தம் வா' என்பது கௌதம தர்மஸூத்ரம். ஒவ்வொரு வேதத்துக்கும் அத்யயன காலம் பன்னிரண்டு வருஷங்கள். இப்படிச் செய்ய முடியாவிட்டால், நன்ருக மனத்தில் பதியும் வரையில் அத்தியயன காலம் (ஒவ்வொரு வேதத்திலும்) வைத்துக் கொள்ளலாம். ஒவ்வொருவருடைய புத்திபலம் ஒவ்வொரு விதமாக இருக்கும். பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பே சிலர் நன்ருகக் கற்றுக் கொண்டுவிடுவர். சிலருக்கு அதிக வருஷங்கள் ஆகவும் கூடும். இந்த வாக்கியம் இரண்டையும் அநுமதிக்கிறது. மூன்று வேதங்களையும் முற்றும் அத்யயனம் பண்ணுவது சாதாரணமாக ஒவ்வொருவருக்கும் கடமையாக இருந்த காலம் அது. அதில்தான் பரத்வாஜரும் வேதாத்யயனம் செய்திருக்கிருர். பிறகு வேதவ்யாஸர், வேதங்களை மூன்ருகப் பிரித்து சாகாபேதங்களை வகுத்துக் கொடுத்துவிட்டபடியால் வேதாத்யயனத்தில் வ்யவஸ்தை ஏற்பட்டு விட்டது.

'யோநதீத்ய த்விஜோ வேதாந் அந்யத்ர குருதே ச்ரமம்' என்னும் மநு வாக்கியத்திலும் 'வேதாந்' என்று பஹு வசனம் இடம் பெற்றுள்ளது. அதனுல்தான் இப்போதும் பாரத்வாஜ கோத்திரக்காரர்கள் ரிக் யஜுஸ் ஸாம வேதங்கள் மூன்றிலும் காண்கின்றனர். தங்களது கோத்ர ப்ரவர்த்தகரான மகரிஷி மூன்று வேதங்களிலும் பாரங்கதராக இருந்ததனுல், பிற்காலத்தில் ஏற்பட்ட வேதவ்யவஸ்தையில் ஒவ்வொருவர் ஒவ்வொரு சாகையில் நிலைநின்றுவிட்டனர் என்னும் உண்மையையே இது எடுத்துக்காட்டுகிறது.

ராமாயணம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த பெருமையும் பரத்வாஜ முனிவருக்கு உண்டு. இவர் தமது நீண்ட ஆயுட்காலத்தில் பல மகரிஷிகளிடம் சிஷ்யராக இருந்து பற்பல விஷயங்களைக் கற்றிருக்கிருர். வால்மீகி முனிவரிடம் இவர் சிஷ்யராக இருந்த காலத்தில்தான் ராமாயணம் தோன்றியது.

நடுப்பகல் வேளை. ஜன ஸஞ்சாரம் இல்லாத நடுக்காடு. வால்மீகி முனிவரும் அவருடைய சிஷ்யரான பரத்வாஜ முனிவரும் மாத்யாஹ்நிக ஸ்நானத்துக்காகத் தமஸா என்னும் ஆற்றின் கரையை

அடைந்தனர். வால்மீகி முனிவர், "பரத்வாஜரே, தமஸா நதியின் தெளிவான தீர்த்தத்தைப் பாரும். எவ்வளவு அழகாக இருக்கிறது! நல்லோர்களின் மனம்போல் நிர்மலமாக இந்தத் தீர்த்தம் காண்கிறது, பாரும்" என்கிறார். அடுத்தாற்போல் ராமாயணம் என்னும் இனிய கவிதாப்ரவாஹம் தோன்றப் போவதற்கு முன்னோடியாக இந்தக் குட்டிக் கவிதை முனிவரின் உள்ளத்தில் உதயமாயிற்று; பெருவெள்ளம் பின்னால் வந்துகொண்டிருப்பதைச் சிறுவாய்க்காலாக ஊறும் ஆற்றுநீர் உணர்த்துவதுபோல. இந்த நிகழ்ச்சிக்கு ஸாக்ஷியாக இருந்தவர் பரத்வாஜ முனிவரே. தம் ஆசார்யரான வால்மீகி முனிவருக்கு ஸகல விதத்திலும் சரிசமமாகவே பரத்வாஜ முனிவரும் இருந்திருக்கிறார். அதனால் தான் சிறந்த கவிதை தம் மனத்தில் தோன்றியவுடன் பரத்வாஜரை விளித்து அதைப் பகிர்ந்துகொள்கிறார் வால்மீகி. இனிய பொருளைத் தனிமையாக அநுபவிப்பது தகாத செயல் என்பது மட்டுமல்ல; ஸாத்தியமில்லாததுங்கூட. ரஸிகனை துணைவன் அருகில் இருந்துவிட்டால் கேட்க வேண்டுமா?

अकर्दममिदं तीर्थं भरद्वाज निशामय ।
रमणीयं प्रसन्नाम्बु सन्मनुष्यमनो यथा ॥

அகர்தமமிதம் தீர்த்தம் பரத்வாஜ நிசாமய ।
ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா ॥

— ராமாயணம், 1.2.5.

என்னும் ச்லோகம், ராமாயணத்தின் ஸ்ருஷ்டி கர்த்தாவான வால்மீகி முனிவர் பரத்வாஜரைப் பார்த்து, ராமாயணம் தோன்றுவதற்குச் சற்று முன்பு அருளிச்செய்தது. இதைத் தொடர்ந்து ராமாயணம் தோன்றியது. ஆகவே பரத்வாஜ முனிவர் ராமாயணம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவர் என்பதனாலும் போற்றத் தகுந்தவராகிறார்.

## பொருத்தமான பெயர்

ரிக்வேதத்தில் வரும் பல ஸூக்தங்களுக்கு பரத்வாஜர் ரிஷியாக விளங்குகிறார். ஸாமவேதத்தில் இவர் பெயரால் ஒரு ஸாமம் இன்றும் வழங்குகிறது. யஜுர்வேதத்தில் இவரைப்பற்றிக் கூறும் பகுதிதான் தொடக்கத்திலேயே காண்பிக்கப் பெற்றுள்ளது. இவர்

பெயரே இவருடைய வரலாற்றை உணர்த்த வல்லதாக அமைந்துள்ளது. இதைச் சிறிது விளக்குவோம். 'பரத்வாஜ:' என்னும் பெயர் அரிய பெரிய கருத்துக்கள் பலவற்றை உணர்த்தவல்லது. இந்தச் சொல்லே, 'பரத்-வாஜ:' என்று பிரித்துப் பொருள் கூறுவர். இதில் முதற் பகுதியான 'பரத்' என்பது 'பரிக்கிறவன், சுமக்கிறவன், தாங்குகிறவன்' என்னும் பொருளுள்ளது. அவ்வாறு சுமக்கப்படும் பொருள் 'வாஜ:' என்னும் இரண்டாம் பகுதியால் சொல்லப்பெறுகிறது. அதனுல் பரத்வாஜ: என்னும் முழுச் சொல், 'வாஜத்தை பரிப்பவர்' என்னும் கருத்தை உள்ளடக்கியதாகிறது. வாஜம் என்ருல் என்ன? அதைத் தெரிந்துகொண்டால்தானே இது நன்ருக விளங்கும்?

வாஜம் என்ற சொல்லுக்குப் பல பொருள் உண்டு. ஓஜஸ் என்னும் சொல்லே வாஜம் என்ற வடிவம் கொண்டது. உடல் வலிமையும் உடலின் பொலிவும் வாஜம் எனப்பெறும். இவற்றை பரிப்பதனுல் இவர் பரத்வாஜர் ஆனுர். வலிமை மிக்கதாக இருப்பதனுல் 'வலியன்' என்று பெயர் பெற்ற கருநிறப் பறவைக்கும் பரத்வாஜம் என்ற பெயர் வழங்கிவருகிறது. இந்த வாஜம் என்னும் சொல்லுக்குச் சிறப்பான பொருள்கள் பல உண்டு. வாஜம்-அன்னம் (சோறு), வேகம், செல்வம், உணவு, அரிசி, ஜலம், நெய், வெகுமானம், யாகத்தில் ஹோமம் செய்வதற்கான ஹவிஸ். இப்படி இந்தச் சொல்லுக்குப் பொருள்கள் உண்டு. இவற்றையெல்லாம் பரிப்பதனுல் பரத்வாஜர் என்று இவருக்குப் பெயர் வந்தது. ஒரு குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறவனைக் 'குடும்ப பரணம் பண்ணுகிருன், குடும்பத்தைப் பரிக்கிருன்' என்று சொல்லுவதுண்டு. அதாவது குடும்பத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டவன் என்றபடி. நமது ரக்ஷணத்துக்கான பொறுப்பு 'பரம்' எனப்பெறும். இதைப் பகவானிடத்தில் வைப்பதையே 'பரந்யாஸம்' என்கிருேம். இவ் வழியிலும் இவர் பரத்வாஜர் ஆனுர்.

भरे सुतान् भरे शिष्यान् भरे देवान् भरे द्विजान् ।
भरे भार्यां भरद्वाजां भरद्वाजोऽस्मि शोभने ॥

பரே ஸுதாந் பரே சிஷ்யாந் பரே தேவாந் பரே த்விஜாந் ।
பரே பார்யாம் பரத்வாஜாம் பரத்வாஜோஸ்மி சோபநே ॥

என்பது மகாபாரத ச்லோகம். 'பிள்ளை, சிஷ்யர்கள், தேவர்கள்,

அந்தணர்கள், என் பெயரையே கொண்ட மனைவி இவ்வளவு பேர்களையும் நான் பரிக்கிறேன். அதனால் பரத்வாஜன் என்று அழைக்கப்பெறுகிறேன்' என்பது கருத்து.

ஸப்தரிஷிகளில் ஒருவராகவும் இவர் விளங்குகிறார். மகாபாரதக் கதையில், கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் வில் வித்தையைக் கற்பித்த புகழ்மிக்க த்ரோணாசாரியருக்கு பரத்வாஜர் என்ற பெயர் உண்டு. பரத்வாஜரின் வம்சத்தில் தோன்றியதனாலேயே துரோணர் இப்படி அழைக்கப்பெற்றார். பரத்வாஜரின் பெயரால் ஓர் ஆறு 'பரத்வாஜீ' என்று வழங்கப்பெறுகிறது. இவரது பெயரால் ஒரு தேசம் 'பாரத்வாஜம்' என்று வழங்கப்பெறுகிறது. பாணினி முனிவரின் அஷ்டாத்யாயீ ஸூத்ரம் (4.2.145) இவ் விஷயத்தைப் பேசுகிறது. வ்யாகரண சாஸ்திரத்தை இயற்றிய தொன்மையான முனிவர்கள் பலரையும் தம் அஷ்டாத்யாயீ ஸூத்ரங்களில் ஆங்காங்கே குறிப்பிடும் பாணினி மகரிஷி, 'ரிதோபாரத்வாஜஸ்ய' என்னும் ஸூத்ரத்தில், பாரத்வாஜருடைய கொள்கையை மதித்து விகல்பமாக அதை ஏற்றுக்கொள்கிறார். 'பாரத்வாஜநியமம்' என்று மிகவும் நுட்பமான இவ்விஷயம், வ்யாகரணம் பயிலுகிறவர்களால் இன்றும் பிரஸித்தமாகக் கூறப்பெறுவது யாவரும் அறிந்ததே.

மாதங்கள் பன்னிரண்டில் முதன்மையான சித்திரை மாதத்துக்கு 'வாஜம்' என்ற பெயர் வழங்குகிறது. இவ்வாறாக இந்த மகரிஷியினுடைய புனிதமான திருநாமம், ரிக்வேதம் முதலான நான்கு வேதங்களிலும், வ்யாகரணம் முதலிய வேதாங்கங்களிலும், இதிஹாஸ புராணங்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும் பரவலாகக் காண்கிறது.

जमदग्निर्भरद्वाजो विश्वामित्रात्रिगौतमाः ।
वसिष्ठकाश्यपागस्त्या मुनयो गोत्रकारिणः ॥

ஜமதக்நிர் பரத்வாஜோ விச்வாமித்ராத்ரிகௌதமா: ।
வஸிஷ்டகாச்யபாகஸ்த்யா முநயோ கோத்ரகாரிண: ॥

என்னும் மநு ஸ்ம்ருதி வசனம், கோத்திர ப்ரவர்த்தகர்களான குலமுதல்வர்களின் வரிசையில் இந்த முனிவரையும் ஒருவராக எடுத்துக் கூறுகிறது.

शाण्डिल्यः काश्यपश्चैव वात्स्यः सावर्णिकस्तथा ।
भरद्वाजो गौतमश्च सौकालीनस्तथापरः ॥

சாண்டில்ய: காச்யபச்சைவ
வாத்ஸ்ய: ஸாவர்ணிகஸ் ததா ।
பரத்வாஜோ கௌதமச்ச
ஸௌகாலீநஸ் ததாபர: ॥

என்ற மநு வசனமும் இவரைப் புகழ்கிறது.

ரிக்வேதத்தில் 'பரத்வாஜ' பதம் பல இடங்களில் வருகிறது. அங்கெல்லாம், 'பரத்-வாஜ:' என்றே இந்தச் சொல் இரண்டாகப் பிரித்து (வேஷ்டனம் சொல்லப்பெற்று) ஓதப்பெறுகிறது. 'வாஜத்தை பரிப்பவர்' என்னும் பொருளேதான் இந்தப் பதத்துக்கு பாஷ்யங்களில் ஸம்ப்ரதாயமாகத் தரப்படுகிறது. ஒன்று காட்டுவோம் இங்கு—

यदयातं दिवोदासाय वर्तिर्भरद्वाजायाश्विनाह्वयन्ता ।

— ரிக்வேதம், 1.116.88.

இது அஸ்விநிதேவர்களைப் பற்றின மந்த்ரம். இதில் 'பரத்வாஜாய' என்ற சொல் உள்ளது. இங்கே இது ஒருவருடைய பெயராக இல்லாமல், திவோதாஸர் என்பவருக்கு விசேஷணமாக நிற்கிறது. 'भरद्वाजाय संभ्रियमाणहविर्लक्षणान्नाय यजमानाय' ('பரத்வாஜாய ஸம்ப்ரியமாணஹவிர் லக்ஷணாந்நாய யஜமாநாய') என்பது ஸாயணருடைய பாஷ்யம். மேலும், 'பரத்வாஜ:, பரத்வாஜம், பரத்வாஜா:, பரத்வாஜாந், பரத்வாஜே, பரத்வாஜேஷு' என்று இப்படியெல்லாம் பல விபக்திகளிலும் வசனங்களிலும் இந்தச் சொல் வருகிறது. எல்லா இடங்களிலும் 'பரத்-வாஜ' என்றே பிரித்துப் பதபாடம் அநாதியாக ஓதப்பெற்று வருகிறது.

இவ்வாறே இந்த வாஜ சப்தத்தை, 'பரத்' என்பதனோடு கூட்டியதேபோல் வேறு பதங்களோடும் இணைத்துப் பேசுகிறது ரிக்வேதம். புரு-வாஜ, சத-வாஜ, ஸநத்-வாஜ, ஸஹஸ்ர-வாஜ, துவி-வாஜ, சித்ர-வாஜ என்று பல இடங்களிலும் வருகிறது.

யஜுர்வேதத்தில், தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாம் காண்டம், மூன்றுவது ப்ரச்னம், மூன்றுவது அநுவாகம் முடிவில் ஒரு யாகம் சொல்லப்பெறுகிறது. 'ப்ராஹ்மணஸ்பத்யம்

ஏகாதசகபாலம் நிர்வபேத் க்ராமகாம:' என்பது யாகத்தைச் சொல்லும் இடம். இதற்கு வேண்டிய முக்கியமான மந்த்ரங்கள் இரண்டு (புரோநுவாக்யா, யாஜ்யா) இந்த ப்ரச்னத்திலேயே 14-ஆம் அநுவாகத்தில் ஓதப்பெறுகின்றன.

स इज्जनेन स विशा स जन्मना स पुत्रैर्वाजं भरते धना नृभिः ।

என்பது ஒன்று. இங்கு, 'பரத்வாஜ' என்னும் பதம் 'வாஜம் பரதே' என்று மாற்று முறையில் ஓதப் பெறுவதைக் கவனிக்க வேண்டும். 'வாஜத்தை பரிக்கிறுன்' என்பதுதான் இவ்விடத்திலும் இந்தச் சொல்லுக்குப் பொருள். ஆதலால் 'பரத்வாஜ' என்னும் சொல் வேதங்களில் வாஜத்தை பரிப்பவர் என்னும் கருத்திலேயே தோன்றி இந்த முனிவருக்குப் பெயராக அமைந்தது என்பதை மேற்கூறிய பல வேத வாக்கியங்களிஞல் நன்கு உணரலாம்.

## புராண ப்ரஸித்தி

புராணங்களில் பரத்வாஜ என்னும் பதம் முன்சொன்ன வழியில் அமையவில்லை. பர-த்வாஜ என்று வேறு விதமாகப் பதம் பிரித்து இந்தப் பெயருக்குப் பொருள் கூறுப்பெறுகிறது. 'பர:' என்பது ஒரு தனிப்பெயர் இவருக்கு. அப்படியே 'த்வாஜ:' என்பதும் தனியான பெயரே இவருக்கு. இவ்விரண்டையும் இணைத்து ஒரே முழுப்பெயராகச் செய்து காட்டுகின்றனர் பௌராணிகர்கள். 'பரஸ்சாஸௌ த்வாஜச்ச பரத்வாஜ:' என்று கர்மதாரய ஸமாஸத்தில் இந்தச் சொல் உருவாக்கப் பெறுகிறது. முற்பகுதியான 'பர:' என்பதற்கு, 'பரிக்கப்பட்டவர்' என்று பொருள். இரண்டாம் பாகமான 'த்வாஜ:' என்பதற்கு, 'இருவருக்குப் பிறந்தவர்' என்று பொருள். த்வி-இருவர். ஜ: - பிறந்தவன். இவ்வாறுஞல். 'த்விஜ:' என்று ஆகவேண்டும். அது பொதுவாக அந்தணர்க்கும் பற்களுக்கும் பறவைகளுக்கும் பெயர். இரு முறை பிறத்தல் என்பது அந்தச் சொல்லின் பொருள். இங்கு அப்படி அல்ல. 'த்வாப்யாம் ஜாயதே' என்று கொண்டு, இந்த முனிவருக்குப் பெயராக, 'பரத்வாஜ:' என்று வ்யாகரண விதிகளின்படி இந்தச் சொல் உருவாக்கப் பெறுகிறது. 'இருவருக்குப் பிறந்தவர், பரிக்கப்பட்டவர்' என்னும் கருத்துக்களைத் தரும் இந்தச் சொல், இவரது சரித்திரத்தையே சுருங்கக் கூறிவிடுகிறது.

**தீர்க்கதமஸ்**

ப்ருஹஸ்பதி என்பவர் தேவர்களுக்கெல்லாம் ஆசார்யர் என்பது ப்ரஸித்தம். அவருக்கு மூத்த ஸஹோதரர் ஒருவர் இருந்தார். அவருடைய பெயர் உசத்யர். அவருடைய மனைவிக்கு மமதா என்று பெயர். அவள் பூர்ண கர்பிணியாக இருந்தபொழுது ப்ருஹஸ்பதி அவளைக் கூடினார். அதனால் பிறந்த குழந்தையே பரத்வாஜர் என்று பெயர் பெற்றது. பிறகு உலகிலுள்ளோர் அனைவரும் வணங்கும்படியான பரத்வாஜ மகரிஷியாகவும் அந்தக் குழந்தையே பரிணமித்தது. ஏற்கெனவே கர்பத்தில் ஒரு குழந்தை வளர்ந்துகொண்டிருந்தது. அது பிரஸவமாகி வெளிவரவில்லை. அந்த நிலைமையில் ப்ருஹஸ்பதி கர்பாதானம் பண்ணப் போனார். இதனால் கர்பத்தில் இரண்டு குழந்தைகள் சேர்ந்தாற்போல் வஸிக்கும்படி நேரிடும் அல்லவா? அப்போது தாராளமாக வஸிப்பதற்கு இடம் கிடைக்காது. இதை ஏற்கெனவே கர்பத்தில் இருந்த குழந்தை நன்கு உணர்ந்துகொண்டது. தான் கர்பவாஸம் செய்யும்பொழுது தன் தாயுடன் மற்றொரு புருஷன் கூடுவதை அது விரும்பவில்லை. ஆனால் சின்னஞ்சிறு சிசுவாகிய அது, பெரியோர்களின் செயலை எவ்வாறு தடுக்க முடியும்? எதிர்பார்த்தபடி நடந்துவிட்டது. ப்ருஹஸ்பதியின் வீர்யம் கர்பகோசத்தில் தங்காதவாறு தன் கால்களால் உதைத்து வெளியில் தள்ளிவிட்டதாம் அந்தச் சிசு. அப்படி வெளியே தள்ளப்பட்டாலும் ப்ருஹஸ்பதியின் மஹிமையாலும், ஒரு க்ஷணகாலம் கர்ப ஸம்பந்தம் ஏற்பட்டபடியாலும் அது ஊனமில்லாத நல்ல குழந்தையாகவே விழுந்ததாம். ப்ருஹஸ்பதியும் மமதையும் பிரத்யக்ஷமாகவே இவ்வுண்மையைக் கண்டனர். ப்ருஹஸ்பதிக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. கர்பத்தில் இருந்த சிசு, அவரது பயங்கரமான சாபத்துக்கு இலக்காகியது.

"கர்பவாஸம் க்ரமமாகப் பூர்த்தியாகவில்லை. வெளியுலகை இன்னும் எட்டிப் பார்க்கவில்லை. இந்த நிலையிலேயே இவ்வளவு அதிகப்பிரஸங்கியான நீ, ஆயுட்காலம் முழுவதும் இரண்டு கண்ணும் பார்வையிழந்த பிறவிக் குருடனாவாய்" என்று கடுமையாக அந்தச் சிசுவைச் சபித்தார் ப்ருஹஸ்பதி. மஹான்களுடைய வார்த்தை மாறுபடுமா? அவ்வாறே நடந்தது. இரண்டு கண்ணும் தெரியாமலே

பிறவிக் குருடனுக மஹாஜ்ஞானியாகிய அந்தக் குழந்தை பிறந்தது. அது பிறந்த வரலாற்றைத் தெரிவிக்கும் வகையிலேயே அதற்கு, 'தீர்க்கதமா:' என்று பெயரிட்டார்கள். 'நீண்ட இருள்' என்பது பெயரின் பொருள். கண்பார்வை இல்லாதவனுக்கு முடிவில்லாத இருள் சூழ்ந்ததாகவே உலகம் இருக்கும் அல்லவா? பாவம்! அதுவே இந்தக் குழந்தைக்கு இயல்பான பெயராக அமைந்துவிட்டது. இவ்வளவு துரதிர்ஷ்டசாலியான இந்தக் குழந்தை, பிறகு தோன்றியது. இதை இவ்வளவில் விட்டு முன் பிறந்த குழந்தையின் கதையைக் கவனிப்போம்.

## பரத்வாஜர்

இவ்வாறுகக் கோபாவேசத்துடன் சாபம்போட்டுவிட்டு வந்த வழியே திரும்பினுர் ப்ருஹஸ்பதி. போகும்போது மமதையைப் பார்த்து, 'மூடே, பர, த்வாஜம் இமம்' என்று சொல்லிவிட்டுப் போனுர். "பேதையே, நம் இருவருக்கும் பிறந்த இந்தக் குழந்தையை நீயே பரிக்க வேண்டும் (எடுத்து வளர்த்துக் காப்பாற்ற வேண்டும்)" என்று சொல்லிவிட்டுப் போனுர். அவர் போனபோது மமதையும் அவரைப் பார்த்து, "ப்ருஹஸ்பதியே, நம் இருவருக்கும் பிறந்த இந்தக் குழந்தையை நீரே பரிக்க வேண்டும் (எடுத்து வளர்க்க வேண்டும்). பர த்வாஜம் ப்ருஹஸ்பதே" என்று சொன்னுள். பாவம்! புருஷத் துணை இல்லாமல் வயிற்றில் ஒன்றும் கையில் ஒன்றுமாக இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு அவள் என்ன செய்வாள்? இதைச் சொல்லி அவளும் சென்றுவிட்டாள்.

பிறந்த குழந்தை அங்கேயே கிடக்கிறது, கேட்பார் இல்லாமல். எவ்வளவு துர்ப்பாக்கியமான குழந்தை! தாய் தந்தையருக்கே இதன்மேல் பாசம் இல்லை என்றுல் வேறு யார் கவனிப்பார்கள்? தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும். தெய்வமேதான் அந்தக் குழந்தையைக் காப்பாற்றியது. மருத் என்னும் தேவர்கள் மகாதேஜஸ்வியான அந்தக் குழந்தையைக் கண்டெடுத்துக் காப்பாற்றினர். தற்செயலாக இந்த நிகழ்ச்சி நடந்தது.

ஒருவன் தனக்குப் பிள்ளை இல்லாத குறை நீங்குவதற்காக 'மருத்' என்னும் தேவர்களை உத்தேசித்து ஸோமயாகம் செய்தான். ஆனுல் அவனுடைய ஆசை பூர்த்தியாகவில்லை. அதாவது

அவனுக்குப் பிள்ளை பிறக்கவில்லை. மருத்துக்களுக்கு ஒரு சங்கடமான நிலைமை உண்டாகிவிட்டது. எப்படியாவது தம்மை உத்தேசித்து யாகம் பண்ணினவனுக்குக் குழந்தையைத் தந்தாக வேண்டும். இதற்காக அவர்கள் அலைந்து கொண்டிருக்கையில்தான் மேற்கூறிய சம்பவம் நிகழ்ந்தது. கேட்பாரற்றுக் கிடந்த இந்தக் குழந்தையை, யாகம் செய்தும் பயனில்லாமல் ஏங்கி நின்ற யஜமானனுக்குக் கொடுத்து விட்டனர். அவனுக்கும் திருப்தி உண்டாயிற்று. 'குழந்தையின் பெயர் என்ன?' என்று கேட்டால், பெயர் வைப்பது பிதாவின் காரியம் அல்லவா?

'ஏகாதசேஹநி பிதா நாம குர்யாத். பதினோறாம் நாள் சிசுவுக்குப் பிதா பெயர் வைக்கவேண்டும்' என்பது சாஸ்திரம். இங்கேதான் சிசு ஜனித்தவுடனே மாதா பிதாக்கள் இருவரும் அநாதையாக விட்டு அகன்றுவிட்டனரே. மருத்துக்களுக்கு ஒரு யோசனை; "தாய் தந்தையர் இருவரும் பிரிந்து சென்ற போது குழந்தையைப்பற்றி ஏதோ பேசிக்கொண்டார்களே! அதையே அதற்குப் பெயராக்கிவிடுவோமே" என்றனர். முதலில் பிதா சொல்லி, பின்பு மாதாவும் அநுவதித்த 'பரத்வாஜ' என்பதையே அந்தக் குழந்தைக்குப் பெயராக வைத்தனர். நாமகரணம் ஒன்றுவது மாதாபிதாக்கள் செய்ததாக அமையட்டும் என்பது தேவர்களின் திருவுள்ளம் போலும். பிறகு இந்த விந்தையான நிகழ்ச்சியை ஒரு ச்லோகமாகவே அவர்கள் பாடினர்.

मूढे भर द्वाजमिमं, भर द्वाजं बृहस्पते ।
यातौ यदुक्त्वा पितरौ भरद्वाजस्ततस्त्वयम् ॥

மூடே பர த்வாஜமிமம், பர த்வாஜம் ப்ருஹஸ்பதே ।
யாதௌ யதுக்த்வா பிதரௌ பரத்வாஜஸ் ததஸ்த்வயம் ॥

என்பதே அந்த ச்லோகம். இதன் கருத்தை முன்பே விளக்கியிருக்கிறோம். பிறகு அந்தக் குழந்தை வளர்ந்து பெரிய மகரிஷியாகிவிட்டது. இது புராணங்களின் விவரணம்.

### தர்ம வ்யதிக்ரமம்

இங்கு அவசியமான ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். 'இவ்வளவு கேவலமாகவும் இழிவாகவும் ஒரு நிகழ்ச்சி நடந்திருக்க, அந்தக் குழந்தையை உலகம் போற்றும் உயர்ந்த ஸ்தானத்தில்

வைத்துப் பூஜிப்பது சிறிதும் பொருத்தமற்றதாக இல்லையா?' என்று தோன்றும். இதற்காகவே, 'ரிஷிமூலமும் நதிமூலமும் விசாரிக்கக் கூடாது' என்ற பழமொழி தோன்றி நிலவிவருகிறது. கங்கை, காவேரி முதலிய ஆறுகள் புனிதமானவை. அவற்றை நினைத்தாலும் வாயால் சொன்னாலும் சென்று நீராடினாலும் பெரும் புண்ணியம் உண்டு; பாவங்கள் தொலையும். பெருவெள்ளத்துடன் இவை நம் கண்ணெதிரில் பெருகி ஓடுகின்றன. பார்க்கப் பார்க்க ஆனந்தமாக இருக்கிறது. புனிதமான நம் பாரத நாட்டுக்கே இவை அலங்காரமாக அமைந்துள்ளன. ஆனால் இவை உற்பத்தியாகும் இடத்துக்குச் சென்று பார்ப்போமானால், இவ்வளவு பெருமைக்கும் கௌரவத்துக்கும் கொஞ்சங்கூடப் பொருத்தமில்லாமலே இருக்கும். மிகமிகச் சிறிய வாய்க்காலாக மூலஸ்தானத்தில் இவை தோற்றமளிக்கும். அலக்ஷ்யமாகக் காலால் தாண்டிவிடலாம். அதுவுங்கூடத் திட்டமாகக் கூற முடியாது. மலைகளில் குடைந்து புகுந்து மறைந்து வரும் போது, சில இடங்களில் தெரியும்; சில இடங்களில் தெரியாது. அதைக் காணும்போது, 'இதுவா அவ்வளவு பெரிய ஆறாகப் பரந்து விரிந்து பாய்கிறது? நம்பவே முடியவில்லையே!' என்று தோன்றும். ஆரம்பத்தில் சிறு வாய்க்காலாக இருந்தாலும், பின்பு பற்பல அருவிகளுடனும் சிற்றாறுகளுடனும் கூடி மிகப் பெரிய ஆறாக அவை மாறிவிடுகின்றன. ஆனால் முதல்முதலில் தோன்றிய ஆற்றின் பெயரையேதான் அதற்கு வழங்குகிறோம். அந்தப் பெயரில்தான் புனிதத்தன்மை பொதிந்துள்ளது.

அதுபோலவேதான் மகரிஷிகள் விஷயமும். ஆதிகாலத்தில் அவர்கள் பிறந்து வளர்ந்த வரலாறு சற்றுக் குறைபாடுள்ளதாகத் தோன்றினாலும் அதையே ஆதாரமாகக் கொண்டு அவர்களுடைய பெருமையை நாம் மதிப்பிடக்கூடாது. சிறந்த மகானுக்குத் தோன்றியதனாலும், ஸதாசார்ய கடாக்ஷத்தினாலும், உயர்ந்த ஜ்ஞாநாநுஷ்டானங்களினாலும், பகவத்பக்தியினாலும், கடுமையான தவத்தின் மகிமையாலும், சாதாரணமாக அனைவரும் புரிந்து வரும் தீய செயல்களை அறவே துறப்பதனாலும், நல்ல ஸஹவாஸ பலத்தினாலும், தூய்மையான ஏகாந்தமான அரண்யங்களில் வஸித்து வருவதனாலும், தம் க்ஷேமத்தைவிட உலக க்ஷேமத்தையே பெரிதாகக் கருதி அதற்காகவே திட்டமிட்டு உழைப்பதனாலும்,

இதற்கெல்லாம் அடிப்படையான மூலகாரணமாக நிற்கும் பகவத் ஸங்கல்பத்தினுலும் அவர்கள் உயர்ந்தவர்களாகின்றனர். இவை போன்ற உண்மைகளை மனத்தில் வாங்கிக் கொள்ளுமளவு பொறுமையில்லாதவர்களை உத்தேசித்தே, 'ரிஷிமூலம் நதிமூலம் விசாரிக்கக்கூடாது' என்னும் பழமொழி தோன்றியது. அதனுல் தோற்றத்தில் சில குறைபாடுகள் காணப்பட்டாலும் அவை அவர்களுடைய பெருமையைக் குறைத்துவிடமாட்டா.

இந்த விஷயத்தையே ஒரு கேள்வி பதில் மூலம் சாஸ்திரகாரர்கள் விளக்கிக் கூறியிருக்கின்றனர். பூர்வமீமாம்ஸையில் முதல் அத்தியாயம், மூன்றும் பாதம், சிஷ்டாசார ப்ராமாண்யம் பற்றின அதிகரணத்தில், குமாரிலபட்டர் வெகு அழகாக இதை விசாரித்திருக்கிருர். கௌதம தர்மஸூத்ரகாரர் தொடக்கத்திலேயே இதைத் தெளிவுபடுத்திவிடுகிருர் – 'வேதோகிலோ தர்மமூலம், தத்விதாம் ச ஸ்ம்ருதிசீலே. த்ருஷ்டோ தர்மவ்யதிக்ரமः, ஸாஹஸம் ச மஹதாம், அவரதௌர்பல்யாத்' என்பது அவருடைய ஸூத்ரங்களின் வரிசைக் கிரமம். "வேதம் முழுவதும் தர்மத்தின் மூலம், அதை அறிந்தவர்கள் இயற்றிய ஸ்ம்ருதிகளும், அவர்களது ஒழுக்கமும் (தர்மமூலம்)' என்பது, முதல் இரண்டு ஸூத்ரங்களின் கருத்து. 'பெரியோர்களும் தர்மத்தில் தவறியிருக்கின்றனர்; ஸாஹஸங்கள் புரிந்திருக்கின்றனர்' என்பது மூன்றுவது ஸூத்ரத்தின் கருத்து. 'பின்புள்ளார் துர்பலமானவர்கள் ஆதலால்' என்பது நாலாவது ஸூத்ரத்தின் பொருள். மகரிஷிகள் பற்பல அரிய செயல்களைச் செய்யும் சக்தி வாய்ந்தவர்கள். ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால் கடுமையாகப் பிராயச்சித்தம் செய்து அதைப் போக்கிக்கொள்வர். அத்தகைய சக்தி ஒன்றுமில்லாத பிற்காலத்தவர்கள், குற்றம் சொல்வதற்கு மட்டும் முன்வருவது தகாது என்பது கருத்து. பரத்வாஜர் விஷயத்திலும் மற்ற விஷயங்களிலும் இந்த நியாயத்தையே வாசகர்கள் அநுஸந்தித்துக் கொள்ள வேண்டும்.

## யமுனு தீரம்

பரத்வாஜர் ஸகல வேதங்களையும் கசடறக் கற்றுத் தேர்ந்து மகரிஷியாகிவிட்டார். இவர் வாழ்ந்த இடம்பற்றி ஊகித்துப் பார்ப்பதற்கு ஒரு வழி உண்டு. யமுனைக் கரையில் இவர் வாழ்ந்தார்

என்று கூற இடமுண்டு. மற்றவர்கள்போல் இவரும் ச்ரௌதஸூத்ரமும் க்ருஹ்யஸூத்ரமும் அருளிச்செய்திருக்கிறார். இவருடைய க்ருஹ்ய ஸூத்ரத்தில் ஸீமந்தோந்நயன ப்ரகரணத்தில் ஒரு ச்லோகம் உள்ளது.

सोम एव नो राजेत्याहुर्ब्राह्मणीः प्रजाः ।
विवृत्तचक्रा आसीनास्तीरेण यमुने तव ॥

என்பதுதான் அந்த ச்லோகம். அந்தணர்கள் ஸீமந்தம் பண்ணும்போது இந்த ச்லோகத்தைச் தவறாமல் சொல்லுவர். ஆனால் அவரவர் வஸிக்கும் இடத்துக்கு ஏற்றவாறு இதன் கடைசியில் சிறு மாறுதல் செய்யப்படும். தாங்கள் வஸிக்கும் ஊர் எந்த ஆற்றின் கரையில் இருக்கிறதோ அதன் பெயரை அமைத்துக்கொள்வர். அதாவது—'தீரேண காவேரி தவ, தீரேண கங்கே தவ, தீரேண க்ஷீரநதி தவ' என்று இவ்வாறாக மாறுதல் செய்துகொள்வர். இவ்வாறு செய்யும்படி சாஸ்த்ரகாரர்களே பணித்திருக்கின்றனர். இதைச் சொல்லிக் கொடுக்கும்போது, ஸூத்ரகாரர்கள் பொதுவாக, 'தீரேணஸௌ தவ' என்று கூறிவிடுவார்கள். இவர் அப்படிச் செய்யாமல், 'தீரேண யமுநே தவ' என்று திட்டமாகச் சொல்வதனால், இவர் யமுனைக் கரையில் வஸித்து வந்தவராக இருக்கலாம் என்பது ஊகம்.

மகரிஷிகள் அனைவரும் தமது நீண்ட ஆயுட்காலத்தில் அவசியத்துக்கு ஏற்றவாறு பற்பல இடங்களிலும் பல காலம் தங்குவர். விச்வாமித்ரர் நாலு திசைகளிலும் ஆயிரக்கணக்கான வருஷங்கள் வஸிக்கவில்லையா? அதேபோல் இவரும் பற்பல தேசங்களில், காடுகளில், நதி தீரங்களில் நீண்ட காலம் வஸித்திருக்கக் கூடும். இந்த க்ருஹ்யஸூத்ரம் எழுதிய ஸமயத்தில் யமுனாதீரத்தில் வஸித்திருக்கலாம். அயோத்தி நகரின் ஸமீபத்திலுள்ள அரண்யத்தில் வால்மீகி முனிவரின் ஆசிரமத்தில் வெகு காலம் வாஸம் செய்தார். அதை இவரது இருப்பிடமாகச் சொல்லலாம் அல்லவா? அப்படிச் சொல்வதில்லை. இவர் தாமே யமுனா நதியைக் குறிப்பிட்டு ச்லோகம் எழுதினபடியால் யமுனைக் கரையில் வாழ்ந்தவர் என்பது ஆராய்ச்சியாளர்களின் தீர்ப்பு.

## பரத்வாஜரின் நூல்கள்

பல நூற்றுண்டுக் காலம் பற்பல மகரிஷிகளிடம் சிஷ்யராக இருந்து அரும்பாடுபட்டு இவர் கற்ற கல்வியை அளவிட்டுச் சொல்ல முடியாது. பிறவியினுல் வந்த பெருமையும், தவத்தின் மகிமையும், உலக க்ஷேமத்தில் இயற்கையாகவே உள்ள ஆஸ்தையும் அரிய கல்விப்பொக்கிஷங்களைக் காப்பாற்றுமாறு இவரைத் தூண்டின. அவ்வளவையும் பற்பல மாணவர்களுக்குக் கற்பித்தும் இருப்பார் என்பதைச் சொல்லத் தேவையில்லை. இன்று நிலவி வரும் வித்யா ஸம்ப்ரதாயங்கள் பலவற்றிலும் இவர் குருபரம்பரையின் பின்னணியில் வீற்றிருப்பது திண்ணம். நூல் வடிவத்திலும் பலவற்றை இயற்றிப் பிற்காலத்தவருக்கு இவர் சாச்வதமான உபகாரம் செய்திருக்கிறுர். பாரத்வாஜ சீக்ஷா, பாரத்வாஜ ஸம்ஹிதா, பாரத்வாஜ ஸூத்ரம் (ச்ரௌதம்), பாரத்வாஜ ஸ்ம்ருதி என்று இப்படிப் பல நூல்கள் இவர் பெயரால் வழங்குகின்றன. பல வேதங்களையும் கற்றவராக இருந்தும் யஜுர்வேதத்துக்கே இவர் ச்ரௌதஸூத்ரம் இயற்றியிருக்கிறுர். இதன் காரணம் ஆராய்ச்சிக்கு உரியது. வேதங்கள் வியவஸ்தை பண்ணிக் கட்டுப்படுத்தப்பெற்ற காலத்தில் இவர் யஜுர் வேதத்தைத் தமதாகக் கொண்டிருக்கலாம். அல்லது வேறு பல காரணங்கள் இருக்கலாம். ஆயுர்வேதத்திலும் இவருக்கு முக்கியமான ஸ்தானம் உண்டு. ஒவ்வொரு சதுர்யுகத்திலும் மூன்றுவதான த்வாபர யுகத்தில் வேதவ்யாஸர் தோன்றி வேதங்களைக் கட்டுப்பாடு செய்வது வழக்கம். வேதவ்யாஸர் என்பது ஓர் அதிகார பீடத்தின் பெயர். இப்போதைய வேதவ்யாஸர் க்ருஷ்ண த்வைபாயனர், பாதராயணர், பாராசர்யர் என்றெல்லாம் வழங்கப்பெறுகிறார். பன்னிரண்டாம் சதுர்யுகத்தில் (மூன்றுவதான த்வாபர யுகத்தில்) பரத்வாஜர்தாம் வேதவ்யாஸராக இருந்திருக்கிறுர். இவ்வாருகக் கல்வித் துறையில் இவரது தொண்டு அபாரமானது; என்றும் மறக்க முடியாதது.

## விருந்தோம்பல்

விருந்தினரைத் தெய்வமாக மதித்துப் பூஜிக்கும் வழக்கம் நம் நாட்டு மக்களுக்குத் தொன்றுதொட்டு வருவது. அதில் பரத்வாஜ முனிவர் அனைவரையும் விஞ்சி விட்டார். யாராவது சிறந்த

முறையில் விருந்தினரை உபசரித்தால், அதைப் புகழ்ந்து உரைப்பவர் 'பரத்வாஜாதித்யம்' என்று கூறுவது வழக்கம். ராமாயண வரலாற்றில் இரண்டு முறை இவரது விருந்தோம்பும் முறை வெகு அழகாகப் பேசப்படுகிறது. அயோத்தியா காண்டத்தில், பரதன் ராமனை நாட்டுக்குத் திரும்ப அழைத்து வருவதற்காக மாபெரும் ஜனத்திரளுடன் சித்திரகூட மலையை நோக்கி வந்த ஸமயம் ஒன்று. ராமாயணத்தில் இந்த இடத்தைப் படித்தால் இதன் அருமை பெருமைகள் விளங்கும். வால்மீகி முனிவர், விருந்தின் முடிவில், விருந்துண்ட மக்களின் வாயால் ஒரே வார்த்தையில் என்ன சொல்கிறார், பாருங்கள்—'நைவ அயோத்யாம் கமிஷ்யாம:, ந ச யாஸ்யாம தண்டகாந். நாங்கள் அயோத்திக்கும் வரவில்லை; தண்டகாரண்யத்துக்கும் போகவில்லை. இங்கேயே ஸ்திரமாகத் தங்கிவிடுகிறோம்' என்கிறார்கள். பரதனுடன் வந்தவர்கள்தாம் இவ்வாறு கூறினார்கள். தண்டகாரண்யத்தில் இருக்கும் ராமனைத் திரும்ப அழைத்து வருவதற்காக, நாடு நகரமும், வீடு வாசலும், உற்றார் உறவினரும், சொத்து சுதந்தரமும் எல்லாம் துறந்து, பரதன் பின்னால் வந்தவர்கள் இந்தப் பெருமக்கள், பரத்வாஜ முனிவரின் அற்புதமான விருந்தில் ஊறித் திளைத்துத் தங்களது குறிக்கோளையும் மறந்து மேற்கண்டவாறு கூறினர் என்றால் விருந்தின் மகிமையை எடுத்துக் காட்ட வேறு என்ன வேண்டும்?

இவரது அதிதி பூஜையின் இரண்டாம் பகுதி, யுத்த காண்டத்தில் வரும் நிகழ்ச்சியாகும். அயோத்தியா காண்டத்தில் வந்த அதிதிகள் மனுஷ்யர்கள். யுத்த காண்டத்தில், இலங்கையிலிருந்து ராமன் ஸீதை லக்ஷ்மணன் இவர்கள் பெருந்திரளான வானர ஸைன்யத்துடன் அயோத்திமாநகருக்குத் திரும்பிய ஸமயம், இவருடைய அதிதிகள் குரங்கு வகையைச் சேர்ந்தவர்களாக இருந்தது ஓர் அதிசயம். இலங்கையிலிருந்து ராமன் புஷ்பக விமானத்தில் அவசர அவசரமாக அயோத்திக்குத் திரும்பிப் பறந்து வந்துகொண்டிருக்கிறான். விமானத்தின் வேகத்தைக் கண்டு பொறாமை கொண்டாற்போல் வானர ஸைன்யத்தைச் சேர்ந்தவர்களும் தரையிலும் ஆகாயத்திலுமாக மாறி மாறிப் போட்டி போட்டுக் கொண்டு தொடர்ந்து வருகின்றனர். 'அஹ்நா த்வாம் ப்ராபயிஷ்யாமி' என்று விபீஷணன் சொன்னதைக்

கேட்டு இலங்கையில் சிறிது நேரம் தாமதிக்க இசைந்தான் ராமன். பரதனிடம் சொல்லி வந்த கெடு இன்னும் சிறிது நேரத்தில் முடிந்து விடப் போகிறது. அதற்குள் ராமன் பரதன்முன்னே தோன்றியாக வேண்டும். தவறினல் என்ன நடக்கும்? பெரும் விபரீதமே. மற்றவரைக் காட்டிலும் ராமனுக்கு இது நன்ருகத் தெரியும். அதனுல்தான் விமான வேகத்தையும் நம்பாமல் ஹநுமாளை முன்னல் பரதனிடம் அனுப்பித் தன் வருகையைத் தெரிவிக்குமாறு பணித்தான்.

இதெல்லாம் முன்னேற்பாடுதான். தானே நேரில் குறிப்பிட்ட காலத்தில் போய் நின்ருல்தான் பரதனது உயிரைக் காக்க முடியும் என்பதை நன்குணர்ந்த ராமன் நடுவழியில் எங்கும் இறங்கவே இல்லை. ஆனல் இவ்வளவு அவசரத்தையும் அடக்கிக்கொண்டு, பரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தில் புஷ்பக விமானத்தை இறக்கி, அவரை வணங்கினன் ராமன். பரத்வாஜ முனிவரிடம் ராமனுக்குப் பெருமதிப்பு இருந்ததை இதுவே காட்ட வல்லது. முனிவருக்கு மட்டும் ராமனிடம் அதற்கு ஈடான அன்பு இல்லையா என்ன? பரதனைப் பார்த்து, "இவ்வளவு பெரிய சேனையுடன் வந்திருக்கிருயே. ராமனுக்குத் தீங்கு நினைந்து வாராமல் நல்ல எண்ணத்துடன்தான் செல்லுகிருயா என்பதில் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது" என்று கேட்டான் குகன். பரத்வாஜ முனிவரும், "மாசற்ற ராமனுக்குத் தீங்கிழைக்க நீ நினைக்க வில்லையே?" என்று அதே கருத்தில் கேட்டுவிட்டார். இவ்வாறு அளவிட முடியாத அன்பும் பக்தியும் இருதலையிலும் பெருகியோடிக்கொண்டிருக்கையில், இறங்கி வணங்காமல் நேரே செல்ல முடியுமா ராமனல்?

இதைத் தவிர மற்ருெரு காரணமும் இங்கு உண்டு: தண்டகாரண்யத்திலுள்ள முனிவர்கள் அனைவருமே ராமனிடம் இவ்வளவு அன்பு கொண்டவர்கள்தாம். ராமனுக்கும் அப்படியே. முனிவர்களில் எவரும் ராமபக்தியில் பரத்வாஜருக்குக் குறைந்தவர்களல்லர். வேருெரு காரணந்தான் ராமனை, பரத்வாஜ முனிவரது ஆசிரமத்தில் மட்டும் இறங்கச் செய்தது. பரத்வாஜ முனிவருடைய விருந்தோம்பல் குணந்தான் அது. குரங்கினங்கள் கடல்போல் தொடர்ந்து வருகின்றன; இவற்றை இந்த முனிவரின்

விருந்தினர்களாக்குவோம் என்று ராமன் நினைத்தான். என்ன காரணம் தெரியுமா? குரங்குகளுக்கு இயற்கையான உணவு காய்கனிகளே. இவை காட்டில்தானே ஏராளமாகக் கிடைக்கும்? அதற்காகத்தான். ஆனால் பரத்வாஜ முனிவர் இதில் செய்ய வேண்டுவதென்ன? மரத்திலுள்ள காய்கனிகளைப் பறித்து உண்ணக் குரங்குகளுக்கு யாராவது உபதேசம் செய்ய வேண்டுமா? ராமனது விருப்பம் அசாதாரணமாக இருந்தது. இயற்கையாக ஒவ்வொரு மரம் ஒவ்வொரு பருவத்தில் பூத்துக் காய்த்துப் பழுக்கும். இந்த ஸந்தர்ப்பத்தில் அகாலமாக இருப்பதைக் காரணமாகக் கொள்ளாமல் ஸகல விதமான மரங்களும் பழுத்துக் குலுங்க வேண்டும் என்பது அவனுடைய ஆவல். இதை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே அவன் பரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தில் இறங்கினான்.

எதிர்பார்த்தபடியே நடந்தது. குரங்கினங்கள் மெய்ம் மறந்து மரங்களில் பாய்ந்து, துள்ளி விளையாடிப் பழங்களைப் பறித்துத் தின்று மகிழ்ந்தன. இயற்கையையும் வெல்லும் ஆற்றல் தவத்துக்கு உண்டு. தவத்தின் மகிமையினால்தானே ஸீதைக்கு அக்கினி ப்ரவேசத்தின்போது நெருப்பு சுடாமலே இருந்தது? அப்படியே பரத்வாஜருடைய தவ மகிமைக்குக் கட்டுப்பட்டுத்தான் காட்டிலுள்ள மரங்கள் அகாலத்திலும் பழுத்துக் குலுங்கின.

பரத்வாஜருடைய ஆசார்யர் வால்மீகி. அவருடைய சிஷ்யர் பரத்வாஜர். ஆசார்யனே சிஷ்யனுடைய குணங்களில் ஈடுபட்டுப் புகழ்கிறார் என்றால், 'இப்படி அல்லவா நாமும் இருக்க வேண்டும்?' என்ற ஆசை ஏற்படுகிறது அல்லவா? பரத்வாஜருடைய மகிமை அளவிடவொண்ணாதது. இத்துடன் நிறுத்தி, அவரை வணங்கி, அவருடைய உயர்ந்த பண்புகளை நாமும் பெற முயல்வோம்.

# வஸிஷ்டர்

व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम् ।
पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम् ॥

*வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம் ।*
*பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் ॥*

*"வ்யாஸர் வஸிஷ்டருடைய கொள்பேரர், சக்தியின் பேரர், பராசரருடைய பிள்ளை, சுகருக்குத் தந்தை. இப்படிப்பட்ட தபோநிதியான அந்த வ்யாஸரை வணங்குகிறேன்" என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இப்படி ஒரு குடும்பமே புத்திர பௌத்திர பாரம்பர்யமாக உலகம் போற்றும் மகரிஷிகள் நிறைந்ததாக அமைந்தது.*

*வஸிஷ்டர், நம் நாட்டு மக்களுக்கு அதிலும் வேதசாஸ் திரங்களைக் கற்றவர்களுக்கும் இதிகாச புராணங்களில் அநுபவமுள்ளவர்களுக்கும் – மிக மிகப் பழக்கமானவர். அவரைப் புதிதாக அறிமுகம் செய்து வைக்கத் தேவையில்லை. சாதாரணமாக நல்ல அநுஷ்டானசீலர்களைப்பற்றிக் குறிப்பிடும்போது, "ஸாக்ஷாத் வஸிஷ்டர்" என்று சிறப்பித்துக் கூறுவதுண்டு. அவ்வாறே அநுஷ்டானத்தில் குறைந்தவர்களை ஏளனம் பண்ணும்போதும், "இவர் என்ன, வஸிஷ்டரோ!" என்று கூறுவதுண்டு. இப்படி அந்வயத்தாலும் வ்யதிரேகத்தாலும் (விதிமுகமாகவும் நிஷேதமுகமாகவும்)வஸிஷ்டருடைய அநுஷ்டானத்தின் தனிச் சிறப்பு நம் நாட்டு மக்கள் அனைவருக்கும் தெரிந்த விஷயம்.*

अहं वेद्मि महात्मानं रामं सत्यपराक्रमम् ।
वसिष्ठोऽपि महातेजा ये चेमे तपसि स्थिताः ॥

*அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம் ।*
*வஸிஷ்டோபி மஹாதேஜா யே சேமே தபஸி ஸ்திதா: ॥*

*— ராமாயணம், 1.19.14.*

*என்னும் ச்லோகத்தில், 'மஹாதேஜா:' என்னும் ஒரே வார்த்தையினுல் வஸிஷ்டரை விச்வாமித்ரர் கம்பீரமாகப் புகழ்ந்து பேசியிருக்கிறுர். இது ஒன்றே போதும் அவருடைய பெருமைக்கு.*

உலகம் தோன்றும்பொழுதே முதல்முதலாகத் தோன்றி, லோகோபகாரத்துக்காகவே பல கோடி நூறாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த இவருடைய சரித்திரத்தில், பல தெய்வங்கள், மகரிஷிகள், ராஜரிஷிகள் ஆகியவர்களின் வரலாறுகள் பிரிக்க முடியாதவாறு பிணைப்புண்டிருக்கின்றன.

## பிறப்பு

வஸிஷ்டருடைய பிறப்பு இரண்டு விதமாக நம் புராணங்களில் கூறப்பெறுகிறது. 1. ஆதிகாலத்தில் பிரம்மா, பிரபஞ்ச ஸ்ருஷ்டியைத் தொடங்கியபோது, தம் உடலுறுப்புக்களிலிருந்து 'ப்ரஜாபதிகள்' எனப்பெறும் பத்துப் பேர்களை முதலில் உண்டாக்கினார். அவர்களில் ஒவ்வொருவரும் தனித்தனியே பல்லாயிரம் கோடி மக்களைப் பெற்று ப்ரபஞ்சத்தை விஸ்தரித்தனர். அதனாலேயே அவர்களுக்கு 'ப்ரஜாபதி' என்னும் பெயர் வழங்குகிறது. அந்தப் பதின்மருள் வஸிஷ்டரும் ஒருவர். 'வஸிஷ்டோ ப்ரஹ்மண: ஸுத:' வஸிஷ்டர் பிரம்மாவின் பிள்ளை' (ராமாயணம், பால. 52.6) என்னும் வாக்கியம், நம் இதிகாச புராணங்களில் பல இடங்களில் காண்கிறது. மநு ஸ்ம்ருதியும் இவ்வாறே கூறுகிறது.

2. வஸிஷ்டருக்கு மைத்ராவருணி என்ற ஒரு பெயர் உண்டு. அகஸ்த்ய முனிவருக்கும இந்தப் பெயர் உண்டு. மித்ரன், வருணன் என்பவர் இருவரும் இரண்டு தேவர்கள். அவ்விருவருக்கும் பிள்ளையாகப் பிறந்ததனால் 'மைத்ராவருணி' என்று வஸிஷ்டரும் அகஸ்த்யரும் அழைக்கப்பெறுகின்றனர். இந்த ஸம்பவத்தினால் அகஸ்த்யரும் வஸிஷ்டரும் உடன் பிறந்தவராகின்றனர். ஆனால், பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் பிரம்மதேவருடைய மூச்சுக் காற்றிலிருந்து வஸிஷ்டர் பிறக்கும்போது அகஸ்த்யர் பிறக்கவில்லை; வஸிஷ்டர்தாம் பிறந்தார். இவர் எப்படி மைத்ராவருணி என்னும் பெயர் பெற்று அதே பெயருள்ள அகஸ்த்யருக்கு ஸகோதரர் ஆனார்? இதை ரிக்வேதம் விவரிக்கிறது.

त इन्निण्यं हृदयस्य प्रकेतैः सहस्रवल्शमभि सञ्चरन्ति ।
यमेन ततं परिधिं वयन्तोऽप्सरस उपसेदुर्वसिष्ठाः ॥

— ரிக்வேதம், 7.33.9.

வஸிஷ்டர், முன்பு பிரம்மாவின் தேகத்திலிருந்து தோன்றிய தமது உடலை விட்டு, மீண்டும் அப்ஸரஸ்ஸினிடம் பிள்ளையாகப் பிறக்கத் தீர்மானித்தார்.

विद्युतो ज्योतिः परिसंजिहानं मित्रावरुणा यदपश्यतां त्वा ।
तत् ते जन्मोतैकं वसिष्ठागस्त्यो यत् त्वा विश आजभार ॥

— ரிக்வேதம், 7.33.10.

மின்னல் போன்ற ஒளி மயமான தேகத்தை விடத் துணிந்த உம்மை மித்ரனும் வருணனும் தமக்குப் பிள்ளையாகப் பிறக்க வேண்டுமென்று எப்போது பார்த்தார்களோ, அப்போதுதான், வஸிஷ்டரே! உமக்கு ஒரு பிறவி ஏற்பட்டது.

उतासि मैत्रावरुणो वसिष्ठोर्वश्या ब्रह्मन् मनसोऽधिजातः ।
द्रप्सं स्कन्नं ब्रह्मणा दैव्येन विश्वेदेवाः पुष्करे त्वाददन्त ॥

— ரிக்வேதம், 7.33.11.

வஸிஷ்டரே! ஊர்வசியினிடத்தில் மோகம் கொண்ட மித்ரனுக்கும் வருணனுக்கும் பிள்ளையாகப் பிறந்ததனால் 'மைத்ராவருணன்' என்று பெயர் பெற்றீர்.

स प्रकेत उभयस्य प्रविद्वान् सहस्रदान उत वा सदानः ।
यमेन ततं परिधिं वयिष्यन्नप्सरसः परिजज्ञे वसिष्ठः ॥

— ரிக்வேதம், 7.33.12.

வஸிஷ்டர் அப்ஸரஸ்ஸினிடம் பிறந்தார்.

सत्रे ह जाताविषिता नमोभिः कुम्भे रेतः सिषिचतुः समानम् ।
ततो ह मान उदियाय मध्यात् ततो जातमृषिमाहुर्वसिष्ठम् ॥

— ரிக்வேதம், 7.33.13.

ஸத்திர யாகத்தில் மித்ரனும் வருணனும் ஒரே ஸமயத்தில் (ஊர்வசியினிடம் மோகம் கொண்டு) 'வஸதீவரீ' எனப் பெறும் நீர் நிறைந்த குடத்தில் தமது வீர்யத்தை விட்டனர். அப்போது குடத்தினுள் தங்கின பகுதியினால் அகஸ்தியரும், தரையில் விழுந்த பாகத்தினால் வஸிஷ்டரும் பிறந்ததாகக் கூறுவர்.

இந்த ரிக்வேத மந்த்ரங்கள், வஸிஷ்டர் இரண்டாம் தரம் ஊர்வசி என்னும் அப்ஸரஸ்ஸுக்கும் மித்ராவருணர் என்னும் தேவர்களுக்கும் பிறந்தவர் என்பதை நிரூபிக்கின்றன. இவ்வாறாக

மறுபிறப்பு பிறந்தாலும் வஸிஷ்டருக்கு உடல்தான் புதிதாகத் தோன்றியதேயன்றி மற்றவை (ஜ்ஞாநம், அநுஷ்டானம்) முற்பிறவியில் இருந்தபடியே குறைவில்லாமல் தொடர்ந்து வந்தன. அதனால்தான ஊர்வசியின் புத்திரரானதற்காக இவரைப் பிரம்மபுத்திரர் என்று சொல்லாமல் விடுவதில்லை. அதாவது, பிரம்மாவின் புத்திரராகப் பிறந்ததனால் இவருக்கு ஏற்பட்ட சிறப்புக்களெல்லாம் சிறிதும் குன்றாமல் மறுபிறவியிலும் தொடர்ந்தன என்றவாறு. அக்னி புராணம் முதலிய நூல்களும் இதையே உறுதிப்படுத்துகின்றன.

## விவாகம்

வஸிஷ்டருடைய பத்தினி அருந்ததி என்பவள். மேலே கூறிய ப்ரஜாபதிகள் பதின்மருள், கர்தம ப்ரஜாபதி என்பவருக்கு தேவஹூதி என்னும் மனைவியினிடத்தில் பிறந்த பெண் அருந்ததி. இவள் வஸிஷ்ட முனிவரை மணந்துகொண்டு உத்தம பதிவ்ரதைகளுள் சிறந்த பத்தினியாக வாழ்ந்து, பதிவ்ரதைகளுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்குகிறவள். பல்லாயிரம் ஆண்டுகள் தவ மகிமையினால் வாழ்ந்து, பல வகைகளிலும் உலக க்ஷேமத்தை நிர்வகிக்கும் தன் கணவருக்கு ஸகல விதத்திலும் பொருத்தமாக அமைந்த உத்தமி. பத்தினிக் கடவுள் என்று போற்றக் கூடியவள். தன் கணவரைப் போலவே மகா தபஸ் சக்தி படைத்தவள். இப்படி மிக மிகப் பொருத்தமாக அமைந்த இந்தத் தம்பதிகளுக்கு ஏராளமான பிள்ளைகளும் பேரன்களும் உண்டு.

## ஜ்ஞாநமும் அநுஷ்டானமும்

உலகத்தைப் படைத்த நான்முகனுடைய ஸாக்ஷாத் புத்திரராகிய வஸிஷ்டருக்கு ஜ்ஞாநமும் அநுஷ்டாநமும் நிரம்பியிருந்தன. பிரபஞ்ச ஸ்ருஷ்டியில் ஜீவாதாரமான தத்துவங்கள் நிலைத்து நிற்பதற்காகவே சில படைப்புக்கள் அமைவதுண்டு. பஞ்சபூதங்கள் எனப்படும் மண் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்பவை தமக்கே தனியுரிமையான சில தன்மைகளுடன் பிரபஞ்சத்துக்கு அழியாத ஆதாரமாகப் படைக்கப்பட்டவை. மண்ணால் ஆன பலவேறு வகையான பொருள்களும் காலப்போக்கில் அழிந்துவிடும். ஆனால் மீண்டும் ஒரு காலத்தில்

அவற்றை முன்போலவே செய்துகொள்ளலாம். அதற்கு ஆதாரமான மண் அழியாமல் இருக்கிறதல்லவா? அதேபோல் சாஸ்திரீயமான அநுஷ்டானங்களும் அவற்றுக்கு ஏற்ற ஜ்ஞாநமும் உலகத்துக்கு மிகவும் அவசியமானவை. இவற்றை ஒரு காலவிசேஷத்தில் உலகிலுள்ளோர் அனைவரும் அறவே மறந்துவிட்டாலும் இவை அழியாமல் தொடர்ந்து வரவேண்டும். அதற்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டவர் வஸிஷ்டர். வாலகில்யர்கள் என்னும் ரிஷிகள், ஸூர்யோதய காலத்தில் தவறாமல் ஸந்த்யாவந்தனம் செய்வதற்காகவே படைக்கப்பட்டவர்கள் என்பர். இத்தகையவர்களை 'ஆதிகாரிகர்கள்' என்று வழங்குவர். வஸிஷ்டரும் அவ்வகையைச் சார்ந்தவர். இவருடைய ஜ்ஞாந அநுஷ்டானங்கள் என்றும் குன்றா.

## நான்கு வேதங்கள்

ரிக் யஜுஸ் ஸாமம் அதர்வம் என்பவை நான்கு வேதங்களாம். இவை ஒரு கால விசேஷத்தில் வ்யாஸ முனிவரால் வரையறுக்கப்பட்டன. அந்த வ்யாஸருடைய கொள்தாத்தாவான வஸிஷ்டருக்கு இந்த வரையறை தெரியாது. பிதாவான பிரம்மாவைப் போல் நான்கு முகங்கள் இல்லையே தவிர, நான்கு வேதங்களிலும் அவரைப் போலவே வஸிஷ்டரும் அறிவு நிரம்பப் பெற்றவராக இருந்தார். இவரது வரலாறு நான்கு வேதங்களிலும் பரவலாகப் பேசப்படுகிறது. அது மட்டுமின்றி, அவற்றுக்கு பிரவர்த்தகராகவும் இவர் இருக்கிறார். ஏறக்குறையப் பத்தாயிரம் ரிக்குகளையுடைய ரிக்வேத ஸம்ஹிதையில் பத்தில் ஒரு பாகம், ஏழாவது மண்டலம் முழுவதும், நூறு ஸூக்தங்கள், 819 மந்த்ரங்கள் கொண்டது, பல தேவதைகளைப் புகழ்வது, பல விதமான சந்தஸ்ஸுக்களில் அமைந்தது, வஸிஷ்டராலும் இவர் ஸந்ததியினராலும் தோற்றுவிக்கப்பட்டுப் பிரசாரம் செய்யப்பட்டது. யஜுர்வேதத்தில் பல இடங்களிலும் இவருடைய வரலாறு பரக்கப் பேசப்படுகிறது. ஸாமவேதத்தில் வஸிஷ்டநிவஹம், வஸிஷ்டசபம், வஸிஷ்டஸ்யாங்குசம் என்ற பல ஸாமங்கள் உள்ளன. அதர்வ வேதத்துக்கு இவர் நிதி போன்றவர் என்கிறார் காளிதாஸ மகாகவி.

अथाथर्वनिधेस्तस्य विजितारिपुरः पुरः ।
अर्थ्यामर्थपतिर्वाचमाददे वदतां वरः ॥

*அதாதர்வநிதேஸ் தஸ்ய விஜிதாரிபுர: புர: ॥*
*அர்த்யாமர்த்தபதிர் வாசமாததே வததாம் வர: ॥*

— *ரகுவம்சம், 1.59.*

वसिष्ठं रोगनाशनम् ।

— *அதர்வ வேதம், 6.44.2.*

वसिष्ठं वीरुधानाम् ।

— *அதர்வ வேதம், 6.21.2.*

## பெயரின் பொருத்தம்

*ராமாயண கதாபுருஷர்களான ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்களுக்கு வஸிஷ்டர்தாம் பெயரிட்டார். பிற்காலத்தில் தோன்றப்போகும் வரலாற்றைப் பிரதிபலிப்பனவாகவே அந்தப் பெயர்கள் பொருத்தமாக அமைந்தன. அதுபோலவே ரகுவம்சத்து அரசர்கள் பலருக்கும் பொருத்தமாகப் பெயரிட்டு அருள் புரிந்த வஸிஷ்டர், தமக்கும் பொருத்தமான பெயரையே பெற்றிருக்கிறார். 'வஸ்' என்னும் தாதுவிலிருந்து 'வஸிஷ்ட' என்னும் சொல் உருவாகிறது. 'வஸீயாந்' என்னும் சொல்லும் இதே தாதுவில்தான் தோன்றுவது. வேதங்களில், 'வஸீயாந் பவதி, வஸிஷ்ட: ஸமாநாநாம் பவதி' என்றெல்லாம் அடிக்கடி இந்த வார்த்தை, பிறருக்கு விசேஷணமாக (அடைமொழியாக) வழங்குகிறது. அதுவே இவருக்குப் பெயராக அமைந்துவிட்டது. 'நன்றாக வஸிப்பவன், செல்வம் மிகுந்தவன்' என்பது இந்தச் சொல்லின் பொருள்.*

*இந்த அர்த்தங்கள் இவரிடம் முழுப் பொருத்தத்துடன் பொதிந்துள்ளன. நீண்ட நாள் சீரும் சிறப்புமாக இவர் வாழ்ந்து வருகிறார். செல்வம் மிகுந்தவராகவும் இருக்கிறார். செவிச் செல்வமாகிய வேதமே 'செல்வம்' எனப்பெறும். 'யதஹம் வஸிஷ்டாஸ்மி, த்வம் வை தத் வஸிஷ்டோஸி' என்னும் உபநிஷத் வாக்கியம், வேதங்களைச் சொல்லும் வாய்ப்புப் பெற்ற 'வாய்' என்னும் கர்மேந்த்ரியத்தை, 'வஸிஷ்டர்' என்று பேசுகிறது. வேதங்களை நன்கு கற்றுணர்ந்தவனுக்கு ஸகல விதமான செல்வங்களும் தாமே வந்து குவிந்துவிடும் என்பது கருத்து.*

பிரம்மாவின் பிள்ளையாகப் பிறந்த இவர் ஸகல வேதங்களையும் கசடறக் கற்றுணர்ந்தவர். அதன்மூலம் பெரும் பணக் குவியலைச் சேமித்து வைத்துக்கொள்ள இவரால் முடிந்தது. ஸூர்ய வம்சத்தில் தோன்றிய அரசர்கள் எல்லாரும் குலபரம்பரையாகவே இவருடைய சிஷ்யர்கள். இவருக்கு என்ன குறைவு? ஆனால் அந்தச் செல்வங்களையும், அதனால் வரக்கூடிய சுகபோகங்களையும் அறவே வெறுத்துத் தள்ளினவர் இவர். வேதங்களையும் அவற்றிலிருந்து கிடைக்கும் அறிவையும் அதனால் செய்ய வேண்டிய அநுஷ்டானங்களையும் அரும்பெரும் செல்வமாகக் கொண்டவர். நந்தினி என்னும் பசு ஒன்றுதான் இவரது செல்வம். அடர்ந்த காட்டில் மேய்ந்துவிட்டுச் சுதந்திர வாழ்க்கை வாழும் அத்துடன், இவரும் ஒரு பர்ணசாலையை அமைத்துக் கொண்டு சுதந்திரராகவே வாழ்ந்து வந்தார். இவருக்கு வேண்டியவை ஹோமத்துக்குத் தேவையான பால் தயிர் நெய் முதலியவைதாம். அவற்றை நந்தினியே கொடுத்துவிடும். ஸமித்து, தர்பம், ஸ்நானத்துக்குத் தீர்த்தம் இவையெல்லாம் காட்டில் ஸம்ருத்தியாகக் கிடைக்கின்றன. நந்தினிதான் இவருக்கு நிறைந்த செல்வமாக இருந்தது.

## அஞ்சா நெஞ்சம்

நந்தினி காரணமாக வஸிஷ்டருக்கு எவ்வளவோ தொல்லைகள் நேர்ந்தன; எத்தனையோ பேருடன் சண்டை. வஸிஷ்டர் எதற்கும் அஞ்சியதில்லை. இவருடைய ப்ரஹ்மதேஜஸ்ஸுக்கு எதிரில், எதிரிகள் சூரியனைக் கண்ட இருள்போல் மறைந்து நாசமாவர்.

வஸிஷ்டரைப் போலவே எல்லா வகையிலும் சிறந்தவரான விச்வாமித்ர மகரிஷி, பிறவியில் க்ஷத்திரியர். அவர் நன்றாக ராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டிருந்தபொழுது ஒரு ஸமயம் தம் சேனைகளுடன் வேட்டையாடுவதற்காகக் காட்டுக்குச் சென்றார். தற்செயலாக வஸிஷ்டருடைய ஆச்ரமத்துக்கு வந்தார். வஸிஷ்டர் அவரைத் தக்கவாறு மரியாதையுடன் வரவேற்று உபசரித்தார். விச்வாமித்ரர் விடை பெற்றுக்கொண்டு திரும்பிப் போக எண்ணியபோது, வஸிஷ்டர் அவரை நிர்ப்பந்தமாக நிறுத்திப் பெரும் திரளான சேனைகளுக்கும் விச்வாமித்ர மகாராஜாவுக்கும் சிறப்பான

விருந்தொன்றை நடத்தினார். இதைக் கண்டு பிரமித்துப் போய்விட்டார் விச்வாமித்ரர். "ஜனஸஞ்சாரம் இல்லாத காட்டில், நினைத்த மாத்திரத்தில் இவ்வளவு பெரிய விருந்தை எப்படிச் செய்ய முடிந்தது?" என்று வஸிஷ்டரை அவர் கேட்டார். "இதோ இந்த நந்தினிதான் இதற்கெல்லாம் காரணம்" என்று பதில் வந்தது. "அப்படியானால் இதை எனக்குக் கொடுத்துவிடும்" என்றார் விச்வாமித்ர மகாராஜர். அதற்குப் பதிலாக ஆயிரம் கோடி பசுக்கள் தருவதாக விச்வாமித்ரர் சொல்லியும் வஸிஷ்டர் இணங்கவில்லை.

விச்வாமித்ரர் பலாத்காரத்தில் இறங்கினார். தம் ஆட்களை விட்டு நந்தினியைக் கட்டிப் பிடித்து இழுக்க ஆரம்பித்தார். பெரும் போர் மூண்டது. விச்வாமித்ரருடைய பெருஞ்சேனை திரண்டு வந்து வஸிஷ்டரைத் தாக்கியது. வஸிஷ்டர் துளியும் அஞ்சவில்லை. நந்தினியையே ஏவி, பெரும் வெள்ளம் போன்ற சேனையை ஸ்ருஷ்டிக்கச் செய்து, விச்வாமித்ரருடைய சேனைகளை முறியடித்தார். விச்வாமித்ரருக்குப் பரிந்து சண்டைக்கு வந்த அவருடைய நூறு பிள்ளைகளையும் தமது தவ மகிமையினால், மடிந்துபோகும்படி சபித்தார். நூறு பேரும் உடனே மாண்டனர். விச்வாமித்ரருக்கு அவமானம் தாங்கவில்லை. இவ்வளவு பெரிய சேனையும், அரசனாகிய தானும், ஒரு சாதாரண மனிதரிடம் தோல்வியுற்றுப் புறமுதுகிட்டோடுவதா? தவத்தின் வலிமைதான் என்ன அதிசயமாக இருக்கிறது!

உடனே அவர் துறவு பூண்டு கடும் தவத்தில் ஆழ்ந்தார். உள்ளத்தில் தூய்மை இல்லை. வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காகவே தவம் செய்தார். அதன் பயனாகப் பல்லாயிரக்கணக்கில் அற்புதமான ஆயுதங்களைப் பெற்று வந்து, வஸிஷ்டருடைய ஆசிரமத்தில் புகுந்து, அதை நிர்மூலமாக்கினார். வஸிஷ்டருக்குக் கடும் சினம் தோன்றிற்று. விச்வாமித்ரருக்கு இருந்த இறுமாப்பை அவர் நன்கறிவார். 'க்ஷத்திரியனே மிக்க பலமுள்ளவன். பிராம்மணனுக்குப் பலம் ஏது? அதனால் அவன் க்ஷத்திரியனிடம் படிந்து அடங்கியே இருக்க வேண்டும்', என்பது விச்வாமித்ரருடைய திடமான எண்ணம். தமது ப்ரஹ்மதண்டத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, "என் ப்ரஹ்மதேஜஸ்ஸுக்கு எதிரில் உமது பலமெல்லாம்

பயனற்றதாகிவிடப் போகிறது, பாரும்" என்று வஸிஷ்டர் சொன்னார். அவ்வாறே நடந்தது. அத்யத்புதமான, பயங்கரமான, பெரிய பெரிய அஸ்திரங்களை விச்வாமித்ரர் வஸிஷ்டர் மேல் போட்டார். வஸிஷ்டர் சிறிதும் கலங்காமல் தமது ப்ரஹ்மதண்டத்தின் மகிமையினால் அனைத்தையும் வென்றுவிட்டார்.

விச்வாமித்ரர் கடைசியில் ப்ரஹ்மாஸ்திரத்தையே பிரயோகித்தார். அதையும் வஸிஷ்டர் விழுங்கிவிட்டார். அப்போது அவருடைய உடம்பில் ஒவ்வொரு மயிர்க்காலிலும் அக்னி ஜ்வாலையைக் கக்கியது. பயங்கரமாகக் காட்சியளித்தார் வஸிஷ்டர். தம்முடைய பிரம்மாண்டமான ஆயுதங்கள் அனைத்தும் வஸிஷ்டருடைய ஒரு தடிக்கு முன் பயனற்று வீரியமில்லாமற் போய்விட்டதைப் பிரத்தியக்ஷமாகக் கண்ட விச்வாமித்ரர், மனம் வெறுத்துக் கூறுகிறார் —

धिग् बलं क्षत्रियबलं ब्रह्मतेजोबलं बलम् ।

திக் பலம் க்ஷத்ரியபலம் ப்ரஹ்மதேஜோபலம் பலம் ।

— ராமாயணம், பால காண்டம், 56.23.

"க்ஷத்திரிய பலம் இழிவானதே. ப்ரஹ்மதேஜஸ்ஸின் மகிமைதான் உயர்வானது" என்று. பிறகு பல்லாயிரம் ஆண்டுகள் மிக மிகக் கடுமையாகத் தவம்புரிந்து, ஸகல தேவர்கள், பிரம்மா இவர்கள் முன்னிலையில், வஸிஷ்டர் வாயால் ப்ரஹ்மரிஷி பட்டத்தைப் பெற்றார் விச்வாமித்ரர். இருவரும் பகைமை நீங்கி நண்பர்களாயினர்.

### அஷ்ட வஸுக்கள்

நந்தினி காரணமாக மற்றொரு தரம் வஸிஷ்டருடைய பொறுமை சோதனைக்கு உள்ளாகியது. அஷ்ட வஸுக்கள் என்பவர் தேவகணங்களைச் சார்ந்தவர்கள். இவர்கள் எட்டுப் பேர். இவர்கள் ஒரு ஸமயம் தம் மனைவியருடன் வஸிஷ்டருடைய ஆசிரமம் சேர்ந்தனர். இவர்களில் ஒருவருடைய மனைவி, நந்தினியைப் பார்த்து ஆசைப்பட்டாள். உடனே அவர்கள் எண்மரும் சேர்ந்து நந்தினியைப் பலாத்காரமாகக் கவர்ந்து செல்ல முயன்றனர். வஸிஷ்டருக்குக் கோபம் பொங்கி எழுந்தது. உடனே கடுமையான சாபம் அவர்கள் மேல் விழுந்தது. "நீங்கள் தேவத்தன்மையை இழந்து

மானிடர்களாவீர்கள்" என்று சபித்துவிட்டார். அதிலும், நந்தினியை மிகவும் துன்பப்படுத்தியவர் 'த்யௌ:' என்பவர். அவர் நீண்ட காலம் மனுஷ்ய லோகத்திலேயே உழல வேண்டும் என்ற சாபம் பிறந்தது. அவர்தாம் மகாபாரதக் கதையில் 'பிதாமஹர்' என்று போற்றப்பெறும் மஹாவீரரான பீஷ்மர்.

சாபம் விழுந்தவுடன் எட்டு வஸுக்களும் ஓடோடியும் வந்து வஸிஷ்டரை வணங்கி மன்னிப்புக் கேட்டனர். "இட்ட சாபம் இட்டதுதான். அது மாறாது" என்றார் வஸிஷ்டர். "அதற்கு ஒரு முடிவு கூறியருள வேண்டும். மானிடத்தன்மை எங்களுக்கு ஸ்திரமாகிவிடாமல் அருள்புரிய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். "மானிடப் பிறவியில் பிறந்து இறந்தவுடன் அவர்கள் தமது பழைய தெய்வத்தன்மையை மீண்டும் பெறலாம்" என்று முடிவு கூறப்பட்டது. குழந்தையாகப் பிறந்தவுடனே கங்கையில் வீசி எறியும்படி முன்னேற்பாடு செய்துகொண்டு வெகு சீக்கிரமாக மானிடத்தன்மையை மாற்றிக்கொண்டனர் ஏழு பேர். எட்டாமவரான த்யௌ என்பவர் மட்டும் கடுமையான குற்றம் புரிந்ததனால் அவ்வளவு சீக்கிரம் சாபமோக்ஷமடையவில்லை. பீஷ்மர் என்னும் பெயருள்ளவராக நெடுங்காலம் மானிடராகவே இருந்து, மகாபாரதப் போரையும் நடத்தி, உயிரை விட்டுப் பழைய தெய்வத்தன்மையை மீண்டும் பெற்றார். வஸிஷ்டருடைய தவ வலிமைக்கு முன் தெய்வங்களும் பணிய வேண்டியதுதான்.

## த்ரிசங்கு

இக்ஷ்வாகு வம்சத்து அரசன் த்ரிசங்கு என்பவன் விசித்திரமான ஒரு விஷயத்தை ஆசைப்பட்டான். உலகிலுள்ள உடலுடன் இப்படியே (சாகாமல்) ஸ்வர்கலோகம் போக வேண்டும் என்பது அவனுடைய அவா. ஸ்வர்கம் என்பது தனிச் சிறப்புடைய தேசவிசேஷம். இவ்வுலகத்திலுள்ளார் ஸ்வர்கலோகத்துக்குப் போய் இன்ப வெள்ளத்தில் தோய்ந்து வாழ விரும்புவது இயல்பே. அதற்காக வேதங்களில் பல வகையான யாகங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றை முறைப்படி அநுஷ்டிப்பவர்கள் அந்த யாகங்களின் சக்தியினால் ஸ்வர்க லோகம் செல்ல முடியும். ஆனால், யாகம் முடிந்தவுடனே செல்ல முடியாது. இயற்கையாக அவர்கள்

இவ்வுலகில் இறந்துபோன பிறகு, அந்த ஆத்மா இவ்வுடலிலிருந்து பிரிந்து, ஸ்வர்க லோகத்தில் வாழ்வதற்கேற்ற வேருேர் உடலைப் பெற்று, அங்கே போய் ஆனந்தமாக இருக்கலாம். இவ்வுடல் இங்கேயே அதற்கு உரிய விதமாக ஸம்ஸ்காரம் பண்ணப்பட வேண்டியதுதான். இவ் விஷயம் வேதசாஸ்திரங்களில் பரக்கப் பேசப்படுவதுமின்றி, சாதாரணமானவர்களும் நன்கு உணர்ந்ததே.

த்ரிசங்கு மகாராஜனுக்கு இவ் விஷயம் நன்ருகத் தெரிந்ததுதான். ஆனுலும் இதை அவன் விரும்பினுன். இதற்குக் காரணத்தை அவனே சொல்கிருன்: தன் புரோகிதராக வஸிஷ்டர் இருப்பதுதான் காரணம் என்று. வஸிஷ்டருக்கு அஸாத்யம் என்று ஏதுமே இல்லை. அவர் நினைத்தால் எதையும் ஸாதிக்கலாம் என்பது அவனுடைய எண்ணம். தன் குலகுருவும் புரோஹிதருமான வஸிஷ்ட முனிவரை அணுகி, அவன் தன் ஆசையை வெளியிட்டான். "இது அஸாத்தியம்" என்று நிராகரித்துவிட்டார் வஸிஷ்டர்.

அரசனுக்கு ஆவல் தணியவில்லை. வஸிஷ்டருடைய பிள்ளைகள் நூறு பேரை வணங்கித் தன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்குமாறு வேண்டினுன். அவர்களும் மறுத்து விட்டனர். வேறு ஒருவரைப் புரோகிதராக வைத்துக் கொள்ள முயன்ருன் அவன். "சண்டாளனுகப் போவாய்" என்னும் சாபம் விழுந்தது. அப்படியும் ஆசை ஒழியவில்லை. விச்வாமித்ரரை அணுகி விஷயத்தைச் சொன்னுன். பழைய பகையின் ஜ்ஞாபகத்தினுல் அவர் இதைச் செய்ய ஒப்புக்கொண்டார். ஆனுல், தகாத காரியம், அரைகுறையாகச் சீரழிந்து கெட்டுப் போய்விட்டது. வெற்றி வஸிஷ்டருக்குத்தான். அவர் முதலில் சொன்னபடியேதான் நடந்தது. விச்வாமித்ரருடைய கடுஞ்சினத்துக்கு வஸிஷ்டருடைய நூறுபிள்ளைகளும் பலியாயினர். அவர் அரும்பாடுபட்டுச் சேமித்து வைத்திருந்த தவமெல்லாம் கரைந்துவிட்டது. இதுதான் கண்ட பலன்.

வஸிஷ்டர், தமது தவ மகிமையினுல் நினைத்தபடி எல்லாம் ஸாதிக்க வல்லவர்தாம். அதில் ஏதும் சந்தேகமில்லை. ஆனுல் அதற்கும் நியாயமான காரணம் இருக்க வேண்டும். தசரதரை அறியாதார் இல்லை. பத்துத் திசைகளிலும் அவரது தேர்

தடையின்றிச் செல்லும். வஸிஷ்டருடைய சக்தியினுல்தான் இந்தப் பெருமை தசரதருக்கு வந்தது. ஆனுல் வேறு கோளங்களுக்குப் போவதும் உடனே திரும்புவதும்தான் அவர் செய்தவை. இவ்வுடலுடன் வேறு லோகத்தில் போய் நிலைத்துவிடுவதை அவர் விரும்பினதாகத் தெரியவில்லை. தசரதருக்குப் பல தலைமுறைகள் முன் இருந்தவன் ரகு மகாராஜன். அவனிடம் கௌத்ஸர் என்பவர் குருதக்ஷிணைக்காகப் பணம் கேட்க வந்தபொழுது, அவன் கையில் ஒரு காசுகூட இல்லை. விச்வஜித் என்னும் யாகம் செய்து, எல்லாப் பொருளையும் தக்ஷிணையாகக் கொடுத்துவிட்டிருந்தான் அவன். ஆனுலும் வந்தவரை ஏமாற்றத்துடன் போக விடவில்லை அவன். தன் வீட்டிலேயே அவரைத் தங்க வைத்துக் குபேரனிடமிருந்து ஏராளமான பணக் குவியலைத் தருவித்து அவரது விருப்பத்தைப் பூர்த்தி செய்தே அனுப்பினுன்.

அப்போது குபேரனிடம் போவதற்காக அவன் ஒரு தேரை உபயோகித்தான். அந்த ரதம், தரையிலும் கடலிலும் ஆகாயத்திலும் மலைகள் மேலும் எங்கு வேண்டுமானுலும் தங்குதடையின்றிச் செல்ல வல்லது. இப்படிப்பட்ட அற்புத சக்தி அந்த ரதத்துக்கு எப்படி வந்தது? வஸிஷ்டருடைய ஏற்பாடுதான் இது. மந்த்ரமொன்றைச் சொல்லித் தீர்த்தத்தினுல் பிரோக்ஷித்தாராம். அவ்வளவுதான், அந்த ரதம் அற்புதமான சக்தியைப் பெற்றுவிட்டதாம்.

वसिष्ठमन्त्रोक्षणजप्रभावात्, उदन्वदाकाशमहीधरेषु ।
मरुत्सखस्येव वलाहकस्य गतिर्विजघ्ने नहि तद्रथस्य ॥

வஸிஷ்டமந்த்ரோக்ஷணஜப்ரபாவாத்,
உதந்வதாகாசமஹீதரேஷு ।
மருத்ஸகஸ்யேவ வலாஹகஸ்ய
கதிர் விஜக்நே நஹி தத்ரதஸ்ய ॥

— ரகுவம்சம், 5.27.

என்கிறுர் காளிதாஸ மகாகவி. ரதம், ராக்கெட் என்ற இரு சொற்களிலும் ஒருவிதமான ஒற்றுமை காணப்படுகிறது அல்லவா? இப்படிச் செய்யும் பேராற்றல் படைத்த வஸிஷ்டர் த்ரிசங்குவின் விருப்பத்துக்கு இணங்காததில் ஒரு தத்துவம் இருக்க வேண்டும். அதுவேதான் முடிவில் நிலைத்தது.

### மித்ரஸஹன்

இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுள் இவனும் ஒருவன். ஸுதாஸன் என்பவருடைய பிள்ளை. அதனால் 'ஸௌதாஸன்' என்றும் இவனை வழங்குவர். இவன் காட்டில் ஒரு முறை வேட்டையாடச் சென்றபோது அங்கு ஒரு ராக்ஷஸனைக் கொன்றுவிட்டான். அந்த அரக்கனுடைய சகோதரன் இதனால் கோபங்கொண்டு வஞ்சம் தீர்த்துக்கொள்ளத் துடித்தான். அவன் மித்ரஸஹனிடம் சமையற்காரனாக மாறுவேஷம் போட்டுக்கொண்டு வேலை செய்து வந்தான். ஒரு நாள் வஸிஷ்டர் இந்த அரசனுடைய அரண்மனையில் உணவருந்தினார். சமையற்காரனாகிய ராக்ஷஸனுக்கு நல்ல சந்தர்ப்பம் வாய்த்தது; நரமாம்ஸத்தைப் பக்குவப்படுத்தி வஸிஷ்டருக்குப் பரிமாறினான். மித்ரஸஹனுக்கு இது தெரியாது. பாவம்! வஸிஷ்டருடைய கோரமான சாபம் இவன்மேல் விழுந்தது. "நரமாம்ஸத்தை எனக்கு உணவாக இட்டு அவமரியாதை செய்த நீ நரமாம்ஸத்தையே உண்ணும் ராக்ஷஸனாகப் போ" என்பது சாபம். "சரியான காரணம் இல்லாமலே என்னைச் சபித்ததற்காக நானும் பதில் சாபமிடுகிறேன்" என்று கையில் தீர்த்தத்தை எடுத்துவிட்டான் மித்ரஸஹன்.

இவனுடைய தர்மபத்தினி மதயந்தி துணிந்து முன்னே நின்று, "ஆசார்யரைச் சபிக்க வேண்டாம்" என்று வேண்டிக் கொண்டாள். இவன் அவ்வாறே சாபத்தை நிறுத்தினான். சாபத்துக்காகக் கையில் எடுத்த தீர்த்தத்தைத் தன் கால்களில் கொட்டிக்கொண்டான்.

### கல்மாஷபாதன்

சாபத்துக்காக எடுத்த ஜலம் அல்லவா? அதன் வேகம் அவன் கால்களைத் தாக்கியது. இரண்டு பாதங்களும் கறுத்து விட்டன. இதனால் 'கல்மாஷபாதன்' என்ற பெயர் இவனுக்கு ஏற்பட்டது. கோபவேகம் தணிந்ததும் தெளிந்த மனத்தில் வஸிஷ்டருக்கு உண்மை விளங்கியது. தவறு அரசனுடையதல்ல என்பதை அவர் உணர்ந்தார். அதனால் சாபத்தின் கடுமையைக் குறைத்தார். "பன்னிரண்டு வருஷங்கள் வரையில்தான் உனக்கு ராக்ஷஸத்தன்மை இருக்கும்; பிறகு பழையபடி மனுஷ்யத்தன்மை திரும்பிவிடும்" என்று கூறிச் சென்றார். சாபத்தின் வேகத்தினால் அரசன் உடனே பயங்கர

ராக்ஷஸனாக மாறிவிட்டான். பன்னிரண்டு வருஷங்கள் ராக்ஷஸனாகவே நரமாம்ஸபக்ஷகனாகத் திரிந்து, பதின்மூன்றும் வருஷத்தில் சாபம் தீர்ந்து, பழையபடி மனிதத்தன்மையை அடைந்தான். ஆனால், பாவம்! ராக்ஷஸனாக இருந்த காலத்தில் மற்றொரு கொடிய சாபத்தைப் பெற்று விட்டான். அதனால் இவனுடைய வாழ்க்கையே பயனற்றதாகிவிட்டது. பிறகு வஸிஷ்டர் தாமே அவனது குறையை நீக்கினார்.

## புத்திர சோகம்

வஸிஷ்டருடைய பிள்ளைகளுள் மூத்தவர் சக்தி என்பவர். கல்மாஷபாதன் வஸிஷ்டருடைய சாபத்தினால் ராக்ஷஸனாகி நரமாம்ஸபக்ஷணம் பண்ணிக்கொண்டிருந்த காலத்தில், சக்தியை கொன்று தின்றுவிட்டான். வஸிஷ்டர் புத்திர சோகத்தினால் மனம் கலங்கினார். அவருடைய உறுதி பறந்தோடியது. பிறந்தவன் என்றைக்காவது இறந்துதானே ஆக வேண்டும்? ஸர்வஜ்ஞரான வஸிஷ்டருக்கா இது தெரியாது? ஆனால் அவர் நாம் எதிர்பார்க்கிறபடி தேறியிருக்கவில்லை. பெரிதும் கலங்கினார். அதனால்தான் போலும் அவருடைய புத்திரசோகம் வேதங்களிலும் மற்ற சாஸ்திரங்களிலும் இடம் பெற்றுவிட்டது.

க்ருஷ்ண யஜுர் வேத ஸம்ஹிதை, ஏழாம் காண்டம், நாலாம் ப்ரச்நம், ஏழாம் அநுவாகம்—

वसिष्ठो हतपुत्रोऽकामयत विन्देय प्रजामभि सौदासान् भवेयमिति स एतमेकस्मान्नपञ्चाशमपश्यत् तमाहरत् तेनायजत ततो वै सोऽविन्दत प्रजामभि सौदासानभवत् ।

என்று தொடங்குகிறது. 'ஏகஸ்மாந்நபஞ்சாச:' என்பது ஒரு ஸத்ர யாகம். 49 நாட்களில் இந்த யாகம் அநுஷ்டிக்கப் பெறுவதனால் இந்த நாட்களின் எண்ணிக்கையையே இதற்குப் பெயராக வைத்துவிட்டனர். இதை அநுஷ்டித்தால் என்ன பயன் கிடைக்கும் என்பதை வேதம் உரைக்கிறது. புத்திர ஸந்தானம் உண்டாகும்; பகைவர்களை வெல்லலாம். இந்த யாகத்தைப் பண்ணி இந்தப் பயனை பெற்றவர்கள் ஏற்கெனவே சிலர் உண்டு என்று சிஷ்டாசாரத்தைப் பிரமாணமாகக் காட்டுகிறது வேதம். அதற்காகத்தான்

வஸிஷ்டருடைய வரலாறு இங்கே வந்தது. தம் புத்திரன் இறந்தவுடன் வஸிஷ்டருக்கு இரண்டு ஆசைகள் உண்டாயின— 1. மீண்டும் புத்திரனைப் பெறவேண்டும். 2. ஏற்கெனவே இருந்த தம் புத்திரனைக் கொன்றவர்களை வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டும். இதற்காக அவர் இந்த 'ஏகஸ்மாந்ந பஞ்சாசம்' என்னும் யாகத்தைப் பண்ணினார். தமது விருப்பம் நிறைவேறப் பெற்றார்.

## ரித்விக்-ப்ரஹ்மா

யாகங்களில் யஜமானனுக்கு உதவியாகக் காரியம் செய்பவர்கள் ரித்விக்குகள் எனப்பெறுவர். அந்த அந்த யாகங்களுக்கு ஏற்றவாறு இவர்களது எண்ணிக்கை மாறுபட்டிருக்கும். ஜ்யோதிஷ்டோமம் என்னும் ஸோமயாகத்தில் பதினாறு பேர் ரித்விக்குகள். அவர்கள் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். 4 X 4 = 16. ஒவ்வொரு பிரிவிலும் தலைமையானவர் ஒருவர். மற்ற மூவரும் அவருக்குத் துணை செய்வர். இந்தத் தலைமையான நால்வரும் 1. அத்வர்யு, 2. ஹோதா, 3. உத்காதா, 4. ப்ரஹ்மா எனப்பெறுவர். அதனால் அவர்கள் பெயராலேயே அந்த அந்தப் பிரிவு வழங்குகிறது, அத்வர்யுகணம், ஹோத்ருகணம் என்று.

இவர்களுள் அத்வர்யு, யஜுர்வதே ஸம்பந்தமான பொறுப்புக்களை ஏற்றுக்கொள்வார். ஹோதாவும் உத்காதாவும் முறையே ரிக்வேதம் ஸாமவேதம் இவற்றின் பொறுப்பை ஏற்பர். நான்காமவரான ப்ரஹ்மாவுக்கு இவர்களளவு பொறுப்பு இல்லை. இவர்கள் அனைவருடைய வேலைகளையும் மேற்பார்வையிடுவதுதான் அவருடைய வேலை. இது மிக மிகக் கஷ்டமானது; எல்லா வேதங்களையும் நன்கறிந்தவர்களே செய்யக்கூடியது. இந்த ப்ரஹ்மாவின் ஸ்தானம் வஸிஷ்டருக்கும் அவருடைய பரம்பரையைச் சேர்ந்தவர்களுக்கும் மட்டுமேதான் கொடுக்கப்பட வேண்டும். ப்ரஹ்மாவின் ஸாக்ஷாத் புத்திரர் அல்லவா வஸிஷ்டர்? வேதம் இதற்கு மற்றொரு காரணத்தையும் காட்டுகிறது.

ஸோமயாகத்தில் இந்திரன்தான் முக்கியமான தேவதை. அவனை ப்ரத்யக்ஷமாகக் கண்டவராம் வஸிஷ்டர். மற்ற ரிஷிகள் இவ்வாறு ப்ரத்யக்ஷமாக இந்திரனைக் காண முடியவில்லை. அப்படி நேராகக் கண்ட பொழுது இந்திரன் வஸிஷ்டருக்கு ரகசியமான ஒரு

விஷயத்தை உபதேசித்தான். 'ஸ்தோமபாகங்கள்' என்பவை அவன் உபதேசித்தவை. இந்திரன், "வஸிஷ்டரே, இந்த ஸ்தோமபாகங்களை அறிந்திருப்பதனுல் நீர் ரித்விக்குகளுள் முதன்மையான இடத்தைப் பெறுவீர். ஆனுல், என்னை மற்ற ரிஷிகளுக்குக் காட்டிக் கொடுக்காதீர்" என்று சொன்னுன். அதனுல் புரோஹிதருள் வஸிஷ்டர் முதன்மை பெற்ருர். ஆகையினுல் ப்ரஹ்மா எனப்பெறும் ரித்விக் ஸ்தானத்தில் வஸிஷ்டருடைய பரம்பரையைச் சேர்ந்தவர்களே நியமிக்கப்பட வேண்டும்.

ऋषयो वा इन्द्रं प्रत्यक्षं नापश्यन् तं वसिष्ठः प्रत्यक्षमपश्यत् सोऽब्रवीद् ब्राह्मणं ते वक्ष्यामि यथा त्वत्पुरोहिताः प्रजाः प्रजनिष्यन्तेऽथ मेतरेभ्य ऋषिभ्यो मा प्रवोच इति तस्मा एतान्स्तोमभागानब्रवीत् ततो वसिष्ठपुरोहिताः प्रजाः प्राजायन्त तस्माद् वासिष्ठो ब्रह्मा कार्यः ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 3.5.2.

## தோல்வி

கை வைத்த இடமெல்லாம் வெற்றிமேல் வெற்றியாகவே பெற்று வந்த வஸிஷ்டருக்குத் தோல்வியும் ஏற்பட்டுள்ளது. விச்வாமித்ரரும் ஜமதக்நியும் வஸிஷ்டருடன் போட்டியிட்டனர். 'விஹவ்யம்' என்னும் வேத மந்த்ரங்களை ஜமதக்நி முனிவர் தக்க இடத்தில் உபயோகித்தார். அதனுல் அவர் வென்ருர். வஸிஷ்டர் தோல்வியுற்ருர். வஸிஷ்டருடைய இந்த்ரியம் - வீர்யம் - எல்லாம் அழிந்துவிட்டது.

विश्वामित्रजमदग्नी वसिष्ठेनास्पर्धेताँ स एतज्जमदग्निर्विहव्यमपश्यत् तेन वै स वसिष्ठस्येन्द्रियं वर्यिमवृङ्क्त ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 3.1.7.

மஹான்களுக்கு வெற்றியிலும் தோல்வியிலும் மாறுபாடற்ற மனநிலையே இயல்பானது.

## சதிபதிகள்

வஸிஷ்டரும் அருந்ததியும் சதிபதிகளாவர். இருவரும் தனித்தனியாகவே பெருமை மிக்கவர். தம்பதிகளாகச் சேர்ந்ததனுல் அந்தப் பெருமை பல்லாயிரம் கோடி மடங்கு வளர்ந்து நிகரற்றதாகி

விட்டது. அருந்ததியினுல் வஸிஷ்டருக்கு ஏற்றமா, வஸிஷ்டரால் அருந்ததிக்கு ஏற்றமா என்று கேட்டால், இரண்டும் சரி என்றே பதில் கிடைக்கும். அருந்ததியும் வேதங்களில் முக்கியமான மந்த்ரங்களில் இடம் பெற்ற உத்தமி. இரண்டு இடங்களை இங்கே காட்டுவோம்.

सप्तर्षयः प्रथमां कृत्तिकानामरुंधतीं यद् ध्रुवताँ ह निन्युः ।
षट्कृत्तिका मुख्ययोगं वहन्तीयमस्माकमेधत्वष्टमी ।

— மந்த்ரப்ரச்நம், 1.9.7.

விவாஹ மந்த்ரங்களில் முக்கியமான இதில் அருந்ததி இடம் பெற்றிருக்கிருள். இரவு ஔபாஸந ஆரம்ப காலத்தில் துருவ நக்ஷத்திரம் காட்டுவது, அருந்ததி நக்ஷத்திரம் காட்டுவது என்ற வழக்கம் இன்றளவும் தொன்றுதொட்டு நடந்து வருகிறது. அதில் அருந்ததியைப் பார்க்கும்போது சொல்ல வேண்டிய மந்த்ரம் இது. மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் என்பவர்கள் ஸப்தரிஷிகள். இவர்களின் பத்தினிமார்களும் ஏழு பேர் உண்டு. அவர்களுக்குத் தனித்தனியான பெயர்களும் உண்டு. ஆனால் 'க்ருத்திகா' என்பது அவர்களுக்குப் பொதுப் பெயராக இதில் வழங்குகிறது. அருந்ததி ஏழாவது க்ருத்திகை. அவள்தான் சலன மற்றவள் என்பதை மற்ற ஆறு க்ருத்திகைகளும் ஸப்தரிஷிகளும் ஒப்புக் கொண்டனராம்.

அருந்ததியைக் காண்பிக்கும் மணமகன், "இந்த மணமகள் எட்டாவது க்ருத்திகையாக அருந்ததியின் உதாஹரணத்துடன் விளங்க வேண்டும். நானும் ஸப்தரிஷிகளுள் ஏழாமவரான வஸிஷ்டருடைய உதாஹரணத்துடன் எட்டாவது ரிஷியாக விளங்குவேன்" என்று சொல்லுகிருன். ஆயிரம் கோடி ஆண்டுகளாக அசைவற்றுக் காட்சியளிக்கும் ஸப்தரிஷிகள் எனப்படும் நக்ஷத்திரங்களைப் பார்த்து அதே நிலைமையை விவாஹ தினத்தில் ஆசைப்படும் மணமகன், மிக மிகச் சிறியதான - ஏழாவது நக்ஷத்திரமான - வஸிஷ்டருக்கு ஸமீபத்தில் காணும் அருந்ததி நக்ஷத்திரத்தைக் காண்பித்து, அந்த உதாஹரணத்தைக் கடைப்பிடித்து ஒழுகுமாறு தன் தர்மபத்தினிக்கு உபதேசம் செய்யும் அழகு ருசிகரமானது. அருந்ததி நக்ஷத்திரம் மிகவும் சிறியது; அதைப்

பார்ப்பது வெகு சிரமம். ஆனால் மந்த்ரத்தைச் சொல்லி அவசியம் பார்த்தே தீரவேண்டும். அருந்ததியைப் பார்க்க முடியாதபடி கண்ணின் பார்வைச் சக்தி குறைந்து போனால், அது ஒரு கெட்ட குறி என்றும், சீக்கிரத்தில் மரணம் நேரிடும் என்றும் வைத்திய சாஸ்திரகாரர்கள் சொல்லுகிறார்கள்.

வஸிஷ்டரை விட்டு ஒரு விநாடிகூட அருந்ததி பிரிந்திருந்ததில்லை. அவ்விருவரையும் சேர்ந்தேதான் காண முடியும். திலீப மகாராஜன் வஸிஷ்டரைப் பார்க்கப் போன பொழுது ஆசார்ய தம்பதிகளை ஒருங்கே கண்டு வணங்கினான் என்று காளிதாஸர் ரகுவம்சத்தில் கூறுகிறார்.

குமாரஸம்பவ காவியத்தில், பரமசிவன் பார்வதியைத் தனக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று ஸப்தரிஷிகளை நினைத்த மாத்திரத்தில், அவர்கள் அவ்விடத்துக்கு வந்துவிட்டதைக் கூறுகிறார் காளிதாஸ கவி. பெண் பேசுவதற்கு ஸப்தரிஷிகள் சென்றால், அவர்களுள் ஒருவராகிய வஸிஷ்டர் மட்டும் அருந்ததியுடனேதான் செல்ல வேண்டும்.

'தன் கணவருடைய திருவடிகளிலேயே கண்களை வைத்த வண்ணம் அந்த ஸப்தரிஷிகளின் நடுவில் அருந்ததி காணப்பட்டாள். ஸப்தரிஷிகளையும் அவளையும் பரமசிவன் ஸமானமான கௌரவபுத்தியுடன் பார்த்தார். ஆண் பெண் என்ற பாகுபாடு முக்கியமல்ல. பெரியோர்கள், நல்லொழுக்கமொன்றையே கௌரவத்துக்குக் காரணமாகக் கொண்டவர்கள்' என்று காளிதாஸர் கூறுகிறார்.

உத்தர ராமசரிதக் கதையில் வால்மீகி முனிவருடைய ஆச்ரமத்தில் வஸிஷ்டரும் அருந்ததியும் தங்கியிருந்தபோது, தற்செயலாக அங்கு வந்த ஜனகர் அருந்ததியை வணங்கினதும், அருந்ததி உபநிஷத் வாக்கியங்களைச் சொல்லி ஆசி கூறியதும் வெகு அழகு.

ராமாயண கதையில், தசரதருக்குப் புத்திரகாமேஷ்டி செய்து வைத்து, எம்பெருமான் ராமனைத் திருவவதாரம் செய்வதற்கு ஏற்பாடு செய்தவர் வஸிஷ்டரே. அதுமுதல் ராமாயண வரலாறு முழுவதும் இவரது திட்டப்படியே நடந்தது. முடிவில் ராம

பட்டாபிஷேகமும் இவர் கையாலேயே நடந்தது. ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்து, 'ராமராஜ்யம்' என்று இன்றும் ஜனங்கள் பெருமையாகச் சொல்லிக் கொள்ளும் ராஜ்ய நிர்வாஹத்தைத் தோற்றுவித்தவர் வஸிஷ்டரே. இக்ஷ்வாகுவம்சத்து அரசர்களின் ராஜ்யத்தில் மக்கள் ஸௌபிக்ஷமாக வாழ்ந்து வந்ததற்கு, அவர்களின் குலகுருவும் குலதெய்வமுமான வஸிஷ்டருடைய ப்ரம்மவர்ச்சஸமே காரணம்.

வஸிஷ்டரின் சரிதம் புனிதமானது. ஏராளமான நூல்களை இயற்றி இவர் உலகுக்கு நல்வழி காட்டியவர். இவ்வளவில் இதை நிறுத்திக்கொள்வோம்.

# சக்தி - பராசரர்

व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम् ।
पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम् ॥

வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம் ।
பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் ॥

வஸிஷ்டருடைய பேரரும், சக்தி என்பவரின் பிள்ளையுமான பராசர முனிவர், வியாஸருக்குத் தந்தையும், சுகப்ரஹ்மத்துக்குப் பாட்டனுமாவார். உலகப் பிரசித்தி பெற்ற ஐந்து முனிவர்களைத் தோற்றுவித்த இந்தப் புனிதமான குலத்தில், வரிசைக் கிரமத்தில் நடுநாயகமாக விளங்குகிறவர் பராசர பகவான். ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்ந ச்லோகம் இவருடைய பெருமையை அழகாக எடுத்துக்கூறுகிறது—

तत्त्वेन यश्चिदचिदीश्वरतत्स्वभाव-
भोगापवर्गतदुपायगतीरुदारः ।
संदर्शयन् निरमिमीत पुराणरत्नं
तस्मै नमो मुनिवराय पराशराय ॥

தத்த்வேந யச்சிதசிதீச்வரதத்ஸ்வபாவ-
போகாபவர்கததுபாயகதீருதார: ।
ஸந்தர்சயந் நிரமிமீத புராணரத்நம்
தஸ்மை நமோ முநிவராய பராசராய ॥

'சிறந்த புராண (விஷ்ணுபுராண)த்தைச் செய்தருளிய பராசர முனிவருக்கு நமஸ்காரம்' என்பது இதன் கருத்து. 'எத்தனையோ பேர் எத்தனையோ புராணங்களைச் செய்தருளியிருக்க, அதற்காக அவர்களை எல்லாம் நமஸ்காரம் பண்ணாமல் ஸ்ரீவிஷ்ணுபுராணம் செய்தமைக்காகப் பராசரருக்கு மட்டும் ஏன் நமஸ்காரம் பண்ண வேண்டும்? எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணத் தொடங்கின இடத்தில் இதெல்லாம் எதற்கு?' இவை போன்ற கேள்விகளுக்கு விடை கூறும் வகையில் இந்த ச்லோகத்தின் முற்பகுதி அமைந்திருக்கிறது.

ஒவ்வொருவரும் தவறுமல் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் சில. அவற்றைத் தெரிந்துகொள்வது சற்று கடினமாகவே இருக்கும். ஆனாலும் எப்படியாவது தெரிந்துகொண்டேயாக வேண்டும். அவற்றைப் பராசர பகவான் தமது ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஈடு இணையற்ற முறையில் எடுத்துரைக்கிறார். ஜீவாத்மா, ஜடப்பொருள், இறைவன், இவர்களது இயல்பு, ஸம்ஸார ஸௌக்யத்தின் தத்துவம், மோக்ஷம், அதன் உபாயம், வழி இவற்றை எல்லாம் பின்புள்ளாருக்கு எடுத்துக் காட்டுவதற்காகவே 'புராணரத்ந'மான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தைப் பராசர முனிவர் அருளினர். எவ்வளவு உதார குணம் இவருக்கு? இவர் காண்பித்துக் கொடுத்த எம்பெருமானைத் தானே ஸ்தோத்ர ரத்நத்தில் புகழ்கிறார் ஆளவந்தார்? அதனால் முந்துறமுன்னம் இவருக்கு நமஸ்காரம் செய்கிறார். ஸ்தோத்ரரத்ந பாஷ்யத்தில் இதன் உட்கருத்தை நன்கு விளக்கியுள்ளார் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன்.

பராசரர் ஒருவருக்கு மட்டுந்தான் இந்த நாவீறு. இதை மற்றவர்களிடம் காண முடியாது. எவ்வளவு கடினமான தத்துவங்களையும் தெளிவாகக் கூறும் ஆற்றல் இவருக்கு உண்டு. இதற்குக் காரணம் என்ன? தத்துவங்களில் தெளிவான - குழப்பமில்லாத - அறிவு இவருக்கு உண்டு. அதனால்தான் இவர் அவற்றைக் கூறும்போது மிகுந்த ஒளி வீசுகிறது. ஜ்ஞாந அநுஷ்டானங்கள் நிறைந்த குலத்தில் உதித்தமை, பிரம்மதேவனுடைய கொள்ளுப் பேரராகிய பெருமை முதலியவை மட்டும் இதற்குக் காரணமல்ல. புலஸ்த்யரும் வஸிஷ்டரும் இவருக்குக் கொடுத்த வரமும் இதற்குக் காரணமாம்.

'पुलस्त्यवसिष्ठवरप्रदानलब्धपरदेवतापारमार्थ्यज्ञानवत्तया प्रसिद्धः ।'

என்னும் பாஷ்யபங்க்தி காண்க. 'எது பரதெய்வம்?' என்னும் விஷயம் தானாகவே இவர் மனத்தில் தோன்றுமாறு புலஸ்த்யரும் வஸிஷ்டரும் இவருக்கு வரமருளினராம். எதற்காக அவர்கள் இவ்வாறு வரமருளினர்? இவருடைய வரலாறே இதற்கு விடை கூறவல்லது.

ஆண்டாளுடைய சரித்திரம் பெரியாழ்வாருடைய சரித்திரம். இவற்றுள் ஒன்றை அறவே மறந்து மற்றொன்றைக் கூற முடியாதவாறு போலவே இந்த ரிஷி குடும்பத்தாரின் சரித்திரமும்

ஒன்றுடன் ஒன்று பிணைப்புண்டிருக்கிறது. ஆதலின் வஸிஷ்டருடைய வரலாற்றைச் சிறிது பேச வேண்டியிருக்கிறது இவ்விடத்தில்.

## இளம் விதவை

வஸிஷ்டருடைய பிள்ளைகளுள் மூத்தவரும், ஸகல விதத்திலும் அவருக்கு ஏற்றவருமாக விளங்கினார், சக்தி என்பவர். இவரும் ரிக்வேத ப்ரஸித்தமானவர். இவர்தாம் பராசரமுனிவரின் தந்தையாவார். சக்தியின் மனைவியும் பராசரமுனிவரின் தாயுமான உத்தமி அத்ருச்யந்தீ என்பவள். இவள் பராசர முனிவரை கர்பத்தில் வைத்திருந்தபோதே, சக்தியையும் அவருடன் பிறந்த நூறு பிள்ளைகளையும் ராக்ஷஸன் கொன்று தின்றுவிட்டான். குலமே நிர்மூலமாக்கப்பட்டது. விச்வாமித்ரருடைய தூண்டுதலின் பேரில், கல்மாஷபாதன் என்னும் அரசனுக்கு ஏற்பட்ட சாபத்தைப் பயன்படுத்திக் கொண்டு ருதிரன் என்னும் ராக்ஷஸன் இவ்வாறு செய்தான். இந்தப் பூர்வோத்தரங்களை நன்கு உணர்ந்த மஹா விவேகியான வஸிஷ்ட முனிவர் யாரையும் பதிலுக்குச் சாபமிடவில்லை. கடல்போன்ற புத்திர சோகத்தை மனத்திலேயே தேக்கிக்கொண்டு தவித்தார். பற்பலவாறாக முயன்றும் அவரால் இறக்க முடியவில்லை. ஆனால் உயிர் வாழவும், மீண்டும் ஆசிரமத்துக்குத் திரும்பி வரவும் அவர் இணங்கவில்லை. அருந்ததியும் அவருடன் தவித்துக் கலங்கினாள். 'குலமே நிர்மூலமாகிவிட்டதே' என்னும் பெருங் கவலை அவ்விருவரையும் பீடித்தது. அப்போது, இளம் வயதில் கணவனை இழந்து உள்ளம் குமுறிக்கொண்டிருந்த உத்தமியான அத்ருச்யந்தீ தன் துயரத்தைப் பெரிதாக்கிக்கொள்ளாமல், துணிந்து விவேகத்துடன் தன் மாமனாரையும் மாமியாரையும் சாகாமல் காப்பாற்றினாள். அவளால்தான் வஸிஷ்டரும் அருந்ததியும் உயிருடன் மீண்டனர்.

அவள் தன் மாமனாரைப் பணிந்து வேண்டிக்கொண்டாள். அவருடைய முக்கியமான குறை சரியானதன்று; உண்மையை உணராததனால் வந்ததே அது என்பதை அறிந்தாள். "குலம் நிர்மூலமாகிவிடவில்லை. என் கணவர் இறந்த போது நான் கருவுற்றிருந்தேன். இன்னும் பிரஸவிக்கவில்லை. என் கர்பத்தில் இந்த வம்சத்துக்கு ஆதாரமான மஹாஜ்ஞாநியான குழந்தை

வளர்ந்து வருகிறது. கணவரை இழந்த துக்கத்தினால் நான் ஏற்கெனவே ஏங்கித் தவிக்கிறேன். நீங்களும் என்னைக் கைவிட்டால், க்ரமமாகக் கர்பவாஸம் பூர்த்தியாகி இந்தக் குழந்தை நல்ல முறையில் பிரஸவமாகாமல் மாய்ந்துவிடும். அப்போதுதான் குலம் உண்மையில் அழிந்துவிடும். ஆதலால் நீங்கள் இந்தத் தற்கொலை முயற்சியை விட்டு, ஆசிரமத்துக்குத் திரும்பி வந்து என்னைக் காப்பாற்றுங்கள். நம் குலம் செழித்து ஓங்கி வளரும்" என்று கூறினாள். வஸிஷ்டருக்கும் அருந்ததிக்கும் இது ஆறுதலை அளித்தது. இருவரும் தம் மாற்றுப் பெண்ணுடன் ஆசிரமத்துக்குத் திரும்பினர். இது முற்றும் உண்மைதானா என்பதை மட்டும் மீண்டும் மீண்டும் ஆவலுடன் விசாரித்துக் கொண்டே இருந்தனர்.

## கருவிலே திருவுடையார்

ஆண்டுகள் பல ஓடின; ஆனால் அத்ருச்யந்தீ பிரஸவிக்கவில்லை. குழந்தை கர்பத்திலேயே குறைவின்றி வளர்ந்து வந்தது. பத்து மாதங்களில் பிரஸவமாகி யிருந்தால் ஏழாம் வயதில் உபநயனம் பண்ணி வேதங்களை அத்தியயனம் பண்ண வேண்டியிருக்கும். அந்த ஸமயம் அனைத்தும் கர்பத்திலேயே கழிந்துவிட்டது இந்தக் குழந்தைக்கு. காலம் செய்வதைக் கோலம் செய்யுமா? ஸகல வேதங்களும் ஏழாவது வருஷத்தில் கர்பத்திலுள்ள குழந்தைக்குத் தாமாகவே தோன்றிவிட்டன. வம்சத்தின் மஹிமை சாமானியமானதா? ஸர்வஜ்ஞனாகவே குழந்தை கர்பவாஸம் செய்து வந்தது. ஒருநாள் வஸிஷ்டர் முன்னே செல்ல, அவருடைய மாற்றுப் பெண்ணான அத்ருச்யந்தீ அவரைத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தாள். முன்னே சென்றுகொண்டிருந்த வஸிஷ்டர் திடீரென்று அசைவற்று நின்றுவிட்டார். அத்ருச்யந்தீயும் நின்றாள். வஸிஷ்டர் சற்று உன்னிப்பாகக் கவனித்து, "என் பின்னால் யாரோ இனிய குரலில் வேதங்களைத் தப்பாமல் ஓதி வருவதைக் கேட்கிறேன். காலஞ்சென்ற என் குமாரன் சக்தி சிறுவயதில் வேதமோதிய வகையிலேயே இந்தக் குரல் அமைந்துள்ளது. ஆனால் திரும்பிப் பார்த்தால் ஒருவரையும் காணவில்லையே! இது என்ன அதிசயம்?" என்று கேட்டார். அத்ருச்யந்தீ அவருக்கு உண்மையை விளக்கி, "என் கர்பத்தில் இருக்கும் குழந்தையே இவ்வாறு வேதமோதுகிறது.

அடிக்கடி இந்த வேத ஒலியை நான் கேட்பது வழக்கம். காலம் வந்துவிட்டதனால் தாமாகவே ஸகல வேதங்களும் உங்கள் பேரப் பிள்ளைக்குத் தோற்றமளித்துவிட்டன" என்று கூறினாள். வஸிஷ்டருக்கு மிக மிகப் பெருமையாகவே இருந்தது.

## பொருத்தமான பெயர்

வருஷங்கள் பன்னிரண்டு கழிந்தன. பிறகு அத்ருச்யந்தீ பிரஸவித்தாள். ப்ரஹ்மவர்ச்சஸம் ததும்பும் அந்தக் குழந்தைக்கு ஜாதகர்மம் நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களை ஸாக்ஷாத் வஸிஷ்டரே செய்தார். 'பராசரர்' என்று அவர் தம் பேரனுக்குப் பெயரிட்டார். பெயரிடுவது என்பது அவருக்குத் தனிப் பண்பல்லவா? எத்தனை பேருக்கு மிக மிகப் பொருத்தமான பெயர்களை இட்டு, அந்தப் பெயரின் மூலமே அவர்களது வரலாறு முழுவதையும் உணர்த்திவிடும் ஆற்றல் பெற்றுப் பிரசித்தி பெற்றிருக்கிறார் அவர்? தம் பேரனுக்கும் அவ்வாறே பெயரிட்டிருக்கிறார்.

परासुः स यतस्तेन वसिष्ठः स्थापितो मुनिः ।
गर्भस्थेन ततो लोके पराशर इति स्मृतः ॥

பராஸு: ஸ யதஸ் தேந வஸிஷ்ட: ஸ்தாபிதோ முநி: ।
கர்பஸ்தேந ததோ லோகே பராசர இதி ஸ்ம்ருத: ॥

இறந்து போவதாகத் தீர்மானித்துவிட்ட வஸிஷ்டர் இவரால்தான் தடுத்து நிறுத்தப்பட்டார். அதாவது, இவர் கர்பத்தில் இருப்பதை அறிந்து அதன்மூலம் வஸிஷ்டருடைய முடிவு மாற்றிக்கொள்ளப்பட்டது. அதனால்தான் இவருக்குப் 'பராசரர்' என்று பெயர் வழங்குகிறது என்பது ஒரு நிர்வாஹம். கணவனை இழந்த அத்ருச்யந்தீ, தன்னைக் காப்பாற்ற வேண்டிய வஸிஷ்டரும் சாவதற்குத் துணிந்துவிட்டதைக் கண்டு மனம் நொந்துபோய்த் தன் வயிற்றில் இருந்த சிசுவை இரு கைகளாலும் அடித்துக் கொன்று, தானும் இறந்துவிட முயன்றாளாம். இதைக் கண்ட வஸிஷ்டர் அவளை அவ்வாறு செய்யவொட்டாமல் தடுத்து நிறுத்தினாராம். சிதறிப்போக இருந்த கர்பம் அழிந்து போகாமல் அதனால் காப்பாற்றப்பட்டதாம். இந்தக் கருத்தை உணர்த்துவதாகப் 'பராசரர்' என்னும் பெயர் இவருக்கு அமைந்ததாம். இது மற்றொரு நிர்வாஹம். இவ்விரண்டும் வஸிஷ்டர் பிரத்தியக்ஷமாக அநுபவித்த விஷயங்களை ஆதாரமாகக் கொண்டவை.

மற்றும் காண்மின். பிறரை (பகைவர்களை)ப் பிறந்தவுடனே தம் தவ வலிமையினாலும் யாகத்தினாலும் சிதறிப் போகும்படி செய்துவிட்டவர் என்னும் காரணத்தினாலும் இவருக்குப் பராசரர் என்று பெயராயிற்றாம். 'பராந் ஆச்ருணாதீதி பராசர:' இது மூன்றாவது நிர்வாஹம். ஸ்தோத்ரரத்ந பாஷ்யத்தில் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் இன்னுமோர் அழகிய நிர்வாஹத்தையும் அருளிச்செய்கிறார். அற்புதமான தர்க்க வாதங்களின் மஹிமையினால் வேதத்துக்குப் புறம்பான துர்மதஸ்தர்களை வென்று, தமது மதத்தை நிலைநாட்டியவர் என்ற காரணத்தினால் இவருக்கு பராசரர் என்ற பெயராயிற்றாம். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தின் ரஸமறிந்து இவ்வாறு ஒரு நிர்வாஹம் செய்தருளினார் தூப்புற் குலமணி. பெயரிடும்போதே, பிற்காலத்தில் நிகழ இருக்கும் விஷயங்களையும் கருத்தில் கொண்டுதான் வஸிஷ்டர் பொருத்தமாகப் பெயரிட்டார். அவர் முக்காலமுணர்ந்தவராயிற்றே. இவ்வாறான நான்கு நிர்வாஹங்களும் இந்தப் பெயருக்கு மிகவும் பொருத்தமாகவே அமைந்தன.

## வஞ்சம் தீர்த்தல்

மேலே கூறிய மூன்றாவது நிர்வாஹம் பற்றிச் சிறிது விளக்கம் தர வேண்டியிருக்கிறது. பிறந்த குழந்தை பராசரர், தம் தந்தையிடம் பேரன்பு பூண்டிருந்தார். பாவம்! அவர் அரக்கனால் கொன்று தின்னப்பட்ட விவரம் இவருக்கு எப்படித் தெரியும்? வீட்டில் தமக்கு ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்தருளிய வஸிஷ்டரே தம் தந்தை என்று எண்ணினார் இந்தக் குழந்தை. சாதாரணமாகத் தந்தைதானே இதை எல்லாம் சிசுவுக்குச் செய்வது வழக்கம்? பராசரரும் அதே ரீதியில் வஸிஷ்டரையே தம் தந்தையாக எண்ணினார். அதனால் வஸிஷ்டரை அவர் 'அப்பா, அப்பா!' என்றே அழைப்பது வழக்கம். வஸிஷ்டரும் இதைத் தடை பண்ணாமலே இணங்கி வந்தார். சிறு குழந்தையின் களங்கமற்ற உள்ளத்தில் அதிர்ச்சி தரும் உண்மையை அவசர அவசரமாகத் திணிக்க அவர் துணியவில்லை. ஆனால் குழந்தை ஏமாற்றப்பட்டு வருவது தாய்க்குப் பெரும் மனவேதனையை அளித்தது. அவள் பொறுக்க மாட்டாமல் ஒரு நாள் குழந்தையினிடம் உண்மையைக் கூறிவிட்டாள்.

मन्यसे यं तु तातं त्वं नैव तातस्तवानघ ।
आर्य एष पिता तस्य पितुस्तव मनस्विनः ॥

மந்யஸே யம் து தாதம் த்வம் நைவ தாதஸ் தவாநக ।
ஆர்ய ஏஷ பிதா தஸ்ய பிதுஸ் தவ மநஸ்விந: ॥

"அப்பா, நீ எப்போதும் 'அப்பா அப்பா' என்று பாசத்துடன் கூப்பிடுகிறாயே; இந்த முனிவர் உன் அப்பா அல்லர். உன் தந்தை ராக்ஷஸனால் கொன்று தின்னப்பட்டார்" என்று மனம் முறிந்து அழுதுகொண்டே அவள் சொன்னாள். "அப்பா என்று நீ அழைக்கும் இந்த மாமுனிவர் உன் பாட்டனார்தாம்; தந்தையல்லர்" என்று சொன்னாள்.

मा तात तात तातेति न ते तातो महामुनिः ।
रक्षसा भक्षितस्तात तव तातो महामुनिः ॥

மா தாத தாத தாதேதி ந தே தாதோ மஹாமுநி: ।
ரக்ஷஸா பக்ஷிதஸ் தாத தவ தாதோ மஹாமுநி: ॥

இப்படி உண்மையை உணர்ந்த குழந்தை பராசரா, எதிர்பார்த்தபடியே பெரும் ஏமாற்றமடைந்தார்; கடுஞ்சினம் கொண்டார். தவத்தின் சக்தி கிளர்ந்தெழுந்தது. 'என் அருமைத் தந்தை அநியாயமாகக் கொல்லப்படுவதற்கு இடமளித்த இம் மண்ணுலகம் முழுவதையுமே நாசம் செய்து விடுகிறேன்' என்று ஸங்கல்பம் செய்துகொண்டார். உலகமே அஞ்சி நடுங்கியது. அவரை அணுகி மனத்தை மாற்ற எவரும் துணியவில்லை. வஸிஷ்டர்தாம் இதைச் செய்தார்.

### ஔர்வர் கதை

யார் சொன்னாலும் கேட்க மாட்டார் பராசரர். அவருடைய கோபம் அப்படிப் பொங்கிக் கொண்டிருந்தது. இதை உணர்ந்த வஸிஷ்டர் ஒரு பழைய கதையைச் சொன்னார். குழந்தை ஸ்வாரஸ்யத்துடன் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தார். "குழந்தாய், முன்னொரு காலத்தில் ப்ருகு வம்சத்தைச் சார்ந்த முனிவர்கள் க்ருதவீர்யன் என்னும் அரசனுடைய வம்சத்தாருக்குப் புரோகிதர்களாக இருந்தனர். நாளடைவில் புரோகிதர்களிடம் பெருஞ்செல்வம் குவிந்தது. அரச வம்சத்தினர் செல்வமிழந்தனர்.

தம்புரோகிதர்களிடம் இருந்த செல்வத்தை பலாத்காரமாகப் பறிக்க முயன்றனர் க்ஷத்திரியர்கள். இதை உணர்ந்த புரோகிதர்கள் அதைத் தமது வீட்டின் உட்புறத்தில் மண்ணை வெட்டிக் குழி தோண்டிப் புதைத்து மறைத்து வைத்துவிட்டார்கள். க்ஷத்திரியர்கள் எப்படியோ தேடியலைந்து அந்தச் செல்வத்தைக் கண்டுபிடித்து அபகரித்துக் கொண்டனர். இதனால் பெரும் போராட்டம் மூண்டது. ப்ருகு வம்சத்தைச் சார்ந்த முனிவர்கள் அனைவரும் பூண்டோடு க்ஷத்திரியர்களால் கொன்று குவிக்கப்பட்டனர். கர்பத்தில் இருந்த சிசுக்களைக்கூட மறக்காமல் அவர்கள் கொன்றுவிட்டனர். ப்ருகு வம்சத்தைச் சேர்ந்த கர்பிணிகள் அனைவரும் நடுநடுங்கிப் போயினர். ஒரே ஒரு பெண் மகா தைரியசாலி. தன் வயிற்றில் இருந்த கர்பம் பிறருக்குத் தெரியாமல் இருக்கும்படி சாமர்த்தியமாக எப்படியோ அதை இடம் மாற்றிக்கொண்டாள். அதைத் தன் தொடையில் வைத்துக்கொண்டு காப்பாற்றினாள்.

பராசரர் ஆவலுடன் கேட்கிறார் கதையை. வஸிஷ்டர் தொடர்ந்தார்— அப்படி மறைத்து வைத்த கர்பத்தையும் க்ஷத்திரியர்கள் எப்படியோ ஊகித்து அறிந்து கொண்டனர். உடனே அந்தக் கர்ப்பத்தையும் அடித்துக் கொல்ல முயன்றனர். ஆனால் உருவாக - மூளியில்லாமல், தொடையிலிருந்து குழந்தை பிறந்துவிட்டது. அது சாகவில்லை. மஹாதேஜஸ்வியான அந்தக் குழந்தையைக் கண்ணால் கண்ட க்ஷத்திரியர்கள் அத்தனை பேரும் அதன் தேஜஸ்ஸினால் தாக்கப்பட்டுக் கண்பார்வையை இழந்து குருடராயினர். குழந்தை ஒரு குறைவுமின்றி ஓங்கி வளர்ந்தது. 'தொடையிலிருந்து பிறந்தது' என்னும் கருத்தை உணர்த்தும் வகையில் அந்தக் குழந்தைக்கு 'ஔர்வர்' என்றே பெயர் இட்டனர். அந்தக் குழந்தை தாயின் தொடையில் கர்பவாஸம் செய்தது எத்தனை வருஷங்கள் தெரியுமா? நூறு வருஷங்கள். பிறக்கும்போதே ஸகல வேதங்களையும் கற்றுணர்ந்தவராகவும் மகாதேஜஸ்வியாகவும் இருந்தார் அவர். பராசரர் கதையை ஊன்றிக் கேட்கிறார்.

வஸிஷ்டர் தொடர்ந்து சொன்னார்— ஔர்வருக்கு உண்மை விளங்கியது. தம் தந்தையும் வம்சத்தவர்களும் அநியாயமாகக் கொன்று குவிக்கப்பட்டதையும், தம் தாய்மார்கள் தலை

விரிகோலமாகத் திக்கற்ற நிலையில் அலறியதையும், இவ்வுலகில் யாரும் இந்த அநியாயத்தைத் தடுத்து அடக்காததையும் எண்ணிப் பார்த்தார். கோபம் பொங்கியெழுந்தது. வஞ்சம் தீர்த்துக் கொள்ள அவருக்குச் சக்தி இல்லையா என்ன? தமது தவ வலிமையை உபயோகித்து இவ்வுலகத்தையே அழிக்க முனைந்தார் ஔர்வர். அவரை யாராலும் அடக்க முடியவில்லை. பிரபஞ்சமே நாசமாகிவிடும்போல் ஸ்திரமற்ற தன்மை தோன்றியது. அவருடைய பித்ருக்கள் அனைவரும் பித்ருலோகத்திலிருந்து அவரது இருப்பிடத்துக்குவந்து சேர்ந்தனர். அவர்கள்தாம் அவரைத் தடுத்து நிறுத்தினர்.

"அவர்கள் மட்டும் ஔர்வருடைய கோபத்தை எவ்வாறு தணியும்படி செய்தனர்?" பராசரருடைய மனத்தில் இந்தக் கேள்வி எழுந்தது.

வஸிஷ்டர் தொடர்ந்து சொன்னார்— அவர்கள், "குழந்தாய், ஔர்வனே, எங்களை க்ஷத்திரியர்கள் அடித்துக் கொன்றதற்காக வஞ்சம் தீர்த்துக்கொள்வதுதானே உன் உத்தேசம்? அப்படியானால் இதை நீ கைவிட வேண்டியதுதான். இந்த நிகழ்ச்சி ஏற்பட்டதற்குக் காரணம் நாங்களே. நாங்களே இதற்குப் பொறுப்பாளிகள்; க்ஷத்திரியர்கள் அல்லர்" என்றனர். பித்ருக்கள் தொடர்ந்து, "எல்லையற்ற ஆயுள் காலத்தை ஒருவாறாக முடித்துக்கொண்டு புண்ய லோகங்களில் சென்று வஸிக்க விரும்பினோம். மானிட உடல் அதற்குத் தடையாக இருந்தது. இதைத் தற்கொலை செய்து கொண்டு அழித்துக்கொள்வது மிகக் கொடிய பாவமாகும் என்பதையும் யாம் உணர்வோம். அதனால்தான் உலகப் போக்குக்கு ஏற்றதாக ஒரு சந்தர்ப்பத்தைத் தோற்றுவித்தோம். அதன் பயனாகவே நாங்கள் இவ்வாறு கொல்லப்பட்டோம். இது முன்கூட்டியே திட்டமிட்ட நிகழ்ச்சி. இதற்காக நிரபராதியான உலகத்தை நீ அழிக்க முற்படுவது தகாது" என்று உண்மையை விவரித்துக் கூறினர்.

ஔர்வருடைய மனத்தில் இது பதிந்தது. உடனே அவர் தம் செயலை நிறுத்திவிட்டார். உலகம் ஒருவாறாகத் தப்பித்துக் கொண்டது. ஆனால் அவருடைய கோபத்தீயின் உக்கிரம் தணியவில்லை. அதற்கு ஒரு போக்குவீடு வேண்டியிருந்தது

அவருக்கு. ஸமுத்திர ஜலத்தில் அதை விடுமாறு பித்ருக்கள் பணித்தார்கள். அவர் அவ்வாறே செய்து, தெளிந்த மனத்தைப் பெற்ருர். ஏற்கெனவே அவரது தேஜஸ்ஸின் வேகத்தினுல் கண்பார்வையிழந்த க்ஷத்திரியர்கள் அவரை வணங்கி, அவரது அருளினுல் மீண்டும் தமது கண்பார்வையைப் பெற்றனர்.

வஸிஷ்டர் தொடர்ந்து, "குழந்தாய் பராசரா, பொறுமையே பெரிது. அதிலும், மிகுந்த சக்தியுள்ளவர்களிடம் பொறுமை மிக மிக அவசியம். இல்லாவிட்டால் உலகில் யாரும் நிம்மதியாக வாழ முடியாது. நீ இவ்வுலகை அழித்து விட்டால் அதனுல் உன் தந்தை எழுந்து வந்துவிடுவாரா? ஏதோ தவறு நடந்துவிட்டது. நீ அதை மறந்து மன்னித்து விடு" என்ருர். ஔர்வருடைய உதாஹரணம் தமது நிலைமைக்குப் பொருத்தமானதாகவே இருப்பதாகக் குழந்தை பராசரருக்குத் தோன்றியது. உலகை அழிக்கும் முயற்சியை அவர் கைவிட்டார்.

### ராக்ஷஸ யாகம்

ஆனுல் பராசரருடைய கோபம் தணியவில்லை. அவர் தந்தை அநியாயமாகக் கொல்லப்பட்டார். வல்லமையுள்ளவரான பராசரர் ஏன் பழிக்குப் பழி வாங்காமல் இருக்க வேண்டும்? உலகம் முழுவதையும் அழிக்க வேண்டாம்; தந்தையைக் கொன்று தின்ற ராக்ஷஸப் பூண்டு ஒன்றுகூட இல்லாதவாறு செய்துவிட வேண்டும் என்னும் துணிவு பராசரருக்கு உண்டாயிற்று. த்ரேதாக்நிகள் யாகவேதியில் ஜ்வலிக்கத் தொடங்கின. நான்காவது அக்கினிபோல் அவற்றின் நடுவில் பராசரர் அமர்ந்தார். ராக்ஷஸ இனமே அழிந்து போகும்படியான மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே ஹோமங்களைச் செய்தார்.

பராசரர் ஹோமம் செய்ய ஆரம்பித்ததும் உலகில் எங்கெங்கோ மூலைமுடுக்குகளில் இருந்த ராக்ஷஸர்கள் எல்லாரும் உடனே மாண்டு போயினர். வயது முதிர்ந்தவர்களும் சிறு வயதினர்களும், பெண்களும் குழந்தைகளும் கூட்டங் கூட்டமாக ராக்ஷஸர்கள் செத்து மடிந்தனர். இதை வஸிஷ்டர் பார்த்துக்கொண்டே இருந்தார். ஆனுல் குழந்தையைத் தடுக்கவில்லை. சொன்னுல் தமது மதிப்பு கெட்டுவிடுமோ என்னும்

அச்சம் அவருக்கு. ஒரு தரந்தான் தாக்ஷிண்யம் கௌரவம் மரியாதை எல்லாம். அளவுக்கு மிஞ்சினால்? அதனால் வஸிஷ்டர் வாய் திறவாமல் இருந்துவிட்டார்.

## புலஸ்த்யர் வருகை

இப்படி ராக்ஷஸப் பூண்டு பிரபஞ்சத்திலேயே அடியோடு அழிந்துபோவதை புலஸ்த்யர் கவனித்தார். பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலத்தில், பிரம்மாவின் புதல்வர்களாகத் தோன்றிய ப்ரஜாபதிகள் பதின்மருள் புலஸ்த்யரும் ஒருவர். ராக்ஷஸ இனத்தைப் படைத்து உலகில் பரப்புவதற்கான பொறுப்பு புலஸ்த்யரிடம்தான் ஒப்படைக்கப்பட்டது. தம் மக்கள் கூட்டங் கூட்டமாகச் செத்து மடிவதை அவரால் சகிக்க முடியவில்லை. முரட்டுப் பிடிவாதக்காரரான சிறுவர் பராசரரைத் தமது தவ மகிமையைக் கொண்டு எதிர்த்துப் போராடும் அளவுக்குப் புலஸ்த்யருக்கும் தைரியமில்லை. அதனால் நேரில் சென்று சொல்லிச் சமாதானப்படுத்தலாமென்று எண்ணி, ராக்ஷஸயாகம் நடக்குமிடம் தேடி வந்தார். வந்ததும் நேராக வஸிஷ்டரையும் துணையாகக் கொண்டு பராசரரை அணுகி யோகக்ஷேமம் விசாரித்தார். "ராக்ஷஸப் பூண்டை அழிப்பது தர்மமல்ல. இந்த யாகத்தை இவ்வளவில் நிறுத்த வேண்டும். இதுவரை போனது போகட்டும். இனியாவது கொஞ்சநஞ்சம் எஞ்சியிருப்பவர்கள் பிழைத்துப் போகட்டும். ஒரு ராக்ஷஸன் உன் தந்தையைக் கொன்று தின்றதற்காக அந்த இனமே குற்றவாளியாகிவிடாது. நிரபராதிகளைத் தக்க காரணமின்றிக் கொன்று குவிப்பது வெறுக்கத் தக்க தீய செயலாகும்" என்று பராசரரிடம் கூறியாகத்தை நிறுத்தச் சொன்னார். ஆனால் பராசரர் இதை மதிக்கவில்லை.

## யார் குற்றவாளி?

புலஸ்த்யர், "சிறு மாமுனியே! உன் தந்தையை ஓர் அரக்கன் கொன்று தின்ற குற்றத்துக்காகத்தானே நீ இவ்வாறு கோபங் கொண்டு துடிக்கிறாய்? இதில் பொதிந்துள்ள உண்மையை அவஸரத்தில் நீ உணரத் தவறிவிட்டாய். நான் அதை உனக்குச் சொல்கிறேன், கேள். உன் தந்தைதாம் குற்றம் புரிந்தவர். ராக்ஷஸன் பேரில் குற்றம் ஏதுமில்லை. இந்த உண்மையை உணர்ந்து நீ இந்த ராக்ஷஸயாகத்தை நிறுத்து" என்றார்.

பராசரர் செவி சாய்த்துக் கேட்க ஆரம்பித்தார். புலஸ்த்யர் தொடர்ந்து சொன்னார்.

கல்மாஷபாதன் என்னும் அரசன் காட்டில் வேட்டையாடிக் களைத்துப் போய் விடாய்த்துத் தண்ணீரைத் தேடி ஓர் ஒற்றையடிப் பாதையில் போய்க்கொண்டிருந்தபோது, உன் தந்தை சக்தி அதே வழியில் எதிர்ப்புறத்திலிருந்து வந்து கொண்டிருந்தார். வழியை விட்டு விலகிச் செல்லுமாறு அரசன் கூறினான். உன் தந்தை அவ்வாறு செய்யவில்லை. "நீதான் எனக்கு வழியை விட்டு ஒதுங்கிப் போ" என்றார். அரசனுக்குக் கோபம் வந்தது. நாட்டிலுள்ள பிரஜை அரசனுக்கு மரியாதை செலுத்த வேண்டியதன் அவசியத்தை அவன் எடுத்துரைத்தான். "சாதாரணமான நாட்டு மக்களுக்குத்தான் இந்த விதி செல்லும். வேதங்களைக் கசடறக் கற்றுணர்ந்த அந்தணர்களுக்கு அரசன்தான் மரியாதை செலுத்த வேண்டும்" என்று உன் தந்தை வாதம் செய்தார். வார்த்தை தடித்தது. குதிரையை அடிப்பதற்காகக் கையில் வைத்திருந்த கசையினால் அரசன் உன் தந்தையை ஓங்கி ஓர் அடி அடித்துவிட்டான். அதனால் துடிதுடித்துப் போனார் அவர். "ராக்ஷஸனைப்போல் க்ரூரமாக என்னை அடித்த நீ ராக்ஷஸனாகவே போவாயாக" என்று பயங்கரமான சாபமிட்டார். சாதாரணமான சிறு விஷயம் இப்படிப் பிரம்மாண்ட ஸ்வரூபத்தை யடைந்தது.

ராக்ஷஸனாக மாறிய அரசனைக் கண்டு அஞ்சி அனைவரும் ஓடிவிட்டனர். சாபத்தின் பயனாகத் தோன்றின ராக்ஷஸத் தன்மைக்கு உன் தந்தையே முதலாவது பலியானார். அவருடன் பிறந்த தம்பிமார்கள் நூறு பேரும் தொடர்ந்து கொல்லப்பட்டனர். இதுதான் உண்மையாக நடந்தது. குற்றம் முழுவதும் ராக்ஷஸன் மேலேயே சுமத்தப்படுவது சரியல்ல என்பதை இனியாவது நீ உணர வேண்டும்.

பராசரர் கவனித்துக் கேட்கிறார். புலஸ்த்யர் தொடர்கிறார்.

## குடிப் பகை

உங்கள் குடிக்கும் விச்வாமித்ரருக்கும் வேரூன்றிய பகைமை உண்டு என்பதை நீ உணர வேண்டும். கல்மாஷபாதனுக்குச் சாபம் கிடைத்த ஸமயத்தில் அருகிலேயே மறைந்திருந்தார் விச்வாமித்ரர். சாபம் தோன்றியவுடன் ஒரு கொடிய ராக்ஷஸனை அவர் அழைத்து,

அரசன் மேல் ஆவேசமாகப் புகுந்துகொள்ளச் செய்துவிட்டார். அதனால்தான் அவ்வரசன் உன் தந்தையையும் அவருடன் பிறந்த நூறு பேரையும் கொன்று தின்றுவிட்டான். விச்வாமித்ரருடைய விருப்பம் ஈடேறியது. அரக்கன் ஆவேசம் பண்ணுமலிருந்தால், வெறும் சாபத்தினுல் மட்டும் அரசன் இவ்வளவு இழிவான செயலைப் புரிந்திருக்கமாட்டான். 'நம் குல புரோகிதர்; ஆசார்யரான வஸிஷ்டருடைய மூத்தகுமாரர்; ஸாங்க வேதாத்யயனம் செய்தவர்; அநுஷ்டான சீலர்; மகாதபஸ்வி' என்பதை அறவே மறந்து அவரைக் கொன்று தின்றுவிட்டான் என்றுல் நீயே பார்த்துக்கொள். அரசன் மட்டும் என்ன, மேற்கூறிய யோக்யதாம்சங்களில் ஏதாவது தாழ்ந்தவனு? அதனுல் இந்தக் கோரமான நிகழ்ச்சிக்கு, ராக்ஷஸனுடைய ஆவேசமே காரணம். அதைத் திட்டமிட்டுச் செய்து வைத்தவர் விச்வாமித்ரரே. இதையும் நீ கவனிக்க வேண்டும்.

பராசரருடைய கோபக்கனல் சிறிது தணிய ஆரம்பித்தது. புலஸ்த்யர் தொடர்ந்தார்.

## வஸிஷ்டரின் பொறுமை

ரிஷிகுமாரனே! இந்த விஷயங்கள் யாவும் நடந்த போது நீ தாயின் கர்ப்பத்தில் ஸுகமாக வாஸம் பண்ணிக் கொண்டிருந்தாய். வெளியுலகத்தில் தோன்றியவுடன் அரை குறையாகக் காதால் கேட்டதை வைத்துக்கொண்டு இப்படித் துள்ளிக் குதிக்கிறுய். இதோ என் பக்கத்தில் இருக்கும் உன் பாட்டனுராகிய வஸிஷ்டர் இந்த நிகழ்ச்சிகளை உடனிருந்து பார்த்தவர். தம்மைப் போலவே ஸகல விதத்திலும் சிறந்தவர்களான நூறு பிள்ளைகளையும் பறிகொடுத்தபோது இவருடைய துயரம் எவ்வாறுக இருந்திருக்கும் என்பதையும் நீ நினைத்துப் பார்க்க வேண்டும். அப்போது இவர் என்ன செய்தார் தெரியுமா? கடுமையான பதில் நடவடிக்கை எடுத்து, குற்றவாளிகளை நிர்மூலமாக்கிவிட முடியாதா என்ன இவருக்கு? அப்படி ஒன்றுமே செய்யவில்லை இவர். எல்லை கடந்த பொறுமையுடன் கல்மாஷபாதனையும் விச்வாமித்ரரையும் அறவே மன்னித்துவிட்டார். காரணம்? தம் பிள்ளையின் பேரிலும் குற்றம் இருக்கிறது என்பதை இவர் அவ்வளவு கஷ்டங்களின் நடுவிலும் உணர்ந்திருந்தார்.

அதனுல்தான் இவர் எவரையும் தண்டிக்க முற்படவில்லை. இம்மட்டோ? துக்கம் தாங்காமல் தற்கொலை செய்து கொண்டு மடிந்து விடுவதற்குப் பலவாருக முயன்று பார்த்தார். கையாலாகாதவன் – வலிமையற்றவன் – செய்யும் செயல் அல்லவா இது? தம் பகைவர் பேரிலேயே குற்றத்தின் முழுப் பொறுப்பும் இல்லை என்பதை நன்கு உணர்ந்தே, ஸர்வ வல்லமை பொருந்திய இவர், அவர்கள்மேல் பதில் சாபம் இடவில்லை. மேலும் கேள்; தம் நூறு பிள்ளைகளையும் கொன்று தின்ற அதே கல்மாஷபாதன் என்னும் அரசனுக்குப் பன்னிரண்டு வருஷங்கள் கழிந்ததும் சாபவிமோசனம் ஏற்பட்டதை வரவேற்று அவனை வாழ்த்திஞர். அவனுக்கு ஸந்ததியில்லாமற் போய்விடும்படி மற்ருெரு சாபம் இருந்தது. அந்தக் குறையையும் இவர் நிவ்ருத்தி செய்தார்.

இதைக் கேட்டதும், பராசரருடைய பிடிவாதம் தளர்ந்தது. புலஸ்த்யர் மேலும் தொடர்ந்தார்.

## வாழ்க்கையில் வெறுப்பு

ராக்ஷஸனுல் கொன்று தின்னப்பட்ட உன் தந்தையும் சிறிய தந்தையரும் இப்போது ஸ்வர்கலோகத்தில் ஆனந்தமாக இருக்கின்றனர். இவ்வாருக ராக்ஷஸன் அவர்களைக் கொல்லாமலிருந்திருந்தால் இன்றளவும் அவர்கள் அனைவரும் இந்த உலகிலேயே மானிட உடலுடன் வாழ்ந்திருப்பர். இதில் அவர்களுக்கே விருப்பமில்லை. பூலோகத்தில் மனித உடலுடன் வாழ்வதைவிடத் தேவலோகத்தில் அமர வாழ்வு வாழ்வது பல்லாயிரம் கோடி மடங்கு உயர்ந்தது என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். அந்த அமர வாழ்வைப் பெற அவர்கள் துடித்தனர். இவ்வுலகில் செத்துப் போய்ப் பூதவுடலை நீத்தால்தானே அது கிட்டும்? அதற்காகத் தற்கொலை செய்துகொள்ளலாமா? அது மிக்க கொடிய பாவம் புண்ணியலோகம் எதற்கும் தகுதியற்றவனுகச் செய்துவிடும். இதை உணர்ந்த உன் தந்தையர் இயற்கைக்குப் பொருந்திய ஏதாவது ஒரு வகை மரணத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். கிடைத்த ஸந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டனர். இப்படித்தான் இது நடந்தது. இல்லாவிட்டால், ஆயிரம் கோடி ராக்ஷஸர்கள் ஒன்றுகூடி எதிரே வந்தாலும் தபஸ்வியான உன் தந்தையை அணுக முடியுமோ?

தவ வலிமையில் நிகரற்ற சிறுமாமுனிவனே! பராசரா! இதையெல்லாம் நீ நன்கு உணர வேண்டும். கோபத்தினால் குழப்பமடைந்த உன் மனத்தில் இந்த உண்மைகளை உணரும் வாய்ப்பு இல்லை. அதனாலேயே நான் இவ்வாறு விளக்கிக் கூறினேன். நான் சொல்வது சரிதானா என்பதை, இதோ என்னுடன் வீற்றிருக்கும் உன் பாட்டனாராகிய வஸிஷ்டரையும் கேட்டுத் தெளிந்துகொள். இப்போது நீ செய்து கொண்டிருக்கும் ராக்ஷஸ யாகத்தை உடனே நிறுத்தியாக வேண்டும் என்பதில் இவருக்கும் எனக்கும் துளியும் கருத்து வேற்றுமை இல்லை. ஆதலால் வயது முதிர்ந்தவர்களாகிய எங்கள் இருவருடைய வார்த்தைக்கு மதிப்பு கொடுத்து இந்த யாகத்தை இவ்வளவில் நீ நிறுத்திவிட வேண்டும். உன் பக்ஷத்தில் முழு அளவு நியாயம் இல்லாத நிலையில் நீ முரட்டுப் பிடிவாதத்துடன் தொடர்ந்து இந்த யாகத்தைச் செய்வாயானால், நிரபராதிகளான பல்லாயிரம் உயிர்களைக் கொன்று குவித்த கொடிய பாவம் உன்னைச் சூழ்ந்துகொள்ளும். உடனே யாகத்தை நிறுத்து என்று பரிவுடன் வேண்டிக் கொண்டார் புலஸ்த்யர்.

### யாகம் நின்றது

முதிர்ந்த பழம்பெரும் கிழவர்களான வஸிஷ்டரும் புலஸ்த்யரும் இவ்வாறு உண்மையைக் கூறியவுடன் பராசரர் மனம் சாந்தியடைந்தது. கோபம் இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போயிற்று. ராக்ஷஸ யாகத்தை அவ்வளவிலேயே நிறுத்திவிட்டு, இரண்டு தாத்தாக்களையும் முறைப்படி வணங்கி வழிபட்டார் பராசரர். கிழவர்களுக்கு அளவிட முடியாத ஆனந்தம்.

### ஆசீர்வாதம்

ப்ரஜாபதிகள் பதின்மருள் இருவராகிய புலஸ்த்யரும் வஸிஷ்டரும் உள்ளங் குளிர்ந்து குழந்தையை ஆசீர்வதித்தனர். ஆசீர்வாதமென்றால், ஒருவருக்கு இல்லாத பொருளை, அவர் விரும்பக்கூடியதை அடைய வேண்டும் என்று அருள் பாலிப்பதுதானே? இங்கே பராசரருக்கு வேண்டியவை தவமும் வேதங்களும் அநுஷ்டானமுமே. இவை அனைத்தும் இந்த ஆசீர்வாதத்துக்கு முன்னமே அவரிடம் நிறைந்திருந்தன. இவற்றைத்

தவிர வேறு எதிலும் அவருக்கு விருப்பமில்லை. அதனால் ஆசீர்வாதம் பண்ணுவதில் பெரியோர்களுக்கு ஒருவிதமான சங்கடம் தோன்றிவிட்டது.

இருவரும் கலந்து ஆலோசித்து உலகக்ஷேமார்த்தமாக ஒரு வகையான ஆசீர்வாதத்தைச் செய்தனர். "பரதேவதை எது என்னும் விஷயம் உனக்கு உள்ளபடியே புலனாகட்டும்" என்பதுதான் அந்த ஆசீர்வாதம். பராசரர் உவகையுடன் அந்த ஆசீர்வாதத்தை ஏற்றுக் கொண்டார். யாரிடமும் அடி பணிந்து பாடம் கேட்காமலே, தன்னடையாகவே பரதத்துவம் அவருக்கு விளங்கிற்று.

மைத்ரேயர் என்னும் முனிவர் ஒரு ஸமயம் பராசரரை அடிபணிந்து இந்த விஷயத்தைக் கேட்டார். பராசரர் பரிவுடன் அவருக்குப் பரதத்துவத்தை விளக்கிக் கூறியருளினார். அந்த உபதேசமே 'விஷ்ணுபுராணம்' என்ற உலகப் பிரசித்தமான நூல். அதில் அறுதியிடப்பட்ட விஷயம் நூற்றுக்கு நூறு பங்கு அசைக்க முடியாத உண்மை. வேதங்களின் உட்கருத்தை நிர்ணயிப்பதற்கு ஈடு இணையற்ற துணை நூலாம் இந்த விஷ்ணுபுராணம். இதை அருளிச்செய்ததற்காகவேதான் பராசரர் பலவாறாகப் புகழப் பெறுகிறார்.

पुलस्त्यवसिष्ठवरप्रदानलब्धपरदेवतापारमार्थ्यज्ञानवत्तया प्रसिद्धः ।

என்று ஸ்ரீபாஷ்யகாரராலும் ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகனாலும் இவர் புகழப்பெறுவது இதனால்தான். நம் நாட்டார் மட்டுமின்றி மேல்நாட்டு அறிவாளிகளும் 'இந்த விஷ்ணு புராணம் ஒன்றே மிகச் சிறந்த தத்துவ நூலாகும்' என்பதை உறுதிப்படுத்துகின்றனர். வேதாந்த விசாரங்களில், எல்லா மதஸ்தர்களும் வாசியின்றிக்கே பிரமாணமாக மேற்கொள்ளும் பெருமை வாய்ந்தது இது. இவ்வளவு அரிய நூலை அநாயாஸமாக உபதேசிக்கும் பேராற்றலை இளம் பிராயத்திலேயே பராசரர் பெற்றார். 'திருமாலால் அருளப்பட்ட சடகோபன்' என்கிறபடி இது அருள்வாக்கு; தானாகத் தேடிக் கொண்டதல்ல. அன்றும் இன்றும் என்றும் பரதத்துவ நிர்ணயத்துக்கு அழியாத அணையாத தீப ஸ்தம்பமாக ஒளிவீசும் இந்தப் புராண ரத்தினத்தையே ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தின் தொடக்கத்தில் புகழ்ந்து பேசுகிறார். இது தவிர, மற்றும் பல நூல்களையும் பராசரர் இயற்றியிருக்கிறார்.

ராக்ஷஸ யாகத்துக்காகப் பிரம்மாண்டமான அளவில் வளர்த்த அக்கினியைப் பராசரர் இமயமலையின் வடபுறத்தில் கொண்டு விட்டார். அங்கு அந்த அக்கினி இன்றளவும் அணையாமல் கொழுந்து விட்டு எரிந்துகொண்டு கற்களையும் மரங்களையும் தனக்கு உணவாகக் கொண்டுள்ளதாம். இப்படிக் குழந்தைப் பருவத்தில் பராசரருடைய பெருமை நாடு நகரமும் நன்கறியலாம்படி ஆயிற்று. பிற்காலத்திலும் பல முகங்களால் இவர் லோகோபகாரமான செயல்கள் பலவற்றையும் செய்திருக்கிறார். சிலவற்றைக் கூறுவோம் இங்கு.

## வேதவ்யாஸர்

சாதாரணமாக 'வேதவ்யாஸர்' என்றால் நம் நாட்டு மக்களுக்குப் பராசர முனிவருடைய பிள்ளையும், மகாபாரதத்தையும் ப்ரஹ்மஸூத்ரங்களையும் செய்தருளியவருமான க்ருஷ்ண த்வைபாயனர் என்னும் மகரிஷிதாம் ஞாபகத்தில் வருவார். அவருக்கு க்ருஷ்ண த்வைபாயனர் என்பதுதான் பெயர். வேதவ்யாஸர் என்பது பதவியின் பெயர், இக்காலத்தில் கவர்னர், கலெக்டர் என்பவைபோல. 'வேதங்களைப் பல சாகைகளாகப் பிரித்து, அத்தியயனம் பண்ணுகிறவர்களுக்கு எளிதாக்கி, அவசியமான வரையறைகள் பலவற்றையும் தோற்றுவித்து அழியாமல் காப்பாற்றுகிறவர்' என்பது இந்தப் பதவிப் பெயரின் பொருள். இந்தச் சீர்திருத்தம் ஒவ்வொரு சதுர்யுகத்திலும் நடைபெறுவது. நான்கு யுகங்களுள், முதல் மூன்று யுகங்களில் மானிடர்கள் சிறந்த மேதாவிகளாகவும் உழைப்பாளிகளாகவும் உள்ளபடியால் வேதம் நன்கு காப்பாற்றப்படுகிறது; இது போன்ற முன்னேற்பாடுகள் அவசியமில்லை. ஆனால் கலியுக மானிடர்கள் அப்படிப்பட்டவர்களல்லர். அகண்டமான வேதத்தை அப்படியே அத்யயனம் பண்ணிக் காப்பாற்றும் ஆற்றல் இவர்களுக்கு இல்லை. அதனால், கலியுகம் தோன்றப் போகும் ஸமயத்தில் (த்வாபரயுகத்தின் முடிவில்) வேதங்கள், பல சாகை(கிளை)களாகப் பிரிக்கப் பெறுகின்றன. இதைச் செய்பவர்தாம் வேதவ்யாஸர்.

இப்போது இருபத்தெட்டாவது சதுர்யுகம் நடந்து கொண்டிருக்கிறது. இப்போதைய வேதவ்யாஸர்தாம் க்ருஷ்ண த்வைபாயனர். இதற்கு முன் இருபத்தேழு சதுர்யுகங்கள் கடந்து சென்றுள்ளன அல்லவா? அவற்றில் பற்பல மகரிஷிகள் இந்த வேதவ்யாஸ பீடத்தில் அமர்ந்து வேதங்களைப் பிரித்துக் காப்பாற்றி யிருக்கின்றனர். அவர்களுள் பராசரரும் ஒரு முறை வேதவ்யாஸராக இருந்திருக்கிறார். இவருக்கு முன் இவருடைய தந்தையான சக்தி வேதவ்யாஸராக இருந்தாராம். இப்போதைய சதுர்யுகம் முடிந்ததும் மற்றொரு சதுர்யுகம் (இருபத்தொன்பதாவது) வரப்போகிறது அல்லவா? அதிலும் த்வாபர யுகத்தின் முடிவில் வேதவ்யாஸர் ஒருவர் தோன்ற வேண்டுமே. அவர் யார் தெரியுமா? ஏற்கெனவே தோன்றி, நமக்கெல்லாம் நன்கு அறிமுகமான ஒருவர்தாம் வருங்கால வேதவ்யாஸர். த்ரோணாசார்யருடைய பிள்ளையான அச்வத்தாமாதாம் அவர். இதை எல்லாம் பராசரர்தாமே தமது விஷ்ணுபுராணத்தில் கூறுகிறார். ஆதலால் வஸிஷ்டரை முதன்மையாகக் கொண்ட இந்த ரிஷிகுலம், மூன்று வேதவ்யாஸர்களை வரிசையாகத் தோற்றுவித்து வேதங்களைக் காப்பாற்றிய பெருமை வாய்ந்ததாகும். அந்த மூவர் சக்தி, பராசரர், க்ருஷ்ண த்வைபாயனர் என்பவர்கள்.

## போதனாசக்தி

தமது நீண்ட ஆயுள்காலத்தில் பராசர முனிவர் ஒரு நிமிஷங்கூடக் கல்வி கற்பிக்கும் சிறந்த பணியைக் கைவிட்டதில்லை. அதனால் கற்பிப்பதில் ஈடுஇணையற்ற அநுபவம் இவருக்கு ஏற்பட்டிருந்தது. 'பராசரரிடம் மாணவராக இருந்தவர்' என்றால், அவ்வளவே போதுமாம்; 'ஸகல சாஸ்த்ரங்களிலும் வேதங்களிலும் பரிபூர்ணமான அறிவைப் பெற்றவர்' என்று அனைவரும் ஒப்புக்கொள்வராம். இதையும் தமது விஷ்ணுபுராணத்தின் தொடக்கத்தில் இவர்தாமே தம் சிஷ்யரான மைத்ரேயர் வாயால் சொல்லச் செய்கிறார். மைத்ரேய முனிவரைப் போன்ற அநேகமாயிரம் கோடி முனிவர்களைத் தோற்றுவித்த மஹான் பராசர முனிவர் என்பதை இதிலிருந்து நன்கு உணரலாம். மேலும்,

ஆசார்யராக இருப்பவர். 'ஸ்வயம் ஆசரதே யஸ்மாத் தஸ்மாத் ஆசார்ய உச்யதே' என்றபடி தாமும் அநுஷ்டித்துப் பிறருக்கு உபதேசம் செய்வதே முறையாகும். இதில் பராசரர் முதன்மையானவர். விஷ்ணுபுராணத்தின் முதல் ச்லோகமே இதற்குச் சான்றும்.

## நூலாசிரியர்

இவ்வாறு சிறந்த தத்துவ ஜ்ஞாநியாகவும் உபாத்தியாயராகவும் அநுஷ்டானசீலராகவும் இருந்த பராசர முனிவர், தமது அநுபவத்தில் கண்டறிந்த உண்மைகளைப் பல நூல்களாக அருளிச்செய்து உலகத்துக்குப் பேருபகாரம் செய்திருக்கிறார். ரிக்வேதத்தில் பல ஸூக்தங்கள் இவரால் கண்டு உபதேசிக்கப்பெற்றவை. பிரசித்தமான ஸ்ரீ விஷ்ணுபுராணம் இவர் இயற்றியது. 'பராசர ஸ்ம்ருதி' என்ற தர்ம சாஸ்திரமும் இவரால் அருளிச்செய்யப்பட்டு வழங்கி வருகிறது. சமூக சீர்திருத்தங்களில் தாராள மனப்பான்மையை வெளிப்படுத்தும் இந்த தர்மசாஸ்திரம், கலிகாலத்துக்கு மிகவும் ஏற்றது என்று ஆன்றோர் கூறுவர்.

कृते तु मानवो धर्मः, त्रेतायां गौतमः स्मृतः ।
द्वापरे शङ्खलिखितः, कलौ पाराशरः स्मृतः ॥

க்ருதே து மாநவோ தர்ம: த்ரேதாயாம் கௌதம: ஸ்ம்ருத: ।
த்வாபரே சங்கலிகித:, கலௌ பாராசர: ஸ்ம்ருத: ॥

என்னும் ச்லோகம் பிரசித்தமானது. சோதிடத்திலும் ஆயுர் வேதத்திலும் இவருடைய நூல்கள் உள்ளன.

பராசரர் தமது நீண்ட ஆயுள்காலத்தில் பல ஸந்தர்ப்பங்களில் பல க்ஷேத்திரங்களில் பல காரணங்களினால் நெடுநாள் தவம்புரிந்து ஸித்தியடைந்திருக்கிறார். அந்தப் புனிதமான இடங்களில் சில இவர் பெயராலேயே இன்றளவும் வழங்குகின்றன. பராசர க்ஷேத்திரம், பராசர தீர்த்தம், பராசரேச்வரர் என்று இன்றளவும் வழங்குகின்றன.

## வேதப்ரஸித்தி

இதிஹாஸ புராணங்களிலும் உலக விவகாரங்களிலும் மிக மிக ப்ரஸித்தரான இவர் வேதங்களிலும் அவ்வாறே ப்ரஸித்தி

பெற்றிருக்கிறார். தைத்திரீயாரண்யகத்தில், முதல் ப்ரச்நத்தில், 'ஸ ஹோவாச வ்யாஸ: பாராசர்ய:' என்னும் வாக்கியம் காண்கிறது. 'பராசரருடைய பிள்ளையான அந்த வ்யாஸர் சொன்னார்' என்பது கருத்து. க்ருஷ்ண த்வைபாயனரையே இந்த வாக்கியம், 'பராசரருடைய பிள்ளையான வ்யாஸர்' என்று குறிப்பிடுகிறது. வ்யாஸர் என்பது பதவியின் பெயர் என்பதை யாம் அறிவோம். ஆதலால் அந்தச் சொல் அந்தப் பதவியில் வீற்றிருந்தவர்கள் அனைவரையும் வாசியின்றிக்கே உணர்த்தும். அவர்களுள் ஒருவரைத் தனிப்படுத்திக் கூற வேண்டுமானால், அதற்கு ஏற்ற அடையாளம் வேண்டும் அல்லவா? அதையே மேற்கூறிய வேத வாக்கியம் எடுத்துரைக்கிறது.

பராசரருடைய பிள்ளையாகப் பிறந்ததனால் வ்யாஸருக்கு அளவிட முடியாத பெருமை. மற்ற வேதவ்யாஸர் எவருக்கும் இந்தப் பெருமை கிடையாது. வ்யாஸரைப் பிள்ளையாகப் பெற்றதனால் பராசரருக்கும் தனிச் சிறப்பு இருக்கிறது. இதில் தாரதம்யம் பார்ப்பது சிரமமான காரியம்; அவசியமில்லாததுங்கூட. 'பிது: சதகுணம் புத்ர:' என்றவகையில் விளங்குவதும் சிற்சில இடங்களில் காணப்படுவது இயல்பே அல்லவா? வ்யாஸருக்கு அடையாளமாகப் பராசரரைச் சொன்ன வேதம், பராசரருக்கு அடையாளமாக வேறொன்றையும் குறிப்பிடவில்லை. வ்யாஸர் என்பதைப்போல் பராசரர் என்று பொதுப் பெயர் இல்லாதது இதற்கு ஒரு காரணம். பராசரருடைய ப்ரஸித்தி மற்றொரு காரணம். இவ்வாறு வேத ப்ரஸித்தி இருப்பதைப் பின்புள்ளாரும் அநுஸரிக்கின்றனர். 'வ்யாஸருடைய அமுதவாக்கு' என்று சொல்ல ஆரம்பித்த ஸ்ரீபாஷ்யகாரர், "பாராசர்யவசஸ்ஸுதாம்' என்று வேத ப்ரஸித்தமான பெயராலேயே வ்யாஸரைக் குறிப்பிடுகிறார்.

## குறுக்குக் கேள்வி

இந்தக் காலத்தில் இது ஸர்வ ஸஹஜம். இது இரு வகைப்படும். உண்மையை உணரவேண்டும் என்னும் ஆஸ்தையுடன் விச்வாஸத்தினால் கேள்வி கேட்பது ஒரு வகை. இது வரவேற்கத் தக்கது. ஒரு திட்டமான கொள்கை இல்லாமல் வீண் வம்புக்காகக்

கேட்கப்படும் கேள்வி மற்ெறான்று. இவ்வகையைச் சரியான பதில் கூறுவதன் மூலம் திருப்திப்படுத்துவது அஸாத்தியமே. பராசரர் வரலாற்றில், முந்திய வகையில் தோன்றக்கூடிய இரண்டு கேள்விகளையும் பதிலையும் இங்கே கூறுவோம்.

1. வஸிஷ்டரும் பராசரரும் மகாதபஸ்விகள், த்ரிகால ஜ்ஞாநிகள். அவ்வாறு இருக்க, வஸிஷ்டர், தமது ஸந்ததி நிர்மூலமாக்கப்பட்டதாக எண்ணி, தாமும் எவ்வகையாலாவது இறந்துவிட முயன்றார். தம்முடைய மருமகள் கர்பிணியாக இருப்பது அவருக்குத் தெரியவில்லை. அவளே எடுத்துச் சொன்ன பிறகு தெரிந்துகொண்டு தேறினார். சாதாரணமாக ஒரு குடும்பத்தில் ஒரு பெண் கர்பமாக இருப்பதை ஸஹஜமாகவே எல்லாரும் தெரிந்து கொள்வார்கள். இதற்கு ஜ்ஞாநத்ருஷ்டி தேவையில்லை. ஆனால் சிறந்த ஜ்ஞாநியான வஸிஷ்டருக்கு இந்த விஷயம் தெரியவில்லை. இது பொருத்தமற்றதாகக் காணப்படவில்லையா?

2. புலஸ்த்யரும் வஸிஷ்டருங்கூட அச்சம் கொள்ளும்படியான மகாதபஸ்வி பராசரர். தம் பிதாவை ஒரு ராக்ஷஸன் கொன்று தின்ற விஷயம் அவருக்குத் தெரியவில்லை. அம்மா சொன்ன பிறகுதான் தெரிந்தது. உடனே உலகத்தையே அழித்துவிட முற்பட்டார் கோபாவேசத்தினால். வஸிஷ்டர் தடுத்தாட்கொண்டார். ராக்ஷஸ யாகத்தைப் பண்ணி உலகிலேயே ராக்ஷஸப் பூண்டு இல்லாமற் செய்ய ஆரம்பித்தார். புலஸ்த்யர் உண்மையை விளக்கியபின் அமைதி பெற்றார். இவ் விஷயங்களெல்லாம் முன்கூட்டியே இவருக்குத் தெரிந்திருக்கலாமே. ஏன் தெரியவில்லை?

## பதில்

1. வஸிஷ்டர் புத்திர சோகத்தின வேகத்தினால் உண்மையை உணரத் தவறிவிட்டார். மருமகள் கூறியபின் தெளிந்தார்.

2. அவ்வாறே பராசரரும் உலகப் போக்கில் தம் தாத்தாவையே 'அப்பா' என்று அழைத்து வந்தார். வஸிஷ்டர் இதை மாற்றவில்லை; அநுமதித்து வந்தார். அதனால் ஜ்ஞாநத்ருஷ்டியைச் செலுத்திப் பார்க்க வேண்டிய அவசியம் பராசரருக்கு ஏற்படவில்லை. தாயார் சொன்ன பின்புதான் உணர்ந்தார். சாதாரண நிலையில்

உலகினரைப் போலவேதான் ஜ்ஞாநிகளும் இருப்பர். அசாதாரணமான நிலைமை ஏற்பட்டால்தான் தமது அசாதாரணமான சக்தியை உபயோகிப்பர்.

அதுபோலவே, தம் தந்தையைக் கொன்று தின்றவன் ஓர் அரக்கன் என்பதைக் கேட்ட மாத்திரத்தில் கடுஞ்சினம் கொண்டார். மூளையில் பெரும் கொந்தளிப்பு. அதனால் கோபத்துக்கு அடிமையாகி ஏதோ செய்ய ஆரம்பித்தார். முதுபெரு மாமுனிவர் இருவரும் பரிவுடன் உண்மையைப் பரக்கப் பேசி உணர்த்தியவுடன் தெளிந்தார். இதனால் அவருடைய ஜ்ஞாநத்ருஷ்டிக்கு இழுக்கு ஏதும் வாராது.

பராசரருடைய சரிதம் புனிதமானது. இதை இவ்வளவில் முடித்துக்கொள்வோம்.

# வேதவ்யாஸர்

व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम् ।
पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम् ॥

வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம் ।
பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் ॥

வஸிஷ்டருடைய கொள்பேரனும், சக்தியினுடைய பேரனும், பராசரருடைய பிள்ளையும், சுகருடைய தந்தையும், தபோநிதியுமான வியாஸரை வணங்குகிறேன்.

अभ्रश्यामः पिङ्गजटाबद्धकलापः
प्रांशुर्दण्डी कृष्णमृगत्वक्परिधानः ।
साक्षाल्लोकान् पावयमानः कविमुख्यः
पाराशर्यः पर्वसु रूपं विवृणोतु ॥

அப்ரச்யாம: பிங்கஜடாபத்தகலாப:
ப்ராம்சுர் தண்டீ க்ருஷ்ணம்ருகத்வக்பரிதாந: ।
ஸாக்ஷால் லோகாந் பாவயமாந: கவிமுக்ய:
பாராசர்ய: பர்வஸு ரூபம் விவ்ருணோது ॥

நீர் கொண்ட மேகம்போல் கருநிறமான திருமேனி; பொன்னிறமான சடைமுடி; கம்பீரமாக உயர்ந்த திருவுடம்பு; அதற்கேற்பக் கையில் ஒரு தடி; புள்ளிமான் தோலாலாகிய ஆடை; எல்லா உலகங்களையும் பரிசுத்தமாக்கும் மகிமை வாய்ந்தவர்; சிறந்த கவி; பராசரருடைய பிள்ளை - இப்படிப்பட்ட வேதவ்யாஸர் (பாரதத்தின்) பர்வங்களில் தமது பெருமையை விளக்கியருள வேண்டும்.

व्यासाय विष्णुरूपाय व्यासरूपाय विष्णवे ।
नमो वै ब्रह्मनिधये वासिष्ठाय नमो नमः ॥

வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே ।
நமோ வை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோ நம: ॥

வ்யாஸர் விஷ்ணுவே. விஷ்ணு வ்யாஸரே, வேதங்களுக்கு உறைவிடமானவரும், வஸிஷ்டருடைய வழித்தோன்றலுமாகிய வேதவ்யாஸரைப் பல கோடி நூறுயிரம் தரம் வணங்குவோம்.

இப்படிப் பல ச்லோகங்கள் வேதவ்யாஸரின் மகிமையைப் பறைசாற்றுகின்றன. அசாதாரணமான பல அரிய பெரிய சாதனைகளைப் புரிந்து, நமது பாரத புண்ணிய பூமிக்கு ஈடு இணையற்ற பெருமையைத் தோற்றுவித்த மகாநுபாவராகியவர் வேதவ்யாஸர்.

வேதவ்யாஸர் என்பது பதவியின் பெயர். இதை ஏற்கெனவே தெளிவுபடுத்தியுள்ளோம். ஒரு பதவியில் அமர்ந்திருப்பவரை, அந்தப் பதவியின் பெயராலேயே வழங்குவது மரபு, ஜனுதிபதி, பிரதம மந்திரி முதலியன இக்காலத்திய வழக்கில் உள்ளவை, முற்காலத்திலும் ராஜா ராணி மந்திரி இப்படிப் பல இருந்தன. அவசியம் ஏற்படும்போது தனியான பெயர்களால் வழங்குவதும் உண்டு. இவருக்கும் அவ்வாறுன சிறப்புப் பெயர்கள் சில உண்டு. ஆனல் அவை சாதாரணமாக வழங்கப் பெறுவதில்லை. வ்யாஸர், வேதவ்யாஸர் என்றே இவரைக் குறிப்பிடுகின்றனர். இதிஹாஸ புராணங்களிலும் மற்ற நூல்களிலும் பிரசித்தமாக இருப்பதனுல் மற்றத் திருநாமங்களை இங்கே கூறுவோம்.

1. க்ருஷ்ணத்வைபாயனர் – 'க்ருஷ்ண த்வைபாயந' என்னும் இரண்டு திருநாமங்களும் ஒன்றுகூடி 'க்ருஷ்ணத்வைபாயனர்' என்று ஆயின. 'க்ருஷ்ண' என்ருல் கறுப்பு நிறமுள்ளவர் என்று பொருள். 'த்வைபாயனர்' என்ருல் 'தீவில் பிறந்தவர்' என்று பொருள். வ்யாஸருடைய நிறம் கறுப்பு. இவர் பிறந்தது நாற்புறமும் நீர் சூழ்ந்த தீவில். அதனுல் இவ்விரண்டு நிலைமைகளையும் விளக்கும் வகையில் 'க்ருஷ்ணத்வைபாயனர்' என்று இவருக்குப் பெயர் வந்தது.

2. த்வைபாயனர் – முதலாவது திருநாமத்தில் உள்ள 'க்ருஷ்ண' என்பதை விலக்கியது தவிர, இதில் வேறு விசேஷம் இல்லை. இப்படியும் இவரை வழங்குவதுண்டு.

3. மாடரர் – 'முனிசிரேஷ்டர்' என்று பொருள்.

4. பாராசர்யர் – பராசரருடைய குமாரர் என்னும் பொருளைக் கொண்ட திருநாமம் இது.

5. காநீந: – 'கன்னிப் பெண்ணுக்குப் பிள்ளையாகப் பிறந்தவர்' என்பது இதன் பொருள். இதன் விளக்கம் பின்பு தருவோம்.

6. ஸத்யவதீஸுத:– இவருடைய தாயாரின் பெயர் ஸத்யவதீ என்பது. அது தோற்றும்படியாக இந்தத் திருநாமம் அமைந்தது. 'ஸாத்யவதர்' என்பதும் உண்டு.

7. பாதராயணர் – பதரீ என்று இலந்தை மரத்துக்குப் பெயர். வ்யாஸ பகவான் திருவவதாரம் செய்த இடத்தில் அடர்த்தியான இலந்தைக் காடு இருந்தது. அதனுள் அவதரித்தமையை ஆதாரமாகக் கொண்டு இந்தத் திருநாமம் வழங்குகிறது. பாதராயணி என்பதும் உண்டு.

8. வேதவ்யாஸர் – வ்யாஸர் என்பது பிரசித்தமான திருநாமம். இது ஒரு பதவியில் வீற்றிருத்தல் காரணமாக வந்த திருநாமம். இதற்கும் பொருளொன்று உண்டு. 'வேதங்களைப் பிரித்தவர். 'வேதாந் வ்யஸ்யதி இதி வேதவ்யாஸ:' என்பது இந்தத் திருநாமத்தின் கருத்து.

यो व्यस्य वेदांश्चतुरस्तपसा भगवान् ऋषिः ।
लोके व्यासत्वमापेदे कार्ष्ण्यात् कृष्णत्वमेव च ॥

யோ வ்யஸ்ய வேதாம்ச் சதுரஸ் தபஸா பகவாந் ரிஷி: ।
லோகே வ்யாஸத்வமாபேதே கார்ஷ்ண்யாத் க்ருஷ்ணத்வமேவ ச ॥

என்னும் மகாபாரத ச்லோகம் (1.105.14) இந்தக் கருத்தையே விவரிக்கிறது. இப்போது நடந்து வரும் சதுர்யுகத்தில் 'வேதவ்யாஸ' பீடத்தில் அமர்ந்துள்ளவர் 'க்ருஷ்ணத்வைபாயனர்'. இதற்கு முன்பு கடந்து போன சதுர்யுகங்களிலும் இனி வரப்போகும் சதுர்யுகங்களிலும் பற்பல மகரிஷிகள் இந்த வேதவ்யாஸ பீடத்தில் அமர்ந்திருந்தனர்; வீற்றிருக்கப் போகின்றனர். இவர்கள் அனைவருக்கும் வேதவ்யாஸர் என்னும் ஒரே பெயர் தொடர்ந்து வழங்கும். வேதங்களைப் பிரித்துக் காப்பாற்றுவது ஒன்றே இந்த வேதவ்யாஸ பீடத்தின் முக்கியமான குறிக்கோளாகும். இவர்கள் இவ்வாறு செய்வதனால் வேதங்கள் சிதறி அழிந்து போகாமல் திறமையுடன் பாதுகாக்கப்படுகின்றன. புனிதமான நம் பாரத பூமியின் ஜீவாதாரமான கலைக்களஞ்சியமான வேதங்களைக்

காப்பாற்றுவதனுலேயே, முன்னும் பின்னும் உள்ள பல்லாயிரக் கணக்கான மகரிஷிகளுள் யாருக்கும் இல்லாத தனிச் சிறப்பு கௌரவம் பெருமை பூஜை புரஸ்காரம் எல்லாம் இந்த வேதவ்யாஸருக்கு. அதனுல் இந்த முக்கியமான பணியை இங்கு சிறிது விவரிப்போம்.

சதுர்யுகம் என்பது நான்கு யுகங்களின் கூட்டம். க்ருத யுகம், த்ரேதா யுகம், த்வாபர யுகம், கலி யுகம் என்பவையே சதுர்யுகங்கள். இவற்றுள் மூன்ருவதான த்வாபர யுகத்தின் முடிவில்தான் வேதவ்யாஸர் அவதாரம் செய்கிருர். ஒவ்வொரு சதுர்யுகத்திலும் இது தவருமல் நடக்கிறது. வேதங்களை அவர் ரிக் யஜுஸ் ஸாம அதர்வம் என்று நாலு வகையாகப் பிரிக்கிருர். ஒவ்வொரு வேதத்திலும் பல சாகைகளையும் (கிளைகளையும்) அவர் வகுக்கிருர். ஒவ்வொரு சாகையையும் அத்யயனம் பண்ணவேண்டிய ரிஷி வம்சத்தையும் அவரே திட்டமிடுகிருர். அந்த அந்த ரிஷிகளும் அவரவர் வம்சத்தவர்களும் தமக்கு வகுக்கப்பெற்ற வேதசாகையைத் தவருமல் அத்யயனம் பண்ண வேண்டும். பிறருடைய சாகையை அத்யயனம் பண்ணக்கூடாது. தன் சாகையை முழுவதும் அத்யயனம் பண்ணி முடித்த பிறகு, வேண்டுமானுல் மற்ற சாகைகளை அத்யயனம் பண்ணலாம். இவ்வாறெல்லாம் பற்பல வ்யவஸ்தைகளை (வரையறைகளை) வ்யாஸர் முதல் முதலில் தோற்றுவித்தார்.

பிரம்மாண்டமான கடல்போன்ற வேதம் இந்த ஏற்பாடுகளினுல் சிறு சிறு பகுதிகளாக்கப்பட்டு, சாதாரணமான புத்திசக்தி உள்ளவர்களாலும் எளிதில் அத்யயனம் பண்ணி மனத்தில் தரிக்கக்கூடியதாகிறது. கலியுகத்தில் மானிடர்களுக்கு புத்திபலம் குறைவு. மற்ற யுகங்களில்போல், தீவிரமான மேதையும் உழைப்பும் சகிப்புத் தன்மையும் விடாமுயற்சியும் கலியுக மாந்தர்க்கு இல்லை. அதனுல் அகண்டமான வேதத்தை முறைப்படி அத்யயனம் பண்ணிக் காப்பாற்ற இவர்களால் முடியாது. ஆனுலும் வேதத்தை அத்யயனம் பண்ணி அதிலிருந்து பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் இவர்களுக்கும் உண்டு. இதற்கு வழி வகுத்தவரே வேதவ்யாஸர். அதிகமான சத்துள்ள

உணவைத் தாராளமாக உண்டு ஜீர்ணம் செய்துகொள்ளும் ஆற்றல் இல்லாத நோயாளிக்கு, லகுவான உணவு வகைகளைத் தந்து காப்பாற்றும் சிறந்த வைத்தியர்போல, வேதவ்யாஸரும் மூளைக்குச் சிகிச்சை செய்கிறார்.

இப்படி ஒரு வரையறையை முதல் முதலாகத் தோற்றுவிப்பதில் எவ்வளவோ கஷ்டங்கள் உண்டு. அவற்றையெல்லாம் சரிப்படுத்திக்கொள்ளும் ஆற்றலும், தீர்க தரிசனமும் உலக க்ஷேமத்தில் ஆழ்ந்த பற்றுதலும், தன்னலமற்ற மனப்போக்கும் ஒருங்கே வ்யாஸரிடம் பொருந்தியிருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக, மலைகள் போன்ற வேதங்களில் தெளிவான அறிவு நிரம்பப் பெற்றிருந்தார் அவர். இப்போது வேதங்கள் பலவாறாகப் பகுக்கப்பட்டு விட்டதனால் சிறு சிறு தனிப் பகுதிகளாகக் காணப்படுகின்றன.

இந்த வ்யவஸ்தை ஏற்படுவதற்கு முன்பு அவற்றின் நிலைமை முற்றும் மாறுபட்டிருந்தது. நம்போல்வார் அந்த நிலைமையை மனத்தினால் எண்ணிப் பார்ப்பதுகூட அசாத்தியம். அக்காலத்திய மகரிஷிகள் அரும்பாடு பட்டு அந்த வேதஸமஷ்டியை எப்படியோ அத்யயனம் பண்ணி வந்தனர். அவர்கள் அனைவரையும் ஒன்றுதிரட்டி ஒரு மாபெருங்கூட்டத்தைக் கூட்டினார் வேதவ்யாஸர். வ்யாஸருக்கு எந்த விதத்திலும் குறைந்தவர்களல்லர் அவர்கள். வ்யாஸருடைய உட்கருத்தை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். அதனால் அவர் தோற்றுவித்த வேதசாகாபேத வ்யவஸ்தையை எவ்விதமான ஆட்சேபமுமின்றிக்கே முழு மனத்துடன் வரவேற்று இசைந்து நடைமுறையில் கொண்டு வந்து ஒத்துழைத்தனர். அன்று கூடின வேதவித்துக்களான மகரிஷிகளின் மகாஸபைக்கு ஸகல விதத்திலும் பொருத்தமாக வ்யாஸர் தலைவராக இருந்து, இப்போது அநுஷ்டானத்தில் இருக்கும் வரையறைகளை முதல்முதலாகத் தோற்றுவித்தார். அந்த மகாஸபையை நினைத்தாலே மயிர்க்கூச்செறிகிறது. நம்மையும் அறியாமல் தெய்விகமான சூழ்நிலை மனக்கண்முன் தோன்றுகிறது. ஸாக்ஷாத் நாராயணனுடைய அவதாரமான வேதவ்யாஸர் இந்தத் தெய்விகமான மகாஸபையைக் கூட்டி அற்புதமான காரியங்களைச் செய்தருளினார். இதோ இந்த ஸ்ரீவிஷ்ணுபுராண ச்லோகங்கள் இந்த உண்மையையே விளக்குகின்றன.

वेदमेकं चतुर्वेदं कृत्वा शाखाशतैर्विभुः ।
करोति बहुलं भूयो वेदव्यासस्वरूपधृक् ॥
द्वापरे तु युगे विष्णुर्व्यासरूपी महामुने ।
वेदमेकं स बहुधा कुरुते जगतो हितः ॥
यया च कुरुते तन्वा वेदमेकं पृथक् प्रभुः ।
वेदव्यासाभिधानात् तु सा सा मूर्तिर्मधुद्विषः ।

வேதமேகம் சதுர்வேதம் க்ருத்வா சாகாசதைர் விபு: ।
கரோதி பஹுலம் பூயோ வேதவ்யாஸஸ்வரூபத்ருக் ॥
த்வாபரே து யுகே விஷ்ணுர் வ்யாஸரூபீ மஹாமுநே ।
வேதமேகம் ஸ பஹுதா குருதே ஜகதோ ஹித: ॥
யயா ச குருதே தந்வா வேதமேகம் ப்ருதக் ப்ரபு: ।
வேதவ்யாஸாபிதாநாத் து ஸா ஸா மூர்த்திர் மதுத்விஷ: ॥

— விஷ்ணுபுராணம், 3.2.57; 3.3.5,7.

வேதங்களை ஓதும் வாய்ப்பில்லாதவர்களும் வேதத்தின் உட்பொருளை உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது. வ்யாஸருக்கு இந்தக் கவலே தோன்றியது. பதினெட்டு புராணங்களையும் மகாபாரதம் என்னும் இதிஹாஸத்தையும் இதற்காகவே செய்தருளினர்.

स्त्रीशूद्रद्विजबन्धूनां त्रयी न श्रुतिगोचरा ।
इति भारतमाख्यानं कृपया मुनिना कृतम् ॥

ஸ்த்ரீசூத்ரத்விஜபந்தூநாம் த்ரயீ ந ச்ருதிகோசரா ।
இதி பாரதமாக்யாநம் க்ருபயா முநிநா க்ருதம் ॥

अष्टादशपुराणानां कर्ता सत्यवतीसुतः ।

அஷ்டாதசபுராணநாம் கர்த்தா ஸத்யவதீஸுத: ।

என்ற ச்லோகங்கள் இந்த விஷயத்தை விளக்கிக் கூறுகின்றன. 'ஐந்தாம் வேதம்' என்று சிறப்பித்துக் கூறப்பெறும் மகாபாரதத்தின் பெருமையும் பதினெண் புராணங்களின் மகிமையும் அபாரமானவை. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்,

कृष्णद्वैपायनं व्यासं विद्धि नारायणं प्रभुम् ।
को ह्यन्यो भुवि मैत्रेय महाभारतकृद् भवेत् ॥

க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும் ।
கோ ஹ்யந்யோ புவி மைத்ரேய மஹாபாரதக்ருத் பவேத் ॥

என்னும் ச்லோகத்திஞல் வ்யாஸருடைய திருத்தகப்பஞரான பராசர பகவான் தாமே இவரைப் புகழ்வது மிக மிகப் பொருத்தமானது. 'மைத்ரேய முனிவரே! என் குமாரஞகிய வ்யாஸன் ஸாக்ஷாத் நாராயணனே என்று அறிந்துகொள்ளும். இவ்வுலகில் மகாபாரதத்தை இயற்றும் பேராற்றல் வேறு யாருக்கு உண்டு?' என்பது கருத்து. இந்த மகாபாரதத்தின் பெருமையையும் பதினெண் புராணங்களின் மகிமையையும் பிறகு விளக்கமாகக் கூறுவோம்.

## ஸத்தியவதி

'என்ன நோன்பு நோற்ருள்கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்!' என்று உலகத்துள்ளார் அனைவரும் வியந்து புகழும்படி இந்த மகாபுருஷனைப் பெற்றெடுத்து உலகுக்கு ஸமர்ப்பித்த பெரும் புண்ணியவதி ஸத்தியவதி என்னும் பெயருடைய உத்தம ஸ்திரீதான். பராசர மகரிஷி இவர் தந்தையார். ஸத்தியவதி ஒரு விசித்திரப் பிறவி. இவள், 'உபரிசரவஸு' என்று பிரஸித்தஞன சேதிராஜனுடைய பெண். ஆஞல் இவளுக்குத் தாய் மானிட இனமல்ல; யமுனையாற்றில் ஓடி விளையாடிக்கொண்டிருந்த ஒரு மீன்தான் இவளுக்குத் தாய். தன் மனைவி ருதுவான காலத்தில் காட்டில் வேட்டையாடிக்கொண்டிருந்த அந்த அரசன் ஓர் அழகிய நிழல் மரத்தின் கீழ் அமர்ந்து அவளையே எண்ணி ஏக்கமுற்றிருந்தான். அப்போது அவனுடைய வீர்யம் ஸ்கலிதமாயிற்று. அது வீணுகாமல் இருக்க வேண்டுமென்று எண்ணிஞன் அந்த அரசன். உடனே அதை ஒரு பச்சிலையில் பத்திரமாக வைத்துக் கட்டித் தன் மனைவியிடம் சேர்ப்பித்து விடும்படி அருகில் இருந்த பருந்தொன்றை அழைத்து அதனிடம் கொடுத்தான். அது வெகு வேகமாகப் பறந்து சென்றது. வழியில் மற்ெருரு பருந்து, 'அது மாம்ஸம்' என்று எண்ணி அதைப் பறிப்பதற்காக அத்துடன் சண்டையிட ஆரம்பித்தது. முதலில் சென்ற பருந்து எவ்வளவோ சாமர்த்தியமாகப் போரிட்டது. ஆயினும் அதன் காலில் இடுக்கிக்கொண்டிருந்த அந்தப் பொருள் யமுனையாற்றின் வெள்ளத்தில் விழுந்துவிட்டது. அதில் இருந்த ஒரு மீன் உடனே

அதனை விழுங்கிவிட்டது. அது கர்பமாகிவிட்டது. பத்து மாதங்களும் கழிந்தன. யமுனையாற்றின் கரையில் இருந்த மீனவர் தலைவன் வலைவீசி அதைப் பிடித்துவிட்டான்.

## உச்சைச்ரவஸ்

இதுதான் அந்த மீனவர் தலைவனுடைய பெயர். மிகுந்த ஸந்தோஷத்துடன் அதைத் தன் குடிசைக்கு எடுத்துச் சென்று அவன் துண்டித்தான். என்ன அதிசயம்! அதன் வயிற்றினுள் ஓர் ஆண் சிசுவும் ஒரு பெண் சிசுவும் இருந்தன. இரண்டும் அங்கஹீனமில்லாமல் உயிருடன் இருந்தன. இந்த அற்புதம் அவசர அவசரமாக அந்த நாட்டரசனுக்கு அறிவிக்கப்பட்டது. உண்மையை உணர்ந்த உபரிசரவஸு ஆண் குழந்தையை மட்டும் தனக்கு வேண்டுமென்று எடுத்துக் கொண்டு பெண் குழந்தையை அந்த மீனவர் தலைவனுக்கே கொடுத்துவிட்டார். உச்சைச்ரவஸ்ஸுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அவன் மனைவி ஓடோடியும் வந்து குழந்தையை வாரி எடுத்து அணைத்துக்கொண்டாள். மக்கட்பேறு இல்லாத அந்த தம்பதிகளுக்கு இந்த மீனின் குழந்தை பெரிய வரப்பிரஸாதமாயிற்று. ஸத்தியவதி என்று பெயரிட்டுச் செல்வமாக வளர்த்து வந்தான் அவளை உச்சைச்ரவஸ். இவளேதான் நம் வேதவ்யாஸரின் திருத்தாய்.

## மத்ஸ்யகந்தி

அந்த ஸத்தியவதிக்கு இதுவும் மற்றொரு பெயர். ஆனால் பிறர் இட்ட காரணப்பெயர் இது. அவள் இருக்கும் இடத்தில் நெடுந்தூரம் மீன் நாற்றம் வீசுமாம். மீனின் வயிற்றிலேயே கர்ப்பவாஸம். பிறந்த பிறகும் மீன்களின் நடுவிலேயே ஸதாகாலமும் வாஸம். அதுவே உணவு. மீனவர்களுக்கே சகிக்க முடியாத அளவு மீன் நாற்றம் இவளிடமிருந்து பரவியதனால் இவ்வாறு பெயரிட்டு அழைத்தனர். ஸத்தியவதி வளர்ந்து வந்தாள். தந்தைக்கு அவள் பேருதவி புரிந்து வந்தாள். பலவகையான மீன்களைப் பிடிப்பது, பக்குவப்படுத்துவது, அவற்றின் குணதோஷங்களை அறிந்து கொண்டு எடுத்துரைத்து வியாபாரம் செய்வது, ஆற்று வெள்ளத்தில் இக்கரைக்கு அக்கரை

ஓடப் பாட்டுக்கள் பாடிக் கொண்டே ஓடம் ஓட்டுவது. அதில் ஏறிச் செல்பவரிடம் பணம் வசூலிப்பது. ஆற்று வெள்ளத்தின் போக்கை உணர்ந்து அதில் குதித்து நீந்தி விளையாடுவது இவையெல்லாம் அவளுக்குத் தண்ணீர் பட்ட பாடு.

உச்சைச்ரவஸ்ஸுக்குத்தான் மகளைப்பற்றி அபாரமான பெருமை. அவளுடைய உடம்பிலிருந்து வீசிய துர்நாற்றம் பிறரைக்காட்டிலும் அவளையே பெரிதும் துன்புறுத்தியது. மிகவும் அருவருக்கத் தக்க நிலையில் தான் இருப்பதை எண்ணி எண்ணி அவள் ஏங்குவதுண்டு. ஆனால் என்ன உபாயங்களைச் செய்தாலும் இந்த மச்சகந்தம் அவளை விடமாட்டேனென்கிறது. உள்ளம் குமுறிக்கொண்டே இருந்தது. உலகம் போற்றும் உத்தமராம் வேதவ்யாஸருக்குத் தாயாகும் பாக்கியம் அவளைத் தேடி வந்துகொண்டிருக்கிறது. அவள் மச்சகந்தியாக இருந்தால் என்ன? மீனவர் மகளாக இருந்தால்தான் என்ன?

### பராசரர் வருகை

பருவமடையாத கன்னிப்பெண் ஸத்தியவதி சிறந்த கட்டழகி. ஒரு நாள் அவளுடைய ஓடத்தில் முதுபெருமுனிவர் ஒருவர் வந்து ஏறினார். ஓடம் ஆற்றின் நடுவிலுள்ள தீவை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. பராசர முனிவரே அவர். முனிவருக்கு ஸத்தியவதியைக் கண்டதும் மோகம் தலைக்கு ஏறிவிட்டது. இருவருக்கும் கீழ்க்கண்ட ஸம்பாஷணை தொடங்கியது—

பராசரர் : பெண்ணே, படகுக்காரன் எங்கே?

ஸத்தியவதி : நான்தான் என் தகப்பனுருக்காக இந்தத் தொழிலைச் செய்கிறேன். நீங்கள் யார்? என்ன காரியமாக இந்தப் பக்கம் வந்திருக்கிறீர்கள்?

பராசரர் : நான் பராசர முனிவன். தீர்த்தயாத்திரைக்காக இந்தப் பக்கம் வந்தேன். உன் பிறவியும் வரலாறும் எனக்குத் தெரியும்.

ஸத்தியவதி : மீனவர் தலைவனுடைய பெண் மச்சகந்தி என்பவள் நான். துயரம் நிறைந்த என் வரலாற்றில் தாங்கள் அறிந்ததைத் தெரிவியுங்கள்.

பராசரர் : முன்ஜென்மத்தில் பித்ருக்களின் மானஸ கன்னிகையாக இருந்தவள் நீ. பித்ருக்களுடைய சாபத்தினுல் மீனுக்குப் பெண்ணுகப் பிறந்தாய். இந்த நாட்டு அரசனுகிய உபரிசர வஸுவே உன் உண்மையான தந்தை. நீ எனக்கு மனைவியாக வேண்டும். உலகம் போற்றும் உத்தமர் வ்யாஸர் உனக்குப் பிள்ளையாகப் பிறக்கப்போகிறுர்.

ஸத்தியவதி : பருவமடையாத கன்னிப்பெண் நான். தகப்பனுருடைய கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டவள்.

பராசரர் : இப்போது நீ என்னுடன் கூடி ஒரு குழந்தையைப் பெற்றபின் மீண்டும் கன்னிப்பெண்ணுகவே மாறிவிடுவாய். அப்பா கோபிக்க மாட்டார்.

ஸத்தியவதி : என் உடம்பில் சகிக்க முடியாத துர்நாற்றம் வீசுகிறதே!

பராசரர் : ஒரே நிமிஷத்தில் அது போய்விடும். சிறந்த நறுமணம் உன் உடம்பில் தானுக வீசும்.

ஸத்தியவதி : ஆற்றின் இரு கரைகளிலும் மகரிஷிகள் பலர் நம்மைப் பார்த்துக்கொண்டே இருக்கிறுர்களே! அவர்களின் முன்னிலையில் நாம் இருவரும் எவ்வாறு கூடுவது?

பராசரர் : மாபெரும் மூடுபனி தோன்றும். ஒருவருடைய கண்ணுக்கும் ஒன்றும் தெரியாது.

ஸத்தியவதி : இதெல்லாம் எப்படி நடக்கும்?

பராசரர் : என் தவத்தின் மகிமையை நீ அறியாய்! எனக்கு உன்னிடம் – இந்த உத்தமோத்தமமான புண்ணிய காலத்தில் – ஓர் ஆண் குழந்தை பிறக்க வேண்டும். இதற்கு நீ இசைவாயாக.

ஸத்தியவதி பிரமித்துப் போய் நின்றுள். அதிசயிக்கத்தக்க விதமாக ஒன்றன் பின் ஒன்றுக இந்த மாறுதல்கள் யாவும் நிகழ்ந்தன. கடுமையான மூடுபனி அவ்விடத்தைச் சூழ்ந்துகொண்டது. அவளுடைய உடம்பில் சிறந்த நறுமணம் தோன்றியது. மீன் நாற்றம் பறந்தோடிவிட்டது. பராசர முனிவரும் ஸத்தியவதியும் இன்புற்றிருந்தனர், ஸத்தியவதிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

## வேதவ்யாஸர்

அந்தக் குழந்தைதான் பிற்காலத்தில் வேதவ்யாஸர் ஆனுர். வேதங்கள் பொலிவெய்தின. தர்மம் தழைத்தது. வேதாந்தம் விளங்கியது. புராணங்கள் பிரகாசித்தன. ஆஸ்திகர்கள் ஆனந்தக் கூத்தாடினர். தேவர்கள் தாண்டவமாடினர். சாந்தி மார்க்கம் சிறப்புற்றது. தவம் துள்ளிவிளையாடியது. தத்துவங்கள் தோன்றின. புண்ணியமான பாரதபூமி மேலும் ஒரு படி உயர்ந்தது. பராசரர் பேரானந்தமடைந்தார். ஸத்தியவதி ஸத்தியத்தின் மகிமையை நேரில் கண்டாள். உலகங்களைக் காக்கும் ஸத்யஸ்வரூபியான ஸ்ரீமந்நாராயணன், யமுனையாற்றின் மத்தியிலுள்ள தீவில், இலந்தை மரங்கள் அடர்ந்த பிரதேசத்தில், கன்னிப்பெண்ணுன ஸத்தியவதிக்கும் பராசர மகரிஷிக்கும் பிள்ளையாகத் திருவவதாரம் செய்தருளினுர்.

## தாயின் பாசம்

ஸத்தியவதிக்குத் தன் தகப்பனுரின் ஜ்ஞாபகம் வந்தது. அவர் கோபித்துக்கொள்வாரே என்னும் பயமுங்கூட, யமுனையாற்றில் நீராடி முனிவரை வணங்கினுள். ஆச்சரியத்தின் மேல் ஆச்சரியம்! பழையபடி கன்னிப்பெண்ணுகவே மாறிவிட்டாள் அவள். ஆனுல் அவளது உடம்பில் தோன்றிய நறுமணம் மட்டும் நிலைத்து நின்றுவிட்டது. ஒரு யோஜனை தூரம் வரை அந்த மணம் வீசுமாம். அதனுல் அன்றுமுதல் அனைவரும் அவளை 'யோஜனகந்தா' என்று அழைக்கலாயினர். குழந்தையைப் பார்த்தாள். பாசம் பெருகியது. பாவம்! பிரஸவம் என்பது பெண்களுக்கு மறுபிறவி என்பர். முன்னும் பின்னும் எவ்வளவு ஏற்பாடுகள் இதற்காக எச்சரிக்கையுடன் செய்யப்படுகின்றன? சாதாரணமான குடும்பங்களில்கூட இதற்குக் குறைவில்லை. இவளுக்கு அப்படியெல்லாம் ஏதாவது உண்டோ? ஒன்றுமில்லை. 'ஆகாசம் போட்டது; பூமி ஏந்தியது' என்பார்களே; அது இவளுக்குத்தான் பொருந்தும். தன் செல்வக்குமாரனை வாரி எடுத்துக் கட்டித் தழுவி இன்பவெள்ளத்தில் மூழ்க இவள் விரும்பினுள். குழந்தையை எடுக்கப் போனுள்.

## பிஞ்சில் பழுத்தது

"என்னைத் தொடாதே!" என்று கண்டிப்பான குரல் தோன்றியது. என்ன அதிசயம்! பிறந்த குழந்தைதான் இவ்வாறு கூறுகிறது. பிறந்தவுடனே அந்தக் குழந்தை வெகு வேகமாக வளர ஆரம்பித்தது. ஏழு வயது பாலகனுகிவிட்டது.

ஏழு வயதான பாலகன் யமுனையாற்றில் இறங்கி ஸ்நானம் பண்ணிவிட்டு அப்பாவை வணங்கினுன். "க்ஷேமமாக இருக்க வேண்டும்" என்று ஆசி கூறிக் கையில் ஒரு கமண்டலத்தையும் கொடுத்தார் தந்தை பராசர முனிவர். ஸத்தியவதி குழந்தையை எடுக்க வந்தபோது கலசமும் கையுமாக மகாதேஜஸ்வியாக நிற்கிருன் குழந்தை! இது மட்டுமா? வைதிகம் கொந்துகிறது. "நீ மீனவப் பெண். என்னைத் தொட்டால் தீட்டு!" என்கிருன்.

## தாயின் மகிமை

ஸத்தியவதிக்குத் துயரம் தாங்கவில்லை. பராசர முனிவரின் திருவடிகளில் விழுந்து கண்ணும் கண்ணீருமாக அழுதாள். பராசர மகரிஷி பார்த்துக்கொண்டேதான் இருக்கிருர். இவ்வளவு அதிகப் பிரசங்கியாகத் தம் செல்வக் குமாரன் நடந்து கொள்வதை அவரும் விரும்பவில்லை. கடுமையாக எதையும் சொல்ல அவர் துணியவில்லை. சொன்னுலும், பயன் விபரீதமாகிவிடலாம் என்ற பயம் ஒரு பக்கம். தாம் இளம் பிராயத்தில் நடந்துகொண்ட விதமும், பெரியோர்கள் நல்லதனமாகவே தம்மை வழிக்குக் கொண்டு வந்ததும் மறந்து போய்விட்டனவா என்ன அவருக்கு? தம் பிள்ளை தம்மையும் விஞ்சியவனுக இருப்பதைப் பராசரர் நன்கு உணர்ந்துகொண்டார். தாயின் மகிமையைச் சுருக்கமாக எடுத்துக்கூறி மகனது மனத்தைத் திருப்ப முயன்ருர்.

धारणाद् दुःखसहनात् तयोर्माता गरीयसी ।

தாரணுத் துःக்கஸஹநாத் தயோர் மாதா கரீயஸீ ।

தாயும் தந்தையும் சரிசமானமாகப் போற்றத்தக்கவரேயாயினும், தந்தையைக் காட்டிலும் தாய்க்கு அதிக முக்கியத்துவம் இருக்கத்தான் இருக்கிறது. அவள் குழந்தையை வயிற்றுக்குள் சுமக்கிருள்; அதனுல் வரும் துன்பங்களைப்

பொறுத்துக்கொள்கிருள். வ்யாஸருக்கு இந்த உண்மை எடுத்துக் காட்டப்படுகிறது. இப்படி முன்னறி தெய்வமான தாய் எந்த இனத்தைச் சார்ந்தவளாக இருந்தாலும் அவளுடைய தனிப்பெருமை குன்ருது. வரலாற்றில் பல உதாரணங்கள் இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

ऋश्यशृङ्गो मृगीपुत्रः, कण्वो बर्हिसुतस्तथा ।
अगस्त्यश्च वसिष्ठश्च उर्वश्यां जनितावुभौ ।
सोमश्रवास्तु सर्प्यां तु, अश्विनावश्विसंभवौ ॥

ரிச்யச்ருங்கோ ம்ருகீபுத்ர:, கண்வோ பர்ஹிஸுதஸ் ததா ।
அகஸ்த்யச்ச வஸிஷ்டச்ச உர்வச்யாம் ஜநிதாவுபௌ ।
ஸோமச்ரவாஸ்து ஸர்ப்யாம் து, அச்விநாவச்விஸம்பவௌ ॥

ரிச்யச்ருங்கர் மானுக்குப் பிறந்தார். கண்வர் மயிலுக்குப் பிறந்தார். அகஸ்தியரும் வஸிஷ்டரும் ஊர்வசியின் பிள்ளைகள். ஸோமச்ரவஸ் என்பவர் பாம்பின் பிள்ளை. அச்விநி தேவர்கள் குதிரையின் பிள்ளைகள். உலகப் பிரசித்தி பெற்ற மகரிஷிகளும் தேவர்களும் பாம்புக்கும் மானுக்கும் குதிரைக்கும் மயிலுக்கும் தேவமாதுக்கும் மக்களாகத் தோன்றியுள்ளனர். ஆயினும் அவர்கள் தத்தம் தாயின் மகிமையை உணர்ந்து வழிபட்டு வணங்கி வந்துள்ளனர்; புறக்கணிக்கவில்லை. இந்த உண்மை வ்யாஸருடைய குழந்தையுள்ளதில் பசுமரத்தாணிபோல் பதியவைக்கப்படுகிறது.

பராசரர் தொடர்ந்து சொல்கிருர் — இந்த ஸத்தியவதியை நீ சாதாரண மீனவர் பெண் என்று எண்ணி அலக்ஷ்யம் செய்யாதே. இவள் யோகஸித்தியுடையவள். பித்ருக்களுடைய மகள். சாபத்தினுல் மீனுடைய கர்ப வாஸம் பெற்று மீனவர் பெண்ணுக வாழ்ந்து வருகிருள். இப்போதைய தோற்றத்தையே ஆதாரமாகக் கொண்டு இவளை நீ தாழ்வாக நினைக்கக் கூடாது. இவளுடைய உண்மையான மகிமையை உணர்ந்து கௌரவிக்க வேண்டும்.

மற்றுமொரு விஷயம்; பிற்காலத்தில் நீதான் வேதவ்யாஸனுகப் போகிருய். வேதங்களைப் பல சாகைகளாகப் பிரித்து வரையறுத்து அழிந்து போகாமல் காப்பாற்றப் போகிருய். அதன் மூலம் தர்ம மார்க்கத்தை நிலைநாட்டப் போகிருய். உன் புகழ் பாரத பூமி எங்கும் பரவப் போகிறது. இப்படிச் சீரும் சிறப்புமாக ஓங்கி வளர

வேண்டிய நீ சின்னஞ்சிறு வயதில் தாயை அவமதித்தலாகிற இழிவான காரியத்தைச் செய்வது பொருந்தாது. பராசர முனிவர் இப்படி நல்வார்த்தைகளைச் சொல்லிக் குழந்தையின் மனத்தை மாற்றியருளினுர்.

சிறுவன் தாயின் மடியில் அமர்ந்தான். ஸத்தியவதிக்குப் பாசம் வெள்ளமிட்டோடியது. பிள்ளையைத் தொட்டவுடன் அன்பு மிகுதியினுல் அவர் மார்பில் பால் பெருகியது. தன் செல்வக் குமாரனைக் கட்டியணைத்துப் பேரின்பமெய்தினுள். அவளுடைய முலைப்பால் ஆறுகப் பெருகி வேதவ்யாஸரை அபிஷேகம் பண்ணியது.

## அன்னையின் ஆசை

"பிள்ளையைப் பெறுவது ஒன்றுதான் இவ்வுலகில் சிறந்தது. பெரிய தபஸ்ஸினுலும் யோகத்தினுலும் நான் இந்த பாக்கியத்தைப் பெற்றேன். பாற்கடலைக் கடைந்து அமுதத்தைப் பெற்றபோது தேவர்கள் எவ்வளவு ஆனந்தமடைந்தனரோ அவ்வளவு பெருமை எனக்கு இப்போது. நான் பட்ட கஷ்டங்களெல்லாம் மறைந்துவிட்டன இந்த இன்ப வெள்ளத்தில்" என்று மெய்ம்மறந்து கூறினுள் ஸத்தியவதி. தன் அருமைப் புதல்வனைப் பலதரம் கட்டியணைத்து முத்தமிட்டுக் கொஞ்சினுள். இவன் என்ன சாதாரணமான பிள்ளையா? பராசர மகரிஷியின் மகனல்லவா? தளராத வைராக்கியமும் தவம் புரியும் மனப்போக்கும் இந்தப் பிள்ளைக்கு இயற்கையான குணமாக அமையும். அதனுல், அடுத்தாற்போல் என்ன நிகழப்போகிறது என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டாள் ஸத்தியவதி. தன் அருமைப் புதல்வனைப் பாசம் மீதூர்ந்த நிலையில் வேண்டிக்கொள்கிருள் —

तस्मात् त्वं मामृषेः पुत्र त्यक्तुं नार्हसि सांप्रतम् ।

தஸ்மாத் த்வம் மாம் ரிஷே: புத்ர த்யக்தும் நார்ஹஸி ஸாம்ப்ரதம் ।

"ரிஷிபுத்திரனே! இந்த ஸமயத்தில் நீ என்னை விட்டு விலகிச் செல்லாதே" என்று அவள் வேண்டிக்கொண்டாள். அவ்வளவுதான், வேறு என்னத்தைச் சொல்லப் போகிருள்? பாவம்! தன் முரட்டுப் பிள்ளையைக் கவரக்கூடிய பொருள் ஏதாவது அவளிடம் உண்டா?

அப்படியே இருந்தாலும் உலக ரீதியில் சிறு பிள்ளைகள் விரும்பி வரவேற்கும் பொருள்களால் வசப்படுத்தக்கூடிய பிள்ளையா இது? தான் தாயாக இருக்கும் இருப்பு ஒன்றையே காரணமாகக் கொண்டு மேற்கூறியவாறு வேண்டிக்கொண்டாள் ஸத்தியவதி.

### பிள்ளை வரம்

பிள்ளை இல்லாதவர்கள் தம் இஷ்ட தெய்வத்தை வழிபட்டுப் பிள்ளை பிறக்குமாறு வரம் பெற்றால் அதைப் 'பிள்ளை வரம்' என்பது வழக்கம். இங்கு அவ்வாறு இல்லை; பிள்ளை தாய்க்குக் கொடுத்த வரமே பிள்ளை வரமாயிற்று. அன்னையின் வேண்டுகோளை நிராகரிக்க முடியவில்லை வேதவ்யாஸருக்கு. அதை ஏற்கவும் விருப்பம் இல்லை.

அவருக்கு எவ்வளவோ முக்கியமான காரியங்கள் காத்துக்கொண்டிருக்கின்றன. உலக க்ஷேமார்த்தமான அந்த அரிய பெரிய திருப்பணிகளை ஆற்ற வேண்டிய பெரும் பொறுப்பு அவர்மேல் சுமத்தப்பட்டுள்ளது. அவற்றைத் திறம்பட நிறைவேற்றுவதற்கு அவர் எங்கெல்லாமோ சென்று பல அரிய செயல்கள் செய்ய வேண்டும். பற்பல முனிசிரேஷ்டர்களுடன் அளவளாவ வேண்டும். இதற்கெல்லாம் மூலகாரணமான தவ மகிமையை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதற்காகவே தோன்றிய அவர் உலக ரீதியில் அம்மாவின் மடியிலேயே ஆனந்தமாக அமர்ந்திருக்க முடியுமா?

அதனால் இந்தச் சங்கடத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக வேதவ்யாஸர் அம்மாவுக்கு ஒரு விசித்திரமான வரம் கொடுத்தார். தாயின் உள்ளமும் திருப்தியடைந்தது. வியாஸருடைய எதிர்காலத் திட்டங்களுக்கும் எவ்விதமான இடையூறும் இல்லை. "நீ நினைத்த பொழுதெல்லாம் உனது இருப்பிடம் வருவேன்" என்பதுதான் வேதவ்யாஸர் தாய்க்குக் கொடுத்த வரம்.

ஸத்தியவதி ஓர் இடத்திலும் வேதவ்யாஸர் மற்றோர் இடத்திலும்தான் இருப்பார்கள். அவரவர் வெவ்வேறு காரியங்களிலும் ஈடுபட்டுக்கொண்டு இருப்பார்கள். எந்தக் காரணத்தினாலாவது ஸத்தியவதிக்கு வேதவ்யாஸரைப் பார்க்க வேண்டுமென்று தோன்றினால், அவள் வாய்விட்டுக் கூப்பிட வேண்டியதில்லை. வேறு யாரிடமாவது சொல்லியனுப்பவும்

வேண்டாம். 'வேதவ்யாஸன் இப்போது இங்கு வர வேண்டும்; அவனைப் பார்க்க வேண்டும்' என்று நினைத்தாலே போதும்; வேதவ்யாஸர் அவளிருப்பிடம் வந்து சேர்ந்துவிடுவார். அவருடைய அற்புதமான யோக மகிமையினுல் இது நிகழ்ந்தது.

"இப்படியும் நடந்திருக்க முடியுமா?" என்று நம்போல் வாருக்கு வியப்பும் அவநம்பிக்கையும் உண்டாவது இயல்பே. யோகத்தின் பெருமை அளவிடவொண்ணுதது. யோகிகளை நம்முடைய உதாரணத்தைக் கொண்டு மதிப்பிடுவது பொருத்தாது. அவர்கள் அதிசயமான பிறவிகள். இதற்கு எண்ணற்ற உதாஹரணங்கள் உண்டு. விரிவைத் தவிர்க்க வேண்டி அவற்றை இங்கு விளக்கவில்லை. சாதாரணமாக ஒன்றிரண்டு கூறுவோம்.

## மீன், ஆமை, பறவை

பகவத் ஸ்ருஷ்டியில் எவ்வளவோ விசித்திரங்கள். மீன்கள் தம் குட்டிகளுக்குப் பசியெடுக்கும்போது உணவூட்டிக் காப்பாற்றும் அதிசயம், கேளீர்! தன் குட்டிக்காகத் தாய்மீன் தான் உணவை உட்கொள்ளும், பிறகு குட்டியைத் தன் கண்களால் உற்றுப் பார்க்கும். குட்டியும் தாய்மீனையே பார்த்தவாறு இருக்கும். இப்படியே சற்று நேரம் இருக்கும். குட்டியின் பசி தீர்ந்துவிடும். இரண்டும் தன் இஷ்டமான திசையில் ஓடிப்போய்விடும்.

ஆமை அதிசயத்திலும் அதிசயமான விதத்தில் தன் குட்டிகளின் பசியை ஆற்றுகிறது. நேராகப் பார்க்க வேண்டிய அவசியங்கூட இதற்கு இல்லை. தாயும் சேயும் வெவ்வேறு இடத்தில் இருந்தாலும் பசிவேளையில் தாய் குட்டியை மனத்தில் தியானம் பண்ணிக்கொண்டே இருக்கும். அதனுலேயே குட்டியின் பசி தீர்ந்துவிடும்.

பறவைகள் தம் சின்னஞ்சிறு குஞ்சுகளின் பசியை எப்படி ஆற்றுகின்றன தெரியுமா? தமது உடலில் சேர்த்து அணைத்துக்கொண்டு சிறிது நேரம் இருக்கின்றன. அவ்வளவிலேயே குஞ்சுகளின் பசி தீர்ந்துவிடுகிறது. இவை போன்ற விசித்திரங்கள் பிரபஞ்ச ஸ்ருஷ்டியில் இறைவனுல் தோற்றுவிக்கப்பட்டு இன்றளவும் காண்கின்றன. ஆறறிவு படைத்த மானிடப் பிறவியில், மகரிஷி பரம்பரையில் தோன்றிய யோகஸித்தரான

வேதவ்யாஸருக்குக் கேட்க வேண்டுமா? அவருடைய பெருமையில் இது ஒரு பரமாணு போன்றதே.

இப்படி வரம் கொடுத்துவிட்டுத் தாய்க்கு ஆறுதல் கூறி விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார் வேதவ்யாஸர் - தவம் புரிவதற்காக. பராசர முனிவருக்கு மட்டும் இனி இங்கே என்ன காரியம்? அவரும் குமாரனுடன் சென்று விட்டார். போகும்போது ஸத்தியவதியைக் குளிரக் கடாக்ஷித்து, "மீண்டும் கன்னிப் பெண்ணுவாய்" என்று கூறிச் சென்ருர். ஒருவிதமான அடையாளங்களும் இல்லாமல் பழையபடியே இளங் கன்னிப்பெண்ணுக மாறிவிட்டாள் அவள். தந்தையும் மகனும் அண்மையில் இருந்த அரணியத்தில் சென்று மறைந்தனர். வேதவ்யாஸருடைய புனிதமான திருவவதாரம் இவ்வாருக நடந்தது.

## உபநயனம்

தம் தாயாகிய அத்ருச்யந்தீயின் இருப்பிடம் சேர்ந்தார் பராசர முனிவர், குழந்தையுடன். ஜாதகர்மம், நாமகரணம், அந்நப்ராசநம், சௌளம் முதலிய ஸம்ஸ்காரங்கள் வேதவ்யாஸருக்குச் சிறப்பாக நடந்தன. ஸாக்ஷாத் பராசர பகவான் தாமே இவற்றைச் செய்தார். ஆனுல் உபநயனம் மட்டும் வேருெருவரைக் கொண்டு செய்வித்தார். தாமே அதையும் செய்துவைப்பதற்கு உரிமையும் தகுதியும் அவருக்கு இருந்தன. ஆயினும் யாஜ்ஞவல்க்ய முனிவரையே வேதகுருவாக வரித்து அவரைக்கொண்டே வேதவ்யாஸருக்கு உபநயனமும் வேதாத்யயனமும் செய்வித்தார் பராசரர். யாஜ்ஞவல்க்யர் ஸூர்யனிடம் நேரில் சென்று வேதவடிவமான அவனிடமே வேதங்களைக் கற்றுணர்ந்து, மீண்டும் மண்ணுலகில் வந்து வேதப்ரவசநம் செய்தவர். அதனுல் வேதங்களைப் பற்றினவரையில் அவருக்கு தனிப்பெருமை உண்டு. அதுவே பராசர முனிவரின் மனத்தில் பதிந்திருக்கக்கூடும். வேதவ்யாஸர் வேதங்கள் அனைத்தையும் கசடறக் கற்றுத் தேர்ந்தார். பிரம்மசரியம் முடிந்ததும் க்ருஹஸ்தாச்ரமத்தில் அடியெடுத்து வைக்கவில்லை. மேலும் மேலும் தவம் புரிவதிலேயே அவர் மனம் சென்றது. நீண்ட காலம் தவத்திலேயே ஆழ்ந்திருந்தார்.

## பிறவிப் பயன்

தாம் அவதாரம் பண்ணியதன் முக்கியமான குறிக்கோள் வேதவ்யாஸரின் நினைவுக்கு வந்தது. க்ருத யுகத்தில் தர்மம் நான்கு கால்களுடன் (ஒரு விலங்கு வடிவத்தில் நாலு காலுள்ளதாகத் தர்மத்தை உருவகப்படுத்தியவாறு) பூர்ணமாக இருந்தாலும், த்ரேதாயுகத்தில் ஒரு கால் ஊனமாகி மூன்று கால்களாலேயே அது நிற்பதும், த்வாபர யுகத்தில் மேலும் ஒரு காலை இழந்து இரு கால்களால் நிற்பதும், அண்மையில் வர இருக்கும் கலி யுகத்தில் அது மற்றுமொரு காலையும் இழந்து ஒரே காலால் தாங்க முடியாத கஷ்டத்துடன் நிற்கப் போவதையும் உணர்ந்து வருந்தினார் வ்யாஸர். அவர் முக்காலமும் அறிந்த மகான் அல்லவா? அதேபோல் மற்றொரு விஷயமும் அவருக்குப் பெரும் மனவேதனையை அளித்தது. க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்னும் நான்கு யுகங்களிலும் படிப்படியாக மக்களின் அறிவாற்றல் பிரமிக்கத்தக்க வகையில் க்ஷீணித்து வருவதைக் கண்கூடாகக் கண்டுகொண்டார் அவர். யாராலும் மாற்ற முடியாதவாறு ஊன்றிவிட்ட இவ்வுலகியற்கையை எண்ணி எண்ணி மனம் புழுங்கினார். உலக விவகாரங்கள் சீர்கெடாமல் நன்றாக நடக்க வேண்டுமானால் அதற்கு ஜீவாதாரமானவை வேதங்கள்தாம். அவற்றை முறைப்படி கற்றுணர்ந்து காப்பது அரிய பெரிய திருப்பணியாகும். இந்த மாபெரும் பொறுப்பு அந்தணர்வசம் ஒப்புவிக்கப்பட்டது. வேறு பயனொன்றையும் கருதாமல், இதையே தமது பிறவிப் பயனாக அந்தணர்கள் கருதி வந்தனர். நாடெங்கும் சாந்தியும் ஸந்தோஷமும் ஸத்தியமும் அஹிம்ஸையும் கடமையுணர்ச்சியும் நிலவி வந்தன. பிரம்மாண்டமான மலை போன்றதும், ஆழங் காண முடியாத பெருங் கடல் போன்றதுமான வேதத்தை அநாயாஸமாகக் கற்று தரித்து, அதில் பொதிந்துள்ள அரிய பெரிய கருத்துக்களை மற்றவருக்கு எடுத்துச் சொல்லும் பேராற்றல் அந்தணர்களிடையே தேய்ந்து மறைந்துவிட்டது. மேதையின் வலிமை குன்றிப் போய்விட்டது மானிடர்களுக்கு- சிறப்பாக அந்தணர்க்கு. இதன் விளைவு எவ்வாறெல்லாம் வருங்காலப் பிரஜைகளைப் பாதிக்கும் என்பதை வேதவ்யாஸர் நன்கு உணர்ந்தார்.

அதற்காக அவர் ஒரு வழியைக் கண்டுபிடித்தார். வேதங்களைப் பலவாறுப் பிரித்துச் சிறு சிறு பகுதிகளாக்கிவிட்டால் அதைக் கற்பவர்கள் அதிக ஆயாஸமின்றி உற்சாகத்துடன் தத் தம் பணிகளில் ஈடுபடுவர். இன்னார் இன்னார் இன்ன இன்ன வேதசாகையைத்தான் அத்தியயனம் பண்ணலாம் என்று திட்டப்படுத்திவிட்டால் வேதத்தின் எல்லாப் பகுதிகளும் சாகாமல் பிழைக்கும்; கற்பவர்களுக்கு அதிகமான பாரமும் இராது என்பதை அவர் உணர்ந்தார். உடனே இதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

இதென்ன, சாமானியமான காரியமா? அகண்டமான வேதம் முழுவதையும் மனத்தில் தேக்கி வைத்துக்கொண்டு, பிறகுதானே இதைச் செய்ய வேண்டும்? இதற்கு முற்றும் தகுதி பெற்றிருந்தார் வேதவ்யாஸர். ரிக் யஜுஸ் ஸாமம் என்று மூவகையான பாகங்களையும் தமது கூர்ந்த அறிவினால் தனித் தனியாகப் பிரித்துவிட்டார். அதர்வ வேதமும் அவ்வாறே தனிப்படுத்தப்பட்டது. இம்மட்டோ? வேதங்களைக் கற்கும் வாய்ப்பு பெறாதவர்களுக்குங்கூட வேதத்தின் உட்பொருள் விளங்குமாறு தத்துவ நூல்களாகிய இதிகாச புராணங்களையும் அவரே இயற்றியருளினார்.

பிரம்மதேவனுடைய ஆணைப்படியே இதெல்லாம் நடைபெற்றது. இவ்வாறு அரும்பாடு பட்டு ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாம வேதம், அதர்வ வேதம், இதிஹாஸம், புராணம் என்று கூறுபோட்ட வேதவ்யாஸருக்கு இவற்றைப் பிரசாரம் செய்யும் ஆற்றல் நிறைந்த சிஷ்யர்களுக்கும் குறைவில்லை. பைலர் என்ற முனிவர் ரிக் வேதத்தையும், வைசம்பாயனர் என்ற முனிவர் யஜுர் வேதத்தையும். ஜைமினி என்ற முனிவர் ஸாம வேதத்தையும், ஸுமந்து என்ற முனிவர் அதர்வ வேதத்தையும் ஏற்றுக்கொண்டனர். ரோமஹர்ஷணர் என்பவர் ஸூத வம்சத்தில் பிறந்தவர். ஸூதர்கள் என்பவர்கள் அரசகுலங்களில் துதி பாடுகிறவர்கள். அந்தக் குலத்தில் உதித்த ரோமஹர்ஷணர், வ்யாஸருடைய சிஷ்யராக இருந்து இதிஹாஸ புராணங்களை நன்கு கற்றுத் தேர்ந்தார். பிற்காலத்தில் ஸூதபௌராணிகர் என்று பாகவதம் பாரதம் முதலிய நூல்களில் அடிக்கடி கூறப்பெறுபவர் இவர்தாம். இவ்வாறாக நான்கு வேதங்களையும் பகுத்துத் தக்க முனிவர்களிடம் ஒப்படைத்தார் வேதவ்யாஸர். அவரது கவலை நீங்கியது. அவருடைய அருமைச் சீடர்களாகிய ஐவரும் தத் தம் பணியைத் திறமையுடன் நிறைவேற்றினர்.

ஒவ்வொரு வேதமும் பற்பல சாகைகளாகப் பிரிக்கப்பட்டது. அந்த அந்த சாகைகளை ஓதுவதற்கேற்ற குலங்கள் கோத்திரங்கள் ஸூத்திரங்கள் சடங்குகள் விதிமுறைகள் எல்லாம் வரையறுக்கப்பட்டன. இன்று பலநூறு ஆயிரம் சாகைகளாக வேதங்கள் வழங்குகின்றன. இவை எல்லாவற்றுக்கும் முதல் தனி வித்தாகத் திகழ்ந்தவர் வேதவ்யாஸர். இன்று பலவேறு இடங்களில் வெவ்வேறு வேதசாகைகளை ஓதும் அத்தனை பேரும் இந்த வேதவ்யாஸருடைய சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரையைச் சார்ந்தவர்களே. 'ततो जातं वेदपादपकाननम्' – ததோ ஜாதம் வேதபாதபகாநநம்' என்கிறார் பராசர பகவான். வேதங்களாகிய மரங்கள் பற்பல கிளைகளுடன் பிரம்மாண்டமான காடாகிவிட்டனவாம். எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தச் சீர்திருத்தம் நடந்தது. இன்றளவும் வேதங்கள் ஓர் எழுத்துக்கூடப் பிசகில்லாமல் காப்பாற்றப்பட்டு வருகின்றன. இன்னும் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் தொடர்ந்து உருக் குலையாமல் வாழ்ந்து உலகுக்கு அவசியமான ஜ்ஞான ஒளியை வீசப்போகின்றன. இதற்கு மூலகாரணமாக விளங்கும் வேதவ்யாஸருக்கும் அவருடைய சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரைக்கும் அஞ்ஜலி செய்வோம்.

## ஸத்தியவதியின் மறுமணம்

வேதங்களை இப்படிப் பகுத்து லோகோபகாரம் செய்த வேதவ்யாஸர் மற்றும் எவ்வளவோ நற்காரியங்களையும் செய்திருக்கிறார். அவற்றை எல்லாம் இங்கு எடுத்துரைத்தால் அது ஒரு மகாபாரதமாகிவிடும். சிலவற்றை மட்டும் கூறுவோம் இங்கு. வேதவ்யாஸருடைய தாயாகிய ஸத்தியவதி, தன் மீனவத் தந்தையினிடமே வழக்கம்போல் இருந்து வந்தாள். கன்னிப் பருவம் கழிந்தது. யௌவன வயதை அடைந்தாள். அவளுடைய கவர்ச்சிகரமான தோற்றம் ஒரு சக்கரவர்த்தியையே பரவசப்படுத்தியது. சந்தனு மகாராஜாதாம் அவர். ஏற்கெனவே ஒரு மனைவியை மணந்து ஒரு பிள்ளையையும் பெற்றவர் அவர். அந்தப் பிள்ளைதாம் பிரசித்தி பெற்ற பீஷ்மர். அவரைப் பெற்றவுடன் அவருடைய தாய் அவரை விட்டு அகன்றுவிட்டாள். பிறகு நெடுநாள்

வரை சந்தனு மகாராஜர் மறுமணம் செய்துகொள்ளவே இல்லை. ஒரு நாள் தற்செயலாக ஸத்தியவதியைக் கண்டார். அவளுடைய உடலில் தோன்றிய நறுமணம் அவரை ஈர்த்தது. அவளது வனப்பால் கவரப்பட்டார். தம்மை மணந்துகொள்ளும்படி அவளை வேண்டினார். தம் தந்தையைக் கேட்குமாறு அவள் சொல்லிவிட்டாள். உச்சைச்ரவஸ் என்னும் அவளுடைய தந்தை மிகவும் கெட்டிக்காரர். சக்கரவர்த்தியினுடைய மோகத்தின் வேகத்தை நன்றாகப் புரிந்துகொண்டுவிட்டார் அவர். "என் பெண்ணுக்குப் பிறக்கும் பிள்ளையையே முடிசூடும் மன்னவனுக்குவதானால் என் பெண்ணை மணம் செய்து கொடுக்க முடியும்" என்ற கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

மூத்தவளின் பிள்ளை மகாதேஜஸ்வியான பீஷ்மர் இருக்க இந்த ஏற்பாடு ஸாத்தியமில்லை என்பதை நன்கு உணர்ந்த சந்தனு மகாராஜர், மௌனமாகத் திரும்பிச் சென்றுவிட்டார். அவரது ஏங்கிய நிலைமையைக் கண்ணுற்ற உத்தமப் புதல்வர் பீஷ்மர், உண்மையை விசாரித்து அறிந்துகொண்டார். யமுனையாற்றங் கரையிலுள்ள மீனவர் தலைவனிடம் தாமே நேரில் சென்றார், பல அரசாங்க உத்தியோகஸ்தர்களுடன். ஸத்தியவதியின் தந்தை விரும்பியவாறே உறுதிமொழி அளித்தார். "நான் ஆட்சிப்பீடத்தில் அமருவதில்லை. இனி என் ஆயுள் முழுவதும் பிரம்மசாரியாகவே இருப்பேன். அதனால் எனக்குப் பிள்ளையே பிறக்கப்போவதில்லை. ஸத்தியவதிக்குப் பிறக்கும் பிள்ளையே அரசனாவான். அவனுக்கு ஸகல விதத்திலும் நான் உறுதுணையாக இருப்பேன்" என்று சபதம் செய்தார் பீஷ்மர். தம் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்குமாறு மீனவர் தலைவனை வேண்டினார். சந்தனு மகாராஜருக்கும் ஸத்தியவதிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. அவ்விருவருக்கும் அது மறுமணமே ஆயிற்று.

### தர்ம சங்கடம்

ஸத்தியவதிக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தன. முதல்வன் சித்திராங்கதன். இரண்டாமவன் விசித்திரவீர்யன். இரண்டாம் புத்திரன் சிறு பிள்ளையாக இருந்தபோதே சந்தனு மகாராஜர்

காலகதியை அடைந்துவிட்டார். உடனே பீஷ்மர் சித்திராங்கதனைப் பட்டத்தரசனாக்கி முடிசூட்டினார். தன் பெயரையே கொண்ட கந்தர்வன் ஒருவனுடன் வம்புச் சண்டையில் ஈடுபட்டு மாண்டுபோனான் அவன். பீஷ்மர் தம் இரண்டாவது தம்பியாகிய விசித்திரவீர்யனைச் சிறு பிராயத்திலேயே முடிசூட்டி அரச சிம்மாசனத்தில் அமர்த்தி, ராஜ்ய காரியங்களைக் குறைவறக் கவனித்து வந்தார். ஸத்தியவதிக்கு மிகவும் பெருமையாகவே இருந்தது.

விசித்திரவீர்யனுக்குக் கல்யாண வயது வந்தது. காசிராஜனுடைய பெண்கள் இருவர் சிறந்த கட்டழகிகளாக இருந்தனர். அம்பிகா அம்பாலிகா என்ற அவ்விரு கன்னியரையும் சுயம்வரத்தில் வென்று கொணர்ந்து, தம் தம்பியாகிய விசித்திரவீர்யனுக்கு மணம் செய்வித்தார் மஹாவீரரான பீஷ்மர். காமாதுரனாகிய விசித்திரவீர்யன் அவ்விருவருடனும் அமிதமான சிற்றின்பத்தில் ஈடுபட்டு க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டு ஸந்ததியின்றியே மாண்டான். மாமியாராகிய ஸத்தியவதியும், மருமகளிராகிய அம்பிகை அம்பாலிகை இருவரும் ஆக மூன்று விதவைகளே குருவம்சத்தில் எஞ்சியிருந்தனர். வம்சமே நிர்மூலமாகிவிட்டது. ஸத்தியவதிக்குத் தாங்க மாட்டாத துக்கம். என்ன செய்வாள், பாவம்! அக்காலத்திய வழக்கப்படி தன் மருமகளிர் இருவருக்கும் கர்பாதானம் பண்ணிக் குடியை விளங்க வைக்குமாறு தன் மூத்தவள் குமாரராகிய பீஷ்மருக்குக் கட்டளையிட்டாள் ஸத்தியவதி. தாம் ஏற்கெனவே செய்திருந்த சபதத்தை நினைவூட்டி இதற்கு மறுத்துவிட்டார் பீஷ்மர். அவருடைய உறுதியைக் குலைக்க யாரால் முடியும்?

## அன்னையின் கட்டளை

இவ்வாறாகத் தமக்கு வந்த தர்ம சங்கடத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டார் பீஷ்மர். தன் பழைய வரலாற்றை அவருக்கு எடுத்துரைத்தாள் ஸத்தியவதி. பராசர முனிவருக்கும் கன்னிப் பெண்ணாக இருந்த தனக்கும் க்ருஷ்ண த்வைபாயனர் பிள்ளையாகப் பிறந்தவர் என்பதை கூச்சமின்றி விளக்கிக் கூறினாள். பீஷ்மரும் விசித்திரவீர்யனும் ஒரே தந்தைக்கும் வெவ்வேறு தாயருக்கும்

பிறந்தமையின் ப்ராதாக்களானது போலவே, வேதவ்யாஸரும் விசித்திரவீர்யனும் ஒரே தாய்க்கு வெவ்வேறு தந்தையரிடம் பிறந்தவர்களாதலின் சகோதரர் ஆகின்றனர். இந்த உறவை ஸத்தியவதி பீஷ்மருக்குக் கூறி, அந்த வேதவ்யாஸர் க்ஷத்திரியரல்லாதவராயினும் அவரைக் கொண்டு தன் மருமகளிருக்குக் கர்பாதானம்செய்வித்துக் குடியை விளங்க வைக்க விரும்பினுள். வேதவ்யாஸர் தம் சொல்லைத் தட்டிக் கழிக்கமாட்டார்; அவரிடம் தன் சொல் பிழைக்கும் என்ற முழு நம்பிக்கை ஸத்தியவதிக்கு. அந்த மகரிஷியின் பெயரைக் கேட்டவுடன் பீஷ்மர் தம்மையும் மறந்து பரவசராகிக் கைகூப்பியவாறு அதற்கு இசைந்தார். வரலாற்றிலிருந்து பல உதாரணங்களையும் எடுத்துக் காட்டி அப்படியே செய்யுமாறு அநுமதித்தார். ஸத்தியவதி, வேதவ்யாஸரை மனத்திலுல் நினைத்தாள். உடனே அவர் அங்கே தோன்றினுர். தாயின் கட்டளையைச் சிரமேற்கொண்டார். குருவம்சம் நிர்மூலமாகாதவாறு ஸந்தானத்தை உண்டுபண்ணினுர்.

## விசித்திரப் பிறவிகள்

மகாபாரதம் என்றும், வேதங்களில் ஐந்தாவது என்றும் போற்றப்பெறும் உலகப் பிரசித்தமான சரித்திர வரலாற்றின் மூலபுருஷர்களாகிய த்ருதராஷ்டிரன் பாண்டு ஆகிய இருவரும் விசித்திரவீர்யனுடைய மனைவியரிடம் வ்யாஸருக்குப் பிறந்த குழந்தைகள்தாம். ஸாக்ஷாத் யமதர்மராஜனுடைய அவதாரமான விதுரரும் இந்த ஸந்தர்ப்பத்தில் வியாஸருக்குப் பிள்ளையாகப் பிறந்தவரே. காட்டிலேயே பிறந்து காட்டிலேயே வளர்ந்தவர் வ்யாஸர். நாடு நகரங்களில் வழங்கும் ஸம்பிரதாயங்களில் அவருக்குச் சிறிதும் பழக்கமில்லை நல்ல கறுப்பான உடல்நிறம். தங்கு தடையின்றித் தாராளமாக வளர்ந்து கிடக்கும் தாடி மீசை. பெண்மக்களைக் கவரும்படியான இயற்கை-செயற்கை அமைப்பு ஒன்றும் இல்லாதது மட்டுமின்றி, விகாரமான பயங்கரமான தோற்றம்.

விசித்ரவீர்யனுடைய மனைவியர் இருவரும் மகாராஜனுடைய பெண்கள். உத்தமோத்தமமான ராஜபோகத்திலேயே பிறந்து வளர்ந்தவர்கள். உத்தம ஸ்த்ரீலக்ஷணங்கள் அனைத்தும் நிரம்பப்

பெற்றவர்கள். ஸத்தியவதியின் பெருமுயற்சியின் பயனாகவே வேதவ்யாஸருக்கும் அவர்களுக்கும் ஸம்பந்தம் ஏற்பட்டது. அதுவேயன்றி வேதவ்யாஸருக்கோ அவர்களுக்கோ இந்த ஏற்பாடு ஸகஜமாக ஏற்றுக்கொள்ளபட்டதல்ல. மேலும், இந்த சந்தர்ப்பம் தவிர முன்னேயோ பின்னேயோ அவர்கள் வேதவ்யாஸரைக் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. இவருக்கும் அப்படியேதான். தாயின் கட்டளையை நிறைவேற்றுவதற்காகக் குறிப்பிட்ட நாளில் மட்டும் நடுநிசியில் திடீரெனத் தோன்றி, கர்பாதானம் செய்துவிட்டு உடனே அந்த க்ஷணமே காட்டுக்குச் சென்றுவிட வேண்டும் அவருக்கு. இதையெல்லாம் தம் தாயினிடம் அவரே எடுத்துக் கூறுகிறார். தம்முடன் கூடுவதற்குத் தகுதி பெறுவதற்காக ஒரு வருஷம் விரதம் அநுஷ்டிக்குமாறு முன் ஜாக்கிரதையாக அவர்களுக்குத் தன் தாய் வாயிலாகக் கட்டளையும் பிறப்பித்தார் வ்யாஸர். அவர்கள் அவ்வாறே ஓர் ஆண்டு விரதம் இருந்தனர். இவ்வளவும் நடந்த பிறகு தான் வ்யாஸர் கர்பாதானம் செய்தார்.

எதிர்பார்த்தபடியே குழந்தைகள் பிறந்தன. ஆனால் சிறிது மனக்குழப்பம், அதன் பயனாகக் குழந்தைகளின் வடிவத்தில் தவிர்க்க முடியாத மாறுபாடும் இடம் பெற்று விட்டது. அம்பிகா என்பவளுக்குப் பிறந்த பிள்ளை பிறவிக் குருடனாயிற்று. த்ருதராஷ்டிரன் என்னும் பெயருள்ள இந்தப் பிள்ளைதான் துரியோதனாதியரான நூறு பிள்ளைகளின் தந்தையாகப் பிற்காலத்தில் பிரசித்தமானது. புணர்ச்சிக் காலத்தில் பயத்தினால் தன் இரு கண்களையும் திறவாமல் அழுந்த மூடிக்கொண்டாள் அம்பிகா. அதனால்தான் அவளுக்குப் பிறந்த பிள்ளை பிறவிக்குருடன் ஆகிவிட்டதாம். இதேபோல் அம்பாலிகாவும் ஒரு தவறுதலைச் செய்துவிட்டாள். வெண்மையான துணியினால் தன் உடலை மூடிக்கொண்டாளாம் புணர்ச்சிக் காலத்தில். அதன் பயனாக அவளுக்குப் பிறந்த பிள்ளை அதே நிறத்தவனாகி விட்டான். இவனே பாண்டு என்பவன்; பஞ்ச பாண்டவர்களின் தந்தை.

இதையெல்லாம் தன் தாயாகிய ஸத்தியவதியிடம் வ்யாஸரே கூறுகிறார். இதனால், ஸத்தியவதி மனத்தில் பூர்ண திருப்தி அடையாதவளாக, மூன்றும் முறையாக அம்பிகாவினிடம்

கர்பாதானம் பண்ணச் சொன்னாள். வ்யாஸரும் இசைந்தார். ஆனால் நடந்தது வேறு. மீண்டும் இவருடன் கூடுவதற்கு அம்பிகா விரும்பவில்லை. இதை வெளியில் சொல்லிக்கொள்ளாமல் மாமியாரின் சொல்லுக்கு இணங்கினாள். வ்யாஸர் வந்தவுடன் தான் செல்வதற்குப் பதிலாகத் தன் வேலைக்காரிக்கு உயர்ந்த ஆடையலங்காரங்களை அணிவித்து அனுப்பிவிட்டாள். இம்முறை மகாஜ்ஞானியான பிள்ளை பிறந்தது. ஆனால் அரசிக்குப் பிறக்காததனால் பட்டத்துக்குத் தகுதியற்றதாகிவிட்டது. இந்தப் பிள்ளையே விதுரர் என்று பரம தார்மிகராகப் பிற்காலத்தில் புகழ்பெற்று விளங்கியவர். இவ்வாறாகத் தாயின் கட்டளையைத் தலையால் தாங்கி, வ்யாஸர் மும்முறை முயன்றும், ஸம்பந்தப்பட்டவர்களின் தவறுதலினால் மூன்றும் மூன்று விதமான விசித்திரப் பிறவியாகப் பிறந்தன. சதிபதிகளின் மனம் பரிபூர்ண ஸந்தோஷத்துடன் இருத்தல் அவசியம். புணர்ச்சிக் காலத்திலுள்ள சூழ்நிலை அனைத்தையும் அப்படியே பிரதிபலிக்கும் பிறக்கப்போகிற சிசு. அதனால்தான்போலும் இவ் விஷயத்தில் சான்றோர் தக்க முன்னெச்சரிக்கைகளைக் கையாள்கின்றனர்.

### மகாபாரதம்

महत्त्वाद् भारवत्त्वाच्च महाभारतमुच्यते ।

மஹத்வாத் பாரவத்வாச்ச மஹாபாரதமுச்யதே ।

ஸகல வேதங்களையும் ஒரு தட்டிலும், மகாபாரதத்தை மற்றொரு தட்டிலும் வைத்து நிறுத்துப் பார்த்தார்களாம் தேவர்கள். வேதங்கள் இருந்த தட்டு லேசாகி மேலே எழும்பியது. மகாபாரதம் இருந்த தட்டு அதிக பாரமுள்ளதாகக் கீழே இழுத்தது. அப்பொழுது தேவர்கள் சொன்ன ச்லோகம் இது. 'மகிமையிலும் பாரத்திலும் வேதங்களில் மிக்கது மகாபாரதமே' என்று கருத்து. இந்த மகாபாரதக் கதையின் முக்கியப் பாத்திரங்களான பஞ்ச பாண்டவர்களையும் துரியோதனாதியரையும் தோற்றுவிக்கக் காரணபூதர்களான திருதராஷ்டிரனையும் பாண்டுவையும் விசித்ரவீர்யனுடைய மனைவியரிடத்தில் தோற்றுவித்த வேதவ்யாஸர் மிகவும் பிரம்மாண்டமான 'மகாபாரதம்' என்னும் புனிதமான இதிஹாஸத்தையும் இயற்றி அழியாப் புகழ் பெற்றார்.

சிறந்த காவியமாகவும் புனிதமான மத நூலாகவும் விளங்கிப் புண்ணிய புருஷர்கள், மகா உத்தமிகளான பதிவ்ரதாசிரோமணிகள் பலருடைய வரலாறுகளை இனிய முறையில் கூறும் மகாபாரதம், நம் நாட்டு மக்களுக்கு—ஏன், உலகத்துக்கே, ஓர் இன்ப ஊற்று; சரித்திர ஆராய்ச்சிக்காரர்களுக்கு நெடுந் தூரத்திலிருந்து ஒளி வீசும் தீபஸ்தம்பம்; விஞ்ஞானத் துறையில் விசித்திரமான உண்மைகளை அழியாமல் காத்துக் கொடுத்து வரும் காமதேனு. தத்துவ நூல்களுள் இது சிறந்தது. தாக்ஷிண்யம் பயம் கபடம் கௌரவம் முதலிய காரணங்களினுல் உண்மையை மறைத்துரைக்கும் முறையை இதில் காண முடியாது. உலகம் தோன்றியது, உயிர் வகைகள் உண்டானது, மனித இனம் முதல்முதலாக உலகில் தோன்றியது, படிப்படியாக நாகரிகங்கள் வளர்ச்சியடைந்த வரலாறு- இவை போன்ற பல்லாயிரக் கணக்கான அரிய பெரிய உண்மைகள் அற்புதமான பூதக்கண்ணுடியாகிய இந்த மகாபாரதத்திஞல் அறியப்படுகின்றன.

நமது புனிதமான மத நூலாகிய பகவத் கீதை இதில் இடம் பெற்றுள்ளது. ஸஹஸ்ரநாமங்கள், பலவற்றுக்கும் ஆதர்சமான விஷ்ணு ஸஹஸ்ரநாமம், பீஷ்மரால் தருமபுத்திரருக்கு, சரதல்பத்தில் இருந்துகொண்டே உபதேசிக்கப் பெற்ற வரலாற்றை இதில்தான் காண்கிறோம். பிரசித்தி பெற்ற மகாபாரத யுத்தத்தையும் மகாவீரர்களின் அற்புதமான வீரச் செயல்களையும் இதில் நேரில் காண்பதுபோலக் கண்டு இன்புற முடியும். புராணங்களும் இதே போன்றவை.

### தோற்றம்

பஞ்ச பாண்டவர்களும் துரியோதனுதியரும் அவரவர் விதிவழியடைந்து மறைந்த பிறகுதான் வ்யாஸர் மகாபாரதத்தை இயற்றினர். இமயமலையில் ஏகாந்தமான ஒரு குகை. எந்தப் பக்கம் பார்த்தாலும் தூய்மையும் சாந்தியும் மனஸ் ஸந்துஷ்டியும் தெய்விகமான தன்மையுமே நிறைந்திருந்த இடம். சிறந்த மெய்ஞ்ஞானிகளாகிய முனிவர்கள், ஸ்நானம் ஹோமம் தியானம் தபஸ் இவை போன்ற புண்ணியமான நற்காரியங்களிலேயே ஈடுபட்டுள்ள ஆசிரமங்களின் நடுவில் வ்யாஸருடைய ஆச்ரமம் இடம் பெற்றது. வ்யாஸர் தம் தேகத்தை நன்ருகச் சுத்தம் செய்தார். தர்ப ஆஸனத்தில் அமர்ந்தார். தூய்மையான உள்ளம். அற்புதமான

தபோபலம். லோகக்ஷேமத்தில் ஊன்றிய கருத்து. பலகோடி நூறாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து மறைந்த புண்ணியாத்மாக்களின் புனிதமான வரலாறுகளை உள்ளபடியே தவ வலிமையினால் பிரத்தியக்ஷமாகக் கண்டு, மகாபாரதத்தை இயற்றினார். கிருஷ்ண பரமாத்மாவின் அற்புதமான உலக க்ஷேமார்த்தமான லீலைகளும், தர்மபுத்திரருடைய திவ்ய சரித்திரமும், பலருடைய வீர ஸாகஸச் செயல்களும், பலவேறு வகையான கதாபாத்திரங்கள் அவ்வப்போது எண்ணியதும் சொன்னதும் செய்ததும் எல்லாம் வ்யாஸ பகவானுக்கு அவருடைய யோக மகிமையினால் பிரத்தியக்ஷமாகத் தெரிந்தன. அவ்வாறே அவற்றை எழுதி வைத்தார்.

## பிரவசனம்

நம் நாட்டில் பாரதக் கதை பரவாத இடமே இல்லை. எந்த ஊரிலும் நகரத்திலும் மக்கள் இதை ஆவலுடன் கேட்பர். நாவீறு படைத்தவர்கள் அற்புதமாக எடுத்து உரைப்பர். இந்த ஸம்பிரதாயமும் வ்யாஸராலேயே துவங்கி வைக்கப்பட்டது. பஞ்ச பாண்டவர்களின் கொள்ளுப் பேரனை ஜனமேஜய மகாராஜன் செய்த ஸத்திரயாகத்தில் வ்யாஸரே நேராக இதைப் பிரசாரம் செய்தார். தம் சிஷ்யரான வைசம்பாயனரைக் கொண்டு பாரதக் கதையைச் சொல்லச் செய்தார். அங்கே குழுமியிருந்த மகாஜனங்கள் அனைவரும் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று இதைச் சொல்ல ஆரம்பித்தனர். அவர்களில் ஒருவர் ஸூதபௌராணிகர். நைமிசாரண்யத்தில் சௌனகர் செய்த ஸத்திரயாகத்துக்கு இவர் வந்தார். தாம் கேட்டதை அங்கிருந்த மகரிஷிகள் பலருக்கும் சொன்னார். இப்படியே இன்றளவும் - ஏன், இனி வரப்போகும் பல்லாயிரம் ஆண்டுகளிலும் - புனிதமான மகாபாரதம் ஸர்வலோக க்ஷேமார்த்தமாகப் பிரசாரம் செய்யப்பட வேண்டிய பெருமை பெற்றது. மகாபாரதத்தைத் தவிர இன்னும் எத்தனையோ நூல்களை வேதவ்யாஸர் இயற்றியிருக்கிறார். அழியாப் புகழ் படைத்த இந்த மஹானை உலகம் என்றும் மறக்க முடியாது. இவருக்கு அஞ்ஜலி செய்வோம்.

# சுகர்

व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम् ।
पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम् ॥

வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் சக்தே: பௌத்ரமகல்மஷம் ।
பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் ॥

வஸிஷ்டருடைய கொள்ளுப்பேரனும், சக்தியினுடைய பேரனும், பராசரருடைய பிள்ளையும், சுகருடைய தந்தையும் தபோநிதியுமான வ்யாஸரை வணங்குகிறேன்.

உலகப் பிரஸித்தரான ஐந்து மகரிஷிகளை வரிசைக் கிரமமாகத் தோற்றுவித்த இந்தப் புனிதமான குலத்தில் கடைக்குட்டியானவர் சுகர். வஸிஷ்டர், சக்தி, பராசரர் இவர்களுக்கு முறையே கொள்ளுப் பேரராகவும், பேரராகவும், பிள்ளையாகவும் திகழும் வேதவ்யாஸருடைய மகிமை அவ்வளவுடன் முடிந்துவிடவில்லை. செயற்கரிய வேதசாகாபேத வ்யவஸ்தையையும், மகாபாரதத்தையும், ப்ரஹ்ம ஸூத்ரங்களையும், பகவத் கீதையையும் செய்தருளி உலகில் அணையாத ஞான விளக்கை ஏற்றி வைத்ததனுல் அது பன்மடங்கு ஓங்கி வளர்ந்தது. ஆனுல் இவ்வளவிலும் அது நிறைவு பெறவில்லை. சுகருக்குத் தந்தையான பின்பு வ்யாஸருடைய பெருமை பூர்த்தியாயிற்று.

यं प्रव्रजन्तमनुपेतमपेतकृत्यं
द्वैपायनो विरहकातर आजुहाव ।
पुत्रेति तन्मयतया तरवोऽभिनेदुः,
तं सर्वभूतहृदयं मुनिमानतोऽस्मि ॥

யம் ப்ரவ்ரஜந்தமநுபேதமபேதக்ருத்யம்
த்வைபாயநோ விரஹகாதர ஆஜுஹாவ ।
புத்ரேதி தந்மயதயா தரவோபிநேது:,
தம் ஸர்வபூதஹ்ருதயம் முநிமாநதோஸ்மி ॥

— பாகவத புராணம், 1.2.2.

கருத்து: இன்னும் உபநயனமே ஆகவில்லை; அதாவது ஏழாவது வயது நிறையவில்லை. இதற்குள் துறவு! ஸம்ஸார ஸுகங்களில் நெடுநாள் ஈடுபட்டு அலுத்துப் போனவர்களுக்குத் தன்னடையே தோன்றும் வைராக்கியம் சுகருக்குக் குழந்தைப் பருவத்திலேயே உதித்துவிட்டது - ஸநக ஸநந்தநாதிகளுக்குப் போல். இவருடைய தந்தையான வ்யாஸருக்கு இதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. பிள்ளைப் பாசம் மீதூர்ந்த நிலையில் பிரிவாற்றாமையால், "குழந்தாய்! குழந்தாய்!" என்று கதறிக்கொண்டே தொடர்ந்து ஓடி வந்தார். அருகில் இருந்த மரங்களெல்லாம் அவருடைய (சுகருடைய) நிலைமையை அடைந்து ஒலித்தன. பரப்ரஹ்ம ஸ்வரூபியான இவர் எல்லா உயிர்வகைகளுக்கும் இருதயம் போன்றவர். அதனால் இவருடைய உள்ளக் கிடக்கையை உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் பிரதிபலிக்கின்றன. ஆனால், துறவுபூண்டு பழுத்த ஞானியாக முன்னே சென்றுகொண்டிருந்த சுகர் இதைக் காதில் வாங்கவே இல்லை. ஸம்ஸார ஸுகத்தில் ஈடுபட்டால் பல உயிர்வகைகளைத் துன்புறுத்த வேண்டியது இன்றியமையாததாகிவிடும். எல்லா உயிர்களுக்கும் இருதயம் போன்றவரான சுகருக்குத் துறவுதான் இனிப்பாக இருந்தது. அப்படிப்பட்ட முனிசிரேஷ்டரான சுகரை வணங்குகிறேன்.

यः स्वानुभावमखिलश्रुतिसारमेकं,
अध्यात्मदीपमतितीरषतां तमोऽन्धम् ।
संसारिणां करुणयाऽऽह पुराणगुह्यं
तं व्याससूनुमुपयामि गुरुं मुनीनाम् ॥

ய: ஸ்வாநுபாவமகிலச்ருதிஸாரமேகம்,
அத்யாத்மதீபமதிதீரஷதாம் தமோந்தம் ।
ஸம்ஸாரிணாம் கருணயாஹ புராணகுஹ்யம்
தம் வ்யாஸஸூநுமுபயாமி குரும் முநீநாம் ॥

பாகவதம் என்னும் புராண தீபத்தை அருளிச்செய்தமையால் சுகர் இந்த ச்லோகத்தில் வணங்கப்பெறுகிறார். மற்றப் புராணங்களிற் காட்டிலும் பாகவதத்துக்குத் தனிச் சிறப்பு உண்டு. ஸகல வேதங்களின் ஸாரமே பாகவத புராணமாக அமைந்தது. இவ்விருள்தரு மாஞாலத்தில் உழன்று உழன்று கரைசேரும்

வழியறியாமல் திணறிக்கொண்டிருக்கும் ஸம்ஸாரிகளுக்குக் கலங்கரை விளக்குபோல் வழிகாட்டிக் கரைசேர்க்க வல்லது இது. இதைக் கருணையுடன் அருளிச்செய்தவர் சுகர். முனிவர்களுக் கெல்லாம் இவரே குரு. ஸாக்ஷாத் வேதவ்யாஸருடைய பிள்ளையான இவரை வணங்குவோம் என்பது கருத்து. இப்படிப் பல ச்லோகங்கள் இவரது பெருமையைப் பேசுகின்றன.

## பிறப்பு

வ்யாஸருடைய திருக்குமாரராக இவர் திருவவதாரம்செய்தது விசித்திரமான வரலாறு. வ்யாஸர் நைஷ்டிக ப்ரஹ்மசாரி; அதாவது அவருக்கு மனைவி இல்லை. கல்யாணம் செய்துகொள்ளவே இல்லை. அப்படி இருக்க அவருக்குப் பிள்ளையாகச் சுகர் பிறந்தது எங்ஙனம் பொருந்தும் என்று தோன்றுகிறதல்லவா? யோகஸித்தர்களான மகரிஷிகளை நம் போல்வாரை மனத்தில் கொண்டு மதிப்பிடக்கூடாது. நமது மனப்போக்கில் 'நடந்திருக்க முடியாது' என்று நினைக்கும் காரியங்கள் உண்மையில் நடந்திருக்கின்றன. நித்ய ப்ரஹ்மசாரியான வேதவ்யாஸருக்குப் பிள்ளை பிறந்தது. அவர்தாம் சுகர்.

## பாவம், தாயில்லாப் பிள்ளை!

சுகருக்குத் தாயார் யார்? தாயாரே இல்லை இவருக்கு. தந்தை மட்டுமே உண்டு. உலக வழக்கில் 'தாயில்லாப் பிள்ளை' என்று ஒரு சொல் உண்டு. உலகரீதிக்குத் தக்க முறையில் தாயின் வயிற்றில் கர்பவாஸம் செய்து, உரிய காலத்தில் பிரஸவமாகிப் பிறக்கும் குழந்தைகளைத்தான் நாம் அறிவோம். இப்படிப்பட்ட குழந்தைகளில் யாருக்காவது சிறுவயதில் தாய் இறந்துவிட்டால், அந்தப் பிள்ளையைத் 'தாயில்லாப் பிள்ளை' என்பர். இவருக்குத் தாயே இல்லை. தாய்ப் பாசம் எத்தகையது என்பது இவருக்கத் தெரியவே தெரியாது. அதனால் இவர்தாம் உண்மையில் தாயில்லாப் பிள்ளை! தாயை இழந்த பிள்ளைகள் தாயில்லாப் பிள்ளைகளல்ல. சிறிது காலமாவது தாயின் அன்பும் ஆதரவும் அவற்றுக்குக் கிடைத்திருக்கும் அல்லவா? இவருக்கு அந்த விஷயம் முழுப் பூஜ்யமாயிற்றே. பாவம்! 'அம்மா' என்று இவர் யாரையும் அழைத்ததில்லை. அம்மா இருந்தால்தானே அழைக்க?

## அதிசயப் பிறவி

குருக்ஷேத்திரத்தில் வேதவ்யாஸர் வஸித்து வந்த ஸமயம். க்ருதாசீ என்னும் அப்ஸரஸ் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தாள். அவளுடைய வடிவழகு வ்யாஸருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. இவர் நித்ய ப்ரஹ்மசாரி. அவளோ தளராத உறுதி படைத்த முனிவர்கள் பலரையும், இந்திரனுள்ளிட்ட தேவர் குழாத்தையும் தன் ஈடு இணையற்ற வனப்பினால் மயக்கி இன்பநுகர்ச்சியில் வீழ்த்தி மிகுந்த அநுபோகம் பெற்றுத் தேர்ந்தவள். அவளுக்கு எதிரில் வ்யாஸரால் தைரியமாக இருக்க முடியவில்லை. வ்யாஸர் அவளைக் கண்டதுமே சிற்றின்ப வேட்கை மீதூர்ந்த நிலையில் திணறினார். எவ்வளவோ பாடுபட்டுத் தமது உள்ளத்தைக் கட்டுப்படுத்த முயன்றார்; பயனில்லை. இவரது மனநிலையை அவள் எளிதில் புரிந்துகொண்டாள். இவருடன் கலவியில் ஈடுபட்டால் பயங்கரமான சாபம் தொடர்ந்து வருவது திண்ணம் என்பது அவளுக்குத் தெரியாதா என்ன?

எப்படியாவது இந்தச் சங்கடத்திலிருந்து தப்பியோட முயன்றாள் அவள். உடனே தன் உடலை விட்டு ஒரு பச்சைக் கிளியாக உருமாறிவிட்டாள். பச்சைப்பசேலென்று காட்சியளிக்கும் கிளிகளின் கூட்டத்தில் பறந்தோடி மறைந்து விட்டாள். நினைத்தபடி செய்யும் ஆற்றல் படைத்தவள் அந்த அப்ஸரஸ். வ்யாஸர் இதைக் கவனித்துக்கொண்டேதான் இருக்கிறார். பெரும் போராட்டம் அவரது மனத்தினுள்ளே நடந்துகொண்டிருக்கிறது. உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரையில் காமாக்கினி கிளர்ந்தெழுந்தது. பலவாறாக முயன்றும் அடக்க முடியவில்லை. நெருப்பை உண்டு பண்ணுவதற்காக அரணியைக் கடைந்துகொண்டிருந்தார் அப்போது அவர். முற்காலத்தில் நெருப்பை உண்டுபண்ணுவதற்காக இரண்டு மரக்கட்டைகளை ஒன்றன்மேல் ஒன்றாக வைத்துத் தயிர்கடைவதுபோல் வேகமாகக் கடைவது வழக்கம். இன்றும் யாகங்களில் இதைக் காணலாம். இந்தக் கட்டைக்கு 'அரணி' என்று பெயர். தமது நினைவை மாற்றுவதற்காக அந்த அரணிக்கட்டைகளிலேயே மிகுந்த கவனம் செலுத்தி வேகமாகக் கடைந்தார். பாவம்! மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவரது வீரியம் அந்த அரணிக்கட்டையின் மேலேயே

விழுந்தது. உடனே ஒரு சிறுவனாக மாறிவிட்டது. இவ்வாறு பெண் உடம்பின் ஸம்பந்தமே இல்லாமல் அதிசயப் பிறவியாகப் பிறந்தார் சுகர்.

## பச்சைக் குழந்தை

சின்னஞ்சிறு குழந்தையைப் 'பச்சைக் குழந்தை' என்பது வழக்கம். பச்சை நிறமுள்ள குழந்தை என்பது கருத்தல்ல. ஆனால் சுகருக்கு இந்தச் சொல்லின் கருத்துக்கள் இரண்டும் பொருத்தமாக அமைந்தன. இவருடைய அவதாரம் வெகு அவசரமாகவே சில விநாடிகளில் நடந்தது. அப்பொழுது பச்சைக் கிளி வடிவத்தில் காட்சியளித்த க்ருதாசீ என்னும் அப்ஸரஸ்ஸைப் பார்த்தவண்ணமே வ்யாஸர் இருந்தார். அதனால் அந்த நிறம் குழந்தைக்கும் உண்டாயிற்று. அது மட்டுமல்ல, குழந்தையின் மூக்கும் கிளியினது போலவே அமைந்தது. மானிட இனத்துக்கும் பறவை இனத்துக்கும் பிறந்த கலப்புப் பிறவியாகவே சுகர் திகழ்ந்தார். 'கிளிமூக்கு ரிஷி' என்று இவரை வழங்குவதும் உண்டு. கிளி போன்ற பச்சை நிறமுடைமையினால் கிளியின் பெயரே இவருக்கும் வைக்கப்பெற்றது. ஸம்ஸ்க்ருதத்தில் கிளிக்கு 'சுகம்' என்று பெயர். அதே சொல்லை, 'சுகர்' என்று இவர் விஷயத்தில் வழங்குகிறோம், கௌரவத்தைக் காட்டும் வகையில்.

மின்னல் வேகத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் பிரமித்துப்போய் வ்யாஸர் எண்ணிப் பார்த்தார். அந்த அப்ஸரஸ்ஸை அவர் சபிக்கவில்லை. அதற்கு அவகாசம் ஏது அவருக்கு? தரையில் விழுந்து கிடந்த 'தாயில்லாப் பிள்ளை' தான் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. இதை என்ன செய்வது? இதுதான் முக்கியமான கேள்வி. குழந்தையைப் பார்த்தார். மஹா தேஜஸ்வியாகக் காட்சியளிக்கிறது. அரணிக்கட்டையைக் கடைந்தால் அதில் சூடு படிப்படியாக அதிகமாகிக்கொண்டே போகும். மிகவும் அதிகமாகும் ஸமயத்தில் ஸாக்ஷாத் அக்கினியே தோன்றிவிடும். அந்த ஸமயத்தில்தான் அதிலிருந்து சுகர் பிறந்தார். அதனால் அக்கினி போலவே தேஜஸ்வியாகத் திகழ்ந்தார். அரணியில் சற்று நேரம் வ்யாஸருடைய வீர்யம் தங்கியது. அதன் சூடு அதில் பட்டது. உடனே குழந்தையாகிவிட்டது அது. அதனால் சுகருக்கு

'அரணீகர்பஸம்பவர்' என்னும் பெயர் ஏற்பட்டது. அதாவது சுகருக்கு கர்பவாஸம் அரணியில்தான் என்றவாறு. கிளியின் மூக்கும் நிறமும், அப்ஸரஸ்ஸின் வனப்பும், அரணியின் சூடும் ஒன்றுகூடி வ்யாஸருக்குப் பச்சைக் குழந்தையாகிவிட்டன. 'இப்படியும் நடக்குமா?' என்று நாம் வியப்படைவது இயல்பே. படைக்கும் கடவுளாகிய பிரம்மதேவனுடைய திருவுள்ளம் அப்படி இருந்தது; அவ்வாறே நடந்தது. அதனால்தான் இவருக்கு 'ப்ரஹ்மராதர்' என்ற பெயரும் உண்டு. 'ப்ரஹ்மாவினால் கொடுக்கப்பட்டவர்' என்பது இந்தப் பெயரின் பொருள். உலகத்திலுள்ள ப்ரஜைகள் எல்லாமே இவ்வாறாக இருக்க, சுகருக்கு மட்டும் இந்தப் பெயர் அமைந்தது அசாதாரணமான நிகழ்ச்சியைக் குறிப்பிடுவதற்காகவே.

### ஸம்ஸ்காரங்கள்

குழந்தை பிறந்தவுடன் அதனுடைய க்ஷேமத்துக்காகச் செய்ய வேண்டிய சடங்குகள் சில உண்டு. இவையே 'ஸம்ஸ்காரங்கள்' எனப்படும். ஜாதகர்மம், நாமகரணம், அந்நப்ராசநம், சௌளம், உபநயனம் என்ற பலவகைப்பட்ட சடங்குகள் யாவும் சுகருக்குச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றன. ஸாக்ஷாத் வேதவ்யாஸரே இவருடைய பிதாவாக இருப்பதனால் இந்த ஸம்ஸ்காரங்கள் குறைவற நடந்தேறின. இவை எல்லாவற்றையும் வேதவ்யாஸர் ஒருவரே செய்து முடித்தார். ஜன ஸஞ்சாரமற்ற காட்டின் நடுவில் தனிமையில் தவம் புரிந்துகொண்டிருந்த இவருக்கு எதிர்பாராத விதமாக இப்படி ஒரு குழந்தை பிறந்துவிட்டது. என்ன செய்வார், பாவம்!

குழந்தையைக் கைகளால் தாங்கியவாறாக கங்கைக் கரையை அடைந்தார். புனிதமான கங்காதீர்த்தத்தில் தாமும் ஸ்நானம் பண்ணினார். குழந்தையையும் முழுக்காட்டினார். பின்பு கரையேறி ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களை முறைப்படியே செய்தார். குழந்தை மட்டும் சாதாரணமானதா என்ன? பிறந்த சில நாழிகைகளுக்குள் ஓங்கி வளர்ந்துவிட்டது அது. ஐந்தாறு வயதுள்ள சிறுவனாகிவிட்டது. வ்யாஸருக்குப் பெருமை கட்டுக்கு அடங்கவில்லை. இவரும் பிறந்தவுடனே இப்படியே வளர்ந்துவிட்டார். தம் மகன் எல்லாம் விதங்களிலும் தம்மையே ஒத்திருப்பதில் அளவுகடந்த

ஆனந்தம் இவருக்கு. பிறந்த குழந்தைக்குச் சுபமான ஸம்ஸ்காரங்களைச் செய்யும்போது நல்ல மங்கள வாத்தியங்கள் முழங்க வேண்டியது அவசியம் அல்லவா? இந்தக் காட்டில் அதெல்லாம் ஏது? வ்யாஸர் அதைப்பற்றிச் சிறிதும் சிந்திக்கவே இல்லை. தமக்கு ஸ்வாதீனமான வேத மந்த்ரங்களை கம்பீரமாகச் சொல்லியே சடங்குகளைச் செய்தார். ஆனால் இவரது முன்னேற்பாடு ஒன்றுமில்லாமலே அதெல்லாம் செவ்வனே நடந்தது. குழந்தையின்மேல் பூமாரி பொழிந்தது. இசை வாத்தியங்கள் முழங்கின. என்ன அதிசயம்! இதெல்லாம் எங்கிருந்து வந்தது? ஆகாயத்தில் தேவர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் நாரதர் தும்புரு முதலிய ஸங்கீத விற்பன்னர்களும் நாட்டியக்காரிகளான அப்ஸரஸ்களும் பெரும் திரளாகக் கூடிவிட்டனர் அவ்விடத்தில். விதம் விதமான மங்கள் வாத்தியங்கள் இன்னிசையை அள்ளிக் கொட்டிய வண்ணம் இருந்தன.

அவர்களுக்குக் கரைகடந்த ஆனந்தம். என்ன காரணம்? க்ருதாசீ என்னும் அப்ஸரஸ்ஸின் ஸம்பந்தம் இந்தக் குழந்தைக்கு ஏதோ ஒரு வகையில் இடம் பெற்றிருப்பதுதான் காரணமாக இருக்குமோ? இல்லை இல்லை, இந்த மண்ணுலகம் முன்பின் கண்டும் கேட்டுமறியாத ஒரு திவ்ய ஞானியைப் பெற்று விட்டதே என்ற பேரானந்தமே காரணம். இவருடைய சீரிய உபதேசத்தினுல் வருங்காலத்தில் எத்தனையோ லக்ஷம்கோடி மக்கள் நல்வழியில் சென்று உய்யப்போகின்றனர். ஒப்புயர்வற்ற ஸ்ரீபாகவத புராணம் இவரால்தான் தோன்றப் போகிறது. இதையெல்லாம் எண்ணி எண்ணி ஆனந்தக் கூத்தாடின தேவர் குழாங்கள்.

## உபநயனம்

இவ்வாறுக ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்கள் நடந்தேறின. பெயரிடுதல் (நாமகரணம்) என்பது இரண்டாவது ஸம்ஸ்காரம். 'சுகர்' என்று பெயரிட்டனர் குழந்தைக்கு. இது முன்னமே விளக்கப்பட்டது. வரிசைக் கிரமமாக உபநயனமும் செய்யப்பட்டது. வ்யாஸரே இதைச் செய்தார். சாதாரணமாக வேதங்களைக் கற்பதற்காக இது செய்யப்படுவது வழக்கம். சுகருக்கு வெறும் ஸம்ப்ரதாயமாகவே இது நடந்தது. பிறந்தவுடனே ஸகல

வேதங்களும் அவற்றின் அங்கங்களும் மற்ற சாஸ்திரங்களும் தாமாகவே இவரை வந்தடைந்தன. இது இந்தக் குலத்தில் புதிதல்ல. இவருடைய தந்தைக்கும் பாட்டனுருக்கும் இப்படியே நடந்தது. மீன்குட்டிக்கு நீந்தக் கற்றுத் தர வேண்டுமா? ஆனாலும் சாஸ்திரவிதிக்கு இணங்க உபநயனம் இவருக்கும் செய்யப்பட்டது. தொடர்ந்து குருகுலவாஸமும் வேதாத்தியயனமும் வ்ரத நியமங்களுடன் சுகரால் செய்யப்பட்டன. தேவகுருவான ப்ருஹஸ்பதியே இவருக்கு வாத்தியாராக இருந்து வேத சாஸ்திரங்களைக் கற்பித்தார். எல்லாம் வெறும் ஸம்பிரதாயமேதான். ஸகல சாஸ்திரங்களும் தாமாகவே இவரது மனத்தில் குடிபுகுந்துவிட்டன. இவைபோன்ற அதிசயங்கள் எவ்வளவோ அப்போது நடந்தன. சிலவற்றை நாம் இன்னும் அறிந்துகொள்ள முடிகிறது. பல நமது அறிவுக்கு எட்டாமலே மறைந்துவிடுகின்றன. சுகருக்கு உபநயனம் செய்யப்பட்டபொழுது இன்றியமையாத சில பொருள்கள் ஆகாயத்திலிருந்து விழுந்தனவாம். தண்டம், கமண்டலம், க்ருஷ்ணஜினம், மௌஞ்ஜீ – இவையே அந்தப் பொருள்கள். இவ்வாறு சுகருடைய பிறப்பும் வளர்ச்சியும் வேதாப்பியாஸமும் எல்லாம் தெய்விகமாகவே அமைந்தன. சாதாரணமான பிறவி அல்ல இவர். அதனுல்தான் 'ப்ரஹ்மராதர்' என்று இவரைச் சிறப்பாக வழங்குகிறோம்.

## பரீக்ஷித்

சுகபரப்ரஹ்மத்தினுடைய அருமை பெருமைகள் நம் போல்வாருக்குத் தெரியும்படி செய்தவர் பரீக்ஷித்து மகாராஜர். இவருக்கு 'விஷ்ணுராதர்' என்று ஒரு பெயர் உண்டு. அதுவும் காரணப்பெயரே. பஞ்ச பாண்டவர்களுள் அர்ஜுனனுடைய பிள்ளை மகாவீரன் அபிமன்யு. அந்த அபிமன்யுவினுடைய பிள்ளைதான் பரீக்ஷித்து மகாராஜர். விராடதேசத்து அரசனுடைய பெண் உத்தரை என்பவள் இவர் தாயார். பயங்கரமான மகாபாரத யுத்தம் நடந்துகொண்டிருந்த காலத்தில் இவர் தம் தாயின் கர்பத்தில் வஸித்து வந்தார். இவர் பிறப்பதற்குள் பாரதப் போர் முடிந்துவிட்டது. அதில் இணையற்ற வீரனுக ஒளிவீசிய இளஞ்சிங்கமாம் அபிமன்யுவை–தம் தந்தையை–இவர் கண்டதில்லை;

கேட்டதுதான்..அவனும் இவரைக் காணுமளவும் உயிர்வாழவில்லை. அநியாயமாகத் தகாத முறையில் கொல்லப்பட்டான். அப்பொழுது துரோணருடைய குமாரனை அச்வத்தாமா, பாண்டவர்களின் பூண்டே இல்லாதபடி ஒழிக்க எண்ணி, உத்தரையின் கர்பத்தில் வஸித்து வந்த இந்தப் பரீக்ஷித்து மகாராஜர் கரிக்கட்டையாகப் பொசுங்கும்படி, ப்ரஹ்மாஸ்த்ரத்தை விடுத்தான். அது கர்பத்துக்குள் புகுந்து அக்கினி ஜ்வாலையைக் கக்கி அங்கு இருந்த சிசுவை (பரீக்ஷித்து மகாராஜரை)ப் பொசுக்கிவிட்டது. தாய்க்கு விசித்திரமான வயிற்றெரிச்சல். சிசுவும் முக்கால் பங்கு இறந்துவிட்ட நிலையில் துடிதுடித்தது. எவ்வளவு ஸமர்த்தரான வைத்தியர்களாலும் இதை நிவ்ருத்தி செய்ய முடியவில்லை. ஆபத்பாந்தவராகிய கிருஷ்ண பரமாத்மாதாம் இவரைக் காப்பாற்றினார். தமது சக்ராயுதத்தை ஏவினார். ப்ரஹ்மாஸ்திரத்தை இது துரத்தியது. அதற்குமேல் ஆயிரம் கோடி மடங்கு அதிகமான அக்கினி ஜ்வாலைகளை இந்தச் சக்ராயுதம் வீசிற்று. இதைத் தாங்கி நிற்கமாட்டாமல் அந்த அஸ்திரம் வெளியில் பறந்தோடிவிட்டது. சிசு சாகாமல் பிழைத்தது. தாயின் வயிற்றெரிச்சல் ஒருவாறாகத் தணிந்தது.

சக்கரமும் கையுமாக ஸ்ரீமந்நாராயணன் கர்பத்தினுள் புகுந்து இவருக்குக் காட்சியளித்தார். ப்ரஹ்லாதாழ்வானைப் போலவும், நம்மாழ்வாரைப் போலவும் 'கருவிலே திருவுடையவர்' எனப் போற்றப்பெறுகிறார் இவரும். அச்வத்தாமாவின் கொடிய அஸ்திரத்தைத் தன் ஜ்வாலைகளால் சூழ்ந்துகொண்டு விரட்டியடித்த விஷ்ணுசக்கரம் கர்பவாஸம் செய்து வந்த சிசுவுக்கு அம்ருத ப்ரவாஹம்போல் இருந்தது. அணுவைப் போல் மிக மிகக் குறுகிய கர்பகோசத்தில் கர்பஸ்த சிசுவைச் சுற்றி ப்ரஹ்மாஸ்திரமும், சக்கரமும் கையுமாக எம்பெருமானும் பலகாலும் வட்டமிட்டோடினர். கர்பஸ்தமான சிசு இந்த அற்புதத்தைக் கண்டு திகைப்படைந்தது. முதலில் அஸ்திரமும், அதைத் தொடர்ந்து சக்கரமும், அதன் பின்னே எம்பெருமானும் மின்னல்வேகத்தில் பாய்ந்தோடுவதை சாதாரண மனிதர்கள் கண்டு ரஸிக்க முடியாது. எம்பெருமானது திவ்யகடாக்ஷத்துக்கு இலக்கானபடியாலும், கர்பவாஸம் பூர்த்தியாகாத நிலையில் இருந்ததனாலும் ஸர்வஜ்ஞனாக இருந்த சிசு எல்லாப் பக்கங்களிலும் திரும்பித் திரும்பி இந்தக் காட்சியைக் கண்டு அநுபவித்ததாம்.

அதனால் அதே கருத்தைக் கொண்ட 'பரீக்ஷித்' என்னும் பெயர் இதற்கு வைக்கப்பட்டது. 'பரி-நாற்புறமும், ஈக்ஷித்-பார்க்கிறவர்' என்பது இந்தப் பெயரின் பொருள்.

மற்றுமோர் அதிசயம்: ஒரே ஸமயத்தில் ஒரே இடத்தில் அஸ்திரத்தை ஜ்வாலைகளால் பொசுக்கிய விஷ்ணு சக்கரம் சிசுவைக் கொளுத்தவில்லை. அதற்கு மாறாக இதைக் காப்பாற்றியது. சக்கரத்திலிருந்து கிளம்பிய அக்கினி ஜ்வாலைகள் அஸ்திரத்தில் நெருப்பாகவும், கர்பஸ்த சிசுவின் மேல் அம்ருத கிரணமாகவும் வீசின. ஹிரண்யனைக் கொன்ற நரஸிம்ஹமூர்த்தியின் பயங்கரமான அட்டஹாஸமும் கடுஞ்சினமும் உலகம் அனைத்தையும் நடுநடுங்கச் செய்தது. ஆனால் காலின் கீழேயே கலக்கமின்றி இருந்த ப்ரஹ்லாதாழ்வானுக்கு இனிய அன்பு வெள்ளமாகவே அமைந்தது. "சீற்றத்தோ டருள் பெற்றவன் அடிக் கீழ்ப்புக நின்ற செங்கண்மால்" என்று நம்மாழ்வார் அந்த அதிசயத்தைப் பாடிப் பாடி உருகுகிறார். அதுபோன்ற அற்புதமே பரீக்ஷித்து மகாராஜர் விஷயத்திலும் நிகழ்ந்தது. இவ்வாறன்றி வேறு வழியில் கர்பஸ்தமான சிசுவைக் காக்க முடியாது. எம்பெருமானையன்றி வேறு எவராலும் இப்படிப்பட்ட முறையில் இதைச் செய்து சிசுவைக் காக்க முடியாது. அதனால்தான் 'விஷ்ணுராதர்' என்று இவருக்கு அஸாதாரணமான பெயர் தோன்றியது. பிறக்கும் குழந்தைகள் அனைத்தையும் எம்பெருமான் ஒருவனே காப்பாற்றுகிறான். அவனருள் இல்லாமல் ஒரு சிசுவும் உருவாகப் பிறந்து வாழ முடியாது. ஆனாலும் பரீக்ஷித்து மகாராஜர் விஷயத்தில் அஸாதாரணமாக அல்லவா இது நடந்தது? அதனால்தான் 'விஷ்ணுராதர்' என்று சிறப்பாக இவரை வழங்குகின்றனர். 'பகவான் கொடுத்த பிச்சை' என்று சொல்லுகிறார்களே, அது பரீக்ஷித்து மகாராஜருக்குத்தான் முழுக்க முழுக்கப் பொருத்தமானது.

## சமீகர்

சமீகர் என்று ஒரு முனிவர். இவரிடம் பரீக்ஷித் மகாராஜர் சிறு தவறுதல் செய்தார். அதனால் அரசருக்குக் கடுமையான சாபம் ஏற்பட்டது. அதன் விளைவாகத் தோன்றியது ஸ்ரீபாகவத மகாபுராணம். சுகரின் மகிமையும் நாடும் நகரமும் நன்கறியப் பரவியது.

அடர்ந்த காட்டில் வேட்டையாடச் சென்றிருந்த அரசர் பரீக்ஷித், நடுப்பகலில் விடாய்த்துக் களைத்து, சமீகருடைய ஆச்ரமத்துக்கு வந்தார். 'தண்ணீர், தண்ணீர்' என்று பல முறை கேட்டார். யோகநிஷ்டையில் இருந்த சமீகர் இதைக் காதில் வாங்கவே இல்லை. அரசருக்குப் பதில் கிடைக்கவில்லை; கடுஞ்சினம் கொண்டார். கேட்டதற்கு மறுமொழி தராமல் செத்தவன்போல் இருந்த முனிவருடைய கழுத்தில், அருகில் செத்துக்கிடந்த பாம்பொன்றைக் கோலால் எடுத்து மாலைபோல் போட்டுச் சென்றுவிட்டார். தம்மையும் மறந்து தியான நிஷ்டையில் இருந்த சமீக முனிவருக்கு இதெல்லாம் ஒன்றுமே தெரியாது.

## சிறுபிள்ளைத்தனம்

சமீக முனிவருடைய குமாரர் ச்ருங்கி என்பவர். தமக்குச் சம வயதுள்ள சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த அவரிடம் இந்த விஷயத்தை யாரோ சொன்னார்கள். கடுஞ்சினங் கொண்டு பரீக்ஷித்து மகாராஜரை அவர் க்ரூரமாகச் சபித்துவிட்டார். "நிரபராதியான என் தந்தையின் மேல் செத்த பாம்பை எடுத்துப் போட்டவன் இன்றுமுதல் ஏழு நாள்தான் உயிர் வாழ்வான். ஏழாம் நாள் தக்ஷகன் என்னும் பாம்பினால் கடிக்கப்பட்டு விஷவேகத்தால் இறந்துவிடுவான்" என்று கடுமையான சாபம் இடி விழுந்தாற்போல் அரசன் தலையில் விழுந்தது. சமீக முனிவர் யோகநிஷ்டை தெளிந்தபின், நடந்த விஷயத்தை அறிந்து பெரிதும் வருத்தப்பட்டார். ஒரு நாட்டுக்கு அரசன் எவ்வளவு முக்கியமானவன்? சிறுவனுடைய தீர்க்கதரிசனமற்ற செயலால் எவ்வளவு பெரிய அனர்த்தம் விளைந்துவிட்டது? சமீக முனிவருக்கு மனம் சாந்தியடையவே இல்லை. உடனே 'கௌரமுகர்' என்னும் ஒருவர்மூலம் அவசர அவசரமாக இவ் விஷயத்தை அரசனுக்குத் தெரிவித்துவிட்டார். 'பாவம்! சாகப்போகிறவன் ஏதாவது தனக்கு வேண்டியதைச் செய்துகொள்ளட்டும்' என்ற எண்ணம்தான். இவர் இப்படிச் செய்ததனால்தான் பரீக்ஷித்து மகாராஜருடைய பெருமையும் சுகபரப்ரஹ்மத்தின் மகத்துவமும் உலகுக்குத் தெரிந்தன. ஸ்ரீபாகவத புராணம் தோன்றியது.

## சாகத் துணிந்தவன்

தனது ஆயுள் இன்னும் ஏழே நாள் என்பதை அறிந்து கொண்ட அரசன் சிறிதும் கலங்கவில்லை. ஆறிலும் சாவு, நூறிலும் சாவு என்பது அவருக்குத் தெரியாதா என்ன? மரணம் வெகு தூரத்தில் இருப்பதாக நினைத்து, மக்கள் பரிதாபப்படக் கூடிய வகையில் ஏமாந்து தவிக்கின்றனர். சாகும் காலம் முன்னுடியே ஒருவனுக்குத் தெரிந்துவிடுமானால் அது கிடைப்பதற்கரிய நல்வாய்ப்பு அல்லவா? நாட்டு மக்களுக்குத் தாம் செய்ய வேண்டியவற்றை வெகு விரையில் செய்து முடித்தார் பரீக்ஷித் மகாராஜர். தம் அருமைப் புதல்வன் ஜனமேஜயனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார். ஊணும் உறக்கமும் பறந்தோடின. புனிதமான கங்கையின் மத்தியிலேயே இந்த ஏழு நாட்களையும் கழித்து அங்கேயே உயிரை விடுவது என்று முடிவு செய்தார்.

## ஒருகால் மண்டபம்

நாட்டு மக்களும் மந்திரிமார்களும் பெரும் கலக்கமுற்றனர். 'இதெல்லாம் நடந்தே தீரும் என்பது என்ன நிச்சயம்? தவறிப் போவது சகஜம்தான். நம் அரசர் சாகமாட்டார்' என்பது அவர்களது எண்ணம். விதியை மதியால் வெல்லலாம் என்பது அவர்களுடைய துணிபு. அரசர் விரும்பியபடியே கங்கையின் மத்தியில் அவருக்கு இடம் அமைத்தார்கள். மற்றவர்களுடைய பாதுகாப்பு ஏற்பாடும் இதில் இடம் பெற்றது. உயரமான கம்பம் ஒன்று எழுப்பப்பட்டது. அதன்மேல் அழகிய மண்டபம் ஒன்றை நிருமித்தார்கள். அதனுள்ளே அரசர் அமர்ந்திருந்தார். அந்த ஒற்றைக் கம்பத்தைச் சுற்றி விசேஷமான பாதுகாப்பு. பல வகையான பரிசோதனைகளுக்கு உள்ளாகி அதன் பிறகே எவரும் அந்த மண்டபத்தினுள் புக முடியும். அந்தரங்க விச்வாஸமுள்ள ஊழியர்கள் இராப் பகலாக அதைக் கண்காணித்து வந்தனர்.

## முனிவர்கள் கூட்டம்

பரீக்ஷித் மகாராஜருடைய தீரமான முடிவு நாடெங்கும் காட்டுத் தீ போல் பரவியது. யாவற்றையும் துறந்து காடுகளில் தவம் புரிந்துகொண்டிருந்த முனிவர்கள் எல்லாரும் ஓடோடியும் வந்து

கூடி விட்டனர். முனிவர்களின் கூட்டம் பிரம்மாண்டமாகிவிட்டது. 'உயர்ந்த லௌகபோகங்களில் திளைத்த மகாராஜன் ஒரே நொடியில் வைராக்கியம் பெற்றுத் திருப்தியாக மரணத்தை வரவேற்கிறான். பல்லாயிரம் ஆண்டுகளாகப் பயின்றும் இதை நாம் செய்ய முடியாமலிருக்கிறோமே!' என்று அவர்களுக்குப் பெருவியப்பு, குதூஹலம். அந்நாட்களில் இருந்த முனிவர்களில் அங்கு வராதவர்களே இல்லை. பரீக்ஷித்து மகாராஜருடைய புண்ணியத்தின் பயன், அவர் இறக்குமுன்பு மெய்ஞ்ஞானிகளாகிய முனிவர்கள் அனைவரையும் தம் இருப்பிடத்தில் ஒருங்கே சேர்த்துப் பார்த்து ஆறுதலடையும்படி செய்தது. அவர்களுள் முக்கியமான சிலருடைய திருநாமங்களை இங்கே குறிப்பிடுவோம்.

அத்ரி, வஸிஷ்டர், ச்யவனர், சரத்வான், அரிஷ்டநேமி, ப்ருகு, அங்கிரஸ், பராசரர், பரசுராமர், உசத்யர், இந்த்ரப்ரமதர், இத்மவாஹர், மேதாதிதி, தேவலர், ஆர்ஷ்டிஷேணர், பரத்வாஜர், கௌதமர், பிப்பலாதர், மைத்ரேயர், ஔர்வர், கவஷர், அகஸ்தியர், வ்யாஸர், நாரதர் முதலிய மகாமுனிவர்கள் அங்குவந்திருந்தார்கள்.

பரீக்ஷித்து மகாராஜர் தவ முனிவர்கள் அனைவரையும் முறை பிசகாமல் பூஜித்தார். அவருடைய மனோதைரியம் பன்மடங்கு ஓங்கி வளர்ந்தது. "தக்ஷகன் என்னும் பாம்பு என்னை நன்றாகக் கடிக்கட்டும். அதற்காக நான் சிறிதும் கலங்கவில்லை. நீங்கள் அனைவரும் எம்பெருமானுடைய ஸ்தோத்திரங்களைப் பாடுங்கள்" என்று அடிபணிந்து வேண்டிக்கொண்டார். கங்கையின் தெற்குக் கரையில் கிழக்கு நுனியாகத் தர்ப்பங்களைப் பரப்பினார். அவற்றின்மேல் அமர்ந்தார், ப்ராயோபவேசமாக. உயிர் பிரியும்வரையில் ஊண், உறக்கமின்றி ஒரே இடத்தில் அசைவற்றுக் கிடத்தல் 'ப்ராயோபவேசம்' எனப்படும். முனிவர்களைப் பார்த்து அவர் கேட்டார்—

ततश्च वः पृच्छ्यमिमं हि पृच्छे
विस्रभ्य विप्रा इतिकृत्यतायाम् ।
सर्वात्मना म्रियमाणैश्च कृत्यं
शुद्धं च तत्रामृशताभियुक्ताः ॥

ததச்ச வ: ப்ருச்ச்யமிமம் ஹி ப்ருச்சே
விஸ்ரப்ய விப்ரா இதிக்ருத்யதாயாம் ।
ஸர்வாத்மநா ம்ரியமாணைச்ச க்ருத்யம்
சுத்தம் ச தத்ராம்ருசதாபியுக்தா: ॥

"சாகப்போகிறவன் செய்ய வேண்டியது என்ன? இதைத்தான் நான் கேட்க விரும்புகிறேன். வேதங்களெல்லாம் ஒன்ருகத் திரண்டு வந்தாற்போல் நீங்கள் இங்கே குழுமியிருக்கிறீர்கள். என் கேள்விக்கு நன்கு ஆலோசித்து விடை கூறுங்கள்" என்று உருக்கமாகக் கேட்டார்.

## சுகர் வருகை

இந்த ஸமயத்தில் சுகர் அங்கு வந்து சேர்ந்தார். அங்கே கூடியிருந்த மகரிஷிகளின் கூட்டத்தில் நடுநாயகமாக இவர் விளங்கினுர். ஒரு குறிக்கோள் இல்லாமலே நாடெங்கும் சுற்றித் திரியும் அவதூத ஸந்நியாஸி இவர். பிறந்தவுடனே துறவு பூண்டவர் க்ருஹஸ்தரா பிரம்மசாரியா துறவியா என்பதை அததற்கு ஏற்ற அடையாளங்களால் கண்டு கொள்ளலாம் மற்றவர் விஷயத்தில். இவரிடம் அப்படி ஒன்றும் இல்லே. இப்பொழுது சுகருக்கு வயது பதினுறுதான். இவரைச் சுற்றி எவ்வளவு கூட்டம்! சிறுவர்களும் ஸ்த்ரீகளும் இவரைச் சூழ்ந்துகொண்டு வருகின்றனர். கம்பீரமாகக் காட்சியளிக்கும் அழகிய திருமேனி. களங்கமற்ற தூய்மையான உள்ளம். அகத்தின் அழகு முகத்தில் தெரிகிறது. பசுமையான நிறம். உடம்பில் ஆடை எதுவும் இல்லே. நான்கு திசைகளே ஆடை அவருக்கு. கண்களின் அழகு தனிச்சிறப்பு பெற்றுத் திகழ்ந்தது.

இவரைக் காண்பது அரிதிலும் அரிது. எந்த ஸமயத்தில் எந்த இடத்தில் இவரைக் காணலாம் என்பதை எவராலும் திட்டமிட்டுச் சொல்ல முடியாது. அப்படியே ஏதாவது ஓர் இடத்தில் பார்த்தாலும் சில நாட்கள் சில நாழிகைகள் தொடர்ந்து இவரைப் பார்த்துக்கொண்டே இருக்கவும் முடியாது. அவ்வாறு கால்கள் நிலேக்காமல் திரிந்து கொண்டே இருப்பவர் இவர். ஏதாவது ஒரு காரியத்துக்காக ஓர் இடத்துக்குச் செல்வதாளுல் குறித்த காரியம் பூர்த்தியாகும் வரையில் அதே இடத்தில் காணக்கூடும். இவருக்குத்தான் அப்படி ஒன்றும் கிடையாதே! எம்பெருமான் ஒருவன்தான் இவருக்குவேண்டும். அவன் இவரது திருவுள்ளத்தில்

சுடர் விட்டுப் பிரகாசித்துக்கொண்டே இருக்கிறுன். அந்த ஆனந்தத்தில் தம்மை மறந்து திரியும் சுகருக்கு வேறு என்ன வேண்டும்? பிரபஞ்சத்தில் பல வகைப்பட்ட பொருள்கள் உள்ளன. எல்லாம் எம்பெருமானுடைய வடிவமாகவே இவர் கண்ணில் படுகின்றன. கல், மண், பொன், வெள்ளி, ஈ, எறும்பு, ஆடு, மாடு, மனிதன், ஆண், பெண் எல்லாம் இவருக்கு ஒன்றே. இப்படிப்பட்டவர்களுக்குப் பசி ஏது? தாகம் ஏது? ஆடையாபரணங்கள், திருமாளிகைகள்தாம் எதற்கு? அதனுல்தான் இவரைச் சுற்றி அவ்வளவு கூட்டம். அதிலும் சிறுவர்களின் கூட்டம். பழுத்த ஞ்ஞாநியானுலும் பதினறு வயதுதானே?

சுகர் வந்ததும் அங்கே குழுமியிருந்த முனிவர்கள் அத்தனை பேரும் எழுந்து நின்று இவரை மரியாதையுடன் வரவேற்றனர். உலகம் தோன்றும்போதே அவதரித்து, எந்த ஜனன மரணக் கணக்கிலும் அகப்படாதவர்கள் - தவம் ஞ்ஞாநம் வைராக்கியம் அநுஷ்டானம் இவற்றை நிரவதிகமாகப் பெற்றுப் பல்லாயிரம் வழிகளில் உலகத்துக்கு மகோபகாரம் செய்த மகான்கள் - இந்தச் சிறுமாமுனிவருக்கு மிக மிகப் பெரிய மரியாதை செய்தனர். சுகருடைய தந்தை வ்யாஸர், அவருக்குத் தந்தையான பராசர பகவான், அவருக்கும் பாட்டனுராகிய வஸிஷ்ட முனிவர் - இவர்களும் இந்தக் கூட்டத்தில் உடனிருந்து சுகருக்கு மரியாதை செய்தனர். அவர்களின் நடுவில் சுகர் தேஜோமயமாகப் பிரகாசித்தார். ஆகாயத்தில் பல்லாயிரக் கணக்கான நட்சத்திரங்களுக்கும் கிரகங்களுக்கும் நடுவில் பூர்ணசந்திரன் இருந்ததற்கு ஒப்பாக அந்தக் காட்சி இனியதாக இருந்ததாம்.

## பாக்கியசாலி

ஒரு வாரம் முன்னதாகவே மரணத்துக்கு நாளிட்டு வைத்து ஈடுஇணையற்ற பாக்கியத்தை ஒரு முனிவர் பரீக்ஷித்து மகாராஜருக்கு அளித்தார். அந்தக் குறுகிய காலத்தில் சுகர் வந்து அவரை அணுகினுர். எங்கும் நிலைத்து நிற்காத அவர் இங்கு ஏழுநாள் தொடர்ந்து தங்கியிருந்தார். எவருடனும் வாய் பேசாதவர் இந்தப் பரீக்ஷித்து மகாராஜருடன் ஏழு நாளும் இரவு பகலாக ஓயாமல் எம்பெருமானுடைய கல்யாண குணங்களைப் பரக்கப் பேசி அளவளாவினுர். பரீக்ஷித்து மகாராஜருக்குச் சமமான

பாக்கியசாலிகளைப் பிரபஞ்சத்தில் முன்னும் பின்னும் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை. பாண்டவர்களிடம் கிருஷ்ண பரமாத்மாவுக்கு மிகவும் பற்றுதல் உண்டல்லவா? அதன் பயனே இந்தச் சேர்க்கை. கிருஷ்ணன்தாம் பாண்டவர்களின் செல்லப் பேரராகிய தமக்கு இவ்வாறு அருள் புரிந்தார் என்று பரீக்ஷித்து மகாராஜாவே சொல்லுகிறார். இவ்வாறு இறைவன் அருளால் விஷ்ணுராதரும் ப்ரஹ்மராதரும் சந்தித்துக்கொண்டனர்.

## ஒரே கேள்வி

பரீக்ஷித்து மகாராஜா அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்களை முறைப்படி சுகருக்கு ஸமர்ப்பித்து வணங்கினார். சுகரைத் தொடர்ந்து வந்த சிறுவர் கூட்டம் இப்போது அகன்றது. உயர்ந்த ஆஸனத்தில் சுகரை அமரச்செய்து வணங்கினார் மன்னுதிமன்னர். அவர் சொன்னது :-

येषां संस्मरणात् पुंसां सद्यः शुद्ध्यन्ति वै गृहाः ।
किं पुनर्दर्शनस्पर्शपादशौचासनादिभिः ॥

யேஷாம் ஸம்ஸ்மரணாத் பும்ஸாம் ஸத்ய: சுத்யந்தி வை க்ருஹா: ।
கிம் புநர் தர்சநஸ்பர்சபாதசௌசாஸநாதிபி: ॥

"மகான்களை நினைத்தாலே போதும், மானிடர்கள் தம் இருப்பிடங்களுடன் தூயவர்களாகிவிடுவர். நேரில் பார்த்து தொட்டுத் திருவடிகளை அலம்பி ஆஸனம் ஸமர்ப்பித்து இவ்வாறெல்லாம் பணிவிடை செய்தால் எல்லையற்ற மேன்மையை அடையலாம் என்பதில் என்ன சந்தேகம்?" இப்படி எல்லாம் புகழ்ந்து அரசர் சுகரை வணங்கினார். தமது நிலைமைக்கேற்ப முக்கியமான ஒரு விஷயத்தை அறிந்து கொள்ள அவர் துடித்துக் கொண்டிருந்தார். சற்று முன்பு முனிவர்களிடம் அதையே கேட்டார் இப்போது சுகரிடமும் அதே கேள்வியைக் கேட்டார் —

अतः पृच्छामि संसिद्धिं योगिनां परमं गुरुम् ।
पुरुषस्येह यत् कार्यं म्रियमाणस्य सर्वथा ॥
यच्छ्रोतव्यमथो जप्यं यत् कर्तव्यं नृभिः प्रभो ।
स्मर्तव्यं भजनीयं वा ब्रूहि यद्वा विपर्ययम् ॥

*அத: ப்ருச்சாமி ஸம்ஸித்திம் யோகிநாம் பரமம் குரும் ।
புருஷஸ்யேஹ யத் கார்யம் ம்ரியமாணஸ்ய ஸர்வதா ॥
யச் ச்ரோதவ்யமதோ ஜப்யம் யத் கர்த்தவ்யம் ந்ருபி: ப்ரபோ ।
ஸ்மர்த்தவ்யம் பஜநீயம் வா ப்ரூஹி யத் வா விபர்யயம் ॥*

"யோகிகளுக்கெல்லாம் பரம குருவாகிய தேவரீர் அடியேனுக்கு இதை விளக்கமாகக் கூற வேண்டும். சாவுக்கு நாளிட்டு வைக்கப்பெற்ற என்போன்றவன் செய்ய வேண்டுவது என்ன? எதைக் கேட்க வேண்டும்? ஜபிக்க வேண்டும்? நினைக்க வேண்டும்? இடையருமல் தியானிக்க வேண்டும்?"

இவ்வாறு அரசர் அடிபணிந்து கேட்டதும் சுகரின் திருவுள்ளம் கனிந்தது. ஸகல சாஸ்திரங்களையும் நன்றாக அறிந்தவரும், ஸாக்ஷாத் வேதவ்யாஸருடைய குமாரருமான இவர் தெளிவான இனிய குரலில் அரசருக்குப் பதில் கூறத் தொடங்கினர்.

பரீக்ஷித்து மகாராஜர் மட்டுமின்றி, அங்கே கூடியிருந்தவர்கள் அனைவரும் ஆவலுடன் சுகருடைய உபதேசத்தைக் கேட்டு இன்பமெய்தினர். வயது முதிர்ந்த மகரிஷிகள் கூட்டங்கூட்டமாகக் கூடியிருக்கும் இடத்தில் சிறுவர் சுகர் ஒருவர்தாம் உபதேசம் செய்ய வேண்டியிருந்தது. அங்கு இருந்தவர்கள் அனைவரும் இதையே விரும்பினர். பகவானுடைய பெருமைகளைப் பேசுவதற்கு இவர் ஒருவரே தகுந்தவர் என்பது அவ்வாறு பிரசித்தமாக இருந்தது.

சுகர் சொன்னர் – அரசே! நீ கேட்ட இந்த விஷயம் மிகவும் சிறந்தது. உலகுக்கெல்லாம் நன்மை பயப்பது. ஸ்ரீமந் நாராயணனையே எப்போதும் தியானம் பண்ண வேண்டும். அவர் பெருமைகளைப் பேச வேண்டும். அவற்றையே கேட்க வேண்டும். நன்மையை நாடுகிறவர்கள் செய்ய வேண்டுவது ஈதேயாம். பெறற்கரிய மானிட ஜன்மத்தைப் பெற்று, உண்பதும் உறங்குவதுமாக, மக்கள் மனைவி போன்ற விஷயங்களில் மனத்தைப் பறிகொடுத்து அதை வீணுக்குகின்றனர். அந்தோ! இது அநியாயம்! ஹரிநாமம் ஒன்றே மானிடர்களைக் காப்பாற்ற வல்லது. நீ பெரும் பாக்கியசாலி. ஏழு நாள் நிச்சயமாக உயிர்வாழப் போகிருய். இதற்குள் எவ்வளவோ சாதித்துக்கொள்ளலாம். ஒரே ஒரு முகூர்த்த காலத்தில் ஹரிநாம பஜனம் பண்ணி நற்கதி யடைந்தவன் ஒருவனுடைய கதையைக் கேள்.

## கட்வாங்கன்

கட்வாங்கன் என்று ஓர் அரசன். தேவாஸுர யுத்தத்தில் தன் அபார ஸாமர்த்தியத்திறைல் அற்புதமாகப் போர் புரிந்து அவன் தேவர்களுக்கு வெற்றியைத் தேடித் தந்தான். தேவர் அவனுக்கு வரமருளினர். "உனக்கு வேண்டியதைக் கேள். தருகிறோம்" என்றனர். உடனே அவன், "எனது ஆயுட்காலம் இன்னும் எவ்வளவு? தயை செய்து இதைச் சொல்லுங்கள்" என்று கேட்டான். தேவர்களுக்கு இருந்த வெற்றிவெறியின் வேகத்தில் அவன் எதைக் கேட்டாலும் அள்ளிக் கொடுத்திருப்பார். ஆறைல் அவன் இதைத்தான் வரமாகக் கேட்டான். "ஒரே ஒரு முகூர்த்தம்தான்" என்று சடக்கென்று பதில் கிடைத்தது. வெகு வேகமாக அரசன் பூமிக்குத் திரும்பிறைன். யாவற்றையும் துறந்து ஹரிநாமத்தைச் சொல்லிக்கொண்டே மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைந்தான். அதுபோல் உறுதியான மனம், அவாவறுத்தல், ஹரிபக்தி, தளராத ஊக்கம்-இவை இருந்தால் போதும். ஆடம்பரமான ஆடையலங்காரங்கள் வேண்டாம். அழகிய மாடமாளிகைகளும் வேண்டாம். விசித்திரமான உணவு வகைகளும் அவசியமல்ல. நாற்புறமும் சூழ்ந்து நிற்கும் திசைகளே நமக்கு ஏற்ற நல்லாடையாக அமைந்துவிட்டன. ஏகாந்தமான மலைக்குகைகள் ஏராளமாக உள்ளன. பகவத் தியானத்துக்குப் பாங்கான அவற்றுக்கு இந்த அரண்மனைகள் எல்லாம் ஒருவிதத்திலும் ஈடாகா. வயிற்றுக்கு ஏதாவது உணவு எங்கேயும் கிடைக்கும். காய்கனிகள் தழை இலைச்சருகு - ஏதாவது ஒன்று இல்லாமலா போய்விட்டது? இவற்றில்தான் மனிதன் வெகுவாகத் தன் மனத்தையும் புலன்களையும் பழக்கிப் பழக்கி ஆழ்ந்து அழிந்து போகிறுன்.

ஸ்ரீமந்நாராயணனையே அனவரதம் தியானித்து க்ஷேமப்படுவதற்காகவே ஏற்பட்ட மனத்தைத் தீய வழிகளிலேயே செலுத்துகிறவன்தான் கொடிய பாவத்தைச் செய்கிறுன். அவவாறே கண் காது முதலிய ஐம்புலன்களும் மற்றவையும் எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்கிரகத்தையும் திவ்யசேஷ்டிதங்களையும் இனிமையாக அநுபவிப்பதற்கே ஏற்றவை. இவற்றைத் தவறுன வழியில் உபயோகப்படுத்துகிறவன் உண்மையில் பிறவிப் பயனை அடையவில்லை. அதறைல் அவன் செத்த

பிணம் போன்றவனே ஆவான். இவற்றை ஸ்ரீமந்நாராயணன் விஷயத்திலேயே செலுத்தி அவருடைய இனிய திருவடிகளிலேயே மனத்தைப் பதியவைத்து அந்தத் தியானத்துடனேயே உயிரை விடுகிறவன் உண்மையில் இறக்கவில்லை; சாச்வதமான பிரம்மானந்தத்தில் கலந்து இன்பமயமாகிவிடுகிறான். மனைவி மக்கள் வீடுவாசல் சொத்து சுதந்திரம் இவையொன்றும் இறந்து போகிறவனோடு தொடர்ந்து செல்வதில்லை. செத்துப் போகிறவனும் இவற்றைத் தன்னுடன் எடுத்துச் செல்வதில்லை. இதற்கெல்லாம் மூலாதாரமான தன் உடலையே விட்டுப் பறந்து ஓடுகிறவன் இவற்றைப்பற்றி எண்ணுவதற்குக்கூட இடமில்லை. நாள்தோறும் நம் கண்முன் எவ்வளவு பேர் இறக்கின்றனர்! இந்த நியதிக்கு எவர் விஷயத்திலாவது விலக்கு உண்டா? இல்லை, இல்லவே இல்லை.

இதென்ன! அப்படி ஏதாவது திரைமறைவில் நடக்கிறதா? நம் கண் முன்னேதானே நடக்கிறது? இதை உணர்ந்து தேறி நல்வழிப்படுகிறவர் எத்தனை பேர்? சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்தோ! கண்ணிருந்தும் குருடராகவே உள்ளனர். இதுதான் பகவானுடைய மாயை. தாமரையிலையின் மேலுள்ள நீர்த் துளி போலவே மனிதன் ஸம்ஸார ஸுகங்களில் பட்டதும் படாததுமாக ஈடுபடுவதுடன் எந்த நிமிஷத்திலும் இதை உதறிவிட்டு நிம்மதியாக வெளியேறுவதற்கு ஏற்ற பக்குவத்துடன் இருக்க வேண்டும். இது அசைக்க முடியாத உண்மை. இதைப் பலவாறாகப் பன்னியுரைக்கும் சிறந்த புராணம் ஒன்று உண்டு. என் தந்தையாகிய வேதவ்யாஸரிடமிருந்து நான் அதை த்வாபரயுகத்தின் தொடக்கத்தில் கேட்டு அறிந்தேன். பரீக்ஷித்து மகாராஜனே, உண்மையில் நீ பெரும் பாக்கியசாலி. இப்போது அதை உனக்குச் சொல்லுகிறேன், கேட்பாயாக என்று சொல்ல ஆரம்பித்தார் சுகர்.

**பாகவதம்**

निगमकल्पतरोर्गलितं फलं
शुकमुखादमृतद्रवसंयुतम् ।
पिबत भागवतं रसमालयं
मुहुरहो रसिका भुवि भावुकाः ॥

நிகமகல்பதரோர் களிதம் பலம்
சுகமுகாத் அம்ருதத்ரவஸம்யுதம் ।
பிபத பாகவதம் ரஸமாலயம்
முஹுரஹோ ரஸிகா புவி பாவுகா: ॥

ஸகலவேதங்களையும்சேர்த்து ஒரு கற்பக வ்ருக்ஷமாக நினைக்க வேண்டும். அந்த மரத்தில் பழுத்த இனிய பழமே பாகவத புராணம். இனிய பழங்களை மரத்தில் இருக்கும்போதே கிளி கொத்துவதும் சில ஸமயங்களில் கிளியின் முகத்திலிருந்து பழம் நழுவிக் கீழே விழுவதும் இயல்பே அல்லவா? பாகவத புராணம் என்னும் இந்தப் பழமும் சுகரு (கிளியினு) டைய முகத்திலிருந்து பூமியில் நழுவி விழுந்ததுதான். அப்படிக் கிளி கொத்திய பழம் சுவை மிக்கதாகவும், இனிய சாறு மிகுந்ததாகவும் இருப்பது இயல்பு. இதுவும் அப்படியே. இந்த ரஸம் நிறைந்த பழத்தை, ரஸிகர்களே, பாங்கான மனம் படைத்தவர்களே, பருகிப் பருகி இன்புறுங்கள். தெவிட்டாத அமுதமாகிய இது, இம் மண்ணுலகில் மட்டுமின்றி வைகுண்டம் போய்ச் சேர்ந்தபிறகும் தொடர்ந்து வந்து தித்திக்கும் மகிமை வாய்ந்தது. எம்பெருமானுடைய அற்புதமான, லோக க்ஷேமார்த்தமான, மனத்தைக் கொள்ளை கொள்ள வல்லவையான திருவிளையாடல்களும், அவனையன்றி வேறொன்றும் அறியாத பக்த சிரேஷ்டர்களின் வரலாறுகளுமே இதில் முழு மூச்சுடன் பேசப்படுகின்றன. வேறு லௌகிக விஷயங்கள் இதில் முக்கியத்துவம் பெறவில்லை. அதனாலேதான் 'பாகவதம்' என்றே இதற்குப் பெயரிட்டு வழங்குகிறார்கள்.

மற்றப் புராணங்களெல்லாம் பொருட்படுத்தப்படுவது பாகவதம் கண்ணில் படுகிறவரையில்தான். இதை அறிந்தவன் மற்றப் புராணங்களைக் கனவிலும் நினைக்க மாட்டான். 'பக்தி விரக்தீ பாகவதேந' என்பது பழமொழி. 'பக்தியும் வைராக்கியமும் பாகவதத்தினால்தான் கிடைக்கும்' என்பது கருத்து. பரீக்ஷித்து மகாராஜருடைய புண்ணியத்தினாலும், அவர் ஏற்ற ப்ராயோபவேசத்தின் மகிமையினாலும், சமீக மகரிஷி தம் பிள்ளையின் சாபத்தை அவசர அவசரமாக அவனுக்குத் தெரிவித்ததனாலும், பிறவித் துறவியாகிய சுகபரப்ரஹ்மம் தற்செயலாக அவனிருப்பிடம்

வந்ததனுலும் அங்கே கூடியிருந்த பல்லாயிரக் கணக்கானவர்களுள் ஸூத பௌராணிகரும் ஒருவராக இருந்ததனுலும், நைமிசாரண்யத்தில் நடந்த ஸத்ர யாகத்தில் குழுமியிருந்த மகான்கள் அனைவரும் சௌனகர் என்னும் மகரிஷியை முன்னிட்டுக்கொண்டு பக்திசிரத்தையுடன் அவரைக் கேட்டதனுலும் ரஸக் கனியான இந்தப் புராணம் இன்று இப் புவியிலுள்ளோர்க்குக் கிடைத்திருக்கிறது.

தத்துவத்தை உணர்த்துவதில் நிகரற்றது இந்தப் புராணம். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் இனிய திவ்யலீலைகளைப் பரக்கப் பேசுவது. எம்பெருமானுடைய திருவடியில் உதித்த கங்கைக்கு ஒரு மகிமை உண்டு. அதைப் பற்றிச் சொல்லுமாறு தூண்டுகிறவன், சொல்பவன், கூடியிருந்து கேட்பவர்கள் இவர்கள் எல்லாரையும் ஒருங்கே புனிதமாக்கி விடும் அது. பாகவதமும் அப்படியே. சுகர் அருளியது இந்தப் புராணம்; பரீக்ஷித்து மகாராஜர் கேட்டது; ஸ்ரீமந்நாராயணனைப் பற்றியது. இப்படி வக்த்ரு வைலக்ஷண்யம், ச்ரோத்ரு வைலக்ஷண்யம், விஷய வைலக்ஷண்யம் எல்லாம் சிறப்பாக அமையப்பெற்றது. இதை அருளியதற்காக நம் புண்ணிய பாரத பூமி சுகப்ரஹ்ம ரிஷிக்கு என்றும் கடப்பாடுடையதாம். வஸிஷ்ட வம்சத்தின் கடைக்குட்டியாகிய சுகருக்கு இது ஒன்றே தனிச் சிறப்பை அளிக்க வல்லது.

### சுகரின் இல்லறம்

சாதாரணமாக இவ் விஷயம் வழக்கில் இல்லை. சில புராணங்களில் சுகருடைய குடும்பம் வர்ணிக்கப்பெறுகிறது. பிறந்தவுடனே வேதவ்யாஸருக்கும் சுகருக்கும் நீண்ட வாதப் பிரதிவாதம் நடக்கிறது. 'இல்லறமே சிறந்தது. அதனுல் அதில் இழிய வேண்டும்' என்பது வ்யாஸருடைய வாதம். 'துறவறமே சிறந்தது; ஆதலால் இல்லறத்தில் ஈடுபடமாட்டேன்' என்பது சுகருடைய பதில். முடிவில் சுகர், பித்ருக்களுடைய பெண்ணுன பீவரீ என்பவளை மணந்தார். ஐந்து ஆண் பிள்ளைகளும் ஒரு பெண் பிள்ளையும் அவருக்குப் பிறந்தனர். க்ருஷ்ணன், கௌரன், ப்ரபு, சம்பு, பூரிச்ருதன் என்பவை ஆண் குழந்தைகளின் பெயர்கள். கீர்த்திமதி என்பது பெண்ணின் பெயர். அணுஹர் என்பவரை

அவள் மணந்தாள். அவ்விருவருக்கும் ப்ரஹ்மதத்தர் என்பவா பிள்ளையாகப் பிறந்தார் என்று சில புராணங்கள் கூறுகின்றன.

## கர்ணபரம்பரைக் கதைகள்

சிறுவயதில் துறவு பூண்டு சென்றார் சுகர். வ்யாஸர் ஆற்றாமை மீதூர்ந்து அவரைத் தொடர்ந்து ஓடினார். வழியில் ஒரு பெரிய குளம் இருந்தது. அதில் நிர்வாணமாக ஜலக்ரீடை செய்துகொண்டிருந்த அழகிகள், வ்யாஸர் வருவதைக் கண்டு வெட்கித் தமது ஆடைகளை அவசரமாக அணிந்தனர். இதைக் கண்ட வ்யாஸர் அவர்களைக் கேட்டார்-"முன்னே செல்கிறானே என் மகன், அவனைக் கண்டபோது நீங்கள் ஸஹஜமாக இருந்தீர்கள். இப்போது என்னைக் கண்டவுடன் என்ன இவ்வளவு பரபரப்பு?" என்று. அவர்கள், "ஆம், இது உண்மையே. அவரைக் கண்டதும் எங்களுக்கு மனத்தில் விகல்பம் ஒன்றும் தோன்றவில்லை. ஆனால் தங்களைப் பார்த்தவுடன் எங்களுக்கு வெட்கமாக இருக்கிறதே! நாங்கள் என்ன செய்வோம்? இது எங்கள் குற்றமில்லையே" என்றனர். வியாஸர் உண்மையை உணர்ந்தார்.

தர்மபுத்திரர் ராஜஸூய யாகம் செய்தபோது ஏராளமான அன்னதானம் நடந்தது. ஒரு லக்ஷம் பேர் உண்டார்களானால் அதைக் காட்டும் வகையில் ஒரு தெய்விகமணி தானாகவே ஒரு தரம் அடித்துக்கொள்ளும். அதன் கீழ் அமர்ந்துள்ளவன் அதைப் பதிந்து கொள்வான். தினந்தோறும் எத்தனை லக்ஷம் பேர் உண்கின்றனர் என்பதை இதனால் கணக்கிடுவது வழக்கம். ஒரு நாள் அந்த மணி வெகு வேகமாக அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. கணக்கெடுப்பவன் கனவேகமாகப் பதிய ஆரம்பித்தான். ஆனால் சாத்தியப்படவில்லை; திணறினான். என்ன அதிசயம்! அடித்துக்கொள்வதன் வேகம் தாளாமல் அந்த மணியே அறுந்து விழுந்துவிட்டது. இந்தச் சில விநாடிகளில் இத்தனை லக்ஷம் பேர் உணவருந்தியிருக்க முடியுமா? இவ்வளவு நாளாக இப்படி இல்லையே! தெய்விகமான மணியில் எவ்விதமான கோளாறும் தோன்ற வழியில்லையே! அனைவரும் திகைத்து நின்றனர். எச்சில் இலைகளைப் போடும் இடத்தில் பசுமையான நிறமுள்ள ஒரு நாடோடி (சுகர்) சில சோற்றுப் பருக்கைகளைக் கொறித்துவிட்டுப் போனார்

என்பதை அறிந்து அனைவரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தனர். இந்த அன்னதானம் நிறம் பெறுவதற்காகச் சுகபரப்ரஹ்மம் அருள்கூர்ந்து இவ்வாறு செய்தார். அவர் ஒருவர் சில சோற்றுப் பருக்கைகளை உண்டதனால் அநேக லக்ஷம் பேர் உண்டதற்கொப்பான நிலைமை தோன்றியது. சுகருடைய மகிமையும் பாகவதத்தின் பெருமையும் எல்லையற்றவை.

# சௌனகர்

**वासुदेवकथाप्रश्नः पुरुषांस्त्रीन् पुनाति हि ।**
**वक्तारं पृच्छकं श्रोतृन् तत्पादसलिलं यथा ॥**

*வாஸுதேவகதாப்ரச்ந: புருஷாந் த்ரீந் புநாதி ஹி ।*
*வக்தாரம் ப்ருச்சகம் ச்ரோத்ருந் தத்பாதஸலிலம் யதா ॥*

*"எம்பெருமானுடைய கதை மூன்று வகையான மானிடர்களைப் புனிதமாக்கும்: 1. அதைச் சொல்பவர், 2. சொல்ல வேண்டுமென்று பணிவுடன் கேட்பவர், 3. கேட்டு ஆனந்திக்கும் மற்றவர்கள். எம்பெருமானுடைய திருவடியிலிருந்து தோன்றின கங்கா தீர்த்தத்துக்கும் இதே இயல்பு உண்டு" என்பது இந்த ச்லோகத்தின் கருத்து.*

மேலே குறிப்பிட்ட மூன்று வகையான மானிடர்களுள் நடுவிலுள்ள இனத்தைச் சேர்ந்தவர் சௌனக முனிவர். யாராவது மகான்கள் தற்செயலாய் எழுந்தருளினால், தக்கவாறு உபசரித்து அடிபணிந்த இவர் பகவத் கதையைச் சொல்லுமாறு வேண்டிக்கொள்வார். அவர்கள் இவருடைய ஆர்வத்தைக் கண்டு மனமுவந்து புண்ணியமான பகவத்கதைகளைக் கூறுவர். ரஸிகர்கள் பெருந்திரளாகக் கூடியிருந்து கேட்டு இன்புறுவர். ஸூத பௌராணிகர் முதல் இனத்தைச் சேர்ந்தவர். யாராவது அவரைக் கேட்டுவிட்டால் போதும்; தாராளமாக அலுக்காமல் சலிக்காமல் கங்காப்ரவாகம்போல் சொல்லிக்கொண்டேயிருப்பார். அதற்கேற்ற பேராற்றல் அவருக்கு உண்டு. வியாஸ பகவானிடம் ஸகல புராணங்களையும் நேராகக் கேட்டு அறிந்து கொண்டது மட்டுமின்றி, புராணப் பிரவசனத்துக்காகவே நியமிக்கப்பட்டவருங்கூட அவர். இன்று நமக்குக் கிடைத்திருக்கும் ஸகல புராணங்களும் ஸூத பௌராணிகரால் சௌனகருக்குச் சொல்லப் பெற்று சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையாக வந்துள்ளவையே. ஆதலால் சுவையான புராணக் கதைகளை நாம் கேட்டு ரஸிக்கும் போது, மேற்கூறிய இருவருக்கும் (ஸூத பௌராணிகர், சௌனகர்) நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

**நைமிசாரண்யம்**

நமது பாரத தேசத்தின் முக்கியமான புண்ணிய ஸ்தலங்களில் இதுவும் ஒன்ருகும். நைமிஷாரண்யம் என்றும் இதை வழங்குவதுண்டு. இரண்டும் சரியான பெயரே. பிரம்மதேவனுல் பரீக்ஷார்த்தமாக மானஸமான ஸ்ருஷ்டியால் ஒரு சக்கரம் சுழற்றி விடப்பட்டது. அதன் நேமி (வட்டமான முனை) எந்த ஸ்தலத்தில் சிதறிப் போகிறதோ அதுவே தபஸ்ஸுக்கு ஏற்ற இடம் என்று அவர் சொன்ஞர். அதைக் கேட்ட அந்தணர்கள் பலர் அந்தச் சக்கரத்தின் பின் ஓடிஞர்கள். அது எதிர்பார்த்தபடியே தரையில் மோதி ஓர் இடத்தில் சிதறியது. அந்த நிகழ்ச்சியையே குறிக்கும் பெயர் அந்த ஸ்தலத்துக்கு இடப்பட்டது. அதுதான் நைமிசம் என்பது. நேமி: சீர்யதே என்னும் இரு சொற்களின் சேர்க்கையினுல் 'நைமிசம்' என்னும் பெயர் வந்தது. 'ஒரே நிமிஷத்தில் அஸுரர்களைக் கொன்றுவிடுகிறேன்' என்று சொல்லி ஸ்ரீமகாவிஷ்ணு அப்படியே செய்துவிட்டார் இந்த இடத்தில். அதனுல் 'நிமிஷ' என்னும் சொல்லை அடையாளமாகக் கொண்டு 'நைமிஷாரண்யம்' என்றும் வழங்குவது பொருத்தமுடையதே. இந்தப் புண்ணிய க்ஷேத்திரம் தொன்றுதொட்டு மிகவும் பிரஸித்தி பெற்றது. நம் பாரதநாட்டுக்குத் திலகம் போன்றது; நற்காரியம் எதையும் இந்த க்ஷேத்திரத்தில் வந்து செய்வதை நம் நாட்டினர் பெரும் பாக்கியமாகக் கருதுவர். அதனுல்தான்போலும் நம் (43ஆம் பட்டம்) அழகியசிங்கர் தேஹந்யாஸமாகிற உத்தமோத்தமமான யஜ்ஞத்தை இந்த க்ஷேத்திரத்தில் செய்தருளினுர். அதனுல் இந்த ஸ்தலம் நமக்கு மேலும் பன்மடங்கு உத்தேச்யமாகி விட்டது. இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில்தான் சௌனகர் முதலிய மகரிஷிகள் ஒன்றுகூடி ஆயிரம் வருஷங்களில் செய்ய வேண்டிய பெரும் ஸத்ர யாகத்தைச் செய்தனர். அதில்தான் ஸூத பௌராணிகர் இதிஹாஸ புராணங்கள் யாவற்றையும் பரக்கப் பேசினுர். அதன் பயனுகவே இன்று நமக்கு அவை கிடைத்துள்ளன.

नैमिशेऽनिमिषक्षेत्रे मुनयः शौनकादयः ।
सत्रं स्वर्गाय लोकाय सहस्रसममासत ॥

நைமிசே நிமிஷக்ஷேத்ரே முநய: சௌநகாதய: ।
ஸத்ரம் ஸ்வர்காய லோகாய ஸஹஸ்ரஸமமாஸத ॥

## தீர்க ஸத்ரம்

யாகங்கள் பலவகை. அவற்றுள் ஸத்ர யாகம் என்பது ஒன்று. இதில் பல சிறப்பான தன்மைகள் உண்டு. மற்ற யாகங்களிற் போல் யஜமானன் வேறு, ரித்விக்குகள் (யஜமானனிடம் தக்ஷிணையைப் பெற்றுக்கொண்டு அவனுக்காக யாக காரியங்களைச் செய்பவர்கள்) வேறு என்னும் பாகுபாடு இதில் இல்லை. பதினேழு பேர்கள் ஒன்றுகூடிச் செய்ய வேண்டிய இந்த யாகத்தில் அனைவரும் யஜமானரே. அவர்கள் தாமே ரித்விக்குகளாகவும் இருந்து யாக காரியங்களைச் செய்வர். யாகத்தின் பலன் எல்லாருக்கும் ஸமானம். மேலும், மற்ற யாகங்களைப் போல் இதற்குக் காலவரையறை இல்லை. யாகம் செய்பவர்கள் தங்கள் இஷ்டம்போல் பலநூறு வருஷங்கள் இதை நீடித்துச் செய்யலாம். நடுவில் யாராவது யஜமானர் இறந்துவிட்டால் அவருக்குப் பதிலாக வேறொருவரைச் சேர்த்துக்கொள்ளலாம். இப்படிப்பட்ட தீர்க ஸத்ரத்தைத்தான் (நீண்ட யாகத்தை) சௌனகர் முதலிய ரிஷிகள் நைமிசாரண்யத்தில் செய்தனர்.

யாக காரியங்கள் முடிந்த பிறகு இடைவேளைகளில் ஸத்கதைகளைச் சொல்லிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் பொழுதைப் போக்கினர். இவ் வழியில்தான் பாரதம் பாகவதம் முதலிய புனிதமான இதிகாஸ புராணங்கள் இன்றளவும் தொடர்ந்து வருகின்றன இக்காலத்தில் 'முதியோர் கல்வி' என்று என்ன என்னவோ திட்டங்கள் போடுகிறார்களே; பக்தி சிரத்தையுடன் புராணங்களைக் கேட்டு வருபவர்கள் உண்மையில் எழுத்து வாசனையே இல்லாதிருப்பினும் சிறந்த அறிவாளிகளாகத் திகழ்வர். கடல் போன்ற அறிவு அவர்களுக்கு இருக்கும். இந்த ஸம்பிரதாயத்தின் மூலகர்த்தாவான ஸூத பௌராணிகருக்கும் சௌனக முனிவருக்கும் முதியோர் கல்வித் திட்டம் வகுப்பவர்கள் பெரிதும் கடமைப் பட்டவர்களாவர்.

## வேதப் பிரஸித்தர்

சௌனக முனிவர் மேற்கூறியவாறு புராணப் பிரஸித்தர் மட்டுமல்ல; ரிக்வேத ப்ரவர்த்தகர்களான தொன்மையான ரிஷிகளுள் இவரும் ஒருவர். ரிக்வேதம் இரண்டாவது மண்டலத்திலும்

ஒன்பதாவது மண்டலத்திலும் பல ஸூக்தங்கள் இவரால் காணப்பெற்றவை. க்ருத்ஸமதர் என்னும் பெயராலும் இவரை வழங்குவதுண்டு. இவர் ப்ருகுவம்சத்தைச் சேர்ந்தவர் என்று வைதிக ஸம்பிரதாயஸ்தர்கள் கூறுகின்றனர். ரிக்வேத ஸம்பந்தமான பல நூல்களை இவர் இயற்றி லோகோபகாரம் செய்திருக்கிறார். இவற்றால் ரிக்வேதத்துக்குப் பெரிய உதவி உண்டு. 1. ஆர்ஷாநுக்ரமணீ, 2. சந்தோநுக்ரமணீ, 3. தைவதாநுக்ரமணீ, 4. அநுவாகாநுக்ரமணீ, 5. ஸூக்தாநுக்ரமணீ, 6. ரிக்விதாநம், 7. பாதவிதாநம், 8. ப்ருஹத்தேவதா, 9. ப்ராதிசாக்யம், 10. ஸ்ம்ருதி (சௌநகஸ்ம்ருதி) என்று அவை வழங்குகின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் ரிக்வேத அத்யயனம் செய்பவர்களுக்குத் தீபஸ்தம்பங்கள்போல் பயன்படுகின்றன.

அதிலும், ப்ருஹத்தேவதா என்னும் நூல் மிகவும் சிறந்தது. மேனாட்டுப் புலவர் மெக்டானல் என்பவர் இதை ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்டிருக்கிறார். 10,000 ரிக்மந்திரங்கள் கொண்ட மாபெருங்கடல்போன்ற ரிக்வேதத்தில், எந்த மந்திரத்தில் எந்த தேவதையைச் சொல்லியிருக்கிறது என்பதுபோன்ற விஷயத்தில் இந்த நூல் கலங்கரை விளக்கு போல் வழி காட்டுகிறது. சில மந்திரங்களில் ஒரு பாதியும், நாலில் ஒரு பாகமுங்கூட வெவ்வேறு தேவதைகளைப் பற்றியதாக இருக்கும். அவற்றைத் தமக்கே உரிய திறமையினால் வெகு தெளிவாக சௌனகர் இந்த நூலில் அறுதியிட்டுக் கூறியிருக்கிறார். மேலும், ஒவ்வொரு மந்திரத்தையும் கையாளும்போது மேற்கொள்ள வேண்டிய முறையை இதில் அவர் கூறுகிறார். 1. ரிஷி, 2. சந்தஸ், 3. தேவதை – இவை மூன்றையும் தெரிந்துகொண்டு சொல்லிவிட்டுத்தான் மந்திரத்தைச் சொல்ல வேண்டும். இவற்றை மறந்து, சொல்லாமல், மந்திரத்தை மட்டும் முதல்முதலில் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னால் இது நிஷ்பலமாகிவிடும். இந்த முறையை இன்றளவும் அனைவரும் கடைப்பிடித்து வருகிறார்கள். இதற்குக் காரணம் என்ன? இதையும் சௌனகர் கூறுகிறார்.

பண்டை நாட்களில் ரிஷிகள் ஒரு பயனைக் கருதிக் குறிப்பிட்ட சந்தஸ்ஸில் அமைந்த மந்திரங்களினால் தேவர்களை வழிபட்டனர்.

அதனால்தான் முதலில் ரிஷிகளையும், பின்பு சந்தஸ்ஸுகளையும், அதன் மேல் தேவதையையும் சொன்ன பின்பே அந்த அந்த மந்திரங்களை உச்சரிக்க வேண்டும் என்கிறார்.

ऋषिं तु प्रथमं ब्रूयात्, छन्दस्तु तदनन्तरम् ।
देवतामथ मन्त्राणां कर्मस्वेवमिति श्रुतिः ॥

ரிஷிம் து ப்ரதமம் ப்ரூயாத், சந்தஸ்து ததநந்தரம் ।
தேவதாமத மந்த்ராணாம் கர்மஸ்வேவமிதி ச்ருதி: ॥

— ப்ருஹத்தேவதா, 8.138.

## ஸ்ரீவைஷ்ணவோத்தமர்

சௌநகீயம் என்னும் பெயருள்ள மற்றொரு நூல் உள்ளது. சாதாரணமாக இது மந்த்ர சாஸ்திர நூலாகவே உள்ளது. இதில் பல வகையான ரிக்வேத மந்திரங்களின் கல்பங்கள் (செய்முறைகள்) விளக்கப்பெறுகின்றன. இது மிக மிக உபயோகமானது. இதன் முடிவில் சௌனகர், தினந்தோறும் விஷ்ணுபூஜை செய்ய வேண்டியது அத்யாவச்யகமாதலால் அதைச் சொல்லி நூலை முடிக்கிறார். பல விதமான யாக ஹோமங்களிலும் பூர்ணாஹுதி விஷ்ணுவை உத்தேசித்து அமைந்துள்ளவாறு போல இவருடைய நூலும் விஷ்ணவர்ச்சநத்தைச் சொல்வதுடன் முடிவடைகிறது.

शौनकोऽहं प्रवक्ष्यामि नित्यं विष्णवर्चनं महत् ।
प्रवःपान्तमंधस इत्यृचाप्यर्च्य विधानतः ॥

சௌநகோஹம் ப்ரவக்ஷ்யாமி நித்யம் விஷ்ணவர்ச்சநம் மஹத் ।
ப்ரவ: பாந்தமந்தஸ இத்ய்ருசாப்யர்ச்ய விதாநத: ॥

— சௌநகீயம், 2.21.1.

என்னும் ச்லோகத்தில் விஷ்ணு பூஜைக்கு இன்றியமையாத 'ப்ரவ: பாந்தம்' என்னும் ரிக் இவரால் எடுக்கப்பட்டிருக்கிறது. சிறந்த ஸ்ரீவைஷ்ணவரான விகநஸ மகரிஷியும் இந்த ரிக்மந்த்ரத்தையே முதன்மையாக எடுத்திருப்பது நோக்கற்பாலது. அவரைப் போலவே இவரும் எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்கிரகத்தை உருவாக்கும் வகையையும் நன்கு விளக்குகிறார்.

शंखचक्रगदापद्मवनमालाविभूषितम् ।
पीताम्बरमुदाराङ्गं प्रसन्नेन्दुनिभाननम् ॥
श्यामलं पुण्डरीकाक्षं किरीटेन विराजितम् ।
श्रीभूमिसहितं विष्णुं पद्मस्योपरि संस्थितम् ॥

*சங்கசக்ரகதாபத்மவநமாலாவிபூஷிதம் ।*
*பீதாம்பரமுதாராங்கம் ப்ரஸந்நேந்துநிபாநநம் ॥*
*ச்யாமலம் புண்டரீகாக்ஷம் கிரீடேந விராஜிதம் ।*
*ஸ்ரீபூமிஸஹிதம் விஷ்ணும் பத்மஸ்யோபரி ஸம்ஸ்திதம் ॥*

— *சௌநகீயம்*, **2.21.5,6.**

இந்த ச்லோகங்களில், விக்கிரக ரூபியாக நிர்மாணம் செய்யப்பட வேண்டிய ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூபத்தை மிகவும் கவர்ச்சிகரமாகக் கூறுகிறார்.

एतद् विष्णवर्चनं सम्यक् प्रतिष्ठाविधिसंयुतम् ।
येन प्रोक्तं सदा तस्मै शौनकाय नमो नमः ॥

*ஏதத் விஷ்ணர்வர்ச்சநம் ஸம்யக் ப்ரதிஷ்டாவிதிஸம்யுதம் ।*
*யேந ப்ரோக்தம் ஸதா தஸ்மை சௌநகாய நமோ நம: ॥*

— *சௌநகீயம்*, **2.21.53.**

என்னும் ச்லோகத்துடன் இந்த நூல் முடிவடைகிறது. இந்த ச்லோகம் சௌனகருடைய சிஷ்யர்களால் சேர்த்து எழுதப்பட்டிருக்கக் கூடும். இப்படியே மற்றும் பற்பல இடங்களிலும் வருகிறது. இந்த நூலில் விஷ்ணு பூஜை போல் மற்றத் தெய்வங்களின் பூஜையும் முறைகளும் அடையவே சௌனகரால் சொல்லப் பட்டிருக்கின்றன; ஆயினும், விஷ்ணுபூஜையில் காணும் அவ்வளவு ஈடுபாடு மற்ற விஷயங்களில் காணப்படாமையினாலும், முடிவில் இதைப் பேசி முடிக்கிறபடியாலும், சௌனகர் உத்தமோத்தம ஸ்ரீவைஷ்ணவ சிரோமணி என்று அறுதியிடுவதில் பொருத்தம் உள்ளது. இவர் அருளிச்செய்த நூல்கள் பலவற்றுள் 'விஷ்ணுதர்மம்' என்னும் பெயருள்ள நூல் ஒன்றும் தனியாகவே உள்ளது.

## குடிப்பிறப்பு

சௌனகர் பிறந்த வம்சம் ப்ருகு மகரிஷியினுடையது. இவருடைய தந்தையாரின் பெயர் சுநகர் என்பது. சுநகருடைய மகன் என்பதைக் காட்டும் வகையிலேயே இவருக்கு 'சௌநகர்' என்ற பெயர் தோன்றியது. சுநகர் பெரும் புகழ் படைத்தவர்; தவத்தில் சிறந்தவர்; ரிக்வேத ஸம்பந்தமான யாக காரியங்களைச் செய்யும் ரித்விக்குக்கு ஹோதா என்று பெயர். இந்தப் பெயரில் இவரது திருநாமம் கலந்தே வழங்கும். சுநஹோத்திரம், சௌநஹோத்ரம், சௌநஹோத்ரீ என்ற சொற்கள் ஸர்வஸகஜமாக உள்ளன. ஹோதாவின் மரபில் இவர் மிகமிக முக்கியமானவராக விளங்கியதுதான் இதற்குக் காரணம். இது மட்டுமல்ல; வேதசாஸ்திரங்களைக் கற்பிக்கும் வகையில் ஈடு இணையற்றவர் சுநகர். சௌநகருங்கூட. அதனால் உபாத்தியாயராக இருப்பதற்கு இந்த வம்சத்தினர் முழுவதும் தகுதி பெற்றவர்கள் என்ற கருத்தில் 'சௌநகீயர்கள்' என்று உபாத்தியாயர் பலர் வழங்கப்பட்டு வந்தனர் அந்நாளில்.

ரிக்வேதத்தின் சாகைகளாகிய பாஷ்கலம் சாகலம் ஆகிய இரண்டையும் சௌனகர் ஒன்றாக இணைத்துவிட்டார் என்பர். தம் முன்னோர்களின் வரலாற்றை விளங்கக் கூறுமாறு இவர் ஸூத பௌராணிகரை அடிக்கடி கேட்பார். அவரும் அலுத்துக் கொள்ளாமல் சொல்வார். அவ்வளவு ஆவல் இவருக்குத் தம் முன்னோர்களின் கதையைக் கேட்பதில். ச்யவனர் என்னும் மகாதேஜஸ்வியான முனிவர் இவருடைய பூர்வபுருஷரே. இவருடைய தந்தை பிறந்த வரலாறு ஓர் அற்புதம். இவருடைய பாட்டனர் ஓர் அதிசய மனிதர்.

## யமனை வென்றவர்

விச்வாவஸு என்னும் கந்தர்வனுக்கு மேனகை என்னும் அப்ஸரஸ்ஸினிடம் ஓர் அழகிய பெண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையை மேனகை ஒரு காட்டில் விட்டுப் போய் விட்டாள், தன் வழக்கப்படி. ஸ்தூலகேசர் என்னும் முனிவர் அந்தக் குழந்தையை அன்புடன் எடுத்து வளர்த்து வந்தார். ப்ருகு வம்சத்தைச் சேர்ந்த ருரு என்பவர் தற்செயலாக அந்தப் பெண்ணைக் கண்டு மையல்

கொண்டார். அவளைத் தமக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமென்று ஸ்தூலகேசரைக் கேட்டார். அவரும் சம்மதித்தார். கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் ஸித்தமாகச் செய்யப்பட்டிருந்தபோது அந்தப் பெண்ணை விஷப்பாம்பு தீண்டிவிட்டது. அவள் இறந்துவிட்டாள்.

ப்ரமத்வரா என்பது அவளுக்கு இட்ட பெயர். 'பெண்களுள் சிறந்தவள்' என்பது அந்தப் பெயரின் பொருள். அவ்வளவு சிறந்த கட்டழகி இவ்வாறு அகால மரணமடைந்ததில் சம்பந்தப்பட்ட அனைவரும் பேரதிர்ச்சியுற்றுப் புலம்பினர். அவளை மணப்பதற்கு இருந்த ருருவுக்குப் பல்லாயிரம் மடங்கு துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. கதறி அழுதார். அவள் மீண்டும் உயிர் பெற்று எழ வேண்டுமென்று ஸகல தெய்வங்களையும் வேண்டினார். தேவர்கள் அவரெதிரில் வந்து ஆறுதல் கூறினர். 'போன உயிர் போனதுதான். அதை மீட்க முடியாது. இது அசைக்க முடியாத இயற்கையின் போக்கு' என்பதை எடுத்துக் கூறினர். ருருவின் மனம் அமைதி யடையவில்லை. அவர் தொடர்ந்து புலம்பிக் கொண்டேயிருந்தார்.

"இந்த ப்ரமத்வராவின் மரணம் ஏற்கெனவே தேவர்களால் திட்டமிடப்பட்டு நடந்த நிகழ்ச்சி. அப்போது இதற்கு ஒரு மாற்று வழியும் ஏற்பாடு பண்ணப்பட்டுள்ளது. நீர் இசைந்தால் அவ் வழியில் முயன்று இவளைப் பிழைக்கச் செய்யலாம்" என்று தேவர்கள் கூறினர். "இதற்காக எதையும் செய்வேன்" என்று கதறினார் அவர். "உமது ஆயுள் காலத்தில் சரிபாதியை இவளுக்குத் தந்துவிட வேண்டும். அதற்கு நீர் இணங்கினால் நாங்கள் யமதர்மராஜனிடம் போய் இவளை உயிர்ப்பிக்க வகை செய்கிறோம்" என்று தேவர்கள் கூறினர். அளவற்ற மகிழ்ச்சியுடன் அதற்கு இசைந்தார் ருரு மகரிஷி.

தேவர்கள் யமனிடம் சென்று, இப்படி ஒரு முன்னேற்பாடு இருப்பதையும் அதையொட்டி ருரு மகரிஷி ஸம்மதித்திருப்பதையும் தெரிவித்து, செத்த பிணமாகக் கிடந்த ப்ரமத்வராவைப் பிழைப்பிக்க வேண்டினர். யமதர்மராஜன் இதை ஏற்றுக்கொண்டு உடனே அவளைப் பிழைப்பித்தான். தூங்கி எழுந்தவள்போல் எழுந்து உட்கார்ந்துவிட்டாள் அந்தக் கட்டழகி. ருரு மகரிஷியின் ஆனந்தத்துக்கு அளவே இல்லை. ஸ்தூலகேச மகரிஷி ஓடோடி வந்து, யமன் வாயில் புகுந்து மீண்டு வந்த புதல்வியைக் கண்டு

பேரானந்தமெய்தினர். பிறகு ருரு மகரிஷிக்கும் ப்ரமத்வராவுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. சதிபதிகள் இருவரும் இன்ப வெள்ளத்தில் மூழ்கிச் சிறிது காலம் கழித்தனர்.

ப்ரமத்வரா ஓர் ஆண் குழந்தையைப் பெற்ருள். அந்தக் குழந்தைக்கு சுநகர் என்று பெயரிட்டனர். சுநகர் மகாதேஜஸ்வியாக இருந்தார். தவம், புகழ், வேதாத்யயனம், ஆத்மஜ்ஞானம், தர்மம், சத்தியம், புலன்களை அடக்கி வைத்தல் – இவை யாவும் அவரிடம் இயற்கையாகவே குடிகொண்டிருந்தன.

रुरोरपि सुतो जज्ञे शुनको वेदपारगः ।
प्रमद्वरायां धर्मात्मा तव पूर्वपितामहात् ॥
तपस्वी च यशस्वी च श्रुतवान् ब्रह्मवित्तमः ।
धर्मिष्ठः सत्यवादी च नियतो नियतेन्द्रियः ॥

ருரோரபி ஸுதோ ஜஜ்ஞே சுநகோ வேதபாரக: ।
ப்ரமத்வராயாம் தர்மாத்மா தவ பூர்வபிதாமஹாத் ॥
தபஸ்வீ ச யசஸ்வீ ச ச்ருதவாந் ப்ரஹ்மவித்தம: ।
தர்மிஷ்ட: ஸத்யவாதீ ச நியதோ நியதேந்த்ரிய: ॥

— மகாபாரதம், 1.5.8.9.

இந்த சுநகருடைய திருக்குமாரர்தாம் சௌனகர். தர்மபுத்திரருடைய ராஜஸூய யாகத்துக்குப் பெரும் திரளாக வந்து கூடியிருந்த மகரிஷிகளுள் சௌனகரும் இருந்தார். வேதவ்யாஸர் வேத சாகாபேத வ்யவஸ்தை பண்ணுமுன்பே இவர் ஸகல வேதங்களையும் அத்தியயனம் பண்ணினவர். வேதவ்யாஸருக்கு ஸமகாலத்தில் இருந்தாலும், ஜ்ஞாந அநுஷ்டானங்களிலும் குலத்திலும் குணத்திலும் அவரை ஒத்திருந்தாலும், சௌனகர் இருந்த இடம்தெரியாமல் அடக்கமாகவே வாழ்ந்து வந்த கர்மவீரர். ரிக்வேத ப்ரவர்த்தகர்களான ஆச்வலாயனருக்கும் காத்யாயனருக்கும் சௌனகர் ஆசார்யராக இருந்தவர். அதர்வ வேதத்திலும் இவர் தேர்ச்சி பெற்றவர். அதற்கான ப்ராதிசாக்யம் (வேதலக்ஷணம்) ஒன்றையும் இவர் செய்திருக்கிருர்.

சதபதப்ராஹ்மணம் போன்ற வேதங்கள் பலவற்றிலும் இவரது வரலாறு பலகாலும் பேசப்படுகிறது. சௌநக யஜ்ஞம் என்று ஒரு யாகத்துக்கு இவரது பெயரே வைக்கப் பெற்றுள்ளது.

இவர் அருளிச்செய்த பாதவிதாநம் என்னும் சிறிய நூல் ரிக்வேதத்தின் சந்தஸ்ஸுக்களின் மர்மத்தை அறிவதற்கு இன்றியமையாதது. இவர் பல்லாயிரக் கணக்கான மாணவர்களுக்குக் கல்வி புகட்டுவதையே தம் ஆயுள்காலம் முழுவதும் தொடர்ந்து செய்து வந்தவர். அதனால் பிற்காலத்தில் சௌநகீயர், சௌநகீபுத்ரர், சௌநகர்கள் என்று கல்வி கற்பிக்கும் உபாத்தியாயர்களுக்குப் பெயர்கள் வழங்கலாயின. இவரது நீண்ட ஆயுள் காலத்தில் நடந்த பல நிகழ்ச்சிகள் கதை வடிவமாகப் புராணங்களில் பரக்கப் பேசப்பட்டுள்ளன. வேதங்களுள் முக்கியமான ரிக்வேதம், இவருடைய இடையறாத ப்ரவசனத்தினாலும் நிகரற்ற பலநூல்களினாலும் இன்றும் என்றும் குன்றாத ஒளி வீசிப் பிரகாசித்து உலக க்ஷேமத்தைக் காக்க உபயோகப்படுகிறது.

## இந்த்ரப்ரியர்

தேவர்களின் தலைவனாகிய இந்திரனிடம் இவருக்கு விசேஷமான பக்தி. அவ்வாறே இந்திரனுக்கும் இவரிடம் அளவற்ற அபிமானம். இதன் பயனாகப் பலதரமும் இந்திரன் இவரைப் போல் வேஷம் போட்டுக்கொண்டதுண்டு. இவரும் இந்திரனைப் போல் வேஷம் தரித்ததுண்டு. இது ரிக்வேதப் பிரஸித்தமான கதை.

க்ருத்ஸமதர் (சௌனகர்) யாகம் செய்தபோது அவரது அழைப்புக்கு இணங்கி இந்திரன் அவருடைய யாகசாலையில் பிரவேசித்தான். இதை எதிர்பார்த்திருந்த அஸுரர்கள் அவனைக் கொல்ல நினைத்து, யாகசாலையைச் சூழ்ந்துகொண்டனர். தனிமையில் பகைவர்களிடம் சிக்கிக்கொண்ட இந்திரன், தப்பியோடுவதற்கு ஓர் உபாயம் செய்தான். க்ருத்ஸமத ரிஷிபோல் மாறுவேஷம் போட்டுக்கொண்டான். யாகசாலையிலிருந்து வெளிக்கிளம்பி ஸ்வர்க லோகம் போய்ச் சேர்ந்துவிட்டான். நீண்ட நேரம் காத்திருந்த அஸுரர்கள், இந்திரன் வெளிப்படாமையால் யாகசாலையினுள் புகுந்தனர். ஆனால் அங்கு இந்திரனைக் காணவில்லை. க்ருத்ஸமதர்தாம் வீற்றிருந்தார். 'இப்பொழுதுதானே க்ருத்ஸமதர் வெளியே சென்றார்? உள்ளேயும் அவரே எவ்வாறு இருக்க முடியும்? ஆதலால் இந்திரன்தான் க்ருத்ஸமதருடைய வேஷத்தில் நம்மை ஏமாற்றுவதற்காக உள்ளேயே இருக்கிறான்'

என்று எண்ணினர் அஸுரர்கள். அவர்கள் சரியானபடியே ஊகித்தனர். ஆனால் காலம் தவறியபடியினால் தலைகீழாக அவர்களது ஊகம் மாறிவிட்டது. உண்மையறியாமல், உள்ளே இருந்த க்ருத்ஸமதரை (இந்திரனென்னும் எண்ணத்தால்) நெருக்கினர் அஸுரர்கள். அப்போது இந்திரனுடைய பெருமைகளைப் பரக்கப் பேசி, "அப்படிப்பட்ட மகாபுருஷனாகிய இந்திரன் எங்கே? நீசனாகிய நான் எங்கே? அவன் அப்பொழுதே தேவலோகம் சென்று சேர்ந்தான். நான் சாதாரண மானிடன் (க்ருத்ஸமதன்) தான்" என்று உண்மையைக் கூறினார் ரிஷி. இவ் வரலாற்றைக் கூறும் ரிக்வேத ஸூக்தம் 'ஸஜநீயம்' எனப்படும். ஒவ்வொரு ரிக்மந்திரத்தின் முடிவிலும் 'ஸ ஜநாஸ இந்த்ர:' என்று தவறாமல் இதில் வரும். அதனால் இப் பெயர் இந்த ஸூக்தத்துக்கு. இதைப் படிப்பது மிகமிக இன்பகரமானது. ஒரே ஒரு ரிக்கு மட்டும் இதோ—

यो जात एव प्रथमो मनस्वान्
देवो देवान् क्रतुना पर्यभूषत् ।
यस्य शुष्माद्रोदसी अभ्यसेतां
नृम्णस्यमह्ना स जनास इन्द्रः ॥

— ரிக்வேதம், 2.12.1.

"ஜனங்களே(அஸுரர்களே), எவனொருவன் பிறக்கும் பொழுதே (தேவர்களுக்கெல்லாம்) முதல்வனாகத் திகழ்ந்தானோ, கம்பீரமான மனமுள்ளவனோ, தெய்வத்தன்மை மிகுந்த எவன் தன் ஈடு இணையற்ற வீரச் செயல்களால் தேவர்களைக் காத்து ஆட்கொண்டானோ, எவனுடைய மிக்க பலத்தைக் கண்டு ஆகாசமும் பூமியும் நடுங்கினவோ, பெரும் பலமுள்ள அவனன்றோ இந்திரன்! (நானல்ல)" என்பது கருத்து. இந்த மந்திரங்களுக்கு ஆதாரமான வேஷமாற்றம் மற்றும் பல வகையாகவும் வர்ணிக்கப்படுகிறது.

க்ருத்ஸமதர் தவ வலிமையினால் தம்மை இந்திரனாகவே ஆக்கிக்கொண்டு அவனது வடிவத்துடன் கம்பீரமாகக் காட்சியளித்தார். அப்போது, துநி, சுமுரி என்னும் இரண்டு அஸுரர்கள் ஆகாயத்திலும் பூமியிலும் அற்புதமாகக் காணப்படும் இந்திர வடிவத்தைக் கண்டு, கொல்லுவதற்காக ஓடி வந்தனர்.

அப்போது உண்மையை விளக்குவதற்காக ரிஷி இந்த ஸூக்தத்தால் இந்திரனுடைய பெருமைகளை வர்ணித்தார் என்பர்.

— ப்ருஹத்தேவதா, 4.66-68.

மற்றொரு விதம் : முன்னொரு காலத்தில் வைந்யன் என்னும் அரசன் ஸோமயாகம் செய்தான். இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம் அங்கே கூடினர். க்ருத்ஸமதரும் வந்திருந்தார். அஸுரர்கள் இந்திரனைக் கொல்வதற்காக அங்கு வந்து யாகசாலையைச் சூழ்ந்துகொண்டனர். இந்திரன் தப்பியோடுவதற்காக க்ருத்ஸமத ரிஷியின் வேஷத்தைப் போட்டுக்கொண்டு வெளியேறிவிட்டான். அஸுரர்கள் உண்மையை அறியாமல் அவனை விட்டுவிட்டனர். பிறகு வைந்யனால் நன்கு பூஜிக்கப்பெற்ற க்ருத்ஸமதர், தமது ஸ்வாபாவிகமான வேஷத்துடன் வெளிவந்தார். அஸுரர்கள் விழித்துக்கொண்டனர். இந்திரன் தான் இவ்வேஷத்தில் வெளியேறுகிறான் என்று எண்ணி நெருங்கினர். அப்போது உண்மையை எடுத்துரைத்தார் க்ருத்ஸமதர். அதுதான் இந்த ஸூக்தம் என்பதும் உண்டு. எப்படியானாலும் இவரது வேஷம் இந்திரனுக்கு அவ்வளவு இனியதாக இருந்தது என்பது மட்டும் உண்மை. வேறொரு ரிஷியின் வேஷத்தை அவன் போடவில்லையே!

ஆச்வலாயன ரிஷி, தமது ஸூத்திரத்தின் முடிவில், மறவாமல் தம் ஆசார்யரான சௌனகரை வணங்குகிறார். 'நம: சௌநகாய, நம: சௌநகாய' என்பதே அவரது ஸூத்திரங்களின் முடிவிலுள்ள வாக்கியம். அவர் மட்டுமின்றி, அதைப் படிப்பவர்கள், உபயோகிப்பவர்கள் அனைவரும் சௌனக மகரிஷியை இந்த வாக்கியத்தைச் சொல்வதன் மூலம் வணங்கும் வாய்ப்பு இன்றியமையாததாகிவிட்டது. ஸூத்திரங்களுடன் இந்த வாக்கியமும் ஒன்றி இணைந்தே உள்ளதல்லவா? உலகமெங்கும் வேதத்தை அத்யயனம் செய்பவர்களும், யாகங்களைச் செய்பவர்களும், ஆராய்ச்சியாளர்களும் சௌனக மகரிஷியைப் போற்றி வணங்குகின்றனர். நாமும் அவ்வாறே செய்வோம்.

नमः शौनकाय, नमः शौनकाय ।

# வைசம்பாயனர்

वासुदेवकथाप्रश्नः पुरुषांस्त्रीन् पुनाति हि ।
वक्तारं पृच्छकं श्रोतॄन् तत्पादसलिलं यथा ॥

வாஸுதேவகதாப்ரச்ந: புருஷாந் த்ரீந் புநாதி ஹி ।
வக்தாரம் ப்ருச்சகம் ச்ரோத்ரூந் தத்பாதஸலிலம் யதா ॥

'ஸ்ரீமந் நாராயணனுடைய கதையைச் சொல்லும்படி தகுதியுள்ளவர்களைக் கேட்பதனுல், கேட்டவரும் சொல்பவரும் புனிதமாவர். மேலும் அங்கே கூடியிருந்து இதைக் கேட்கும் அனைவரும் புனிதமாகிவிடுவர். இதே இயல்பு, அவ்வெம்பெருமானுடைய திருவடியிலிருந்து தோன்றிய கங்கா தீர்த்தத்துக்கும் உண்டு என்கிறது பாகவதம்.

ஸ்ரீசுகர் பரீக்ஷித்து மகாராஜனுக்கு உபதேசித்த ஸ்ரீபாகவத மகாபுராணத்தில் அவரே அருளிச்செய்தது இந்த ச்லோகம். இதன் கருத்து அன்றும் இன்றும் என்றும் நிலைநின்று உலகினருக்கு உண்மையை உணர்த்தும் வல்லமை வாய்ந்தது. ஸ்ரீஸூத பௌராணிகரும் சௌநகரும், ஸ்ரீசுகரும் பரீக்ஷித்து மகாராஜரும், கேட்பவரும் சொல்பவருமாக அமைந்து புராணங்களை விரிந்துரைத்தவாறுபோல அதே வழியில் ஈடுபாடுள்ள மற்றொரு ஜோடியும் உண்டு. வைசம்பாயன மகரிஷியும் ஜனமேஜய மகாராஜருமே அவ்விருவருமாவர். மகாபாரதம் என்றும், ஐந்தாம் வேதம் என்றும் போற்றப்பெறும் உலகிற் சிறந்த இதிஹாஸ ரத்தினம் இவ்விருவரால்தான் காப்பாற்றப்பட்டு வந்தது. வைசம்பாயனர் சொன்னவர். ஜனமேஜய மகாராஜர் கேட்டவர். மகாபாரதத்தைப் படிப்பவர்கள், அடிக்கடி 'வைசம்பாயந உவாச' என்னும் சொல் இடையில் வருவதை நன்கறிவர். "வைசம்பாயனர் சொன்னூர்" என்ற பொருளுள்ளது இந்த வாக்கியம். வைசம்பாயனர் ஜனமேஜயருக்குச் சொன்னதை உடனிருந்து கேட்ட ஸூத பௌராணிகர் சௌனகருக்கு கூறும் வார்த்தை இது.

பிரம்மாண்டமான இம் மகாபாரதத்தை ஒரு சிறிதும் பிறழாமல் அலுக்காமல் சலிக்காமல் எடுத்துரைத்த மகானுபாவரான வைசம்பாயன முனிவரை ஸூத பௌராணிகர் அடிக்கடி நினைத்து நினைத்து மனமுருகி அவருடைய பேராற்றலை எண்ணி வியந்து அவருக்கு அஞ்சலி செய்வதன் அடையாளமே இவ் வாக்கியம்.

மற்றொரு பயனும் ஸூத பௌராணிகருக்கு இவ் வாக்கியத்தை அடிக்கடி கூறுவதனால் இருந்திருக்கிறது. கதைகள் பல கிளைகளாகப் பிரிந்து, ஆரம்பித்த இடம் விட்டு வெகுதூரம் சென்றுவிடும். கதைப்போக்கின் ஸ்வாரஸ்யத்தில் கேட்பவர்கள் தம்மை மறந்து ஈடுபட்டிருப்பர். கதை சொல்லுகிறவர்தாம், கிளைக் கதைகள் பிரிந்து வந்த இடங்களை நினைவிற் கொண்டு சரியான இடத்துக்குத் திரும்பி வர வேண்டும். "அடியைப் பிடிடா பாரதபட்டா!" என்னும் பழமொழி இதையே உணர்த்தும். இல்லாவிட்டால் நடுக்காட்டில் வழி தப்பியவன் போல் திசை தெரியாமல் திகைத்துப் போக வேண்டியதுதான். "வைசம்பாயன உவாச" என்னும் சொல் ஸூத பௌராணிகருக்கு நல்ல வழிகாட்டியாகவே அமைந்துள்ளது. முக்கியமான திருப்பங்களில் இந்தச் சொல் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

## வ்யாஸ சிஷ்யர்

வேதவ்யாஸர் வேதங்களைப் பிரித்துப் பிரசாரம் செய்வதற்காக ஒவ்வொரு வேதத்துக்கும் ஒவ்வொரு முனிவரைத் தேர்ந்தெடுத்தார். அவர்களுள் வைசம்பாயனர் ஒருவர். யஜுர்வேதத்தைப் பிரவசனம் பண்ணுவதற்காக இவர் நியமிக்கப்பெற்றவர். இவ்வாறு வ்யாஸருடன் தோளோடு தோளாக நின்று வேதசாகாபேத வ்யவஸ்தையில் உரிய பங்கெடுத்துக்கொண்டு யஜுர்வேதத்தைக் காத்த பெருமை வைசம்பாயனருக்கு உண்டு. மேலும், வ்யாஸருடைய ஆஜ்ஞையின்பேரில், அவருடைய மேற்பார்வையிலேயே மகாபாரதக் கதையை ஜனமேஜயருக்கு எடுத்துச் சொல்லும் சிறந்த நல்வாய்ப்பு வைசம்பாயனருக்குத்தான் கிடைத்தது.

जनमेजयेन पृष्टः सन् ब्राह्मणैश्च सहस्रशः ।
शशास शिष्यमासीनं वैशम्पायनमन्तिके ॥
स सदस्यैस्समासीनं श्रावयामास भारतम् ।
कर्मान्तरेषु यज्ञस्य चोद्यमानः पुनः पुनः ॥

*ஜநமேஜயேந ப்ருஷ்டஸ் ஸந் ப்ராஹ்மணைச்ச ஸஹஸ்ரச: ।*
*சசாஸ சிஷ்யமாஸீநம் வைசம்பாயநமந்திகே ॥*
*ஸ ஸதஸ்யைஸ் ஸமாஸீநம் ச்ராவயாமாஸ பாரதம் ।*
*கர்மாந்தரேஷு யஜ்ஞஸ்ய சோத்யமாந: புந: புந: ॥*

— *மகாபாரதம், 1.1.57,58.*

ஜனமேஜயருடைய யாகத்தில் பெரும் திரளாக அறிவிற் சிறந்த முனிசிரேஷ்டர்களும் அந்தணர்களும் குழுமியிருந்தனர். தம் பாட்டனர்களாகிய பாண்டவர்களுடைய புனிதமான வரலாற்றை; யாக காரியங்களுக்கிடையில் அவ்வப்போது எடுத்துரைக்குமாறு ஜனமேஜயர் அங்கே தம் சிஷ்யர்களுடன் வந்திருந்த வேதவ்யாஸரை வணங்கி வேண்டிக்கொண்டார். அவர் இதைத் தாமே செய்திருக்க வேண்டியது. ஆனல் அப்படிச் செய்யாமல் அருகில் இருந்த தம் பிரிய சிஷ்யரான வைசம்பாயனரைச் சொல்லுமாறு பணித்துத் தாமும் உடனிருந்து கேட்டு மகிழ்ந்தார். மகாபாரதத்தின் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய வேதவ்யாஸர் அதை முறைப்படி, தம் சிஷ்யராகிய வைசம்பாயனருக்குக் கற்பித்துத் தமது முன்னிலையிலேயே பிரம்மாண்டமான அறிவாளிகள் கூட்டத்தில் அவரைக் கொண்டு அரங்கேற்றம் செய்து வைத்தார். ஆசார்யனே இவரைத் தேர்ந்தெடுத்ததனல் இவருடைய சொல்வன்மை நிகரற்றது என்பது தெளிவாகப் புலனுகிறது.

## ஜனமேஜயர்

வைசம்பாயனருடைய சொல்வன்மை இப்படி உலகுக்கு உபயோகமாக வெளியானதற்கு மூல காரணமானவர் ஜனமேஜய மகாராஜரே. இவர் பரீக்ஷித்து மகாராஜருடைய குமாரர்; மகாவீரனும் அபிமன்யுவினுடைய பேரர்; அர்ஜுனனுடைய கொள்பேரர். பரீக்ஷித்து மகாராஜர் அகால மரணமடைந்ததும் இவர் பட்டத்துக்கு வந்தார். காசிராஜனுடைய மகள் வபுஷ்டமா இவருடைய

பட்டமகிஷி. சதபதப்ராஹ்மணம், ஐதரேயப்ராஹ்மணம் முதலிய வேத நூல்களிலும் இவருடைய பெயர் இடம் பெற்றுள்ளது. ச்ருதஸேநர், உக்ரஸேநர், பீமஸேநர் என்னும் பெயருடைய மூன்று சகோதரர்கள் இவருக்கு உண்டு. இவருடைய தாய் மாத்ரவதீ என்று அழைக்கப்பட்டாள்.

## யாகப் பெயர்

ஜனமேஜய மகாராஜர் எப்போதும் யாகங்களை ஒன்றன்பின் ஒன்றாக அநுஷ்டித்துக்கொண்டே இருந்தார். குருக்ஷேத்திரத்தில் இவர் 'தீர்க ஸத்ரம்' என்னும் யாகம் பண்ணிக்கொண்டிருக்கையில், ஒரு நாய் அங்கு வந்தது. இவருடைய சகோதரர்கள் அதை நன்றாக அடித்துவிட்டனர். அது அடி தாங்க முடியாமல் கதறிக் கொண்டே தன் தாயிடம் ஓடியது. "யாகத்தில் எவ்விதமான அசுத்தமும் செய்யாமல் ஒதுங்கி நிற்கையில் அநியாயமாக என்னை அடித்துவிட்டனர்" என்று சொல்லிப் புலம்பியது. உடனே நாயின் தாய் யாகசாலைக்கு வந்து ஜனமேஜயரிடம் முறையிட்டது. நீதி கிடைக்கவில்லை. "அநியாயமாக என் சிசுவை அடித்த உன்னைப் பயம் வந்து அடையும்" என்று சபித்து விட்டுச் சென்றுவிட்டது அது.

மகாராஜாவாக இருந்தால் என்ன? மகரிஷியாகத்தான் இருந்தால் என்ன? நியாயமான சாபத்தை ஏற்றுத்தான் ஆகவேண்டும். அப்படிப்பட்ட காலம் அது. ஜனமேஜயர் பெரும் பீதி அடைந்தார். தக்ஷசிலா என்னும் நகரத்தைத் தம் வசப்படுத்தித் தக்க ரித்விக்குகளைக் கொண்டு, இந்தப் பாவம் தொலையும்படி நல்ல யாகங்களைப் பண்ண ஏற்பாடு செய்தார்.

## ஸர்ப்ப ஸத்ரம்

உதங்கர் என்னும் முனிவர் அப்போது ஜனமேஜயரைத் தேடி வந்தார். தன் சொந்த விஷயமொன்றில் தக்ஷகன் என்னும் ஸர்ப்பம் அவரைப் பெரும்பாடு படுத்தி வைத்து விட்டது. எப்படி எப்படியோ கஷ்டங்கள் பட்டு அந்தச் சங்கடத்தைத் தீர்த்துக்கொண்டு விட்டார் அவர். ஆனால் தக்ஷகன் பேரில் தீராக் கோபம் கொண்டிருந்தார். சரியானபடி வஞ்சம் தீர்த்துக்கொள்வதற்குத் துடித்துக் கொண்டிருந்தார். ஜனமேஜயர்தாம் அவருடைய குறிக்கோளாக

இருந்தார். எப்பொழுதும் ஒன்றன்பின் ஒன்றாக யாகங்களையே இடையறாமல் பண்ணிக்கொண்டிருந்த ஜனமேஜயர் உதங்கருடைய மனத்தைக் கவர்ந்தார். 'தக்ஷகனைக் கொல்லும்படியான யாகமொன்றை இவர் ஏன் செய்யவில்லை? இவருடைய அருமைத் தந்தையைக் கடித்துக்கொன்ற கொடும்பாதகன் அல்லவா தக்ஷகன்? இதை இவர் எண்ணிப் பாராமலே என்ன என்னவோ யாகங்களைச் செய்துகொண்டிருக்கிறார்! சக்தியுள்ளவர் குற்றவாளியைத் தண்டிக்க வேண்டாமா? இது உதங்கருடைய உள்ளக் கிடக்கை.

ஜனமேஜய மகாராஜரை அணுகி அவரையே நேரில் கேட்டுவிட்டார் உதங்க முனிவர். தக்ஷசிலா என்னும் நகரில் பிரம்மாண்டமான ஸர்ப்ப ஸத்ரம் என்னும் யாகத்தைத் திட்டமிட்டுத் தொடங்கினார் ஜனமேஜயர். பிடித்தது பாம்புகளைச் சனியன். கூட்டங் கூட்டமாக உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் பதுங்கிக் கொண்டிருந்த பாம்புகள் அனைத்தும் மந்திரசக்தியால் இழுத்து வரப்பட்டு வேள்வித்தீயில் விழுந்து பொசுங்கிப் போயின. ஒருவன் செய்த கொடிய தீவினையின் பயனை உலகமே பகிர்ந்துகொண்டு அநுபவித்த கதையாயிற்று இது. தக்ஷகன் என்னும் பாம்பு ஒன்றின்மேல் கோபத்தினால் உலகிலுள்ள பாம்பு இனமே செத்து மடிந்து போகுமாறு செய்ய ஆரம்பித்துவிட்டனர்.

## தக்ஷகன் தப்பியது

மாபெரும் பாதுகாப்பில் இருந்த பரீக்ஷித்து மகாராஜரை வஞ்சித்துத் திட்டமிட்ட காலத்தில் தவறாமல் கடித்துக் கொன்றுவிட்டு ஆகாய மார்க்கமாய்த் தப்பி ஓடிவிட்டான் தக்ஷகன். அப்படியே மகாஸமர்த்தரும் ஆசார்ய பக்தி மிக்கவருமான உதங்க முனிவரைப் படாத பாடு படுத்தித் தப்பித்துக் கொண்டான். இந்த ஜனமேஜயரை ஏமாற்றத் தெரியாதா என்ன அவனுக்கு? பெரும் பிரச்னையைக் கிளப்பிவிட்டான் அவன். ரிஷிசாபம் நிறைவேறுவதற்காக ஒரு காரியம் செய்ததில் தான் குற்றவாளியல்ல என்ற வாதத்தைக் கிளப்பினான். அதனால் இந்த ஸர்ப்ப யாகத்தில் தான் விழுந்து சாகக்கூடாது என்று தேவர்களிடம் தன் பக்ஷத்தை

எடுத்துக் கூறினான். மூவுலகுக்கும் அதிபதியான தேவேந்திரனுடைய கட்டில் காலில் போய்ப் பத்திரமாய்ச் சுற்றிக்கொண்டான்.

மந்திரசக்தி யாகபூமியை நோக்கித் தக்ஷகனை இழுக்க அது கட்டிற்காலை விடாமல் சுற்றிக்கொண்டு கட்டிலை இழுக்க, கட்டில் இந்திரனையே இழுக்க, வேள்வித் தீக்கு இரையாக வேண்டிய நிலையில் இந்திரனையே கொண்டு வந்து நிறுத்தி விட்டான் அவன். உலக நிர்வாகிகள் அனைவரும் ஒன்றுகூடி ஆலோசித்தனர். இந்திரனை விட்டு விலக மாட்டேன் என்கிறான் தக்ஷகன். அவன் நெருப்பில் விழும்வரை யாகத்தை முடிக்க மாட்டேன் என்கிறார் உதங்கர். ஆஸ்திக முனிவர் ஒருவாறாக மத்தியஸ்தம் பண்ணி நிலைமையைச் சரிப்படுத்தினார். தக்ஷகன் சாகாமல் தப்பினான்.

अपसर्प महासर्प दूरं गच्छ महायशः ।
जनमेजययज्ञान्ते आस्तिकस्य वचः स्मरन् ॥

*அபஸர்ப்ப மஹாஸர்ப்ப தூரம் கச்ச மஹாயச: ।*
*ஜநமேஜயயஜ்ஞாந்தே ஆஸ்திகஸ்ய வச: ஸ்மரந் ॥*

— மகாபாரதம், 1.58.25.

என்னும் மந்திரம் தோன்றியது. இதன் பயனாக, விஷப்பாம்புகளைக் கண்டவர்கள் உடனே தைரியமாக இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும். இதைக் கேட்டவுடன் பாம்பு அவர்களைக் கடிக்காமல் விலகி ஓடிவிடும். இப்படி ஓர் உடன்பாடு இந்த ச்லோகத்தை ஆதாரமாகக் கொண்டு தோற்றுவிக்கப்பட்டது.

### யாகத்தின் பயன்

ஆஸ்திகர் என்பவர் பாம்புகளின் மருமகன். வாஸுகியின் உடன்பிறந்தவளாகிய ஜரத்காரு என்பவளுக்கும் அதே பெயருள்ள முனிவருக்கும் பிறந்தவர். வாஸுகி முதலிய பாம்புகள் ஜனமேஜயருடைய ஸர்ப்ப ஸத்ரத்தைக் கண்டு நடுங்கி, ஆஸ்திகரை அணுகி எப்படியாவது இந்த யாகத்தை நிறுத்திவிடும்படி வேண்டின. அவர் வெகு சாமர்த்தியமாக ஜனமேஜயருடைய யாகசாலையில் புகுந்து, தக்க தருணத்தில் யாகத்தை நிறுத்தினார். தம் மாமன்மாராகிய வாஸுகி முதலிய ஸர்ப்பங்களை அணுகி,

விஷயத்தைச் சொன்னார். ஸர்ப்ப சிரேஷ்டர்களுக்கு மட்டில்லாத மகிழ்ச்சி. "உனக்கு என்ன வரம் வேண்டுமானாலும் கேள், தருகிறோம்" என்றனர். "பாம்புகளால் கடிக்கப்பட்டு மக்கள் அநியாயமாக மாண்டு போவதைத் தடுப்பதற்காகவே இந்த ஸத்ரம் தொடங்கியது. அது அரைகுறையாக நின்றுவிட்டபடியால் இவ் வரலாற்றைச் சொல்பவர்களையும் கேட்பவர்களையும் பாம்புகள் கடிக்கக்கூடாது என்று ஒரு புது ஏற்பாடு அநுஷ்டானத்தில் வர வேண்டும். இதுவே எனக்கு வேண்டிய வரம்" என்றார் ஆஸ்திகர் அவ்வாறே வரம் அருளப்பட்டது.

जरत्कारोर्जरत्कार्वां समुत्पन्नो महायशाः ।
आस्तिकस्सत्यसन्धो मां पन्नगेभ्योऽभिरक्षतु ॥

ஜரத்காரோர் ஜரத்கார்வாம் ஸமுத்பந்நோ மஹாயசா: ।
ஆஸ்திகஸ் ஸத்யஸந்தோ மாம் பந்நகேப்யோபிரக்ஷது ॥

— மகாபாரதம், 1.53.22.

என்று ஒரு மந்திரம் தோன்றியது. இதைச் சொல்பவர்களைப் பாம்புகள் கடித்துக் கொல்லாமல் இருக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்து கொள்ளப்பட்டது. ஜனமேஜயருடைய ஸர்ப்ப யாகத்தின் பயன் இதுதான்.

## ஞான ஒளி

ஜனமேஜயருடைய ஸர்ப்ப யாகம் மக்களுக்கு மிகமிக அவசியமான மற்றொரு பயனையும் தோற்றுவித்தது. அதுதான் மகாபாரதம்.

जडान्धबधिरोन्मत्तं तमोभूतं जगद् भवेत् ।
यदि ज्ञानहुताशेन त्वया नोज्ज्वलितं भवेत् ॥

ஜடாந்தபதிரோந்மத்தம் தமோபூதம் ஜகத் பவேத் ।
யதி ஜ்ஞாநஹுதாசேந த்வயா நோஜ்வலிதம் பவேத் ॥

— மகாபாரதம், 1.1.99.

வ்யாஸரைப் பார்த்துப் பிரம்மா இவ்வாறு சொல்கிறார். "மூடர் குருடர் செவிடர் பைத்தியங்கள் இவ்வகையினர்தாம் இவ்வுலகில் இருந்திருப்பர்; இருள் சூழ்ந்துவிட்டிருக்கும்; வியாஸரே, உம்மால்

ஞான ஒளி (மகாபாரதம்), சுடர் விட்டெரியும்படி செய்யப்பட்டதனுல் இந்த அபாயம் தவிர்க்கப்பட்டது" என்பது கருத்து. கலியுகம் தோன்றிய பிறகு ஆயிரம் வருஷங்கள் ஜனமேஜய மகாராஜர் ஜீவித்து ஆட்சி நடத்தியிருக்கிறுர். அவ்வளவு காலத்திலும் இந்தப் புனிதமான இதிகாஸத்தை இடையருமல், யாக காரியங்களின் மத்தியில் வைசம்பாயனரைக் கொண்டு சொல்லச்செய்து கோடிக்கணக்கான மக்களுக்கு ஞான ஒளி வீசுமாறு செய்திருக்கிறுர். அவருடைய நற்பணியின் பயனே இன்று மகாபாரதம் நமக்குக் கிடைத்திருக்கிறது.

## சரியான பெயர்

வைசம்பாயனர் ஜனமேஜயர் என்ற இரண்டு பெயர்களும் மிக மிகப் பொருத்தமாகவே வைக்கப்பட்டிருக்கின்றன. முதற் பெயர் குல பரம்பரையை அடிப்படையாகக் கொண்டது. இரண்டாவது காரணப் பெயர். ஆனுல் இவ்விரண்டும் அவர்களுடைய பெற்ருேர்களால் பிறந்தவுடன் பதிஞேறாம் நாளில் இடப்பட்ட பெயர்கள்தாம். இதில் வைசம்பாயனருக்கும் குடிப்பெயரையே ஆதாரமாகக் கொண்டதல்லாத வேருெரு பெயர் இருந்திருக்க வேண்டும் என்பது எமது ஊகம். இவருடைய பேராற்றலைக் கண்டு ஆழங்காற்பட்ட அக்காலத்திய முனிவர்களும் மற்றவர்களும் தனிப் பெயரை மறந்து குடிப் பெயரையே வழக்கத்தில் கொண்டு வந்து விட்டனர்போலும். அதனுல் அது மறைந்தே போய்விட்டது. விசம் + ப: = விசம்ப:. இந்தப் பெயருள்ள ஒரு மஹான் இருந்தார். 'மக்களைக் காப்பாற்றுகிறவர்' என்பது இந்தப் பெயரின் பொருள். இங்கு மக்கள் என்பது தம் சொந்தமான பிள்ளை பேரன் இவர்களை உணர்த்துவதாகாது; நாட்டு மக்கள் அனைவரையுமே கூறும். நாட்டு மக்களின் க்ஷேமத்துக்காகவே தமது ஆயுட்காலமெல்லாம் உழைத்து அதிலேயே பேரின்ப மெய்திய இந்த மகாபுருஷர்தாம் வைசம்பாயனருடைய குலமுதல்வர். அவருடைய வழித் தோன்றலாகிய இவரும் தம் மூலபுருஷர் போலவே நாட்டின் க்ஷேமத்தையே கருத்தில்கொண்டு ஈடு இணையற்ற சேவைகளிலேயே தமது ஆயுள் காலம் முழுவதையும் செலவிட்டதனுல் 'வைசம்பாயனர்' என்று வழங்கப்பட்டார்.

வைசம்பாயனர் மகாபாரதத்தை மனத்தில் தேக்கி வைத்துக்கொண்டு தமது அமுதவாக்கினுல் உலகுக்குச் சாச்வதமான அணையாத ஞானஒளியை வீசினுர். யஜுர்வேதத்தைக் காக்கும் பொறுப்பை வேதவ்யாஸரிடம் ஏற்றுக்கொண்டு அதைச் சிறப்பாக நிறைவேற்றினுர். பல்லாயிரக் கணக்கான முனிவர்களிடையே இவரையே வியாஸர் தேர்ந்தெடுத்தது இவருடைய பேராற்றலை வெளியிடுகிறது.

இது போலவே ஜனமேஜயரும் பொருத்தமான பெயர் பெற்றிருக்கிறுர். ஜநம் + ஏஜய: = ஜநமேஜய:. ஜநம்-ஜனங்களை (தவறு செய்த ஜனங்களை), ஏஜய: - நடுங்க வைப்பவர். அயோக்கியர்களுக்குக் குலைநடுக்கம் எடுக்கும்படி கண்டிப்பான நடவடிக்கை எடுப்பவர் என்பது திரண்ட பொருள்.

ஜனமேஜயருடைய தந்தையாகிய பரீக்ஷித்து மகாராஜர் அறுபது ஆண்டுகளே பிழைத்திருந்தார். ஆனுல் ஜனமேஜயர் ஆயிரம் ஆண்டுகள் தம் பெயருக்குப் பொருத்தமான முறையில் நாட்டை ஆண்டு வந்திருக்கிறுர். இவரது பிதாவின் அகால மரணத்துக்குக் காரணமான தக்ஷகன் என்னும் பாம்பும், வாஸுகி முதலிய மற்ற ஸர்ப்பராஜனுகிய பாம்புகளும் இவருடைய ஸர்ப்ப ஸத்ரத்தின்போது நடுங்கியது ஒன்றே போதுமே. அம்மட்டோ? அயோக்கியனுகிய தக்ஷகனுக்கு ஆர அமர ஆலோசிக்காமல் அபயமளித்த தேவேந்திரன்கூட அல்லவா அப்போது முன்பின் கண்டும் கேட்டும் இராத வகையில் நடுங்கிக்கொண்டே யாகாக்கினியின் மேல் வந்து விழ வேண்டியிருந்தது! பாவம்! தன் மேல் வேஷ்டியில் மறைத்து வைத்துக்கொண்டிருந்தாலும் அந்தப் பாம்பை இந்திரன். அதை உதறிவிட்டுத் தப்பியோடிவிட்டான் தேவலோகத்திற்கு. அப்போது ஜனமேஜயர் சொன்ன வார்த்தை —

इन्द्रस्य भवने नागो यदि विप्राः स तक्षकः ।
तमिन्द्रेणैव सहितं पातयध्वं विभावसौ ।
न त्यजेद् यदि तं चेन्द्रः सनागं तक्षकं तथा ॥

இந்த்ரஸ்ய பவநே நாகோ யதி விப்ரா: ஸ தக்ஷக: ।
தமிந்த்ரேணைவ ஸஹிதம் பாதயத்வம் விபாவஸௌ ।
ந த்யஜேத் யதி தம் சேந்த்ர: ஸநாகம் தக்ஷகம் ததா ॥

என்பதாம். "தக்ஷகன் இந்திரனுடைய மாளிகையில் ஒளிந்துகொண்டிருந்தால், இந்திரன் அந்தப் பாம்பைக் காட்டிக் கொடுக்காமல் காப்பாற்ற எண்ணினால், (யாக காரியங்களைச் செய்யும்) அந்தணர்களே! இந்திரனுடனேயே அந்தப் பாம்பை இந்த யாகாக்கினியில் இழுத்துத் தள்ளுங்கள்" என்பது கருத்து. இதைக் கேட்டவுடன் அதற்கு ஏற்ற மந்திரங்கள் உச்சரிக்கப்பட்டன. இந்திரனும் மந்திர சக்தியால் இழுக்கப்பட்டான். வாய்பேசாமல் பாம்பைப் போட்டுவிட்டு ஓடினான். இவை போன்ற அரிய நிகழ்ச்சிகள் எத்தனையோ இவருடைய வாழ்நாளில் நடந்திருக்கும். அவற்றை 'ஜனமேஜயர்' என்னும் பெயர் மூலமாகவே நாம் ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்.

ஜனமேஜயர் ஆயிரம் வருஷங்கள் அரசாண்டுவிட்டுக் காலகதியடைந்ததாகத் தெரிகிறது. ஆனால் வைசம்பாயனர்? அவர் இன்றும் ஜீவித்திருக்கக்கூடும், தம் ஆசார்யரான வேதவ்யாஸருடன், எந்த இடத்தில்? அதுதான் தெரியவில்லை. இக்கால உலகப்போக்கு, தங்களுக்குத் திருப்திகரமாக இல்லாமையால், எங்காவது மனுஷ்ய ஸஞ்சாரமற்ற காடுகளின் மத்தியில் தவத்தில் ஆழ்ந்திருக்கக்கூடும். அல்லது காசி காஞ்சி மதுரை போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களில் தமது திரஸ்கரிணீ வித்யையால் (யாராலும் காண முடியாதவாறு, மக்கள் வாழும் இடங்களிலேயே யோகமகிமையால் இருப்பது) பகவானைத் தியானம் பண்ணிக்கொண்டு உலகத்தின் க்ஷேமத்துக்காகத் திட்டங்கள் புனைந்துகொண்டிருக்கலாம். அல்லது தமது வடிவத்தையும் பெயரையும் மாற்றிக்கொண்டு, நாகரிக வாசனையே இல்லாத குக்கிராமங்களில் ஸகல விதமான கஷ்டங்களையும் அநுபவித்துக்கொண்டு, பக்தி சிரத்தையுடன் தம்மை நாடும் சீடர்களுக்கு ஜ்ஞான அநுஷ்டானங்களை உபதேசித்துக் கொண்டு இக்காலத்துப் பெரியோர்களாகவும் இருந்து வரக்கூடும். மூன்றும் வகையே சரி என்பது அடியேனுடைய ஊகம்.

# த்ரஸதஸ்யு

சடமர்ஷண கோத்ரம் மூன்று "ப்ரவர" ரிஷிகளையுடையது. (1) அங்கிரஸ் (2) புருகுத்ஸர் (3) த்ரஸதஸ்யு என்பன அவர்களின் பெயர்கள். இந்தப் பெயர்களின்மேல், இவர்களது "வழித்தோன்றல்கள்" என்பதையுணர்த்தும் "தத்தித" ப்ரத்யயம் வைத்தால் இச்சொற்கள் முறையே - "ஆங்கிரஸ-பௌருகுத்ஸ்ய-த்ராஸதஸ்யவ" என்று விரிவடையும். இந்த கோத்ரக்காரர்கள் இந்தப்ரவரத்தை அனுதினமும் பல முறைகள் சொல்லித் தங்களது புனிதமான பிறவிப் பெருமையை எண்ணி எண்ணி மகிழ்வெய்துவர்.

இந்த மகரிஷிகள் மூவரைத்தவிர, இதே கோத்ரத்தில் பிற்காலத்தில் உலகப் புகழ் பெற்ற மகரிஷிகள் பலரும் தோன்றியிருக்கின்றனர். ப்ரவரத்தில் மூன்று பேரையே உச்சரிக்கும் வழக்கத்தையனுஸரித்து ஏனையோர்கள் சேர்க்கப்படவில்லை. அப்படிப்பட்டவர்களில் ஒருவரே "சடமர்ஷணர்" என்பவர். இவரது புனிதமான பெயர் இந்த கோத்ரத்துக்கே இடப்பட்டுள்ளது. ப்ரவரத்தில் இடம் பெறாத ரிஷிகளின் பெயரால் கோத்ரம் வழங்கப்படுவது நமக்குப் புதிதல்ல. ஸ்ரீவத்ஸகோத்ரமும் இப்படியேதானே வழங்குகிறது! ப்ரவரத்தில் வரும் ரிஷிகளில் ஒருவரது பெயரால் கோத்ரம் வழங்குவதும் ஸஹஜமாக உள்ளதுதான். இதனால் ஒன்றும் குறையில்லை.

**சடமர்ஷணர்**

எவ்வளவு அர்த்தபுஷ்டியுள்ள பெயர்! இது ஒரு வகையான காரணப்பெயராம் (யௌகிகம்). சடம் - மர்ஷணர் - என்னும் இரண்டு சொற்களாலானது. "சடம்" என்பது ஒருவகையான காற்றிற்குப் பெயர். "மர்ஷணர்" என்றால் "விரட்டியடிப்பவர்" என்று பொருள். சடம் எனப்படும் வாயுவை விரட்டியடித்து விட்டாராம் இவர்தனது பிறவியின் பொழுதே. அதனால் இவருக்கு அதுவே பெயராக வைக்கப்பட்டுவிட்டது. ஸ்ரீவைஷ்ணவாசார்யகளுள் முதன்மையான நம்மாழ்வாருக்கும் இதுவே பெயர். அவரும் இதேபோல் செய்தவர்.

இதே பெயர் சடாரி – சடஜித் – சடகோபன் – சடமதனன் – சடரிபு – சடவைரி – என்றிப்படியெல்லாம் வழங்குவது கண்கூடு. எல்லாச் சொற்களுக்கும் பொருள் ஒன்றே.

ருசிகரமான இவ்விஷயத்தைச் சிறிது விவரிப்போமிங்கு. பரந்த இவ்வுலகில் கோடிக்கணக்கான ஜீவராசிகள் தாயின் கர்பத்தில் வாஸம் செய்து உரிய காலத்தில் தாயின் உடம்பிலிருந்து வெளியேறி உலக வாழ்க்கையில் தோய்ந்து வருகின்றன. கர்பத்தில் வாஸம் செய்யும் காலம் ஒருவகையானது. பிறவிக்குப் பிற்பட்டகாலம் அதற்கு நேர் விபரீதமானது. கர்பத்தில் வஸிக்கும் சிசுவுக்குத் தனது, முற்பிறவிகள் பலவும் இனி வரப் போகும் பிறவிகள் பலவும் வெகு நன்றாகத் தெரியும். அது "ஸ்ரவஜ்ஞன்" இதிஹாஸ புராணங்களும் உபநிஷதங்களும் இவ்விஷயத்தை எடுத்துரைக்கின்றன. கர்பத்திலுள்ள சிசுவுக்குத் தாயின் வயிற்றினுள் இயற்கையின் கட்டளைப்படி ஸகலவிதமான சௌகர்யங்களும் கிடைக்கின்றன. அதன் மூலம் அது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது. இது தவிர்க்க முடியாததொன்று. அதே சமயத்தில் அதன் மனதில் மாபெரும் போராட்டம் நடந்து வருகிறது. "இருள்தரு மாஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்" என்கிற ஆழ்வார் பாசுரத்தில் உள்ள கருத்தே அதன் மனத்தில் குடிகொண்டிருக்கிறது. ஏற்கெனவே எத்தனை தரம் பிறந்து செத்தாயிற்று? ஒவ்வொரு பிறவியிலும் வெவ்வேறு தாய் தந்தையர் உற்றுருறவினர்கள். இனியும் இதே சுழற்சியா?

"पुनरपिमरणं पुनरपि जननं पुनरपि जननीजठरे शयनम्"

வேண்டாம்! வேண்டாம்!! வேண்டவே வேண்டாம்!!! என்று குமுறுகிறது அது.

இனி என்ன செய்வது. கர்பகோசத்தில் சிக்கிக் கொண்டாகி விட்டதே! உரிய காலத்தில் பிரஸவமும் ஆகிவிடுமே? இந்த அழுக் குடம்பென்னும் கொடிய வலிய சிறையிலிருந்து தப்ப முடியாதே? இதிலிருந்து ஒரேயடியாக விடுபட்டு ஆத்மானந்தத்தில் திளைப்பதெங்ஙனம்? "மாசூணுச்சுடருடம்பாய் மலராது குவியாது" என்னும்படியான நிலையை எட்டிப்பிடிப்பதெங்ஙனம்? சிசுவின் மனத்தில் இதே கவலை.

"சேற்றில்தானே செந்தாமரை பூக்கும்? இந்த இழிவான உடம்பினுள் இருந்து கொண்டுதானே இடையறாது பகவத் த்யானம் செய்து ஆயிரக்கணக்கான மகரிஷிகள் மோக்ஷத்தையடைந்தனர்? பிறந்தபின் நானும் அவ்வழியிலேயே செல்வேன். லௌகிகமான ஸுகங்களில் சிறிதும் ஈடுபடமாட்டேன். இப்பிறவியே எனக்குக் கடைசிப் பிறவி" என்றிவ்வாறெல்லாம் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறது கர்பத்திலுள்ள சிசு.

பிரஸவ காலம் நெருங்கிவிட்டது. தாயின் முயற்சி-சிசுவின் முயற்சி-இறைவனின் திருவருள்-அவரவரின் விதிப்பயன். உடம்பினுள் இயற்கையின் கட்டளைப்படி "தவறாமல்" வேலை செய்யும் சக்திகள் ......, எல்லாம் ஒன்று திரண்டு க்ஷேமமாய் பிரஸவம் ஆகிவிடுகிறது. அனைவருக்கும் மனம் 'நிம்மதி' யடைகின்றது.

ஆனால்? பிறந்த சிசுவின் மனக்கோட்டைகள் என்னவாயின? அதெல்லாம் தகர்ந்து போய்விட்டது. "बभूव प्राकृतः शिशुः" என்கிறபடி சாதாரணமான குழந்தையாக அது மாறிவிட்டது. அதன் 'ஜ்ஞான' மெல்லாம் பறந்தோடி விட்டது! தாயின் பாலுக்காக அழுது அதைக்குடித்து "ஆனந்த"மாக வாழ்கிறது. தாய்ப்பாலொன்று தான் ஸ்வர்கலோகம் அதற்கு. இது விபரீதமான மாறுதலேயல்லவா? இந்த (ஏ)மாற்றம் எப்படி வந்தது? "சடம்" எனப்படும் ஒரு வகைக் காற்று தான் இதற்குக் காரணம். பிராணிகளின் மனநிலையில் பெரும் மாறுதலை உண்டு பண்ணிவிடும் இது. புத்தி மழுங்கிவிடும். புதிதாகப் பிறந்த சிசுவின் உடம்பை இது சூழ்ந்து கொண்டு அழுத்தும். அதே நிமிஷத்தில் குழந்தையின் மனத்தில் ஒளிவீசிக் கொண்டிருந்த ஞானச்சுடர் மறைந்துவிடும். தத்துவஜ்ஞானமெல்லாம் பறந்தோடி விடும். இந்த வாயுவின் சக்தி அபாரமானது. அதை யாராலும் தடுக்க முடியாது. கர்பத்தில் ஸர்வஜ்ஞனாக இருந்த சிசுவின் எண்ணத்தில் மண் விழுந்தது இந்த வாயுவின் ஸம்பந்தத்தினால்தான். விதிவிலக்கே இல்லாத இந்த வாயுவை நீண்ட சரித்திர காலத்தில் மூன்று பேர்தான் வெற்றி கண்டவர்கள். விஷ்ணு புராணத்தில் வரும் ஜடபரதர், சடமர்ஷணர், நம்மாழ்வார். இவர்களே அம்மூவர். மற்றும் பலரும் இருந்திருக்கக்கூடும். ஆனால்? நமக்குத் தெரியவில்லை.

ஜடபரதர் குழந்தையாகப் பிறந்தவுடன் இந்த வாயு அவரது உடம்பையும் அழுத்த முயன்றிருக்கிறது. அவர் அதை விரட்டி விட்டார். கர்பத்தினுள் இருந்த தத்துவஜ்ஞானம் சிறிதும் மழுங்காமல்

பிறந்த பின்பும் அவருக்குத் தொடர்ந்து வந்து விட்டது. அதனால் ஊண்-உறக்கம் முதலியவை ஒன்றும் இல்லாமலே உலகத்தில் திரிந்துகொண்டிருந்து, தனது யோகம் பூர்த்தியானவுடன் இவ்வுடலைவிட்டு ஆத்மானந்தத்தை எட்டிப்பிடித்து விட்டார். "பரதர்" என்பதே இவருக்குத் தாய் தந்தையர் வைத்த பெயர். "முட்டாள்" என்னும் பொருளுள்ள "ஜட" என்னும் பகுதி நாட்டாரால் பிறகு சேர்க்கப்பட்டது. நாட்டாரின் கண்ணில் இவர் முட்டாளாகவேதானே தோன்றினார்?

இரண்டாமவர் "சடமர்ஷணர்". இவரும் பிறந்தவுடனே தன்னை அழுத்தவந்த "சடம்" என்னும் கொடிய வாயுவை விரட்டியடித்து விட்டார். கர்பத்தில் இருந்த தத்துவஜ்ஞானம் மழுங்காத நிலையிலேயே பிறந்த பின்பும் இருந்தார். அதனால்தான் இவருக்கு இந்தப்பெயர் இடப்பட்டது.

மூன்றாவது நம்மாழ்வார். இவரும் "சடம்" என்னும் கொடிய வாயு தன்னைச் சூழ்ந்துகொள்ள முடியாதவாறு அதை விரட்டிவிட்டார். உலக வியற்கைக்கு மாறாகவே 36-வருஷகாலம் ஜீவித்திருந்து தனது ஆயுளை முடித்துக்கொண்டார். அதனால் இவருக்கு "மாறன் சடகோபன்" என்னும் பெயர் வழங்கியது.

यन्मुहूर्तं क्षणं वापि वासुदेवो न चिन्त्यते ।
सा हानिस्तन्महच्छिद्रं सा भ्रान्तिः सा च विक्रिया ॥

யன்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே ।
ஸா ஹானிஸ்தன்மஹச்சித்ரம் ஸா ப்ரான்தி: ஸா ச விக்ரியா ॥

என்னும்படி இவர்கள் எம்பெருமானைத் தனது ஜீவித காலத்தில் ஒரு நொடிப்பொழுதும் மறந்ததில்லை. அந்தப்ரம்மானந்தத்தில் தோய்ந்திருந்ததனாலேயே லௌகிகமான ஸுகங்களெல்லாம் இவர்கள் மனதில் "அற்ப" மாகவே தோன்றின. இந்நிலையையே,

तवामृतस्यन्दिनिपादपङ्कजे निवेशितात्मा कथमन्यदिच्छति ।
स्थितोऽरविन्दे मकरन्दनिर्भरे मधुव्रतो नेक्षुरकं हि वीक्षते ॥

தவாம்ருதஸ்யந்திநிபாதபங்கஜே
நிவேசிதாத்மா கதமன்யதிச்சதி ।
ஸ்திதோரவிந்தே மகரந்தநிர்பரே
மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥

என்னும் ச்லோகத்தால் ஸ்ரீ ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் விளக்கிக் கூறுகிறார்.

"சடத்தை" வென்றவர்களான இவர்கள் ஸம்ஸார தசையிலேயே ப்ரம்மஜ்ஞானம் கைவந்த மஹான்கள். இவர்களுக்கு மனைவிமக்கள் முதலான பாசமேதுமில்லை. இந்நிலைமைக்கு இந்த கோத்ரப்ரவர்த்தகரான சடமர்ஷணர் மட்டும் விலக்கு.

இவருக்கு மனைவிமாரும் அளவிட முடியாத எண்ணுள்ள ஸந்ததியுமுண்டு. காரணம்? இக்கட்டுரையிலேயே ப்ரவர ரிஷிகளின் சரித்திரத்தை விளக்குமிடத்தில் கூறுவோம்.

இந்த கோத்ரப்ரவர ரிஷிகளின் வரலாற்றை ஈண்டு விளக்குவோம். இவர்களில் முதன்மையானவர் 'அங்கிரஸ்'. இவருடைய வரலாறு ஸகல வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் பரவலாகப் பேசப்பட்டுள்ளது. இந்த சடமர்ஷண கோத்ரத்து ப்ரவரத்தில் மட்டுமல்லாமல் மற்றும் பல கோத்ரங்களின் பரவரத்திலும் இவர் தோன்றுகிறார். இவருடைய பெருமை இதே நூலில் "அங்கிரஸ்" என்னும் தலைப்புடன் தனியாக அச்சிடப்பட்டுள்ளது. அங்கே காணலாம்.

நான்முகனுடைய முகத்திலிருந்து தோன்றிய இவர், கர்தமப்ரஜாபதியின் திருமகளான "ச்ரத்தா" தேவியை ஸஹதர்மசாரிணியாக ஏற்றார். தேவகுருவான ப்ருஹஸ்பதியும், அவருக்கும் மூத்தவரான உசத்யரும் இவருடைய திருக்குமாரர்களே. இவருடைய வழித்தோன்றல்களுள் ஒருவரே புருகுத்ஸ முனிவர். இவருடைய சரித்திரமும் இந்நூலிலேயே "குத்ஸர்" என்னும் தலையங்கத்துடன் தனியாக அச்சிடப்பட்டுள்ளது.

## த்ரஸதஸ்யு

புருகுத்ஸதருடைய திருக்குமாரர் தரஸதஸ்யு முனிவர். சடமர்ஷண கோத்ர ப்ரவர ரிஷிகளில் மூன்றுமவர். இவருடைய பெயரே இவர் பெருமையை உணர்த்தவல்லது. த்ரஸ–தஸ்ய என்று இரண்டு சொற்களாலானது இந்தப் பெயர். இதுவும் காரணப்பெயரே, அதாவது யௌகிகமே.

"தஸ்யு" என்னும் சொல் வேதங்களில் பரவலாகக் காணப்படுகிறது. "திருடர்கள், துஷ்டர்கள், ரௌடிகள்" என்பது

போன்ற பொருள் இந்தச் சொல்லுக்கு இருப்பதாக உரைகாரர்கள் அபிப்ராயப்படுகின்றனர். இந்தக் கூட்டம் நாட்டு மக்களுக்கு அனவரதம் பற்பல தொல்லைகளைக் கொடுத்துக் கொண்டேயிருந்தமை வேதங்களிலிருந்து அறியப்படுகிறது. "இந்திரன்" அவ்வப்பொழுது இந்த தஸ்யுக்களை ஒழித்துக் கட்டியதாக வேத மந்திரங்கள் விளக்குகின்றன. "த்ரஸ" என்னும் சொல் "பயப்படுதல்" என்னும் பொருளுள்ளது. இவரிடம் அஞ்சி ஓடிவிடுவார்களாம் தஸ்யுக்கள். அதனல் இதையே இவருக்குப் பெயராக வைத்து விட்டார்கள். நாட்டு மக்களுக்கு நன்மை செய்வதில் இப்படிப் பெயர் பெற்று விளங்கினவர் இவர். ரிக்வேத மந்திரங்களில் இவருடைய பெருமை பரவலாகப் பேசப்படுகிறது. ரிக்வேத மந்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு ரிஷியும், ஒரு தேவதையும் ஒரு சந்தஸ்ஸும் உண்டு. பல மந்திரங்களுக்கு இந்த த்ரஸதஸ்யு ரிஷியாகவும் தேவதையாகவுமிருக்கிறூர். சிலவற்றையே இங்கே தருகிறோம்.

ரிக்வேதம் நாலாவது மண்டலம் 42ஆவது ஸூக்தம்—

त्रसदस्युः पौरुकुत्स्यः । त्रसदस्युः इन्द्रावरुणौ । त्रिष्टुप् ।

मम द्विता राष्ट्रं क्षत्रियस्य विश्वायोर्विश्वे अमृता यथा नः ।
क्रतुं सचन्ते वरुणस्य देवा राजामि कृष्टेरुपमस्य वव्रेः ॥ (१)

अहं राजा वरुणो मह्यं तान्यसुर्याणि प्रथमा धारयन्त ।
क्रतुं सचन्ते वरुणस्य देवा राजामि कृष्टेरुपमस्य वव्रेः ॥ (२)

अहमिन्द्रो वरुणस्ते महित्वोर्वी गभीरे रजसी सुमेके ।
त्वष्टेव विश्वा भुवननि विद्वान् समैरयं रोदसी धारयञ्च ॥ (३)

अहमपो अपिन्वमुक्षमाणा धारयं दिवं सदन ऋतस्य ।
ऋतेन पुत्रो अदितेर्ऋतावोत त्रिधातु प्रथयद्विभूम ॥ (४)

मां नरः स्वश्वा वाजयन्तो मां वृतास्समरणे हवन्ते ।
कृणोम्याजिं मघवाहमिन्द्र इयर्मि रेणुमभिभूत्योजाः ॥ (५)

अहं ता विश्वा चकरं नकिर्मा दैव्यं सहो वरते अप्रतीतम् ।
यन्मा सोमासो ममदन्यदुक्थोभे भयेते रजसी अपारे ॥ (६)

विदुष्टे विश्वा भुवनानि तस्य ता प्र ब्रवीषि वरुणाय वेधः ।
त्वं वृत्राणि शृण्विषे जघन्वान् त्वं वृताँ अरिणा इन्द्र सिंधून् ॥(७)
अस्माकमत्र पितरस्त आसन् त्सप्तऋषयो दौर्गहे बध्यमाने ।
त आयजन्त त्रसदस्युमस्या इन्द्रं न वृत्रतुरमर्धदेवम् ॥ (८)
पुरुकुत्सानी हि वामदाशद्धव्येभिरिन्द्रावरुणा नमोभिः ।
अथा राजानं त्रसदस्युमस्या वृत्रहणं ददथुरर्धदेवम् ॥ (९)
राया वयं ससवांसो मदेम हव्येन देवा यवसेन गावः ।
तां धेनुमिन्द्रावरुणा युवं नो विश्वाहा धत्तमनपस्फुरन्तीम् ॥ (१०)

என்பதாம். பத்து ரிங்மந்திரங்களைக் கொண்டது இந்த ஸூக்தம். இந்த ஸூக்தத்தைக் கண்டு உபதேசம் பண்ணினவர் "த்ரஸதஸ்யு" மகரிஷி. இந்த ஸூக்தம் "த்ரிஷ்டுப்" என்னும் சந்தஸ்ஸாலானது. (ஒரு மந்திரத்தின் எழுத்துக்கள் 44-என்பது இதன் ஸ்வரூபம்). இந்த ஸூக்தத்தின் தேவதையும் "த்ரஸதஸ்யு" மகரிஷியேதான். முடிவிலுள்ள (பத்தாவது) மந்திரத்துக்கு மட்டும் "இந்த்ரா வருணர்கள், தேவதை". ஒரு மந்திரம் எவரைப்பற்றி பேசுகிறதோ, அவரே அதற்கு தேவதை. ஒரு மந்த்ரத்தைக் கண்டுபிடித்து உலகுக்கு உபதேசம் பண்ணினவர் அதற்கு ரிஷி. இங்கு இவ்விரண்டு மாக த்ரஸதஸ்யுவே அமைந்துள்ளார்.

நமக்கிருக்கும் காவ்ய நாடகங்களில் ஏற்பட்ட அறிவைக்கொண்டு இந்த மந்திரங்களுக்கு அர்த்தம் சொல்வது கஷ்டமே. மிகமிகத் தொன்மையான "வேத" ஸம்ஸ்க்ருதம் இது. இதற்கென ஒரு தனியான அனுபோகம் தேவை. இந்த மந்திரங்களில் அழகான கருத்துக்கள் பொதிந்திருப்பதுண்மையே. விருப்பமுள்ளவர்கள் வேதபாஷ்யத்தைப் பார்த்து அனுபவிக்கலாம். முக்கியமான சில விஷயங்களை மட்டும் இங்கே தருகிறோம்.

இவற்றில் 8 - 9 ஆகிய இருமந்திரங்களில் 'த்ரஸதஸ்யு'வின் பெயர் காணப்படுகிறது. ஒன்று முதல் ஏழு மந்திரங்கள் வரையில் "अहं, मां, मम" என்பன போன்ற "अस्मत्" சப்தத்தின் ரூபங்கள் காணப்படுகின்றன. "நான்" "என்னை" "என்னுடைய" என்பன இவற்றின் பொருள். இப்படியெல்லாம் சொல்பவர் த்ரஸதஸ்யுவே. ஆதலால் இந்த ஸூக்தம் முழுதுமே த்ரஸதஸ்யுவைப் பற்றியதாகவே

கொள்ளப்பட்டது. பத்தாவது மந்திரம் "இந்த்ராவருணர்களைப் பற்றி பேசுகிறது. ஆனாலும் த்ரஸதஸ்யுவின் ஸம்பந்தமான வரலாற்றையே இவையும் விவரிக்கின்றன. எட்டாவது-ஒன்பதாவது மந்திரங்களின் கருத்து —

புருகுத்ஸர் என்பவர் த்ரஸதஸ்யுவின் தந்தையார். அவரது ஸஹதர்மசாரிணி 'புருகுத்ஸானி' என்பவள். இவளே த்ரஸதஸ்யுவின் தாய். ஒரு ஸமயம் புருகுத்ஸர் பகைவர்களால் துன்புறுத்தப்பட்டு நொந்து கிடந்தாராம். புத்திரஸந்தானமில்லாத தனது ஆதரவற்ற நிலைமையை எண்ணி எண்ணி ஏங்கித் தவித்தாளாம் "புருகுத்ஸானி". அப்போது தற்செயலாய் அங்கு வந்த ஸப்தரிஷிகள், "இந்திரனையும் வருணனையும் யாகத்தினால் ஆராதிப்பாயாகில், அவர்கள் உனக்குப் புத்திரஸந்தானம் உண்டாகுமாறு அருள் புரிவர்" என்று அருளினார்கள். "புருகுத்ஸானி" அவ்வாறே செய்தாள். "த்ரஸதஸ்யு" என்னும் மகனைப் பெற்றாள். தெய்வங்களின் அருளினால் அவதரித்த இவர் தெய்வத்தன்மை மிகுந்தவராகவே விளங்கினார். அதனால் "अर्धदेवः" (பாதிதெய்வத்தன்மை வாய்ந்தவர்)என்றே கூறப்படுகிறார். இந்த ஸூக்தத்திலுள்ள 10ஆவது மந்திரம் இந்திரனையும் வருணனையும் ஸ்தோத்ரம் பண்ணுகிறது. அவ்விருவருடைய திருவருளால் தானே இவர் பிறந்தார்! ஒன்று முதல் ஏழு வரையில் உள்ள மந்திரங்கள், "த்ரஸதஸ்யு"வின் உள்ளத்தில் ஓடும் உணர்ச்சியை ப்ரதிபலிக்கின்றன.

பிரபஞ்சம் இயங்குவதற்கு மூலகாரணமான தெய்வங்கள் பல உண்டு. யாகங்களினால் அவர்களைநாம் ஆராதிக்க வேண்டும். அதனால் ஸந்தோஷமடைந்த தேவர்கள் மழையைப் பொழிவர். பூமி தன தான்யங்களுடனும் பல வ்ருக்ஷங்களுடனும் செழிப்பாக விளங்கும். த்ரஸதஸ்யு இந்த ஏழு மந்திரங்களில் கூறுகிறார் —

"யாகங்களினால் ஆராதிக்கப்படும் இந்திரன்-வருணன்-த்வஷ்டா முதலான தேவர்கள் அனைவராகவும் நானே இருக்கிறேன். இந்த பூமியையும் ஆகாயத்தில் ஒளிவீசும் ஆயிரக்கணக்கான கோளங்களையும் சிதறிப் போகாமல் தாங்கி நிற்பவன் நானேதான். யாகங்களைப் பண்ணுகிறவர்கள் ஹவிஸ்ஸுக்களால் என்னையே ஆராதிக்கின்றனர். மழையைக் கொண்டு வருபவனும்யானே. அதன்மூலம் மக்களுக்குத் தண்ணீர் கொடுப்பவனும் யானே". இப்படிப் பலவும் கூறுகிறார்.

ஒரு சாதாரணமான மனிதன் இப்படியெல்லாம் சொல்வது சரியாகுமா? பொருத்தமற்ற இதுபோன்ற வார்த்தைகள் பைத்தியம் பிடித்தவனுடையவையேயாகும்.

மூளைக் கோளாறுள்ளவன்தான் இப்படியெல்லாம் பேசுவான். "புருகுத்ஸர் என் தந்தையார். புருகுத்ஸானீ என் தாயார். அவர்களுடைய மகன் த்ரஸதஸ்யு நானேதான்" என்றிவ்வாறெல்லாம் இவர் பேசுவாரானுல் அது பொருத்தமாக இருக்கும். இவருடைய பேச்சு விபரீதமாகவல்லவா இருக்கிறது என்று தோன்றுகிறதல்லவா?

நம் போல்வாருக்கு இப்படியேதான் தோன்றும். பழுத்த ப்ரம்மஜ்ஞானிகளுடைய நிஷ்டையில் இருந்து கொண்டு பேசுகிறுர் த்ரஸதஸ்யு. அதை நம் போல்வாரால் புரிந்து கொள்ள முடியாது. ஆனுல் அது தான் தத்துவம். அசைக்க முடியாத உண்மை. வ்யாஸர் - பராசரர் போன்ற மெய்ஞ்ஞானிகளான மகரிஷிகளுக்கே இதன் தத்துவம் விளங்கும். வேதவ்யாஸருடைய ப்ரம்மஸூத்ரங்களில் (1.1. 31) ஒன்று —

शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् ।

என்பது. இவ்விஷயமே இதில் நிர்ணயிக்கப்படுகிறது. வாமதேவர் என்னும் மகரிஷி ஒரு வார்த்தையைச் சொன்னுர் —

"अहं मनुरभवं सूर्यश्च"

என்பதே அவ்வார்த்தை. "மனுவும் ஸூர்யனும் நானே" என்பது கருத்து. ஸூர்யன் - மனு - இவர்களெல்லாம் வெவ்வேறுனவர்கள். அவர்களைக்காட்டிலும் முற்றிலும் வேறுபட்டவர் வாமதேவமகரிஷி. இவர் மிகவும் பிற்காலத்தவர். இவர் எப்படிப் பழங்காலத்தவரான மனுவாக இருக்க முடியும்? சூரிய பகவானுகவும் இவர் எப்படி இருக்க முடியும்? இது பொருத்தமில்லாத வார்த்தையாக இருக்கிறதே! என்னும் கேள்விக்குப் பதிலாகவே மேற்படி ப்ரம்மஸூத்ரம் தோன்றியது.

இந்த ப்ரம்மஸூத்ரத்தின் கருத்துச் சுருக்கம்:

"வாமதேவர் சாதாரணமான ஸம்ஸாரி சேதனர்களுடைய நிலையில் இருந்துகொண்டு இந்த வார்த்தையைச் சொல்லவில்லை. பரப்ரம்மத்தை ஸாக்ஷாத்தரித்தவர் அவர். அந்தப் பரம்பொருள் இந்த ப்ரபஞ்சத்திலுள்ள ஸகலமான வஸ்துக்களிலும் உள்ளும்

புறமும் நிறைந்துள்ளது. அவரும்-மனுவும்-ஸூர்யனும் ஏனைய பொருள்கள் யாவும் இதற்கு விதி விலக்கில்லே. அவரது பார்வையில் இந்த பரப்ரம்மமே எதிலும் தெரிகின்றது. அதை விலக்கித் தனியாக ஒரு பொருளேயும் அவரால் காண முடியவில்லே. இந்நிலேயில் எழுந்த சொற்களாம் இவை. சாதாரணமானவர்கள் "अहं" என்னும் சொல்லேச் சொன்னுல் அதற்கு "நான்" என்று பொருள். இந்த "நான்" என்பது சந்தர்பத்துக்கேற்றவாறு மாறுபடும். "நான் உயரமானவன்" என்பது போன்ற இடங்களில் இது சொல்லுகிறவருடைய உடலேக் குறிக்கும். "நான் அறிகிறேன்" என்பன போன்ற இடங்களில் இது, சொல்பவருடைய உடம்பினுள்ளே உறையும் ஜீவாத்மாவைக் குறிக்கும். வாமதேவர் போன்ற ப்ரம்மஜ்ஞானிகள் சொல்லும் "நான்" என்னும் சொல் உடலேயும் அதனுள்ளே உறையும் ஜீவாத்மாவையும் கடந்து அந்த ஜீவாத்மாவுக்கும் அந்தர்யாமியாய் வீற்றிருக்கும் பரமாத்மாவையே உணர்த்தும். ஆதலால் இவர் சொல்லிய "अहं" என்னும் சொல்லுக்கு "என்னுள்ளுறையும் பரமாத்மா" என்றே பொருள். "என்னுள் உறைந்து கிடக்கும் பரப்ரம்மமும் மனுவினுள் சூரியனுள் வீற்றிருக்கும் பரப்ரம்மமும் ஒன்றே என்பது வாமதேவருடைய வாக்கித்தின் கருத்து.

तेनेदं पूर्णं पुरुषेण सर्वम् ।

— தைத்திரீயாரண்யகம், 10.10.20.

अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ।

— தைத்திரீயாரண்யகம், 10.11.5.

स यश्चायं पुरुषे । यश्चासावादित्ये । स एकः ।

— தைத்திரீயோபநிஷத், 2.8, 3.10.

என்பன போன்ற உபநிஷத் வாக்யங்களின் கருத்தையேதான் வாமதேவர் அனுபவித்துப் பேசுகிறுர். ஆதலால் அவருடைய "ப்ரம்மநிஷ்டைக்கு"ப் பொருத்தமான வார்த்தையேயாமிது என்பதாம்.

இதே ப்ரம்மநிஷ்டையிலிருந்து கொண்டு தான் த்ரஸதஸ்யுவும் பேசுகிறார். அதுவும் பொருத்தமானதே. இதே நிலையில் வாழ்ந்த நம்மாழ்வாரும் இதே குரலால் பேசுகிறார்.

"கடல் ஞாலம் செய்தேனும் யானே" என்பன காண்க. "யானும் நீயே, என்னுள்ளுறைதலின்" என்கிறார் ஸ்ரீமத் வேதாந்ததேசிகர்.

த்ரஸதஸ்யுவும் வாமதேவரும் சரிசமானமான ப்ரம்ம நிஷ்டையில் இருந்து பேசினது இப்போது தெரிகின்றது. ஸர்வஜ்ஞரான வேதவ்யாஸருக்கு இதெல்லாம் நன்றாகத் தெரியுமே! அவர் தனது ப்ரம்மஸூத்ரத்தை, "शास्त्रदृष्ट्या तूपदेशस्त्रसदस्युवत्" என்று எழுதியிருக்கலாமே! அவர் ஏன் அப்படிச் செய்யவில்லை? என்ற கேள்வி எழுகின்றது. த்ரஸதஸ்யுவின் வார்த்தை "கர்மகாண்ட"த்தில் உள்ளது. வாமதேவருடைய வார்த்தை "ப்ரம்ம காண்ட"த்தில் உள்ளது. ப்ரம்மகாண்டத்துக்காகவே வ்யாஸர் ப்ரம்மஸூத்ரங்களைப் பண்ணினார். அதுதான் காரணம். அவ்வளவேயன்றி உதாஹரண பேதத்தால் விஷயத்தில் எவ்விதமான மாறுபாடும் இல்லை என்பது இதற்குப் பதிலாகும்.

## தேவப்ரியர்

புருகுத்ஸரும் த்ரஸதஸ்யுவும் தேவர்களது அபிமான பாத்ரமாக இருந்தனர். இவர்களுக்காக இந்திரன்-அச்வி தேவர்கள் போரில் ஈடுபட்டு இழந்த நகரங்களை மீட்டுக் கொடுத்தனர். ரிக்வேத மந்திரங்களில் இவ்வரலாறு பேசப்படுகிறது.

(1) त्वं ह त्यदिन्द्र सप्त युध्यन्पुरो वज्रिन् । पुरुकुत्साय दर्दः ॥

— ரிக்வேதம், 1.63.7.

(2) ऋणोरपो अनवद्यार्णा यूने वृत्रं पुरुकुत्साय रंधीः ।

— ரிக்வேதம், 1.174.2.

(3) याभिः पृश्निगुं पुरुकुत्समावत ताभिरू षु ऊतिभिरश्विनागतम् ।

— ரிக்வேதம், 1.112.7.

## மந்த்ரத்ரஷ்டா (மந்திரத்தைக் கண்டவர்)

ரிக்வேதம் ஒன்பதாவது மண்டலம், 10ஆவது ஸூக்தத்தைக் கண்டெடுத்து உபதேசித்தவர்கள் "त्रसदस्युः त्र्यरुणः" என்னுமிரண்டு ரிஷிகளாம்.

यामृषयो मन्त्रकृतो मनीषिणः । अन्वैच्छन्देवास्तपसा श्रमेण ।

என்னும் வேத மந்திரம் மந்த்ரத்ரஷ்டாக்களான மகரிஷிகளின் பெருமையைப் பேசுகின்றது.

## கொடைவள்ளல்

ஆயுள் முழுவதும் இடையறுது பற்பல யாகங்களைச் செய்பவர்கள் இவ்வம்சத்தினர். யாக காரியங்களில் யஜமானனுக்கு ஸஹாயமாக இருப்பவர்களுக்கு "ரித்விக்குகள்" என்று பெயர். ஒவ்வொரு யாகத்திலும் அவர்களுக்கு "தக்ஷிணை" வழங்கப்படும். அதில் மிகவும் தாராளமாகக் கொடுப்பார்களாம் இவ்வம்சத்தினர். ரிக்வேத மந்திரங்கள்தான் இதைச் சொல்லுகின்றன.

யாக தக்ஷிணைகளை அள்ளிக் கொடுப்பது இந்தக் குலத்துக்கே ஏற்பட்ட ஒரு தனிப்பெருமை. த்ரஸதஸ்யுவின் திருக்குமாரர் "குருச்ரவணர்" என்பவர். இதுவும் காரணப் பெயரேதான். (யௌகிகம்) குரு - ச்ரவண என்னுமிரண்டு சொற்களின் சேர்க்கையால் உருவாகியது இந்தப் பெயர். 'குரு' என்பதற்கு, "யாககாரியங்களைச் செய்யும் ரித்விக்குகள்" என்று பொருள். 'ச்ரவண' என்பதற்குக் "கேட்பது" என்று பொருள். இவருடைய யாகங்களில் ரித்விக்குகளுக்கு அபரிமிதமாக தக்ஷிணை வழங்கப்படுமாம். அதைப் பெற்றுக்கொண்டு அவர்கள் இவரை வாயாரப் புகழ்வராம். அதையெல்லாம் ஸதா ஸர்வகாலமும் கேட்டுக்கொண்டே இருப்பாராம் இவர். இதுவே இவருக்குப் பெயராகிவிட்டது.

தனது யாகங்களில் தக்ஷிணை கொடுப்பது மட்டுமல்லாமல் பிறர் பண்ணும் யாகங்களுக்கும் அவசியமான பொருளுதவி செய்வது இவரது வழக்கமாம். "கவஷர்" என்னும் ஒரு ரிஷிக்கு இவர் செய்த உதவியை இரண்டு ரிக்வேத மந்திரங்களில் அவரே கூறுகிருர்.

कुरुश्रवणमावृणि राजानं त्रासदस्यवम् ।
मंहिष्ठं वाघतामृषिः ॥
यस्य मा हरितो रथे तिस्त्रो वहन्ति साधुया ।
स्तवै सहस्रदक्षिणे ॥

— ரிக்வேதம், 10.33.4,5.

"கவஷ" ருடைய யாக சாலையில் அவர் சொன்னது— "த்ரஸதஸ்யுவின் குமாரரான குருச்ரவணரை அணுகினேன். ஏராளமான பொருளைக் கொடுத்தார். அதனாலேயே சிரமப்படாமல் இந்த யாகத்தைப் பண்ணுகிறேன். த்ரவ்யத்தைக் கொடுத்ததோடு நின்றுவிடவில்லை. அந்த த்ரவ்யங்கள் எல்லாம் எனது யாக சாலைக்கு வந்து சேரும்படி வேண்டிய வாஹனங்களின் மேல் ஏற்றி அனுப்பினார். இம்மட்டோ? நான் இங்கு வந்து சேருவதற்காக மூன்று குதிரைகள் பூட்டிய தேர் ஒன்றையும் ஏற்பாடு செய்தார். நான் அதிலேயே ஸௌக்யமாய் அமர்ந்து இவ்விடம் வந்து சேர்ந்தேன். அவருடைய வள்ளன்மையை அளவிட்டுக் கூறுவது ஸாத்யமே இல்லை" என்றிவ்வாறாகப் புகழ்கிறார்.

மற்றொரு மந்திரம் சொல்லுகிறது—

अदान्मे पौरुकुत्स्यः पञ्चाशतं त्रसदस्युर्वधूनाम् ।
मंहिष्ठो अर्यस्सत्पतिः ॥

— ரிக்வேதம், 8.19.36.

"புருகுத்ஸருடைய குமாரரான த்ரஸதஸ்யு, எனக்கு ஐம்பது பெண்களைக் கொடுத்தார். அவர் கொடை வள்ளல். நல்லோர்களால் அடையத்தகுந்தவர். நல்லோர்களைக் காப்பவர்" என்பது கருத்து.

ப்ரம்மசாரிகளைத் தேடி கன்னிகாதானம் செய்வது பெரும் புண்ணியமான காரியம். அந்த தம்பதிகள் தாமும் யாகங்களை அனுஷ்டிப்பார்கள். பிற்காலத்தில் புத்ர பௌத்ர ஸந்தானங்களைத் தோற்றுவித்து அவர்கள் மூலமாகவும் பற்பல யாகங்களைச் செய்விப்பார்கள். அதனால் நாட்டின் க்ஷேமம் பல்லாயிர மடங்கு ஓங்கி வளரும். இந்த எண்ணத்தினால்தான் த்ரஸதஸ்யு நிறைய கன்னிகாதானம் பண்ணியிருக்கிறார். காஞ்சீபுரத்தில் வாழும் இந்த வம்சஸ்தர்கள், தமது பெயருக்கு முன்பு "கோடி கன்னிகாதானம்"

என்றொரு அடைமொழியையும் சேர்த்துச் சொல்வது வழக்கம். மூலபுருஷர்போல் பிற்காலத்தவராகிய இவ்வம்சத்தாரும் கன்னிகாதானத்தில் ஆர்வம்கொண்டிருந்ததை இது நிரூபிக்கிறது.

**காம்ய கர்மம்**

இந்த த்ரஸதஸ்யு சிறந்த ப்ரம்மநிஷ்டராக இருந்தமை ரிக்வேத மந்திரங்களாலறியப்பட்டதொன்று. ஆனால் இடையறாது யாகங்களையே பண்ணுவதும் பிறரையும் பண்ணும்படி தூண்டுவதுமான நிலையிலேயே இவரது ஆயுட்காலம் முழுதும் கழிந்தது. வேதங்களில் பரவலாக ஆங்காங்கு விதிக்கப்பட்டுள்ள யாகங்களெல்லாம் ஒவ்வொரு பயனைக் கருதியே பண்ணும் படியாகக் கூறுப்பட்டுள்ளன. மோக்ஷம் தவிர மற்றொரு பயனையும் கனவிலும் கருதாத ப்ரும்மஜ்ஞானியான த்ரஸதஸ்யு அந்த யாகங்களையெல்லாம் எதற்காகப் பண்ணினார்? "காம்யம்" என்று சொல்லப்படும் இவைகள் மோக்ஷார்த்திகளுக்கு வெறுக்கத்தக்க வைகளேயல்லவா? என்னும் கேள்வி எழுகின்றது.

வேதங்களில் சொல்லப்பட்டுள்ள லௌகிக புருஷார்த் தங்களைக் கருதாமல், பகவத் ப்ரீத்யர்த்தமாகவே இவற்றைப் பண்ணலாம். இப்படியே பல ப்ரம்மஜ்ஞானிகள் அனுஷ்டித்திருக்கிறார்கள். அப்படிப் பண்ணுவதில் மற்றொரு அனுகூலமும் உண்டு. 'यज्ञाद्भवति पर्जन्यः' என்கிறபடி நாட்டில் மாத மும்மாரி பெய்யும். மக்கள் நலமாக வாழ்வர். இது எம்பெருமானுக்கு உவந்ததொன்றும்.

तमेतं वेदानुवचनेन विविदषन्ति ब्राह्मणाः यज्ञेन दानेन तपसाऽनाशकेन ।

என்னும் ப்ருஹதாரண்யக உபநிஷத் (4.4.22) வாக்யமும்,

इयाज सोऽपि सुबहून् यज्ञान् ज्ञानव्यपाश्रयः ।

இயாஜ ஸோபி ஸுபஹூன் யஜ்ஞான் ஜ்ஞானவ்யபாச்ரய: ।

என்னும் விஷ்ணுபுராண (6.6.12) வாக்யமும்,

अफलाकांक्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।

அபலாகாங்க்ஷிபிர் யஜ்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।

என்னும் கீதா(17.11) வாக்யமும், பயனைக் கருதாமல் யாகங்களை அனுஷ்டித்து ப்ரம்மஜ்ஞானத்தைப் பெறுவதை எடுத்து

உரைக்கின்றன. இப்படிப்பட்ட த்ரஸதஸ்யு காம்ய கர்மாக்களையும் அனுஷ்டித்திருப்பதாக வேதங்களிலிருந்து அறிகிறோம்.

एतं वै पर आट्णारः कक्षीवाँ औशिजो वीतहव्यः श्रायसस्त्रसदस्युः पौरुकुत्स्यः प्रजाकामा अचिन्वत ततो वै ते सहस्रँ सहस्रं पुत्रानविन्दन्त प्रथते प्रजया पशुभिस्तां मात्रामाप्नोति यां तेऽगच्छन् य एवं विद्वानेतमग्निं चिनुते ।

— தைத்திரீய ஸம்ஹிதை, 5.6.5.

என்னும் வேதவாக்கியம், த்ரஸதஸ்யு முனிவரும் மற்றும் மூன்று முனிவர்களும் கூடி "அக்நிசயனம்" என்னும் யாகத்தைப் பண்ணி, அதன் பயனாக ஆயிரமாயிரம் மக்களைப் பெற்ற வரலாற்றைக் கூறுகிறது. ஆயிரக்கணக்கான ஸந்ததி வேண்டும் என்று ஆசைப்பட்டு அதற்காகவே அக்நிசயனம் பண்ணினார் இவர். கோரின பயனையும் பெற்றார். பழுத்த ப்ரம்மஜ்ஞானியான இவருக்கு இஹலோக புருஷார்த்தமான புத்ரபௌத்ர பரம்பரையில் எப்படி ஆசை பிறந்தது? லோக க்ஷேமத்திற்காகவேதான். சிறந்த யாஜ்ஞிகராகிய இவருக்குப் பிறக்கும் கீழ்த்தலைமுறைகளும் இவர் போலவே யாகங்களை அனவரதம் பண்ணுவார்கள். அதனால் லோகக்ஷேமம் பன்மடங்கு பெருகும். இதுதான் இவரை இந்த ரீதியில் இழியும்படி செய்தது. இன்றும் இவருடைய வழித்தோன்றல்களான சடமர்ஷண கோத்ரக்காரர்கள் நாடெங்கும் தமிழ்-தெலுங்கு-கன்னட-தேசங்களில் ஆயிரக்கணக்கில் பரவி யாகங்கள் பண்ணுவதைக் காணலாம். இந்த மூலபுருஷனுடைய தபோ பலமே இதற்குக் காரணமாக இருக்கக் கூடும்.

இவருடைய வழித்தோன்றலான சடமர்ஷணர்தான் இந்த கோத்ரத்தின் பெயரில் இருக்கிறார். அவரும் பிறவியிலேயே ப்ரம்மஜ்ஞானமுடையவர். ஆயினும் இஹலோக புருஷார்த்தமான ப்ரஜாஸ்ருஷ்டியில் "இவர்" போலவே ஈடுபட்டிருந்தார். இதே காரணம்தான். ஸந்ததிகளும் அதிகமாக யாகங்களைப் பண்ணி உலக க்ஷேமத்தை வளர்க்கவேணும் என்னும் ஆசைதான். அக்காலத்தில் இப்போதிருப்பதுபோல் "குடும்பக் கட்டுப்பாடு" அமுலில் இருந்ததாகத் தெரியவில்லை. அதிகமான மக்களைப் பெறுவதே சிறப்பாகக் கருதப்பட்டு வந்தது.

இந்த த்ரஸதஸ்யு, தன் தந்தையாரின் பெயரையும் சேர்த்தே வேதங்களில் சொல்லப்படுகிறார். 'त्रसदस्युः पौरुकुत्सयः' என்றவாறு. அப்படியே இவருடைய குமாரரான குருச்ரவணரும் 'त्रासदस्यवः कुरुश्रवणः' என்று வழங்கப்படுகிறார். 'रामो दाशरथिः, व्यासः पाराशर्यः, च्यवनो भार्गवः, वैयासकिः शुकः, பட்டர்பிரான் கோதை' என்பது போல் தந்தையாரின் பெருமை மகனிடமும் நிறைந்து காணப்படுவதைக் காட்டுவதாகும் இவ்வழக்கு. இன்றும் வடநாடுகளில் இவ்வழக்கு தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. "நாராயணதாஸ்-கிரிதரதாஸ்" என்பன போன்ற வழக்கம் இன்றளவுமுள்ளது. முதலில் உள்ளது தந்தையின் பெயர். பின்புள்ளது குமாரனுடைய பெயர். வெள்ளைக்காரர்களுடைய ஸஹவாஸத்தினால் இவ்வழக்கு 'initial' என்கிற ரீதியில் ஒடுங்கிவிட்டதாயினும் ஓர் எழுத்தளவிலாவது தொடர்ந்து வருகிறது.

"விஷ்ணுவ்ருத்தகணம்" என்னும் பிரிவு இந்த சடமர்ஷண கோத்ரத்தில் இருந்திருக்கிறது. அதுவும் காரணப்பெயரே. விஷ்ணுபக்தர்களாகவே இவ்வம்சஸ்தர்கள் இருந்ததையே இது காட்டுகிறது. ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தின் வேர் போன்றவரான ஸ்ரீமந்நாத முனிகள் இதனால்தான் போலும் இவ்வம்சத்திலேயே அவதரித்தார். ப்ரபன்ன ஜனஸந்தான கூடஸ்தர் என ப்ரஸித்தரான நம்மாழ்வாருக்கும் "சடகோபன்" என்னும் பெயர், சடமர்ஷண கோத்ரத்தின் சாயலிலேயே அமைந்துள்ளது. ஸ்ரீபாஷ்யகாரரான பகவத் ராமானுஜரும் இவ்வம்சத்துடன் பலவிதமான உறவு முறைகளும் உபதேசங்களும் பெற்றவரே. இன்றளவும் இவ்வம்சத்திலுதித்த மாபெரும் புலவர்கள் தர்க்கம், வியாகரணம் முதலிய ஸாமான்ய சாஸ்திரங்களுடன் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஆதாரமான க்ரந்தங்கள் இயற்றியும் சிஷ்யர்களுக்கு ப்ரவசனம் செய்தும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை ஸம்ரக்ஷணம் பண்ணி வருவது கண்கூடு. ஆயிரம் வருஷங்களுக்கு முன் இவ்வம்சத்திலுதித்த "திருமலைநம்பிகள்" என்னும் மஹான், திருமலையில் அடர்ந்த காட்டில் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீவெங்கடாசலபதிக்கு தினந்தோறும் மூன்று மைல் தூரத்திலுள்ள "ஆகாசகங்கை" யிலிருந்து தீர்த்தம் கொண்டு வந்து ஸமர்ப்பித்து வந்தார். கோவில் ப்ரதக்ஷிணத்தில் தலையில் நீர்க்குடத்துடன் அவர் வந்தபோது ஸ்ரீநிவாஸப் பெருமாள் தானே

அவரை அணுகித் தண்ணீர் கொடுக்குமாறு கேட்டார். 'தாத' (அப்பா!) என்று கூப்பிட்டுத் தண்ணீர் கேட்டார் எம்பெருமான். அவருடைய பக்தி எம்பெருமானைக் கவர்ந்து இப்படிக் கேட்கும்படி செய்துவிட்டது. இந்த நிகழ்ச்சிக்குப்பின், அவரது வழித்தோன்றல்களாகிய சடமர்ஷண கோத்ரக்காரர்களெல்லாம் தத்தம் பெயருடன் "தாத" என்னும் சொல்லைச் சேர்த்தே வழங்கி வருகின்றனர். இது போல் மற்றும் பல வகைகளிலும் பெருமை வாய்ந்தது இந்த சடமர்ஷண கோத்ரம்.

# நாரதர்

பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலத்திலேயே தோன்றிய மிகப் பழமையான ரிஷி நாரதர். அவர் தீர்க்காயுஸ்ஸுடன் ஊழிக்காலம் முழுவதும் ஜீவித்திருந்து எம்பெருமானுடைய ஸங்கல்பப்படி பிரபஞ்சத்தின் மூலைமுடுக்குகளில் எல்லா நிகழ்ச்சிகளும் சரியாக நடந்தேறுமாறு செய்து நிர்வஹிக்கும் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளவர்.

பரம்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய நாபிகமலத்தில் பிரம்மா திருவவதாரம் செய்தார். உலகத்தையும் அனந்த கோடி ஜீவராசிகளையும் தக்கவாறு படைத்துப் பிரபஞ்சத்தை விஸ்தரிக்குமாறு பிரம்மாவுக்குக் கட்டளை பிறந்தது. இதைப்பற்றிய சிந்தையில் ஆழ்ந்திருந்த அவருடைய மனஸ்ஸிலிருந்து ஸனகர், ஸனந்தனர், ஸநாதனர், ஸனத்குமாரர் என்ற நான்கு புதல்வர்கள் தோன்றினர். இவர்கள் தோன்றியபோதே ஐந்து வயதுள்ளவர்களாக இருந்தனர். நான்முகனுடைய முகத்திலிருந்து ஸ்வாயம்புவ மனுவும் சதரூபா என்னும் பெண்ணும் தோன்றினர். "நீங்கள் எல்லாரும் ஆயிரங்கோடி மக்களைப் பெற்றுப் பிரபஞ்சத்தை விஸ்தரியுங்கள்" என்று பிரம்மா அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

ஸனகர் முதலான நான்கு குமாரர்களுக்கும் இந்த வேலை மிகவும் அருவருப்பைத் தந்தது. "ஸ்ரீமந்நாராயணனுடைய சரணாரவிந்தத்தையன்றி வேறொன்றும் நாமறியோம். இனிய பொருள்களுள் சிறந்த இதை விட்டு இல்லறத்தில் ஈடுபட எங்களால் ஆகாது" என்று சொல்லி அந்த நால்வரும் அந்த க்ஷணமே தந்தையை விட்டு அகன்றனர். பிரம்ம தேவனுக்குக் கோபம் கொழுந்து விட்டெரிந்தது. அந்தக் கோபக்கனல் திரண்டு பதினொரு மூர்த்திகளாக மாறியது. அவர்களே பயங்கரரான ஏகாதசருத்ரர்கள் எனப்பெறுவர்.

கோபம் அடங்கியதும் மீண்டும் ஸ்ருஷ்டியைப் பற்றிய சிந்தனை பிரம்மாவுக்குத் தோன்றியது. அவருடைய உடலுறுப்புகளில் ஒவ்வொன்றிலிருந்தும் ஒவ்வொருவர் தோன்றினர். புலஸ்த்யர், புலஹர், அத்ரி, க்ரது, மரீசி, அங்கிரஸ், ப்ருகு, தக்ஷர், கர்தமர்,

வஸிஷ்டர் - இப்படிப் பலர் அவதரித்தனர். இவர்கள் பிரபஞ்சத்தின் மூலபுருஷர்கள். தந்தையாருடைய ஆஜ்ஞையைத் தலைமேல் தாங்கி இவர்கள் பல்லாயிரம் கோடி மக்களைப் பெற்றுப் பிரபஞ்சத்தை வளர்த்தார்கள். இவர்கள் தோற்றுவித்த ஜீவராசிகளை 'ப்ரஜா' என்று கொண்டு, அவற்றைத் தோற்றுவித்த இவர்களை 'ப்ரஜாபதிகள்' என்று அழைப்பர்.

இந்த ப்ரஜாபதிகளின் கோஷ்டியில் பிரம்மாவின் கழுத்திலிருந்து தோன்றியவர் நாரதர். ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்குமாறு இவருக்கும் நத்தையாரின் கட்டளை பிறந்தது. இவர் அதன்படி நடந்து ப்ரஜைகளைப் படைத்து நாரத ப்ரஜாபதி என்று பெயர் பெற்றிருக்கலாம் அல்லவா? அதுதான் நடை பெறவில்லை. ஸனக ஸனந்தனாதிகளைப் போலவே இவரும் ப்ரஹ்மஜ்ஞானியாகவே பிறந்துவிட்டார். அவர்களைப் போலவே, 'இல்லறத்தில் இழிந்து ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க முடியாது என்று இவர் மறுத்து விட்டார். அவ்வளவுடன் நிற்காமல், பிரம்மாவுக்கு உபதேசமும் செய்யத் தொடங்கி விட்டார். "அப்பா, நீங்கள் இம்மாதிரியான தீய வழியில் போகும்படி என்னை ஆஜ்ஞாபித்தல் தகாது. பிள்ளைகள் தாமாகவே கெட்ட வழியில் சென்றாலும் அவர்களைக் கண்டித்து ஸன்மார்க்கத்தில் திரும்பும்படி செய்ய வேண்டியது பிதாவின் கடமை. நான் இயற்கையிலேயே எம்பெருமானுடைய இனிய பாதாரவிந்தங்களில் மனத்தைப் பதியவைத்து, உலக சுகங்களைத் துறந்து உறுதியுடன் இருப்பதை நீங்கள் பெருமையுடன் வரவேற்று ஆதரிக்க வேண்டாமா? அதற்கு மாறாகக் கட்டளையிடுவது தகாது" என்றார்.

பிரம்மாவுக்குக் கோபக் கனல் கிளர்ந்தெழுந்தது. பயங்கரமான சாபம் நாரதர் தலையில் விழுந்துவிட்டது.

"நாரதா, உன் அறிவு அழிந்து போகட்டும். நீ பெண் பித்தனாவாய். பருவமங்கையர் ஐம்பது பேர்களுக்கு நீ கணவனாக இருப்பாய். சிற்றின்பத்தின் நுட்பமான விஷயங்களெல்லாம் உன் மனத்தில் நிலைத்திருக்கும். நீ பெரும் காமாதுரனாகி, காமுகர்கள் பலருக்கு சிற்றின்ப மார்க்கங்களைக் கற்பிக்க வல்லவனாவாய். சங்கீதத்தில் இணையற்ற தேர்ச்சி உனக்கு உண்டாகும். இனிய குரலும், வீணையில் நிகரற்ற பாண்டித்யமும் உனக்கு உண்டாகும்.

அழியாத யௌவனப் பருவம் உனக்கு உண்டாகுக. இனிமையான பேச்சு, தெளிந்த அறிவு, உயர்ந்த வடிவழகு, நல்ல ஒழுக்கம், சிறந்த பண்பு இவற்றால் அழகிகளை ஆகர்ஷிக்கும் இயல்பு உடையவனாய். கந்தர்வர் என்னும் தேவக்கூட்டத்தில் நீ 'உபபர்ஹணன்' என்னும் பெயருடன் பிறப்பாய். ஜனஸஞ்சாரமற்ற காட்டில் இரண்டு லக்ஷம் ஆண்டுகள் சுகபோகங்களில் மூழ்கிக் கிடப்பாய். இது முடிந்ததும் மறுபடியும் என் சாபம் உனக்குக் கிடைக்கும். அதனால் நீ தாஸியின் மகனாவாய். அப்போது உனக்கு ஸ்ரீ வைஷ்ணவ ச்ரேஷ்டர்களுடன் ஸம்பந்தம் உண்டாகும். அவர்களுடைய எச்சிலை உண்ணும் வாய்ப்பு உனக்கு உண்டாகும். அதனால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அருள் உனக்குக் கிட்டும். மீண்டும் நீ என் மகனாகப் பிறப்பாய். அப்போதுதான் உனக்குப் பழையபடி திவ்யஜ்ஞானம் உண்டாகும்படி அருள்புரிவேன். இப்போது நீ பதிதனாவாய்" என்று சபித்து பிரம்மா கோபத்தை ஆற்றிக் கொண்டார்.

நாரதர் கதறி அழுதார். "அப்பா, கோபத்தை அடக்கிக் கொள்ளுங்கள். எனக்குப் பற்பல நீசப் பிறவிகள் உண்டாவதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் ஒரு சிறு வேண்டுகோள்: அந்தப் பிறவிகள் பலவற்றிலும் ஸ்ரீமந்நாராயணனுடைய சரணாரவிந் தங்களில் எனக்கு உறுதியான பக்தி தொடர்ந்து இருக்குமாறு அருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். மேலும் தொடர்ந்து, "நிரபராதியான என்னை நீங்கள் இவ்வாறு கடுமையாகச் சபித்ததற்குப் பதில் நானும் சபிக்கிறேன்: பிரம்மதேவரே, ஒவ்வொரு தெய்வத்துக்கும் ஒவ்வொரு மந்த்ரம் உண்டு. கவசம், ஸ்தோத்திரம் முதலியவையும் பூஜையும் உண்டு. இவை எல்லாம் பிரபஞ்சத்தில் எங்கும் உங்களுக்கு இல்லாமற் போகட்டும். இன்று முதல் மூன்று கல்பங்கள் (ஊழிக்காலம்) வரை உமக்குப் பூஜையே இல்லாமற் போகட்டும். மூன்று ஊழிக்காலம் கழிந்த பிறகே நீர் பூஜிக்கத் தகுந்தவராவீர். தற்காலம் யாகங்களில் மட்டும் உமக்கு ஹவிர்பாகம் இருக்கும். தேவர்களுக்குப் பூஜ்யராக இருப்பீர்" என்று மறுசாபமிட்டார்.

கந்தர்வராஜன் ஒருவனுக்குப் பிள்ளை இல்லை. அவன் புஷ்கர க்ஷேத்திரத்தில் சிவனைக் குறித்துத் தவம் செய்தான். சிவன்

பிரத்தியக்ஷமாகி, "என்ன வேண்டும்?" என்றார். "பரமவைஷ்ணவனாக ஒரு புத்திரன் பிறக்குமாறு அருளவேண்டும் என்றான் கந்தர்வராஜன். அவ்வாறே அருள் சுரந்தது. அவனுடைய மனைவி கருவுற்றாள். நாரதர் அவளுக்கு அழகிய மகனாகப் பிறந்தார். பிரம்மசாபத்தின் பயனாக அவர் இவ்வாறு மறுபிறவி எடுத்தார். இந்தப் பிறவியில் அவருக்குப் பெயர் உபபர்ஹணன். 'அதிகமாகப் பூஜிக்கத் தகுந்தவன்' என்பது இந்தப் பெயரின் பொருள். குலகுருவான வஸிஷ்டரே இவ்வாறு பெயரிட்டருளினார். அவரிடமே திருமந்த்ர உபதேசம் பெற்றான் உபபர்ஹணன். அவன் கண்டகி நதியின் கரையில் தவம் செய்து வந்தான். நல்ல யௌவனப் பருவம் தோன்றியது அவனுக்கு. அங்கு வந்த கந்தர்வ பத்தினிகள் அவனுடைய கட்டழகைக் கண்டு அவனிடம் காமுற்றனர். அவர்களும் கடுமையாகத் தவம் செய்து தங்கள் உடலை நீத்தனர். மறுபிறவியில் சித்திரரதன் என்னும் கந்தவர்வராஜனுக்குப் பெண்ணாகப் பிறந்தனர். அவர்களின் எண்ணிக்கை ஐம்பது. தம் தந்தையின் அனுமதியுடன் அந்த ஐம்பதின்மரும் உபபர்ஹண கந்தர்வனுக்கே மாலையிட்டனர். அவன் குன்றாத யௌவனத்துடன் அவர்களை மணந்துகொண்டு, பல காலம் அவர்களது கலவியே கருதி இன்பவெள்ளத்தில் திளைத்தான்.

இவ்வளவிலும் ஹரிபக்தி மட்டும் அவனுக்குக் குறையவே இல்லை. ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்தோத்திரங்களைப் பாடிக்கொண்டே பிரம்மாவின் ஸபைக்குச் சென்றான். அப்போது அங்கு ரம்பையின் நாட்டியம் நடந்துகொண்டிருந்தது. உபபர்ஹணனுக்கு அவளைக் கண்டதும் மனம் மயங்கியது. ஸபையின் நடுவில் பாடுவதை நிறுத்தி மூர்ச்சித்து விழுந்தான். அங்கே குழுமியிருந்த தேவர்கள் உரக்கச் சிரித்து ஏளனம் செய்தனர். பிரம்மாவுக்குக் கோபம் பொங்கியெழுந்தது. "நீ கந்தர்வ ஜன்மத்தை விட்டு வேளாளனாகப் பிறக்க வேண்டும். ஒரு நல்ல காலம் வரும். அப்போது ஸ்ரீவைஷ்ணவர்களுடன் சேருவாய். அதனால் புனிதமாகி, மீண்டும் என் புத்திரனாகப் பிறப்பாய். பெரும் ஆபத்துக்கள் வந்தால்தான் தொடர்ந்து நன்மைகளும் வரும். ஸுகமும் துக்கமும் மாறி மாறி வருவது இயல்பே. இது தவிர்க்க முடியாதது" என்று பிரம்மா கூறினார்.

ஒரு கையில் வீணையும், மற்றொரு கையில் ஸ்படிகமாலையுமாக, பகவானுடைய நாமங்களை ஸ்மரித்துக்கொண்டே உயிரை விட்டான் உபபர்ஹணன். அவனுடைய மனைவியர் ஐம்பதின்மரும் கதறி அழுதனர். அவர்களுள் முதன்மையானவள் மாலாவதி என்பவள். அவள் ஆற்றாமை மீதூர்ந்த நிலையில், கௌசிகி நதி தீரத்தில் தன் கணவனுடைய சடலத்தை மார்பின்மீது வைத்து அணைத்துக் கொண்டு பலவாறு புலம்பிப் பல தெய்வங்களை வேண்டினாள். பதிவிரதையான தனக்கு வைதவ்யம் வந்த காரணம் என்ன என்று கேட்டாள். கணவன் உயிர் பெற்றெழ வேண்டும் என்றும், இல்லாவிட்டால் பிரம்மா முதலான ஸகல தேவர்களையும் அவரவர்களுடைய பதவியையும் பெருமைகளையும் இழந்துவிடுமாறு சபிப்பதாகவும் பயமுறுத்தினாள். பதிவிரதையின் கோபத்தைக் கண்டு ஸகல தேவர்களும் நடுநடுங்கினர். 'இவளுடைய கணவன் அகால மரணமடைந்ததற்கு நம்மில் யார் பொறுப்பாளி?' என்று கேட்டுக்கொண்டனர். ஸ்ரீமகாவிஷ்ணு பிராம்மண வேஷத்துடன் அங்கே வந்தார். பிரம்மா உண்மையை எடுத்துக் கூறி, "கந்தர்வனாக இன்னும் ஆயிரம் வருஷங்கள் இவன் வாழ வேண்டியிருக்கிறது. என் ஸபையில் முறை தப்பி நடந்துகொண்டதனால் உடனே இறந்து போகுமாறு நான் சபித்தேன். தவறு என்னுடையதுதான். நானே இவனைப் பிழைக்க வைக்கிறேன்" என்று கூறினார். தமது கமண்டலுவில் இருந்த ஜலத்தினால் ப்ரோக்ஷித்தார். மற்றத் தேவர்களும் தத்தம் அம்சங்களை அந்தச் சடலத்துக்குக் கொடுத்தார்கள். ஆனால் சடலம் எழுந்திருக்கவில்லை. உடனே மாலாவதி பிரம்மாவின் சொற்படி எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணினாள். கிருஷ்ண பரமாத்மாவின் பேரருளினால் உபபர்ஹண கந்தர்வன் சடக்கென்று எழுந்து, புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, ஆடைகளை அணிந்து, வீணையையும் ஸ்படிகமாலையையும் எடுத்துக்கொண்டு, அங்கே குழுமியிருந்த தேவர்களை வணங்கினான். மனைவி மாலாவதியுடன் கந்தர்வ நகரத்துக்குத் திரும்பி விசேஷ தானதர்மங்களைச் செய்து இன்புற்றிருந்தான்.

கந்தர்வனாக இருக்க வேண்டிய காலம் முடிவடைந்ததும் உபபர்ஹணன் உயிர் நீத்தான். பிரம்மாவின் சாபத்தினால் வேளாளனுக்கு மகனாகப் பிறந்தான். கான்யகுப்ஜ தேசத்தில்

த்ரமிளன் என்று பெயருள்ள அரசன் ஒருவன் இருந்தான். அவன் ஆயன் (கோபன்). அவனுக்குக் கலாவதி என்ற பெயருள்ள பதிவ்ரதையான மனைவி இருந்தாள். அவள் மகப் பேறு இல்லாதவள். அவள் தன் கணவனின் தூண்டுதலினால், காட்டில் தவம் செய்துகொண்டிருந்த முனிவர் ஒருவரை அணுகித் தனக்கு மகப்பேறு உண்டாகுமாறு அருள வேண்டிக்கொண்டாள். அவரது அருளினால் அவளுக்கு நாரதர் மகனாகப் பிறந்தார். இது அவருக்குப் பிரம்மசாபத்தின்படி இரண்டாவது ஜன்மம். அவர் ஜாதிஸ்மரராகவே பிறந்தார். முற்பிறவிகளையும் அவற்றில் நடந்த நிகழ்ச்சிகளையும் நினைவில் இருத்திக் கொள்ளும் ஆற்றல் பெற்றவர்கள் ஜாதிஸ்மரர் எனப் பெறுவர்.

இந்தக் குழந்தை பிறக்குமுன்பு பெரிய பஞ்சம் நாட்டை வாட்டிக்கொண்டிருந்தது. இந்தக் குழந்தை பிறந்தவுடன் நல்ல மழைபெய்து, தாபம் தீர்ந்தது. அதனால் பெரியோர்கள் குழந்தைக்கு நாரதன் என்று பெயரிட்டனர். நாரம்-ஜலம். அதைக் கொடுத்ததனால் நாரதன். த்ரமிளன் காலகதியடைந்தான். கலாவதி, தன் குழந்தையைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வந்தாள். ஒரு நாள் நான்கு அந்தணர்கள் (ஸனகாதிகள்) கலாவதியின் வீட்டுக்கு வந்தனர். அவர்களுக்குப் பக்தி சிரத்தையுடன் அதிதிபூஜை நடந்தது. அவர்கள் உண்டு எஞ்சிய உணவை ஐந்து வயதான அந்தக் குழந்தை உண்டான். அவர்கள் குழந்தைக்கு ஸ்ரீக்ருஷ்ண மந்த்ரத்தை உபதேசித்தனர். அது முதல் அந்தக் குழந்தை அவர்களுக்கே தாஸனாகிவிட்டது.

கலாவதி இரவு வேளையில் வெளியில் சென்ற இடத்தில் பாம்பு கடித்து இறந்து வைகுண்டம் அடைந்தாள். நாரதர் அந்தணர்களுடன் சென்றுவிட்டார். அவர்கள் அவருக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசம் செய்துவிட்டுச் சென்றனர்.

நாரதர் கங்கைக் கரையிலுள்ள காட்டுக்குச் சென்று நீராடி, விஷ்ணு மந்த்ரத்தை ஜபம் செய்துகொண்டு தவம் இயற்றினார். ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தையே இடையறாமல் தியானம் பண்ணிக் கொண்டிருந்தார். ஒரு நாள் கிருஷ்ண பரமாத்மா சிறு குழந்தை வடிவத்தில் அவருக்குக் காட்சியளித்து மின்னல்போல் மறைந்தார். நாரதர் அவரைக்

காணுமல் கதறி அழுதார். ஆகாயத்தில் அசரீரி வாக்கு தோன்றியது: "இனி இரண்டாம் முறை கண்ணனைக் காண முடியாது. இந்த உடலுடன் உன் சாபம் தீர்ந்துவிடுகிறது. பிறகு உன் பழைய தன்மையுடன் ப்ரஹ்மஜ்ஞானியாகி நிரந்தரமாக எம்பெருமானை அநுபவிக்கும் வாய்ப்பு உண்டாகும்" என்றது அந்தக் குரல். நாரதரும் ஆறுதலடைந்தார். அந்த இடத்திலேயே தவம் செய்துகொண்டு பகவத் தியானத்துடன் ஆயுளுகிய உடலை நீத்தார். இரண்டு பிரம்மசாபங்களும் தீர்ந்தன. மீண்டும் பிரம்மாவின் உடம்பிலேயே சென்று சேர்ந்தார். அதில் ஐக்கியமடைந்து மறைந்தார். பிறகு அவரது கண்டத்திலிருந்து தோன்றினார். இதற்குள் சில கல்பங்கள் (ஊழிக்காலங்கள்) தோன்றி மறைந்தன. இது நாரதரின் வரலாறு. இனி இவருடைய அருமை பெருமைகளைப் பற்றி விவரிப்போம்.

உலக ப்ரஸித்தமான ராமாயணம் என்னும் இனிய ஆதிகாவ்யம் தோன்றியதற்கு மூலகாரணமாக இருந்தவர் நாரதரே என்பதை யாவரும் அறிவர்.

तपः स्वाध्यायनिरतं तपस्वी वाग्विदां वरम् ।
नारदं परिपप्रच्छ वाल्मीकिर्मुनिपुङ्गवम् ॥

தபஸ் ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம் ।
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம் ।।

என்பதே ஆதிகாவ்யத்தின் முதல் ச்லோகம். தவத்திலும் வேதத்திலும் ஊன்றியவரும், சிறந்த வாக்குவன்மை படைத்தவரும், முனிசிரேஷ்டருமான நாரதரை வால்மீகி முறைப்படி வணங்கிக் கேட்டார் என்பது கருத்து. அடுத்து வரும் ச்லோகங்களில், வால்மீகி முனிவர் கேட்ட கேள்விகள் கூறப்பெறுகின்றன. உத்தமமான கவிதையுள்ளம் படைத்த வால்மீகி முனிவர் தமது காவியத்துக்குத் தகுந்த கதாநாயகனைக் கூறுமாறு நாரதரை வினவினார்.

"நீர் கூறும் நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே அமைந்த ஒருவன் கிடைப்பது அரிது. ஆயினும் நான் அறிந்து சொல்லுகிறேன், கேளும்" என்று தொடங்கி, நாரத மகர்ஷி ஸங்க்ஷேப ராமாயணத்தை உபதேசித்தருளினார். உடனே கவிதை கிளர்ந்தெழுந்தது வால்மீகியின் உள்ளத்தில்.

வேதங்களின் உட்கருத்தை நன்கு அறிந்துகொள்வதற்கு ஏற்ற வழிகாட்டியான ராமாயணத்தை வால்மீகி குசலவர்களுக்கு

உபதேசித்தார். ஆதிகாவ்யம், ப்ரபந்தராஜன், இதிஹாஸரத்நம் என்று பலராலும் பலவாருகப் புகழ்ப்பெறும் ராமாயணம், வேதங்களின் தாத்பர்யத்தை அறுதியிடுவதற்கு இன்றியமையாததாக அமைந்திருக்கிறது. இன்றும் என்றும் இந்த இனிய காவியம் மங்காத விளக்காகி, மலைகள் போலவும் ஆறுகள் போலவும் மக்களுக்குப் பலவாருக உதவி புரிந்து நிலைத்திருக்கும் என்று வால்மீகியே கூறுகிருர். இப்படி ராமாயணம் தோன்றியதற்கு மூலகாரணமாக இருந்ததனுல் நாரத முனிவர் ரிஷிகளுள் முந்துறமுன்னம் நமது கவனத்தைக் கவர்கிருர்.

## அழகியசிங்கர் அவதாரம்

அழகியசிங்கரின் திருவவதாரத்துக்கு முக்கிய காரணமாக இருந்தவர் நாரத முனிவரே. அதனுலும் முனிவர்களுள் அவர் முதன்மை பெற்றவர். ஹிரண்யகசிபு என்னும் வலிமை மிக்க அஸுரன் நீண்ட நாள் தவம் செய்யச் சென்றிருந்த போது, அவனுடைய மனைவி கயாது கர்பமாக இருந்தாள். தேவேந்திரன் அவளை ஹிம்ஸிக்க முயலுகையில் நாரதர் குறுக்கிட்டுத் தடுத்து நிறுத்தினுர். அவளது கர்பத்தில் இருக்கும் குழந்தை தேவர்களைப் பன்மடங்கு அதிகமாகத் துன்புறுத்தும் என்ற அச்சம் இந்திரனுக்கு. "இந்தக் குழந்தை நீ நினைக்கிறபடி அல்லன். பாகவதோத்தமனுகிய இவன் பரம ஸாத்விகன். ஸாதுக்கள் அனைவருக்கும் உதாஹரணமாக அமைந்தவன். எல்லாப் பொருள்களையும் ஸமமாகப் பார்ப்பவன்" என்று நாரதர் இந்திரனிடம் சொல்லிக் கயாதுவைக் காப்பாற்றினுர்.

"கர்பிணியாக இருந்த என் தாய்க்கு நாரதர் பலவாருக உபதேசங்கள் பண்ணினுர். ஸ்ரீமந்நாராயணனுடைய பரதத்துவமான நிலையையும், கல்யாண குணங்களையும் பரக்க உபதேசித்தார். கர்பத்தில் இருந்த என்னை நோக்கியும் உபதேசித்தார். காலப்போக்கில் என் தாயின் மனத்தை விட்டு அவை அகன்றுவிட்டன. எனக்கோ பசுமரத்தாணி போல் மனத்தில் பதிந்துவிட்டன" என்கிருன் ப்ரஹ்லாதன். ப்ரஹ்லாதனை இப்படிக் 'கருவிலே திருவுடையவனுக' அருளியவர் நாரதர். அவனைக் காப்பதற்காகவே ஸ்ரீ அழகியசிங்கர் அவதரித்தார்.

ஹிரண்யகசிபுவை ஸம்ஹரிப்பது இருந்த இடத்திலேயே ஸங்கல்பமாத்திரத்தால் பகவானுக்கு ஸாத்யமே. ப்ரஹ்லாதனுக்கு ஸேவை ஸாதித்தருளவே விலக்ஷணமான ஓர் அவதாரம் செய்தருளினுர்.

## பெயரின் பொருள்

'எல்லாருக்கும் ஜ்ஞாநத்தை வழங்குவதில் நாரதருக்கு ஏன் இவ்வளவு ஆர்வம்?' என்ற கேள்வி எழுகிறது. நெருப்பு ஏன் சுடுகிறது? காற்று ஏன் ஓடிக்கொண்டே இருக்கிறது? அது போலத்தான் இதுவும் இயற்கையிலேயே தோன்றியது. சுடுவதற்காகவே பகவான் நெருப்பைப் படைத்தார்; ஜ்ஞாநத்தை உபதேசிப்பதற்காகவே நாரதரைப் படைத்தார். இவரது பெயரே இதை உணர்த்துகிறது. நாரம் ததாதி இதி நாரத:. "நாரம்" என்ருல் ஜ்ஞாநம். அதைக் கொடுப்பவர் என்று பொருள். 'நாரம்' என்பது பகவானைப்பற்றிய ஜ்ஞாநம். அதைக் கொடுப்பவர் நாரதர். நாரம் என்பது ஜலத்தையும் குறிக்கும். பித்ருக்களுக்குத் தர்ப்பணம்செய்து எப்பொழுதும் தண்ணீரைக் கொடுத்துக்கொண்டே இருப்பாராம் இவர்.

नारं पानीयमित्युक्तं तत् पितृभ्यः सदा भवान् ।
ददाति तेन ते नाम नारदेति भविष्यति ॥

நாரம் பாநீயமித்யுக்தம் தத் பித்ருப்ய: ஸதா பவாந் ।
ததாதி தேந தே நாம நாரதேதி பவிஷ்யதி ॥

என்னும் புராண வசனம் இந்தக் கருத்தில் தோன்றியதே.

## சிறுவனுக்கு உபதேசம்

ஐந்து வயதுள்ள பாலகன் த்ருவன் கடுமையான தவத்தில் இழிந்து முழு வெற்றியுடன் மீண்டான். இவன் நாரதருடைய இன்னருளைப் பெற்று 'த்வாதசாக்ஷர' மந்த்ரத்தை அவரிடம் கேட்டுக்கொண்டான். அவர் சொற்படியே குறிப்பிட்ட புண்யபூமியில் முறைப்படி கடுந்தவம் புரிந்தான். தேவர்களும் அச்சங் கொண்டு அவனது தவத்தைக் கெடுக்கப் பலவாருக முயன்றனர். இந்தச் சோதனைகளை உறுதி தளராமல் தாண்டிச் சிறுவன் வெற்றி கண்டான். ஸ்ரீமந்நாராயணனே நேரில் வந்து தோன்றி அருள் புரிந்தார். இவை நாரதர் திட்டமிட்டபடியே நடந்த நிகழ்ச்சிகள்.

ப்ரஹ்லாதாழ்வானுக்குக் கருவிலேயே திவ்ய ஜ்ஞானத்தை அருளினார் நாரதர். அது இவ்வளவு கஷ்டமானதல்ல. ஏனெனில் கர்பத்தில் இருக்கும் சிசு மகரிஷிகளைப் போலவே ஸர்வஜ்ஞனாகத்தான் இருக்கிறது. அதனால் இவருடைய உபதேசம் இன்னவிதமானது என்பதையும், அதன் தத்துவத்தையும் அது நன்கு புரிந்துகொள்ளும் வாய்ப்பு உண்டு. ஆனால், பிறந்தவுடன் எல்லாவற்றையும் அறவே மறந்து சாதாரணக் குழந்தையாக மாறிவிடும் இயல்பு தவிர்க்க முடியாதது. அந்த இயல்பை நீக்கி, ப்ரஹ்லாதனுக்குக் கர்பத்தில் இருந்த ஜ்ஞானம் பிறந்தபின்பும் தொடர்ந்து வந்து நிலைத்து நிற்கும்படி செய்த பெருமை நாரதருடையதே. த்ருவன் விஷயமோ இதற்கு முற்றும் மாறானது. நாலைந்து வயது வளர்ந்தவன் இவன். இளைய தாயாரின் கடுஞ்சொற்களைத் தாங்க மாட்டாமல் பகவானிடமே பரிஹாரம் கேட்கப் போனவன். இவனுக்கு நாரதர் பரமாத்ம ஜ்ஞானத்தை அருளியது மிகப் பெரிய சாதனை. யார் யாருக்கு எந்த எந்த ஸமயத்தில் உபதேசத்துக்குப் பரிபக்குவமான மனநிலை இருக்கும் என்பதை நன்கு உணர்ந்து ஜ்ஞானத்தைக் கொடுத்துப் பழக்கப்பட்டவராதலால் 'நாரதர்' என்ற பெயர் இவருக்குப் பொருத்தமாகிறது.

## சித்திர கேது

சூரஸேன தேசத்தில் சித்திரகேது என்ற பேரரசன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் பல மனைவியர் இருந்தும், பிள்ளை இல்லாத குறை இருந்தது. பிரம்மாவின் குமாரரான அங்கிரஸ், தற்செயலாக அவனுடைய இருப்பிடத்துக்கு வந்தார். அவனுடைய மனக்குறையைக் கேட்டறிந்து, த்வஷ்டாவைக் குறித்து ஒரு யாகம் செய்தார். அதில் ஹோமம் பண்ணி மீதியான அன்னத்தை அரசனிடம் கொடுத்து, "உன் மனைவியருள் ஒருத்திக்கு இதைக் கொடுத்துச் சாப்பிடச் சொல். அழகான குழந்தை பிறக்கும்" என்று சொல்லிச் சென்றார் அங்கிரஸ்.

அரசன் பேருவகையுடன் தன் மூத்த மஹிஷியான க்ருதத்யுதி என்பவளுக்கு ஹவிஸ்ஸை கொடுத்தான். எதிர் பார்த்தபடியே அழகிய குழந்தை பிறந்தது. சித்திரகேதுவுக்கு ஸந்தோஷம் தாங்கவில்லை. அளவில்லாத தான தர்மங்களைச் செய்தான். ஆனால்

குழந்தை அல்பாயுஸ்ஸாகி இறந்துவிட்டது. ஆயிரக்கணக்கான மாற்றாந்தாய்மார் நடுவில் நீண்ட நாள் அது பிழைத்திருக்க முடியுமா? அதற்கு விஷம் கொடுக்கப்பட்டது. தொட்டிலில் தூங்கின குழந்தை எழுந்திருக்கவே இல்லை.

க்ருதத்யுதி ஓடோடி வந்து பார்த்தாள்; உண்மையை உணர்ந்தாள். அரசனும் மற்றவர்களும் கூடிப் புலம்பினர். மீளாத் துயரத்தில் ஆழ்ந்த அரசனைத் தேற்றுவதற்கு நாரதரையும் அழைத்து வந்தார் அங்கிரஸ். இறந்து போன குழந்தையை நாரதர் பேச வைத்து, அதன் வாயினாலேயே அரசனுக்குத் தத்துவத்தை உணர்த்தினர். அரசனுக்கு மனத்தெளிவு ஏற்பட்டது. பிறகு நாரதர் அவனுக்கு ஒரு மந்த்ரத்தையும் உபதேசித்தார். அந்த வித்தையை மனத்தில் தரித்து முறைப்படி உபாஸனம் செய்து சித்திரகேது நற்கதியை அடைந்தான்.

## த்ரிலோக ஸஞ்சாரி

இப்படி ஸந்தர்பம் வாய்க்கும்போதெல்லாம் ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசித்து நல்வழிப்படுத்தும் ஸ்வபாவம், ஒரு ஸமயம் நாரதருக்குத் தீங்காகிவிட்டது. "எந்த இடத்திலும் நிலைத்து நில்லாமல் மூவுலகங்களிலும் ஸதா ஸர்வகாலமும் சுற்றித் திரிந்துகொண்டே இருக்க வேண்டும்" என்று தக்ஷப்ரஜாபதி நாரதரைச் சபித்துவிட்டார். நாரதர் என்ன செய்வார்? பாவம்! நிலையான இருப்பிடம் இல்லாமல் திரிந்துகொண்டே காலம் கழிக்கிறார். சாபத்தின் வரலாறு இது —

தக்ஷப்ரஜாபதிக்குப் பாஞ்சஜன்யா என்ற மனைவியிடம் ஹர்யச்வர்கள் என்னும் பதினாயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். உலகில் ப்ரஜைகளை ஏராளமாக ஸ்ருஷ்டி பண்ணும்படி பிரம்ம தேவனுடைய கட்டளைக்கிணங்க இது நடந்தது. தன் குமாரர்கள் அத்தனை பேரையும் தம்மைப் போலவே ப்ரஜைகளை உண்டுபண்ணுமாறு தக்ஷப்ரஜாபதி ஆஜ்ஞாபித்தார். அவர்கள் அவரது உத்தரவை ஏற்றுக்கொண்டு மேற்கு ஸமுத்திரக் கரையில் ஸிந்து ஸமுத்திர ஸங்கமத்தில் நாராயண தீர்த்தத்தில் நீராடித் தவம் புரிந்தனர், நிறைய ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பதற்காக. அந்தப் புண்ய தீர்த்தத்தின் ஜலத்தைத் தொட்டவுடன் அவர்களுக்குத் துறவு

மனப்பான்மை ஓங்கியது. ஸம்ஸார ஸுகங்களில் வெறுப்புற்றனர். இந்தப் பரிபக்குவமான நிலைமையை உணர்ந்த நாரதர் தற்செயலாக அங்கே தோன்றினார். அவர்களுக்குப் பரப்ரஹ்ம விஷயமான தத்துவங்களை உபதேசித்தார். தங்கள் பிதாவின் கட்டளையை அவர்கள் நினைவு கூர்ந்தனர். சில கபட வார்த்தைகளைச் சொல்லி, ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பது அஸாத்தியம் என்று வாதித்தார் நாரதர். ப்ரஹ்மஜ்ஞானம் ஓங்கி வளர்ந்தது. அவர்கள் பதினாயிரம் பேரும் அப்படியே பரமபதம் அடைந்துவிட்டனர்; இல்லறத்தில் இழியவே இல்லை.

இதை அறிந்து தக்ஷப்ரஜாபதி பெரிதும் வருந்தினார். பிரம்மா அவரைத் தேற்றினார். மீண்டும் பாஞ்சஜன்யாவிடம் சபளாச்வர்கள் என்னும் ஆயிரம் பிள்ளைகளை உண்டு பண்ணினார் தக்ஷப்ரஜாபதி. "நீங்கள் ஆயிரக்கணக்கில் ப்ரஜைகளை ஸ்ருஷ்டியுங்கள்" என்று பணித்தார் பிதா. அவர்கள் அவரது கட்டளையைச் சிரமேற்கொண்டு, அதே ஸிந்து ஸமுத்திர ஸங்கமத்தில் நாராயண தீர்த்தத்தில் நீராடித் தவம் செய்தனர். தீர்த்த மகிமையால் மனம் தெளிந்தது. நாரதர் தோன்றினார், ஜ்ஞானோபதேசமும் நடந்தது. இவர்களும் துறவு பூண்டு இல்லறத்தை வெறுத்து எம்பெருமான் பாதார விந்தங்களையே த்யானித்து மோக்ஷமடைந்தனர். தக்ஷப்ரஜாபதிக்கு இவ் விஷயம் தெரிந்ததும் கடுஞ்சினம் கொண்டார்; நாரதரைப் பலவாறாக இகழ்ந்தார்; சாபமும் தந்தார். "மூடனே, உனக்கு ஒரு நிலையான இடம் இராது. உலகங்களில் சுற்றித் திரிவாய்" என்பது தக்ஷ சாபம். இதனால் நாரதர் நிலையான இடம் இல்லாதவராக திரிலோக ஸஞ்சாரியாகிவிட்டார்.

## கலகப்ரியர்

'நாரத: கலஹப்ரிய:' என்பது பிரசித்தி பெற்ற பழமொழியாகிவிட்டது. கலஹம் என்றால் சண்டை என்று பொருள். இங்கு அவ்வளவில் நில்லாமல் சண்டைக்குக் காரணமான கோட்சொல்லும் செயலையும் உணர்த்தும். இவ்விரண்டும் நாரதருக்கு மிக மிகப் பிரியமானவை. துஷ்டர்களை நிக்ரஹம் பண்ணுவதும் சிஷ்டர்களைப் பரிபாலனம் பண்ணுவதும் பகவானுடைய தொழில். அத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டது

நாரதருடைய செயல். ஒவ்வொரு கட்டத்திலும் கதையின் போக்கைக் கூர்ந்து கவனித்தால் இந்த உண்மையை நன்கு உணரலாம். பொதுவாகப் புராணக் கதைகளிலும் அவற்றை நடிக்கும் நாடக மேடைகளிலும் விறுவிறுப்பான திருப்பம் கொடுத்து ஊக்கத்துடன் ஈடுபடச் செய்வது நாரதரின் தோற்றமே. நாரதருடைய கலகம் ஒவ்வொன்றும் நியாயமானது; அதன்மூலம் மக்களுக்கு நன்மையே உண்டாகிறது. உலக க்ஷேமத்துக்காக, பகவானுடைய தூதராக அவன் திருவுள்ளப்படி நடந்து கொள்வதே பாகவதோத்தமராகிய இவருக்குப் பிடித்தமானது. சில உதாரணங்களினால் இதை விளக்குவோம்.

பாகவதக் கதையில், க்ருஷ்ணாவதாரத்துக்கு முன்பு வஸுதேவரும் தேவகியும் கம்ஸனால் சிறையில் அடைக்கப் பட்டிருந்தனர். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளில் எட்டாவது தன்னைக் கொல்லும் என்பதை அசரீரி வாக்கினால் கம்ஸன் அறிந்திருந்தான். தமக்குக் குழந்தைகள் பிறக்குமானால் உடனுக்குடன் அவற்றைக் கம்ஸனிடம் தயங்காமல் கொண்டு வந்து கொடுத்துவிடுவதாக ப்ரதிஜ்ஞை செய்து, மணமகளான தேவகியைக் கொல்லாதிருக்குமாறு வஸுதேவர் அவனை வேண்டிக்கொண்டார். அவன் அதற்கு இசைந்தான். தேவகி காப்பாற்றப்பட்டாள்.

முதல்முதலில் பிறந்த குழந்தையை, உடன்பாட்டின்படி வஸுதேவர் கம்ஸனிடம் கொண்டு போய்க் கொடுத்தார். அவனுக்கு ஒரு திடீர் மாற்றம் உண்டாயிற்று. 'ப்ரதிஜ்ஞையை இப்படிக் காப்பாற்றுகிறவர்கள் உண்டா?' என்று பிரமித்துவிட்டான். சற்று நேரம் யோசித்தான். குழந்தையைக் கொல்லவில்லை; திருப்பி அனுப்பிவிட்டான். 'எட்டாவது குழந்தையினால்தானே எனக்குச் சாவு? இது முதல் குழந்தை. இதை ஏன் கொல்ல வேண்டும்?' என்பது அவனுடைய முடிவு. வஸுதேவர் இவனது செயலில் முழு நம்பிக்கை இல்லாமலே குழந்தையுடன் திரும்பிச் சென்றார்.

உடனே அங்கு நாரதர் வந்தார். அந்தக் குழந்தையையும், பிறகு பிறக்கப் போகும் எல்லாக் குழந்தைகளையும் தவறாமல் கொன்றுவிடுமாறு கம்ஸனுக்குக் கலகம் செய்தார். அவ்வாறே

வஸுதேவருடைய ஆறு குழந்தைகளை இரக்கமில்லாமல் கம்ஸன் கொன்றான். 'நாரதர் தலையிடாமல் இருந்திருந்தால் அந்தக் குழந்தைகள் சாகாமல் பிழைத்திருக்குமே. இவராக வலிய நுழைந்து சிசுஹத்யையை விளைவித்தாரே!' என்றுதான் நமக்குத் தோன்றுகிறது. ஆனால் உண்மை அதுவன்று. ஹிரண்யகசிபுவின் பிள்ளைகள் ஆறு அவ்வாறாகப் பிறந்தன. அஸுராம்சமான அவை கொல்லப்பட வேண்டியவையே. இவ்வாறான பகவத் ஸங்கல்பத்தை உணர்ந்த நாரதர் நேராகக் கம்ஸனிடம் சொல்லி இதை நிறைவேற்றினார்.

ரிக்வேதம், எட்டாவது மண்டலம், 13-ஆம் ஸூக்தம், 'இந்த்ரஸ்ஸுதேஷு' என்று தொடங்குகிறது. இதில் 33 மந்த்ரங்கள் உள்ளன. இதைக் கண்டு உபதேசித்தவர் நாரத ரிஷி. இவர் கண்வருடைய புதல்வர் அல்லது கண்வ கோத்திரத்தில் உதித்தவர்.

ரிக்வேதத்தில் 9-ஆம் மண்டலம், 104-105-ஆம் ஸூக்தங்கள் ஆகிய இரண்டும், கண்வருடைய புதல்வர்களான அல்லது கோத்திரத்தில் தோன்றியவர்களான நாரதர், பர்வதர் என்னும் ரிஷிகள் இருவரால் காணப்பெற்றவை. இவை முறையே 'ஸகாய:' என்றும், 'தம் வ:' என்றும் தொடங்குகின்றன.

நாரதீய புராணம் என்பது நாரதரால் தோன்றியது. பூர்வகண்டம், உத்தரகண்டம் இரண்டும் சேர்ந்து 207 அத்தியாயங்கள் கொண்டது. நாரதகீதா என்ற கீதையும் இவர் பெயரில் கிடைக்கிறது. நாரத ஸ்ம்ருதி என்ற தர்மசாஸ்திரமும் இவர் பெயரால் உள்ளது. நாரத தந்த்ரம், நாரத பாஞ்சராத்ரம், நாரத பரிவ்ராஜகோபநிஷத், நாரத சீக்ஷா, நாரத சதகம், நாரத ஸம்ஹிதா, நாரதோபநிஷத், நாரத ஸ்தோத்ரம், நாரத பக்திஸூத்ரம் என்று இப்படிப் பல துறைகளில் பல நூல்கள் இவர் பெயரால் வழங்குகின்றன. பஜன ஸம்ப்ரதாயஸ்தர்கள், தொடக்கத்தில் ப்ரஹ்லாதர், நாரதர் முதலியவர்களை வணங்கியபிறகே நாம ஸங்கீர்த்தனத்தில் ஈடுபடுவது வழக்கம். அந்தத் துறையில் இவர் வழிகாட்டியாக இருந்தவர் என்பதே இதற்குக் காரணம். ஸங்கீத சாஸ்திரத்தின் ஆழமறிந்தவர் நாரதர். இவர் கையில் எப்போதும் 'மஹதீ' என்ற பெயருள்ள வீணை இருக்கும். வீணையின் இனிய ஓசையினால் இறைவனை வசப்படுத்தும் சக்தி இவருக்கு உண்டு.

'ஸங்கீத மகரந்தம்' என்ற நூல் நாரதரின் பெயரால் வழங்குகிறது. இன்று நம் புண்ணிய பாரதபூமியில் பல வேறு இடங்களிலும் ஸங்கீதம் கற்பிக்கும் ஆசிரியர்கள் அனைவரும் தங்கள் குருபரம்பரையில் முதன்மையான இடத்தை நாரதருக்கு அளித்திருக்கின்றனர். 'தும்புரு நாரதர் புகுந்தன ரிவரோ' என்று, தொண்டரடிப்பொடி யாழ்வாரின் அருளிச்செயல் இவரைச் சிறந்த பாடகராகக் குறிப்பிடுகிறது.

சாந்தோக்யோபநிஷத், ஏழாம் ப்ரபாடகத்தில் வரும் வரலாறு இது— நாரதர் ஸநத்குமாரரை அணுகி, ப்ரஹ்ம ஜ்ஞாநத்தை அருளும்படி கேட்கிறார். தாம் கற்றதை எல்லாம் வரிசையாகக் கூறுகிறார் அங்கு. "ரிக்வேதம் தொடங்கி ஒன்று விடாமல் கற்றுத் தேர்ந்த நான் ஆத்மஜ்ஞாநத்தைப் பெறாமல் சோகக் கடலில் ஆழ்ந்திருக்கிறேன். தாங்கள் என்னைக் கரை சேர்த்தருள வேண்டும்" என்று பணிவுடன் வேண்டிக்கொள்கிறார் நாரதர் ஸநத்குமாரரை. பூமவித்யையை அவரிடம் கேட்டறிந்து உலகுக்கு வழங்கியதன் மூலம் ப்ரஹ்மவித்யாசார்யரானார் நாரதர்.

உலகத்தின் க்ஷேமத்துக்கு நாரதர் பேருபகாரம் செய்தவர். அவரையும் அவருடைய செயல்களையும் சொல்வதும் நினைப்பதும் நம்மைப் புனிதமாக்கும். அவரது பெருமை அளவிட முடியாதது.

# வால்மீகி

நாரதருடைய சிஷ்யர்களுள் முக்கியமானவர் வால்மீகி. பாரத நாட்டுக்கே தனிப் பெருமை தரும் ராமாயணம் என்னும் உலகப் பிரசித்தமான உத்தம ஆதி காவியத்தின் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய வால்மீகி முனிவரை அறியாதார் அறியாதாரே.

ராமாயணத்தை வாசிக்காதவன், இந்தப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்காதவன், பெரும் துரதிருஷ்டக்காரப் பிறவியே.

जाते जगति वाल्मीकौ कविरित्यभिधाऽभवत् ।
कवी इति ततो व्यासे कवयस्त्वति दण्डिनि ॥

ஜாதே ஜகதி வால்மீகௌ கவிரித்யபிதாபவத் ।
கவீ இதி ததோ வ்யாஸே கவயஸ்த்விதி தண்டிநி ॥

என்பது பழமொழி. 'கவி' என்னும் சொல் நெடுநாள் வரை வால்மீகி ஒருவரையே உணர்த்த வல்லதாக அவருடன் தோன்றி ஒருமையிலேயே நின்றது. வ்யாஸர் தோன்றியதும் அந்தச் சொல்லில் 'த்விவசனம்' ஏற்பட்டது. தண்டி என்னும் மகாகவி தோன்றியதும் அது பன்மையையும் பெற்று விட்டது என்பது இதன் கருத்து.

वसुधाश्रोत्रजे तस्मिन् व्यासे च हृदयस्थिते ।
अन्येऽपि कवयः कामं बभूवुरनपत्रपाः ॥

வஸுதாச்ரோத்ரஜே தஸ்மிந் வ்யாஸே ச ஹ்ருதயஸ்திதே ।
அந்யேபி கவய: காமம் பபூவுரநபத்ரபா: ॥

என்பது ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனுடைய தீர்ப்பு. வால்மீகியையும் வ்யாஸரையும் அறிந்த மற்றவர், தம்மையும் கவிகளாகக் கூறிக்கொள்வது வெட்கக்கேடான செயல் என்பது கருத்து. இவ்வாறு கூறும் நம் ஆசார்ய ஸார்வபௌமர், கவி என்னும் சொல்லின் பொருளையும் நன்கு விளக்கிக் கூறுகிறார்.

स कविः कथ्यते स्रष्टा रमते यत्र भारती ।
रसभावपराख्यानैरलङ्कारैर्गुणोदयैः ॥

ஸ கவி: கத்யதே ஸ்ரஷ்டா ரமதே யத்ர பாரதீ ।
ரஸபாவபராக்யாநைரலங்காரைர்குணைதயை: ॥

படைக்கும் கடவுளாகிய நான்முகன் போன்றவனே கவி. அதனிலும் இவனது படைப்பு குறைந்ததல்ல. ரஸங்கள், பாவங்கள், அலங்காரங்கள், குணங்கள் இவை நிரம்பிய ஸரஸ்வதி எவனிடம் தானகவே இன்பமுற்று விளங்குகிருளோ அவனே கவி என்பது கருத்து.

பூமியில் துளைபோல் அமைந்த புற்றைக் கவிகள் 'பூமியின் காது' என்று வர்ணிப்பர். அத்தகைய புற்றிலிருந்து தோன்றியவர் வால்மீகி.

வால்மீகியின் கவிதை தனிச் சிறப்புடன் விளங்குவதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்ந்து தீர்ப்புக் கூறுகிருர் காளிதாஸ மகாகவி —

तामभ्यगच्छद् रुदितानुसारी
कविः कुशेध्माहरणाय यातः ।
निषादविद्धाण्डजदर्शनोत्थः
श्लोकत्वमापद्यत यस्य शोकः ॥

தாமப்யகச்சத் ருதிதாநுஸாரீ
கவி: குசேத்மாஹரணய யாத:
நிஷாதவித் தாண்டஜதர்சநோத்த:
ச்லோகத்வமாபத்யத யஸ்ய சோக: ॥

— ரகுவம்சம், 14.70.

உத்தர ராமாயணக் கதை இது — தனிமையில் நடுக்காட்டில் விடப்பட்ட சீதையின் புலம்பல் வால்மீகி முனிவரின் காதில் விழுந்தது. தர்பமும் ஸமித்தும் கொண்டு வரச்சென்ற கவி அந்தப் புலம்பல் வந்த திசையில் சென்று சீதையைக் கண்டார். இவரைக் கவி என்று ஏன் சொல்லுகிறேன், தெரியுமா? ஒரு வேடன் ஒரு பறவையை அம்பிஞல் அடித்துக் கொன்ருன். அது இவர் கண்ணெதிரில் நிகழ்ந்தது. இவருக்குத் தாங்க முடியாத சோகம் உள்ளத்தில் கிளர்ந்தெழுந்தது. வாய் விட்டுப் புலம்பினர். அந்தப் புலம்பல் ஓர் அழகிய ச்லோகமாக வடிவம் கொண்டது. இவரது

உள்ளத்தில் குமுறிக்கொண்டிருந்த இந்த சோகத்தைப் பிறர் உணருவது அசாத்தியம். அதை அவ்வாறே - உள்ளது உள்ள படியே - நூற்றுக்கு நூறு பங்கு மற்றவர்களது உள்ளத்தில் தெளிவாகப் பதியும்படி இந்த ச்லோகம் செய்துவிடுகிறது. இது சாதாரணமான காரியமல்ல; மிகப் பெரிய அரிய சாதனை. கவிதையின் தத்துவமே இதுதான். நல்ல பண்பாடடைந்த உள்ளம், அதில் தோன்றும் அழகிய உணர்ச்சிகள், அவற்றை அநாயாஸமாக, தெளிவாக விளக்கவல்ல எளிய சொற்கள் - இவைதாம் கவிதைக்கு ஜீவநாடி போன்றவை. இவை அனைத்தும் இவரிடம் இயற்கையிலேயே அமைந்திருந்தன. அதனால் கவி என்னும் சொல்லை முழுக் கருத்தும் சிதையாமல் பிரயோகித்தால் அது வால்மீகி முனிவர் ஒருவரையே குறிக்கும் என்று காளிதாஸ மகாகவி பெருமையுடன் கூறுகிறார்.

கவிதையின் தத்துவம் கவிக்குத்தான் தெரிகிறது. ஈடு இணையற்ற காளிதாஸ மகாகவியே வால்மீகி முனிவரை இவ்வாறு புகழ்வதனால் ஓர் உண்மை புலனாகிறது. கவிதையில் வால்மீகி முனிவருக்குக் கிடைத்த முழு வெற்றி, காளிதாஸர் உட்பட மற்றவர் எவருக்கும் கிடைக்கவில்லை என்பதுதான் அது. மிகவும் கம்பீரமாகத் தமது அழகிய கவிதையில் காளிதாஸ மகாகவி இதை வெளியிடும் முறை ரஸிக்கத்தக்கது.

இவ்வாறாகக் கவிதையின் அடிப்படையான தத்துவத்தையே எடுத்துக் காட்டவல்ல முறையில் அதியற்புதமாக வால்மீகி முனிவரின் ராமாயணம் அமைந்துவிட்டதனால், இதை 'ஆதி காவியம்' என்றும், வால்மீகி முனிவரை 'ஆதி கவி' என்றும் அனைவரும் ஒருங்கே புகழ்வது பொருத்தமே. இப்போது உலகில் நிலவி வரும் பல வகையான ஸம்ஸ்க்ருத காவிய நாடகங்கள் முதலிய இலக்கிய நூல்கள் அனைத்துக்கும் முதலில் தோன்றியதனாலும், ஏனைய நூல்கள் யாவற்றிலும் இதன் நிழல் படிந்திருப்பது மறுக்க முடியாத உண்மையானதனாலும் இதை ஆதி காவியம் என்பர்.

## சரித்திரம்

இப்படி உலகப் புகழ் பெற்ற ஆதி கவி வால்மீகியின் பிற்காலத்தையே நாம் அறிவோம். ராமபக்தர்களுள் சிறந்தவரும்

முதன்மையானவருமாகிய இவருடைய பூர்வ சரிதம் விசித்திரமாகவே அமைந்துள்ளது.

அயோத்தி மாநகரை அடுத்த அடர்ந்த காட்டில் மிக்க வறுமை சூழ்ந்த ஓர் அந்தணக் குடும்பம் வஸித்து வந்தது. அதன் தலைவனுகிய அந்தணன் நாள்தோறும் தன் குடும்பத்தினருக்கு உணவு தேடும் பொறுப்பை மிகவும் கஷ்டப்பட்டு நடத்தி வந்தான். நியாயமான வழிகளில் இது நடவாமற்போனதனுல் தீய வழிகளிலும் அவன் இழிந்தான். வழிப்போக்கர்களை மடக்கிப் பயமுறுத்தி அவர்களிடமுள்ள பொருள்களைப் பறித்துத் தன் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தான். இதுவும் பயனளிக்காமற் போயிற்று. தினந்தோறும் பெரும் பொருளுடன் அவன் இருக்கும் ஒற்றை வழியில் யாராவது வந்துகொண்டே இருக்க வேண்டுமே? ஏற்கெனவே பொருளைப் பறிகொடுத்தவர் கூறிய அநுபவ வார்த்தைகளைக் கேட்டு அஞ்சி, அவ் வழியில் யாரும் அரிய பொருள்களை எடுத்துச் செல்வதில்லை. அந்தணனுக்குப் பிழைக்கும் வழி தெரியவில்லை. குடும்பமோ பெரிது. என்ன செய்வான், பாவம்!

வழிப்போக்கர்களை அவன் குண்டாந்தடியால் அடித்துக் கொன்று அவர்களிடம் இருந்த பொருளை எடுத்துச் செல்வான். அதைக் கொண்டு குடும்பம் நடந்து வந்தது. எவ்வளவு கால தாமதமானுலும் குடும்பத்தினர் கவலை யாதுமின்றி அவனது வரவையே எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு இருப்பரேயன்றி ஒரு சிறு முயற்சியும் செய்யார். குடும்பத் தலைவனுக்கும் குடும்பத்திலுள்ள மற்றவர்களுக்கும் இந்த முறை மிக மிகப் பழக்கமாகிவிட்டது.

## ஸப்தரிஷிகள் வருகை

ஒரு நாள் அதிகாலையில் வழக்கம் போல் கையில் குண்டாந்தடியுடன் ஒற்றையடிப் பாதையில் அவன் பதுங்கி யிருந்தான். ஒருவர் பின் ஒருவராக ஏழு பேர் அந்த வழியே நடந்து வரலாயினர். விலக்ஷணமான தோற்றம். முகத்தில் ஜ்வலிக்கும் ப்ரஹ்மவர்ச்சஸம். கண் கூசுகிறது; பார்க்கவே முடியவில்லை. கையில் கமண்டலத்துடன் வேதங்களை கோஷித்துக் கொண்டு வருகின்றனர். அவன் பார்த்தான்; பிரமித்துப் போய்விட்டான்.

அந்த ஏழுபேரில் யாராவது ஒருவரைத் தாக்கினுல் போதும் அவனுக்கு. 'எழுவருள் எவரைத் தாக்குவது?' என்று யோசித்தான். இது அர்த்தமற்ற கேள்வி. யாராக இருந்தால் என்ன? ஒருவாருக முடிவு செய்துகொண்டு மறைவாக அவர்களைத் தொடர்ந்தான் அவன். அவர்கள் இதை அறியாதவர்கள்போல் நிம்மதியாகக் கவலையற்று நடந்து ஒரு கிணற்றின் கரையைச் சேர்ந்தனர். தம்முடைய பொருள்களைத் தரையில் வைத்துவிட்டு, கோஷ்டியாக அமர்ந்தனர்.

அந்தணனுக்குத் தன்னையும் அறியாதவாறு மனத்தில் என்னவோ குழப்பம். அவன் திடீரென்று அவர்கள்முன் தோன்றினுன். ஸாஷ்டாங்கமாக வணங்கினுன். அருளே வடிவெடுத்தாற் போல் தோன்றிய அவர்கள் அவனைப் பரிவுடன் ஆசீர்வதித்து க்ஷேமம் விசாரித்தனர். தங்களை அவன் நாடுவதற்குக் காரணத்தையும் கேட்டனர். அவன் தயங்காமல் உண்மையை வெளியிட்டான். அவன் குடும்பத்துக்கு அன்றைய தினத்துக்கான உணவு அவ்வெழுவருள் ஒருவரை அடித்து வீழ்த்தி அவருடைய பொருளை எடுத்துச் சென்ருல்தான் கிடைக்கும். அதற்கான நடவடிக்கையை அவசரமாக எடுத்தாக வேண்டும் என்று ஒளிவுமறைவில்லாமல் கூறிவிட்டான். அதைக் கேட்ட அவர்கள் சிறிதும் கலக்க முறவில்லை. அவனுக்கும் அது புதுமையாக இருந்தது.

முனிவர்களுள் ஒருவர், "உன் விருப்பப்படியே செய். எங்களுக்கு ஏதும் தடை இல்லை. பாவம்! உன் க்ஷேமத்துக்காக ஒரு கேள்வி கேட்கிருேம். முந்துறமுன்னம் அதைத் தெளிந்து கொள்வாயாக" என்ருர்.

"அதென்ன அவ்வளவு முக்கியமான விஷயம்?" என்று கேட்டான் அந்தணன்.

"நல்ல நிலைமையில் உயிர் வாழும் ஒருவரை அடிப்பது கொடிய பாவமல்லவா?"

"ஆமாம், இது எனக்குத் தெரியும். வேறு வழியில்லாமல் தெரிந்தே தினமும் இதைச் செய்கிறேன்."

"ஒரு மனிதனை அடித்து எடுத்துச் சென்ற பொருளை நீ ஒருவனே அநுபவிப்பாயா?"

"இல்லை; என் குடும்பத்திலுள்ள அனைவரும் சேர்ந்து அநுபவிப்போம்."

"நீ கொண்டு போகும் பொருளை விரும்பி ஏற்றுக்கொள்ளும் உன் குடும்பத்தினர், இந்தக் கொடிய பாவத்திலும் தக்கவாறு பங்கு கொள்கின்றனரா?"

"இது எனக்குத் தெரியாது. என் கடமையை நான் செய்து வருகிறேன். குடும்பத் தலைவன் வீட்டிலுள்ளோர் அனைவருக்கும் உணவு கொடுக்க வேண்டாமா?"

"நல்லது. அவ்வாறே உணவுக்காக அவன் செய்யும் பாவங்களிலும் குடும்பத்திலுள்ளவர்கள் அவரவருக்கு ஏற்ற விகிதத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்."

"இதைப்பற்றி இப்பொழுது என்ன விசாரம்?"

"இதுதான் இப்போது மிக மிக முக்கியமான விஷயம். மகாபாதகமான செயலைச் செய்து மலைபோல் பாவங்களை வளர்த்து வரும் நீ, உன் குடும்பத்தினரால் வஞ்சிக்கப்படுகிறாய். நாங்கள் இங்கேயே - ஓர் அடிகூட நகராமல் - உட்கார்ந்திருக்கிறோம். நீ திரும்பி வருகிறவரையில், நீ இப்பொழுதே அவரசமாக உன் வீட்டுக்குப் போக வேண்டும். அங்குள்ள உன் குடும்பத்தினரைப் பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்டு, அவர்கள் கூறும் பதிலைத் தெரிந்து கொண்டு வர வேண்டும். பிறகு உன் விருப்பப்படி எங்களுக்குள் யாரை வேண்டுமானாலும் தாக்கலாம்."

"ஓ! இது நல்ல யோசனை! என்னை வீட்டுக்கு அனுப்பி விட்டு நீங்கள் தப்பியோடப் பார்க்கிறீர்கள். இந்தக் கபட நாடகம் என்னிடம் பலிக்காது" என்றான் கொள்ளைக்காரன்.

முனிவர், "நீ திரும்பி வருகிறவரையில் நாங்கள் இங்கிருந்து அகல மாட்டோம். இது சத்தியம். நிச்சயமாக நம்பு. உன் க்ஷேமத்துக்காகவே சொல்லுகிறோம். சீக்கிரம் போய்க் கேட்டு வா" என்றார்.

முனிவர்களிடம் அவனுக்குத் தன்னையும் அறியாமல் கவர்ச்சி ஏற்பட்டது. தன் இயல்புக்கு மாறாக, அவர்கள் சொன்னபடியே வேகமாக வீட்டுக்குச் சென்றான். உணவுக்காகக் காத்திருந்த குடும்பத்தினர் வெறுங்கையோடு வந்த அவனைக் கடிந்துகொண்டனர்.

அவன், "கோபிக்காதீர்கள். இன்றைக்கு வேண்டிய பொருளை ஸித்தப்படுத்திவிட்டுத்தான் இங்கு வந்தேன். ஒருவருக்குப் பதில் ஏழு மனிதர்களைக் கிணற்றங்கரையில் பத்திரமாகக் கட்டிப் போட்டிருக்கிறேன்" என்றான்.

குடும்பத்தினர், "பின்பு எதற்காக வெறுங்கையுடன் வந்தாய்? சீக்கிரம் போய் அவர்களிடமுள்ள பொருளைக் கொண்டு வா" என்றனர்.

"ஒரு சந்தேகத்தைத் தெளிந்துகொள்ளவே வந்தேன்."

"அதென்ன இன்றைக்குப் புது சந்தேகம்?"

"இந்த உணவுக்காக நான் செய்யும் பாவத்தில் நீங்கள் பங்கு கொள்கிறீர்களா?"

"முடியாது. அந்தப் பாவம் முழுவதும் உன்னுடையது."

"இதென்ன அதிசயம்? நான் கொண்டு வரும் உணவு உங்களுக்கு வேண்டும். ஆனால் பாவத்தில் உங்களுக்குச் சம்பந்தம் இல்லையா?"

குடும்பத்தினர், "ஆமாம், அப்படித்தான். எங்களுக்கு உணவு தர வேண்டியது உன் கடமை. நீ புண்ணியமான முறையிலேயே உணவைத் தேடி வந்தால் நாங்கள் உண்ண மாட்டோம் என்று மறுக்கிறோமா? பாவம் செய்தே உணவைக் கொண்டு வரவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்கிறோமா? இரண்டும் இல்லை. ஆதலின் நீ செய்யும் பாவங்களுக்கும் எங்களுக்கும் எவ்வகைத் தொடர்பும் இல்லை. பசிக்கிறது; சீக்கிரம் போய் இன்றைய உணவுக்கு ஏற்பாடு செய்" என்றனர்.

அந்தணனுக்கு அந்தப் பதில் பேரதிர்ச்சியாக இருந்தது. ஸப்தரிஷிகள் இருந்த இடத்துக்கு ஓடோடியும் வந்தான்.

முனிசிரேஷ்டர்கள் எதிர்பார்த்தபடியே நடந்தது. அவன் அவர்களை ஸாஷ்டாங்கமாகப் பல தரம் வணங்கினான். "முனிவர்களே, நீங்கள் மெய்ஞ்ஞானிகள், கருணைக் கடல். பரமநீசனாகிய என் கண்ணைத் திறந்துவிட்டீர்கள். இப்போதுதான் எனக்கு உண்மை விளங்கியது. இந்தக் கணமே இந்தக் கொள்ளைத் தொழிலையும் குடும்பத்தினரையும் துறந்தேன். இனி என் குடும்பத்தினரின் உணவுக்காக நான் எங்கும் தேடி

அலையமாட்டேன். எனக்கும் உணவு வேண்டாம். கொடிய பாவங்களின் பிரத்தியக்ஷ சின்னமாகிய இந்த உடலை, மேலும் உணவிட்டுக் காப்பாற்றாமல், வாட்டி உயிர் விடுவேன்" என்று மனங் கலங்கிக் கதறினன்.

நல்ல காலம் பிறந்துவிட்டது அவனுக்கு. மகான்களின் தரிசனம் வீண்போகுமா? "மேருமலைகள் பலவற்றுக்குச் சமமான பாவங்களைச் சேர்த்துவிட்டேனே! இதற்கு ஏதாவது பிராயச்சித்தம் சொல்லுங்கள்" என்று உள்ளங் குமுறி, அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகக் கதறினன். அருளே வடிவெடுத்தாற்போன்ற முனிவர்களுக்கு இரக்கம் கரைபுரண்டோடியது. ஆனால் இவன் செய்த பாவங்களுக்கு ஏற்ற பிராயச்சித்தம்தான் அவர்களுக்கு விளங்கவில்லை.

அதற்காகப் பல நூல்களைப் புரட்டிப் பார்க்க வேண்டுமா அவர்கள்? அவர்கள் வாயால் சொல்வதெல்லாம் சாஸ்திரம்தானே? இவன் மனத்தில் இடம்பெறக்கூடிய மிகச் சிறிய மந்த்ரமொன்றைத் தேர்ந்தெடுத்தனர். அதை இவனுக்கு உபதேசம் செய்தனர். இடையறாது அதையே வாயால் உச்சரித்துக்கொண்டிருக்குமாறு பணித்தனர். 'ராம' நாமமே அந்த மந்த்ரம். வடிவத்தில் மிக மிகச் சிறிய இது; மகாமந்த்ரங்கள் அனைத்திலும் உயர்ந்தது; ஜபம் செய்வதற்கு எளிதானது; ஸகல பாவங்களும் இந்த மந்த்ரத்தினால் தொலைந்து போகும். இதை அவனுக்கு விளக்கிக் கூறினர்.

ஆனால் அவன் இதைப்பற்றி இவ்வளவு நாளாகக் கேள்வியுற்றதே இல்லை. முனிவர்கள் அகன்றவுடன் இந்த மந்த்ரம் மறந்துவிடும். பிறகு யாரைத் தேடிச் செல்வது? இவ்வளவு கருணையுடன் வேறு யார் பரிவு மேலிட்டு இவனைக் காப்பாற்ற முன்வருவர்? "என் மனத்தில் இந்த மந்த்ரம் நிலைத்து நிற்காது. ஸர்வஜ்ஞர்களாகிய நீங்களே இதற்கும் ஒரு வழி செய்துவிடுங்கள். எனக்குப் பழக்கமான பொருள்களைத்தான் மறவாமல் மனத்தில் தேக்கி வைத்துக்கொள்ள என்னால் முடியும்" என்று இவன் கெஞ்சினன்.

முனிவர்கள் யோசித்துப் பார்த்தனர். "நெடுநாளாக இந்தக் காட்டிலேயே சுற்றித் திரிகிறாயே. இதோ இந்த மரத்தின்

பெயரென்ன?" என்று கேட்டனர் "மரா" என்று இவன் விடையளித்தான். "இந்தப் பெயரே உன் பாவத்தைத் துடைக்க வல்லது இதையே ஓயாமல் ஜபம் செய்துகொண்டிரு. நற்கதியடைவாய்" என்று கூறி முனிவர்கள் இவனைக் குளிரக் கடாக்ஷித்துவிட்டு அகன்றனர்

இவன் ஒரே உறுதியுடன் அந்த மரத்தின் பெயரையே அனவரதம ஜபம் செய்து வந்தான் அந்தப் பெயரின் மூர்த்தியில் புனிதமான ராமநாமம் பதிந்திருந்தது. அது இவனைக் கரை சேர்க்க வல்லதாயிற்று உணவையும் உறக்கத்தையும் இவன் அறவே மறந்தான் பசியும் தாகமும் தன்னடையே இவனை விட்டு நீங்கின அன்றைய தினம் 'மராமர'த்தின் கீழ் அமர்ந்தவன் பிறகு எழுந்திருக்கவே இல்லை உள்ளத்தில் ஒளிவீசும் ராமநாமத்தின் மகிமையினால் கொடிய வனவிலங்குகளும் இவனைத் துன்புறுத்தவில்லை இவன் ராமனை நினைந்து ஸமாதிநிலையில் ஊன்றிவிட்டான் நாட்கள், மாதங்கள், ஆண்டுகள் பல்லாயிரக் கணக்கில ஓடின காலசக்ரம் சுழன்று கொண்டே இருந்தது நாளடைவில் இவன் வால்மீகி முனிவராகிவிட்டான்

நீண்ட காலம அசையாமல் ஒரே இடத்தில் அமர்ந்திருந்த இவன்மீது இலைகளும் சருகுகளும் உதிர்ந்து மூடிக்கொண்டன இயற்கையின் போக்குக்கேற்ப, மிகப் பெரிய கறையான்புற்று இவனை மறைத்துக் கொள்ளுமளவில் தோன்றியது உலகத்தின் பார்வைக்கு அகப்படாமலே புற்றுக்குள்ளேயே நெடுநாள் இவன் மறைந்து கிடந்தான் ஆனால் ராமநாமத்தின் மகிமையினாலும் மகரிஷிகளின் அருளநோக்கின் வலிமையினாலும் இவன சாகவில்லை இவனது உறுதி குலையவுமில்லை தொடர்ந்து தியானம செய்துகொணடே இருந்தான்

திடீரென்று ஒரு நாள் பெருமழை பெய்ய ஆரம்பித்தது இடையறாது பல நாள் பெய்துகொண்டே இருந்தது இவன் மேல் மூடிக்கொண்டிருந்த புற்று முழுவதும் கரைந்தது சூரிய ஒளியும் காற்றும் இவனது உடலின் பயினை [illegible] ஸமாதியும முடிவடைந்தது. உக்கிரமான பிராயச்சித்தத்தின் மகிமையினால் இவன் தூய்மையடைந்தான் ஆனால் ராமநாமத்தை இவனால் மறக்க முடியவில்லை.

### மூன்று பெயர்கள்

வால்மீகி, ப்ராசேதஸர், பார்கவர் என்ற மூன்று பெயர்கள் பிற்காலத்தில் இவருக்கு ஏற்பட்டன. முதல் இரண்டு பெயர்கள் இவருடைய பிற்காலச் சரிதத்தை நினைவூட்டுபவை. மூன்றாவது பெயர் இவரது பிறப்பை உணர்த்துகிறது.

### வால்மீகி

வல்மீகம் என்றால் புற்று. 'வல ஸம்வரணே' என்னும் தாதுவிலிருந்து இந்தச் சொல் உருவாகிறது. 'அலீகாதயச்ச' (உணாதி, 4.25) 'வலதேர் முமாகமச்ச' என்னும் வ்யாகரண முறைப்படி இந்த தாதுவிலிருந்து இந்தப் பதம் தோன்றுகிறது. 'நன்றாக மூடி மறைத்துக்கொள்ளும் இயல்புள்ளது' என்பது 'வல்மீகம்' என்னும் சொல்லுக்குப் பொருளாகி, அவ்வாறு இருப்பதனால் கறையான் புற்றையும் உணர்த்துவதாகிறது. அதனுள் நெடுநாள் மறைந்திருந்து வெளிவந்ததனால் இவருக்கு வால்மீகி என்னும் பெயர் ஏற்பட்டது. இவரது சரிதத்தை உணர்த்தவல்ல பெயர் இது.

'ப்ரசேதா:' என்று வருணனுக்குப் பெயர். வருணன் ஜலக்கடவுள். அவன் ஸம்பந்தப்பட்ட ஜலம் புற்றைக் கரைத்தது. அதனால்தான் இவர் வெளியுலகத்துக்கு வர முடிந்தது. அவனால் உலகுக்கு அளிக்கப்பட்டமையின் 'வருணனுடைய மகன்' என்னும் பொருளைத் தரும் 'ப்ராசேதஸர்' என்னும் பெயர் இவருக்கு உண்டாயிற்று.

பார்கவர்— ப்ருகு முனிவருடைய வம்சத்தில் பிறந்தவர் வால்மீகி. ப்ருகு வருணனுடைய புத்திரர். ப்ருகுவின் வம்சத்தில் பிறந்ததனால் வால்மீகிக்குப் 'பார்கவர்' என்ற பெயர் வழங்குகிறது. இவர் ப்ருகுவின் மைந்தர் என்றும் கூறுவர்.

रावणान्तकरो राजा रघूणां वंशवर्धनः ।
वाल्मीकिर्यस्य चरितं चक्रे भार्गवनन्दनः ॥

ராவணாந்தகரோ ராஜா ரகூணாம் வம்சவர்தந: ।
வால்மீகிர் யஸ்ய சரிதம் சக்ரே பார்கவநந்தந: ॥

— மத்ஸ்ய புராணம், 12.50,51.

இப்படிப் பிறர் எளிதில் புரிந்துகொள்ளக் கூடிய இவரது வரலாற்றை உணர்த்தவல்ல காரணப் பெயர்களே இவருக்கு நிலைத்துவிட்டன.

## வால்மீகி இயற்றிய நூல்கள்

நாரதரிடமும் நான்முகனிடமும் ஆசி பெற்ற இவர் ஆதிகாவ்யமாகிய ராமாயணத்தை இயற்றிய பின், தம் அந்தரங்க சிஷ்யர்களான குசலவர்கள் மூலம் அதைக் கதாநாயகனுகிய ராமபிரான் திருமுன்பே பாடச்செய்து அரங்கேற்றிய வரலாறு நாடும் நகரமும் நன்கறிந்ததேயாம். இவர் ஸங்கீதம், நாட்டியம், வேதாந்தம், வேத வேதாங்கங்கள், ராஜநீதி, தர்ம சாஸ்திரங்கள், யாக ப்ரயோகங்கள், உலக நீதிகள், யுத்தத்தின் நுட்பமான அம்சங்கள், பல வேறு ஆயுதங்களின் தன்மை, யோகம், தவம் செய்யும் முறைகள் இவை போன்ற அனைத்தையும் நன்கறிந்தவர் என்பதும், தம் மனத்திலுள்ளதை அப்படியே சிறிதும் ஏற்றத் தாழ்வில்லாமல் தெளிவாகப் படிப்பவர் மனத்தில் பதிய வைக்கவல்ல சொற்செல்வம் படைத்தவர் என்பதும், அபாரமான கற்பனைகளும் கவிதையும் இவருக்கு வரப் பிரஸாதமாகக் கிடைத்தவை என்பதும் ராமாயணத்திலிருந்தே தெரிகின்றன.

உலக க்ஷேமத்துக்காக எம்பெருமான் மானிடனுகத் திருவவதாரம் செய்தான். தேவர்களும் நித்யஸூரிகளுமே காணக்கூடிய அவன் ராமாவதாரத்தினுல் ஸகல பண்டித பாமர மக்களுக்கும் காண்பதற்கு ஏற்றவனுனுன். அவ்வாறே வேதங்களும் ஸ்ரீமத் ராமாயண வடிவமாக அவதாரம் செய்து அனைவருக்கும் போக்கியமாகிவிட்டன.

ஸ்ரீமத் ராமாயணம் தவிர, யோகவாஸிஷ்டம், அத்புத ராமாயணம், கங்காஷ்டகம் என்னும் சில நூல்களையும் வால்மீகி முனிவர் இயற்றியதாகக் கூறுகிறுர்கள். இவை பிற்காலத்தவருடைய கற்பனையாகவும் இருக்கக் கூடும்.